# ஸ்ரீ ரமணரும் ஆன்மீகப் பாதையும்

ஆங்கில மூலம்:
ஆர்தர் ஆஸ்பர்ன்

முகவுரை:
டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன்
(இந்தியக் குடியரசின் முன்னாள் ஜனாதிபதி)

தமிழாக்கம்:
லா.சு. ரங்கராஜன்

அட்டைச் சித்திரம்:
மணியம் செல்வன்

(பகவான் ஸ்ரீரமண மகரிஷி, திருவண்ணாமலையை வந்தடைந்த நூற்றாண்டு (1.9.1996) விழாவினையொட்டிய சிறப்பு வெளியீடு)




பதிப்பாளர்:
V.S. ரமணன்

தலைவர், நிர்வாகக் குழு
ஸ்ரீ ரமணாச்ரமம்
திருவண்ணாமலை - 606 603

Sri Ramanarum Aanmeehap Paadaiyum (Tamil)
(Ramana Maharshi and the Path of Self-Knowledge)
[Original in English by Arthur Osborne and translated into Tamil by La.Su. Rengarajan]



First Edition: September 1996

Price:

A special publication to mark the centenary of the advent of Bhagavan Sri Ramana Maharshi at Arunachala

Cover art work: Maniam Selven

Published by:
V.S. Ramanan, President, Board of Trustees,
Sri Ramanasramam, Tiruvannamalai

DTP: Pankaj Process, Madras-33.

Printed at: Graphic Park, Madras-5.

# முன்னுரை

இந்நூலின் மூல ஆசிரியர் ஆர்தர் ஆஸ்பர்ன் (1906–1970) எனும் ஆங்கிலேயர் ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக் கழகத்தில் படித்துப் பட்டம் பெற்றபின், போலந்து நாட்டிலும் பின்னர் தாய்லாந்து தலைநகரான பாங்காக் நகரிலுள்ள ஓர் பல்கலைக் கழகத்திலும் விரிவுரையாள ராகப் பணியாற்றியவர். பாங்காக்கில் ஒரு சமயம் பகவான் ஸ்ரீ ரமண மகரிஷியின் புகைப்படத்தைக் கண்டவுடன் ஸ்ரீபகவான்பால் ஈர்க்கப்பட்டார். "உபதேச சாரத்"தின் ஆங்கில மொழிபெயர்ப்பைப் படித்துப் பரவசமானார். 1945–ஆம் ஆண்டு திருவண்ணா மலைக்கு வந்து ஆசிரமத்தில் சேர்ந்தார். அங்கு ஏற்கனவே தமது மனைவியையும் மூன்று குழந்தைகளையும் அனுப்பி வைத்திருந்தார். குடும்பத்தினரோடு ஆசிரமத் தில் எளிய வாழ்க்கை மேற்கொண்டார். 1950–இல் ஸ்ரீபகவான் மகா சமாதி எய்திய பிறகும் தொடர்ந்து தங்கியிருந்து, ஸ்ரீ ரமணாச்ரமம் சார்பில் 1964–இல் தொடங்கிய "மௌண்டன் பாத்" (Mountain Path) எனும் ஆங்கில காலாண்டு இதழின் ஆசிரியராக தமது இறுதி நாள் வரை பணிபுரிந்தார். ஆஸ்பர்ன் எழுதிய ஆழ்ந்த கட்டுரைகளும் ஒரு சில புத்தகங்களும் பகவான் ஸ்ரீரமணரின் வரலாற்றையும் சிந்தனையையும் மேல் நாடுகளில் மேலும் பரவலாக அறிய வகைசெய்தன.

"Ramana Maharshi and the Path of Self–Knowledge" என்ற தலைப்பில் அவர் எழுதிய இந்த நூல் முதன்முதலில் 1954–ஆம் ஆண்டு வெளிவந்து பெரும் வரவேற்புப் பெற்றது. இதுவரை தொடர்ந்து மேலும் பத்து பதிப்புகள் வெளிவந்துள்ளன. தவிர, ஜெர்மன், ஸ்பானிஷ் முதலிய அந்நிய மொழிகளிலும் ஒரு சில இந்திய மொழி களிலும் வெளியாயிற்று.

இந்நூல் தமிழில் வெளிவருவது இதுவே முதல் தடவை. பகவான் ஸ்ரீரமண மகரிஷியின் வரலாற்றையும், அவர் வகுத்தளித்த ஆன்ம விசார முறையையும், அவ்வப்போது உகுத்த வாக்குகள் பலவற்றையும், மெய்ஞ்ஞான விளக்க உரையாடல் பகுதிகளையும் ஒருசேர இனிதாய் அளிக்கும் மூல நூலைத் தமிழாக்கம் செய்ய எழுத்தாளர் ஸ்ரீ லா.சு. ரங்கராஜனைத் தேர்ந்தெடுத்ததில் மிக்க மனநிறைவு பெறுகிறோம். பகவான் ஸ்ரீ ரமணரின் பரம பக்தரும், சித்தாந்த விளக்கச் சிற்பியும், காந்தீய மா மேதையுமாகத் திகழ்ந்த அமரர் பேராசிரியர் கே.சுவாமிநாதன் (1896–1994) அவர்கள் பாரத அரசின் மகத்தான வெளியீடான மகாத்மா காந்தி நூற் திரட்டின் (The Collected Works of Mahatma Gandhi) தலைமை ஆசிரியராக சீரிய பணியாற்றிவந்த ஆண்டுகளில் அவ்வமைப்பின் சிறப்பு அதிகாரியாகவும் பின்னர் துணை–இயக்குநராகவும் பேராசிரியருக்குப் பேருதவியாக லா.சு.ர. பங்கு வகித்தவர். பேராசிரியர் வாயிலாக ஸ்ரீரமணானுபவ விளக்கங்கள் கேட்கப்பெற்றுத் தெளிவு கண்டவர். ஆங்கிலத்திலும் நடைத்தமிழிலும் ஒருங்கே புலமை வாய்ந்தவர். ஸ்ரீ பகவானைப் பற்றிய ஒரு சில புத்தகங்களை ஸ்ரீ ரங்கராஜன் ஏற்கனவே தமிழில் மொழிபெயர்த்துள்ளார்.

பகவான் ஸ்ரீரமணர் தமிழிலேயே உரையாடினார். தன் முனைப்பற்று அவர் புனைந்த பக்தி–ஞானப் பாடல்கள் பெரும்பாலும் தமிழ் மொழியிலேயே அமைந்தன. ஆகவே, மகரிஷி ரமண பகவானின் அருளுரைகளை கூடிய வரை அவர் கூறிய வாசகங்களிலிருந்தே தேர்ந்தெடுத்து, பாடல்களுக்கும் ஆங்காங்கே நடைத் தமிழில் லா.சு. ரங்கராஜன் பொழிப்புரை அளித்துள்ளது இந்நூலின் மற்றொரு தனிச் சிறப்பு.

மூல நூலினின்றும் சிறிதும் பிழறாது, அதே சமயம் மொழிபெயர்ப்பாகத் தோன்றாவண்ணம், ஸ்ரீ பகவானின் வாழ்வையும் போதனைகளையும் பற்றிப் பொருள் நயமும் சொற் செறிவும் ஒருமித்த ஓர் இனிய புதிய நூலாகச் சரள நடையில் அமைந்துள்ள இவ் வெளியீடு, ஸ்ரீரமண பக்தர்களாலும் தமிழ்ப் பொதுமக்களாலும் பெரிதும் போற்றப்படும் என்பதில் ஐயமில்லை.

பதினாறு வயதிலேயே ஆத்மசாட்சாத்காரம் கண்ட அண்ணல் வெங்கடராமன் எனும் ஸ்ரீ ரமண மகரிஷி, தாரணித் தந்தை அருணாசலேச்வரரைத் தேடி வீட்டை விட்டு வெளியேறி 1896–ஆம் ஆண்டு செப்டம்பர் முதல் தேதி திருவண்ணாமலை வந்தடைந்து, அனைத்தும் துறந்துக் கோவணாண்டியாய் அருணாசலப் பேராலயத்துள் நுழைந்த நூறாண்டு நிறைவுறும் இவ்வாண்டின் சிறப்பு நூலாக இதனை வெளியிடுவதில் பெருமகிழ்ச்சியடைகின்றோம்.

இந்நூலை குறுகிய காலத்தில் பதிப்பிக்க பேருதவி புரிந்த ஸ்ரீ எஸ்.கிருஷ்ணனுக்கும், நேர்த்தியாய் லேசர் அச்சுக் கோர்வை செய்த பங்கஜ் ப்ராஸஸுக்கும், கிராஃபிக் பார்க் அச்சகத்தாருக்கும், மிகப் பாங்காய் அட்டை ஒவியம் அமைத்துதவிய ஸ்ரீ மணியம் செல்வன் அவர்களுக்கும் ஸ்ரீ ரமணாச்ரமம் சார்பாக ஆழ்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

ஸ்ரீரமணாச்ரமம்
திருவண்ணாமலை
1.9.1996

**V.S. ரமணன்**
தலைவர், நிர்வாகக் குழு
ஸ்ரீ ரமணாச்ரமம்

# முகவுரை

*(இந்தியக் குடியரசின் முன்னாள் ஜனாதிபதி அமரர் டாக்டர் ராதாகிருஷ்ணன், உப–ஜனாதிபதியாக இருந்தபோது வழங்கியது)*

ஸ்ரீரமண மகரிஷியின் வாழ்க்கை வரலாற்றையும் போதனைகளையும் எடுத்துரைத்து திரு. ஆஸ்பர்ன் எழுதிய இப்புத்தகத்திற்கு இச் சிறு முகவுரை எழுது வதில் மகிழ்ச்சி கொள்கிறேன்.

அறிவார்வமும், அதே சமயம் தயக்கமும் குழப்ப மனப்பான்மையும் மேம்பட்ட நமது கால கட்டத்தில் இது தனிச் சிறப்பு வாய்ந்தது. மதக் கோட்பாடுகள், மூடநம்பிக்கை, குருட்டுப் பழக்க வழக்கங்கள். சடங்கு முறைகள் ஆகியவற்றிலிருந்து நம்மை விடுவித்துக் கொண்டு சுதந்திர ஆன்மாக்களாக வாழ்வதற்கு இதனில் கூறப் பட்டுள்ள ஆன்மீகம் சார்ந்த சமயம் வழிவகுக்கிறது. உள்ளார்ந்த ஆத்ம அனுபவமும், இறைமையுடன் தனித் தொடர்புமே அனைத்து சமயங்களின் சாராம்சம் ஆகும். இறைவனைத் தேடும் பாதைகளே வழிபாடுகள். தெய்வீ கத்துடன் இணைவதற்கும், விடுதலை எய்துவதற்கும் அவ்வழிபாடுகள் வெறும் மார்க்கங்களே.

"தன்னைத் தானே அறி" என்கிற கிரேக்க முது மொழி, "ஆத்மானம் வித்தி" (ஆன்மாவை அறி) எனும் உபநிடத வாசகத்தை ஒத்திருக்கிறது. தூல உருவங்களை விலக்கி ஆன்மார்த்தமாக சிந்தித்தால், உடல், மனம், அறிவு இவற்றின் படிமங்களுக்கப்பால் பிரபஞ்சமெங்கும் வியாபித்துள்ள "தான்" மாத்திரமே துலங்கும். "புவியில் ஜனிக்கும் ஒவ்வொரு மானிடருள்ளும் ஆன்ம ஒளி ஏற்றும் சத்தியப் பேரொளி அதுவே." "பரிபூரண ஆன்ம நலனைப்பெற, அவ் உயரிய நிலை நோக்கி முன்னேறி, அந்நினைவிலே சமைந்து, கீழ் மட்டங்களில் தரித் திருந்த மனத்திரைகளான ஆடைகளை அறவே அகற்றி

விட வேண்டும் – பண்டைய கிரேக்க–ரோமர் மறை வினைச் சடங்குகளில் ஆலயக் கருவறைக்குள் நுழைய அனுமதிக்கப்பட்டவர்கள், தம்மைப் புனிதப் படுத்திக் கொண்டு, அணிந்துள்ள உடைகள் அனைத்தையும் களைந்து முழு நிர்வாண கோலத்தில் பிரவேசிப்பது போன்று.''* அடி–முடி வரையறையற்று, எங்கெங்கும் வியாபித்துள்ள மெய்ம்மையில் நாம் ஆழ்ந்து விடுகிறோம். அத்தூய இருப்பில் எதிரிகள் கிடையா. அதனில் ஆழ் பவர் எவரும் எதனிலும் எதிர்ப்பை எதிர்கொள்ளார். எப்பொருளிலும், நிகழ்வன யாவற்றிலும் தம்மையே காண்பர்.

விருப்பு வெறுப்புக்களால் பாதிக்கப்படாத அத் தகைய அக நிலையில் மெய்யியல்பு நிறைந்து விடுகிறது. பிடித்தவை, பிடிக்காதவை என்ற பாகுபாடுகள் மன நிம்மதியைக் குலைக்க மாட்டா. அந்த ஆன்ம நோக்கு, கிட்டத்தட்ட ஓர் குழந்தையின் மனநிலைக்கு ஒப்பானது. மெய்ப்பொருளின் எல்லைக்குள் அடியெடுத்து வைக்கும் எவரும் சிறு குழந்தைகள் போல் ஆகிவிடவேண்டும். இதன் காரணமாகத்தான், படித்த மெத்தனங்களை ஒதுக்கி வைத்த பின்னரே ஆன்ம விசாரத்தில் இறங்கக் கோரப் படுகிறார்கள். இவ்வாறு மறுபிறவி எடுப்பது வற்புறுத் தப்படுகிறது. குழந்தையுள்ளம் மேதையின் அறிவுத் திறனிலும் பெரிது என மதிப்பிடப்படுகிறது.

ஸ்ரீரமண மகரிஷி கோடி காட்டியுள்ள சமரச சன்மார்க்கக் கூறுகள், ஆன்மீகத்தில் தோய்ந்த பாரத தருமசாத்திரங்களை ஆதாரமாகக் கொண்டவை. அதே சமயம், பகுத்தறிவுக்கும், நன்நெறி வழிமுறைகளுக்கும் ஒப்பியவை.

– எஸ். ராதாகிருஷ்ணன்

---

* (ப்ளோடினஸ்: என்னிட்ஸ் I,VI,6)

# பொருளடக்கம்

# 1. தொடக்க ஆண்டுகள்

ஆருத்ரா தரிசனம் எனும் சிவதரிசன புண்ணிய தினத்தை சைவப் பெருமக்கள் மிக்க ஆர்வத்துடன் திருவிழாவாகக் கொண்டாடி வருகின்றனர். பிரபஞ்ச தாண்டவமாடும் நடராஜப் பெருமானாகப் பரமசிவன் அன்றைய தினம் பக்தர்களுக்குக் காட்சியளிக்கிறார்.

1879–ஆம் வருடத்திய அந்த நன்னாளன்று தமிழ் நாட்டில் உள்ள திருச்சுழி எனும் சிற்றூரில் வாழ்ந்து வந்த பக்த ஜனங்கள் பொழுது விடிவதற்கு முன்னரே வீட்டை விட்டு வெறுங்காலோடு புறப்பட்டு புழுதி நிறைந்த வீதிகள் வழியே கோயிற்குளத்தங்கரைக்குச் சாரிசாரியாகச் சென்றனர். புனித நாட்களில் பொழுது புலர்வதற்குமுன் குளத்தில் நீராடுதல் நம் நாட்டு மரபு. ஆடவரும் பெண்டிரும் கும்பல் கும்பலாகக் குளத்துப் படிக்கட்டுகளில் இறங்கி நீரில் முங்கிக் குளிக்கையில், காலைக் கதிரவனின் செங்கிரணங்கள் வேட்டி மட்டுமே அணிந்த ஆண்களின் பழுப்பு நிற வெற்றுடம்பிலும், பெண்களின் வண்ணச் சேலையிலும் ஜரிகைக் கரைகளிலும் பட்டுப் பளபளத்தன. டிசம்பர் மாதத்தில் அல்லவா வருகிறது அத்திருநாள்? ஆகவே, குளிரின் கடுப்பு காற்றில் இழைந்திருந்தது; உரம் வாய்ந்த அம் மக்களோ குளிரைப் பொருட்படுத்தவில்லை. சிலர் மரத்தடியிலும், அருகிலுள்ள வீடுகளிலும் உடை மாற்றிக் கொண்டனர். பெரும்பாலானோர் சூரிய வெப்பத்தில் ஆடை சற்றே காய்வதற்காகக் காத்திருந்தனர். நனைந்த ஆடைகளின் நீர் சொட்டச்சொட்ட அவர்கள் அவ்வூரின் புராதனக் கோயிலை நோக்கி நடந்தனர். அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவரான சுந்தரமூர்த்தி நாயனாரால் பல நூற்றாண்டுகளுக்குமுன் பாடல்பெற்ற புண்ணிய ஸ்தலம் ஆயிற்றே அத்திருக்கோயில்!

அந்த ஆலயத்தில் குடிகொண்ட நடராஜமூர்த்திக்கு மாலைகள் அணிவித்து அலங்கரித்து, மார்கழி திருவாதிரை நாளான அன்று மேளதாள சங்குமுழக்கங்களுடனும் வேத பாராயண கோஷ்டிகளோடும் உற்சவ விக்ரகத்தை ஊர்வலமாக எடுத்துச் சென்றனர். ஆதிரை பவனி கண்டு ஆலயம் திரும்புகையில் இரவு மணி ஒன்று. ஆருத்ரா தரிசனதினம் முடிவுறவில்லை. ஏனெனில், இந்து சமய கணிப்புப்படி ஒரு நாள் என்பது அன்றைய சூர்யோதயத்திலிருந்து தொடங்கி மறு சூர்யோதயம் வரை ஆகும்.

நடராஜப் பெருமாள் ஆலயம் திரும்பி சபாப்பிரவேசம் செய்த அதே தருணம், அவ்வூர் வாசியான சுந்தரம் ஐயர் என்பாரின் வீட்டில் அவரது மனைவி அழகம்மாள் தமது இரண்டாவது மகனை ஈன்றெடுத்தாள். வெங்கடராமன் எனப் பெயர் சூட்டப்பெற்ற அம்மகவுதான் பிற்காலத்தில் பரசிவஞானமாகிய ஆன்ம போதமாம் ஸ்ரீரமண மகரிஷியாக உருப்பெற்றுத் திகழப் போவது.

இந்து பண்டிகை நாட்கள், மேற்கத்திய ஈஸ்டர் திருவிழாவைப் போன்று திங்கட் கலையை அனுசரித்து வேறுபடுகின்றன. 1879–ஆம் ஆண்டின் ஆருத்ரா தரிசன தினம் டிசம்பர் 29–ஆம் தேதியன்று கூடியது. அதாவது, குழந்தை வெங்கடராமன் பிறந்த நாளும் வேளையும், சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் பெத்லஹம் திருத்தலத்தில் புனித சிசுவான இயேசு உதித்த நாள்–நேரத்தினின்றும் மிகச்சிறிதளவே தள்ளி நேர்ந்தன. இந்நிகழ்ச்சிப் பொருத்தம் அவ்விருவரின் வாழ்நாள் முடிவு காலத்திலும் காணப் பெறுகிறது. ஸ்ரீரமணர் ஏப்ரல் 14–ஆம் தேதி 1950–ஆம் ஆண்டு மாலை நேரத்தில் தேகாந்தமானார். அந்த நேரமும் நாளும் கிறித்துவப் புதுவெள்ளிக்கிழமை பிற்பகல் நேரத்தி

னின்றும் தேதிவாரியாகவும் சற்றுத்தான் மாறுபடுகிறது. இவ்விரு காலகட்டங்களும் ஒன்றுக்கொன்று மிகப் பொருத்த மானவை. நடுநிசியும் டிசம்பர் பனிக்காலத்துக் கதிர் மண்டலத் திருப்புமுகமும் இவ்வையகத்தே சூரியக் கதி ரொளி பரவத் தொடங்கும் கால கட்டம்; அதே போன்று, வசந்த ருதுவில் கதிரவன் இரவு பகல் நேரங் களின் சமனநிலையைக் கடந்து செல்லும் கட்டம் அன்றோ!

உள்ளூரிலேயே ஒரு குமாஸ்தாவாக வாழ்க்கையைத் துவக்கியவர்தாம் சுந்தரம் ஐயர். கணக்கராக அவர் பெற்ற சம்பளமோ அக்காலத்து நிலவரத்திலும்கூட மிகச் சொற்பமே. மாதம் இரண்டே ரூபாய் தான்! பின்னர், மனுக்கள் எழுதித்தரும் வேலையைத் தாமே மேற்கொண்டார். சில ஆண்டுகளுக்குப்பின், சட்டப் படிப்பு தேறாமலே வழக்காட அனுமதி பெற்ற கிராம வக்கீல்களில் ஒருவரானார். தொழிலில் முனைந்து விரை வில் முன்னுக்கு வந்தார். வீடொன்று வாங்கினார். குழந்தை வெங்கடராமன் பிறந்தது அந்த வீட்டிலே தான்.[1] விருந்தினர் தங்குவதற்கு வசதியாக வீட்டின் ஒரு புறத்தைத் தனிக் கட்டாக்கினார். பழகுவதற்கினியவர், விருந்தோம்பலில் சிறந்தவர் என்று பெயரெடுத்தார். தவிர, ஊருக்கு வந்துபோகும் அதிகாரிகளும், யாத்ரீ கர்களும் அவர் இல்லத்தில் தங்குவது வழக்கமாயிற்று. ஊருக்கே பெரிய மனிதர் ஆனார். அதனால் வக்கீல் தொழிலிலும் வருமானம் கூடிற்று.

இவ்வாறு வாழ்க்கையில் வெற்றிபெற்றவராயினும், அவரது பரம்பரைக் குடும்பத்தை ஓர் விசித்திர விதி ஆட்டி வந்தது. சுந்தரம் ஐயரின் முன்னோர்களில் ஒருவர் தன் வீட்டிற்குப் பிச்சை கேட்டு வந்த ஒரு

1. திருச்சுழியிலுள்ள அந்த வீட்டை தற்போது ஸ்ரீரமணாச்ரமம் எடுத்து நிர்வகித்து வருகிறது. அங்கே அன்றாடம் பூஜை வழி பாடுகள் நடைபெறுகின்றன. ரமண பக்தர்களின் யாத்திரை ஸ்தல மாகவும் விளங்குகிறது.

பைராகிக்கு அன்னமிட மறுத்துவிட்டாராம். பைராகி சினந்து, 'இனி உமது சந்ததியின் ஒவ்வொரு தலைமுறையிலும் ஒருவர் துறவி ஆகி பிச்சைகேட்டு அலைவார்' என சபித்துச் சென்றாராம். அது சாபமோ, வரமோ தெரியாது. பைராகியின் வாக்கு என்னவோ பலித்து வந்தது. சுந்தரம் ஐயரின் தந்தை வழி மாமன் ஒருவர் வீட்டைத் துறந்து காஷாயம் தரித்துக் கமண்டலம் ஏந்தி துறவியாகப் போய்விட்டாராம். ஐயரின் மூத்த சகோதரன் அடுத்த ஊருக்குப் போய்வருகிறேன் என்று சென்றவர், சந்நியாசம் பூண்டு பந்த பாசங்களைத் துறந்தார்.

சுந்தரம் ஐயர் குடும்பத்தினரின் ஆன்மிகப் பற்று குறித்து வேறு விசேஷமாகச் சொல்வதற்கில்லை. சராசரிச் சிறுவர்கள் போலவே வெங்கடராமனும் வளர்ந்து வந்தான். உடல் நலம் பொருந்தியவன். முதலில் உள்ளூர்ப் பள்ளிக்கூடத்தில் படித்துவந்தான். பதினோறாம் வயதில் திண்டுக்கல் நகரப் பள்ளியில் கல்வி பயின்றான். அவனது அண்ணன் நாகஸ்வாமி இரண்டு வயது மூத்தவன். தம்பி நாகசுந்தரம் ஆறு வயது இளையவன். கடைசியாகப் பிறந்தவள் தங்கை அலமேலு. மொத்தத்தில் மகிழ்ச்சி நிறைந்த, வசதியுள்ள, நடுத்தரக் குடும்பம்.

வெங்கடராமனின் பன்னிரெண்டாம் வயதில் தந்தை சுந்தரம் ஐயர் காலமானார். குடும்பமும் சிதற நேர்ந்தது. குழந்தைகள் மதுரையில் இருந்துவந்த சிறிய தகப்பனாரிடம் அனுப்பப்பட்டனர். சிற்றப்பாவான சுப்பையருக்கு மதுரை நகரில் சிறிய சொந்த வீடு உண்டு.[1] வெங்கடராமன் மதுரையில் ஸ்காட் இடைநிலைப் பள்ளிக்கும், அதன்பின் அமெரிக்கன் மிஷன் உயர்

1. (மதுரை கோயிலுக்கு அருகே சொக்கப்ப நாய்க்கன் தெருவிலுள்ள அந்த வீட்டிலேதான் பதினாறு வயது வெங்கடராமனுக்கு ஆன்ம ஞானம் கிட்டியது. ஸ்ரீரமணாச்ரமம் அந்த இல்லத்தை வாங்கி, ஸ்ரீரமண பகவானின் உருவப்படத்தைத் திறந்துவைத்து அதனை ஓர் யாத்திரை மையமாக நிர்வகித்து வருகிறது.)

நிலைப் பள்ளிக்கும் அனுப்பப்பட்டான். கல்விமானாகத் தலையெடுப்பான் என்பதற்கான அறிகுறிகள் ஏதும் இல்லை. உடல் வலிமை நிறைந்தவனாகவும், திறந்த வெளி விளையாட்டுப் போட்டிகளில் ஈடுபாடுள்ள மாணாக்கனாகவுமே விளங்கினான். கால்பந்து, மல் யுத்தம், நீச்சல் போன்ற போட்டிகளில் விருப்பம் அதி கம். பள்ளிப் படிப்பைப் பொருத்தவரை ஒரே ஒரு திறமை மட்டும் உண்டு. நல்ல ஞாபக சக்தி வாய்ந்த பையன். எந்தப் பாடத்தையும் ஒருதடவை படிக்கக் கேட்டுவிட்டால் அதை அப்படியே ஒப்பிக்கும் வல்லமை உண்டு. படிப்பில் வெங்கடராமன் காட்டிய சோம் பேரித்தனத்திற்கு அத்திறனே ஒரு நல்ல மாற்றமாக அமைந்தது.

இளமைப் பருவத்தில் வெங்கடராமனிடம் காணப் பட்ட ஓர் விசித்திரப் போக்கு அவனை ஆட்கொள்ளும் ஆழ்ந்த உறக்கம்தான்! தேவராஜ முதலியார் என்பார் ஆங்கிலத்தில் எழுதியுள்ள தமது நாட்குறிப்பு ஏடு களில், ஆசிரமத்தில் உரையாடலின்போது ஸ்ரீரமண மகரிஷி ஒருசமயம் நினைவு கூறியதை பின்வருமாறு குறிப்பெடுத்திருக்கிறார். உறவுக்காரர் ஒருவர் ஆசிரம தியானக் கூடத்தில் நுழையும்போது அவரைக் கண் ணுற்ற மகரிஷி கூறினாராம்:

"உம்மைப் பார்த்ததும், நான் சிறுவனாக இருந்த போது திண்டுக்கல்லில் நடந்த சம்பவம் ஒன்று நினைவுக்கு வருகிறது. உமது மாமா, பெரியப்பா சேஷய்யர், அப்போது திண்டுக்கல்லில்தான் குடி யிருந்தார். ஒருநாள் அவர் வீட்டில் ஏதோ விசே ஷம். எல்லோருமாகக் கூடியிருந்தனர். இரவு நேரத் தில் அனைவருமாகச் சேர்ந்து கோவிலுக்குப் போய் விட்டனர். வீட்டில் நான் மட்டும் தனியாக இருந் தேன். முன்னறையில் படித்துக்கொண்டிருந்தேன்.

சிறிது நேரம் சென்றபின் எழுந்து வாசற்கதவை தாளிட்டேன். ஜன்னல்களையும் சாற்றி விட்டுப் படுத்தவன் தூங்கிப் போய்விட்டேன். கோவிலிலிருந்து திரும்பியவர்கள், 'கதவைத் திற' என்று உரத்துக் கூவி, கதவை இடி இடி என்று இடித்திருக்கிறார்கள். ஆனால் என்னை எழுப்ப முடிந்தால்தானே! கடைசியில் எதிர் வீட்டிலிருந்து ஏதேதோ சாவிகளை வாங்கி வெளியிலிருந்தே உள்தாழ்ப்பாளை நெம்பித் திறந்திருக்கிறார்கள். உள்ளே வந்ததும் என்னை அடித்து எழுப்பப் பார்த்தார்களாம். பசங்களெல்லாம் ஆசை தீரப் புடைத்தார்களாம்; உங்கள் மாமா கூடத்தான்! ஆனால் என் தூக்கத்தைக் கலைக்க முடியவில்லையாம். என்ன நடந்தது என்று அவர்கள் மறுநாள் காலையில் சொன்ன பிறகே எனக்கு இதெல்லாம் தெரியவந்தது ... இது மாதிரியான அனுபவம் மதுரையிலும் உண்டு. நான் விழித்திருக்கையில் எந்தப் பயலும் கிட்டே வந்து என்னைத் தொட அஞ்சுவான். என் மீது ஆத்திரம் என்றால், நான் தூங்கும்போது என்னை அலாக்காய் எங்கு வேண்டுமானாலும் தூக்கிச் சென்று, இஷ்டப்படி என்னை அடித்துவிட்டு, திரும்பவும் தூக்கிவந்து படுக்கையில் கிடத்திப் போய்விடுவார்கள். மறுநாள் காலையில் அவர்களே சொல்லும்வரை என்ன நடந்தது என்பதை நான் அறியேன்!"

உரம் வாய்ந்த உடல்நிலை என்பதைத் தவிர, இதற்கெல்லாம் ஸ்ரீபகவான்* வேறேதும் குறிப்பிடத்தக்க உட்பொருள் கற்பித்தாரில்லை. சில சமயங்களில் இரவில் ஒருவித அரைத்தூக்க நிலையில் படுத்துக் கிடந்ததாகவும் அவர் நினைவுகூர்ந்துள்ளார். இவ்விரு நிலை

* நூலாசிரியர் ஆர்தர் ஆஸ்பர்ன் தமது ஆங்கிலப் புத்தகத்தில் ஸ்ரீரமண மகரிஷியை எங்கும் பெயர் கூறிக் குறிப்பிடாமல், 'ஸ்ரீபகவான்' என்றே பவ்யமாக எழுதியுள்ளதையொட்டி இத் தமிழாக்கத்திலும் அவ்வாறே குறிப்பிடப்படுகிறார்.

களுமே வரவிருக்கும் ஆன்மிக எழுச்சியின் அறிகுறி களாக இருக்கக்கூடும்—மனதை விலக்கி, எண்ண அலை களைக் கடந்து தன்னுள் ஆழ்ந்துவிடும் ஆற்றலை ஆழ்ந்த நித்திரையும், தன்னைத்தானே அகக்கண்ணால் உற்று ணரும் திறனை அவரது அந்நாள் அரைத்தூக்க நிலை யும் முன்குறித்துக் காட்டினபோலும்!

ஸ்ரீபகவானின் பால்ய வயது போட்டோப் படம் ஏதும் இல்லை. அவருக்கே உரித்தான மனம் கவரும் பாணியில் குலுங்கச் சிரித்து ஓர்முறை கூறியுள்ளார். ஒரு குருப் போட்டோ எடுத்தார்களாம். ரொம்பப் படிப் பார்வம் உள்ளவன்போல் 'போஸ்' கொடுப்பதற்காக, பையன் கையில் ஒரு குண்டுப் புத்தகத்தையும் கொடுத்து நிற்க வைத்தார்களாம். போட்டோப் படம் எடுக்கும் தருவாயில் வெங்கடராமன் முகத்தில் ஒரு ஈ பறந்து வந்து உட்கார, அதை ஒட்ட கையை உயர்த்தி வீசியதற் கும், படம் 'கிளிக்' ஆவதற்கும் சரியாயிருந்ததாம்! பல பேரோடு சேர்ந்து எடுத்துக்கொண்ட அந்த நிழற்படத்தின் பிரதி காணக்கிடக்கவில்லை. எவரிடமும் அதன் பிரதி இல்லை என்றே அனுமானிக்க வேண்டியுள்ளது.

மானசீக அருணாசலத்தின் ஒளிமிக்க தோற்றமே பையனின் முதல் முன்னுணர்வாக உதித்தது. பள்ளிச் சிறுவன் வெங்கடராமன் சமயம் சார்ந்த தத்துவம் ஏதும் படித்ததில்லை. அருணாசலம் ஓர் புனித பூமி என்று மட்டுமே தெரியும். அந்தப் பெயரைக் கேட்ட மாத்திரத் திலேயே அது ஓர் அசாதாரணத் தாக்கத்தை அவன்மீது ஏற்படுத்தி விட்டது. வயது முதிர்ந்த உறவினரொருவர் வந்திருந்தார். திருச்சுழியிலேயே அவரை முன்பு பார்த் திருக்கிறான். "எங்கிருந்து வருகிறீர்கள் ?", என்று கேட் டான் வெங்கடராமன். "அருணாசலத்திலிருந்து", என்றார் முதியவர். என்றோ மனதில் உறைந்துவிட்ட புனிதப் பெயராயிற்றே! அது இந்த அவனியில் இருக்கமுடியாது

எனக் கருதி எங்கோ விண்ணுலக உச்சியில் வைத்துப் பார்க்குமளவுக்குப் புனிதமாகத் தொனித்த அந்த நாமம், நிஜமாகவே உள்ள ஒரு ஊரின் பெயர்தானா, என்று ஆச்சரியத்தில் ஆழ்ந்துபோனான். சற்றே சுதாரித்து, "என்ன ? அருணாசலத்திலிருந்தா ? எங்கே இருக்கிறது அது ?" என நெஞ்சடைக்க வினவினான்.

இதுகூடவா தெரியாது இந்தப் பயலுக்கு என்று உள்ளூர நகைத்த உறவினர், "திருவண்ணாமலை என்ற ஊர்ப் பெயரைக் கேள்விப்பட்டிருக்கிறாயா ? அதுவேதான் அருணாசலம் என்பதும்", என்று விளக்கினார்.

ஸ்ரீபகவான் (ஸ்ரீரமண மகரிஷி) பின்னர் அருளிய "அருணாசல அஷ்டகம்" என்கிற எண்சீர் விருத்தத்தின் முதல் பாடலில் இதைக் குறிப்பிட்டுள்ளார்.

**அறிவறு கிரியென வமர் தருமம்மா**
**வதிசய மிதன்செய லறிவரி தார்க்கு**
**மதிவறு சிறுவய ததுமுத லருணா**
**சலமிகப் பெரிதென வறிவினி லங்க**
**வறிகில னதன்பொரு ளதுதிரு வண்ணா**
**மலையென வொருவரா லறிவுறப் பெற்று**
**மறிவினை மருளுறுத் தருகினி லீர்க்க**
**வருகுறு மமயமி தசலமாக் கண்டேன்.**

[ஈதென்ன அதிசயம்! அசேதனப் பொருளாம் குன்றாக அது நிற்கிறது. அதன்செயல் அறிவது எவர்க்கும் அரிது. எனது அறியாச் சிறுவயது முதல் அருணாசலம் என்பது மிகப்பெரிது என உணர்வேன். ஆயினும், இந்த அருணாசலம்தான் திருவண் ணாமலை என்று ஒருவரால் சொல்லக்கேட்டபோது எனக்கு அதன் பொருள் விளங்கவில்லை. அது என்னை அருகில் ஈர்த்தபோது நான் பெற்ற தெளிவு என்றென்றும் அசையாது நின்றது (அசலம்)]

இந்த அறிமுகம் வெங்கடராமனின் பதினாறாம் (ஆங்கில வழக்குப்படி) பிறந்த நாளுக்கு சில வாரங்கள் முன்பு நிகழ்ந்தது (இந்து வழக்கில் 17–ஆம் பிறந்த நாளுக்கு முன்). இதனை அடுத்து, வருங்காலம்பற்றிய மற்றொரு

அறிகுறியும் தென்பட்டது. இப்போது ஒரு புத்தகம் அவனது எண்ணத்தைக் கிளறிற்று. இப்பூவுலகில் தெய்வீக சாந்நித்தியம் சாத்யமானதே என அந்நூல் வாயிலாய் மறுபடியும் உணர்ந்த சிறுவன் இனம் தெரியா மகிழ்ச்சிக் கடலில் மிதந்தான். அறுபத்து மூன்று சிவனடியார் களின் வாழ்க்கைச் சரிதை அடங்கிய பெரிய புராண நூலின் பிரதியொன்றை அவனது சிற்றப்பா இரவல் வாங்கி வைத்திருந்தார். யதேச்சையாக அதை எடுத்துப் படிக்கத் தொடங்கியவன் அதனால் தீவிரமாய் ஆகர் ஷிக்கப்பட்டவனானான். நாயன்மார்களின் பக்திப் பித் தும், உள்ளார்ந்த அன்புப் பெருக்கும், தெய்வீக ஆர்வமும் அவர்களது மானிட வாழ்விலேயே பூரணமாய் விகசித் தன என்ற உண்மை அவனைப் பரவசத்தில் ஆழ்த்தி யது. இறைமையுடன் ஒன்றிவிடுவதன் பொருட்டு அச் சிவநேசச் செல்வர்கள் புரிந்த தியாக வரலாறுகள் அவனை மலைப்பித்தன. அவர்களைத் தானும் பின் பற்றும் ஆர்வத்தை அவனுள் விதைத்தன. கனவுலகுகள், பேரவாக்களின் எதிர்பார்ப்புகள் அனைத்தைக் காட்டி லும் மிக உயர்ந்த ஒன்று உண்மையில் உளது, அதனை எட்டவும் கூடும் என்ற வெளிப்பாடு சிறுவனை சிலிர்க்க வைத்தது.

அக்கணத்திலிருந்தே தூய உணர்வின் வேகம் அவனது அகக்கண்ணைத் திறந்தது எனலாம். ஸ்ரீபகவானும் அவரது பக்தர்களும் 'தியானம்' எனப் பெயர் சூட்டியது இத்தூய உணர்வே ஆகும். 'உணர்வு' எனில் யாரோ எதையோ உணர்வது அன்று; தன்மை, முன்னிலை, படர்க்கை (நான், நீ, மற்றவர்) என்கிற பன்மை கடந்த அத்வைத நிலையும்கூட அன்று. பௌதிக நிதர்சன நிலைகளை யும் மனத்தளத்தையும் தாண்டிய பரமானந்தப் பிரக் ஞையே தூய உணர்வு ஆகும். இருப்பினும், அவ் வுணர்வு, மனித ஆற்றலையும் உளத்திறன்களையும் முழுவதும் பயன்படுத்திவருவதற்கு முரணானது அல்ல.

# 2. ஆன்ம ஞான விழிப்பு

இத்தகைய உணர்வு வேகத்தைத் தொடர்ந்து அப்பியசித்து மனத்தில் இறுத்தினால் அது மேன்மேலும் உறுதியுற்று நிலைத்து நின்று, முடிவில் ஆன்ம அனுபூதியில் – "சகஜ சமாதி"யில் – சேர்த்து விடுகிறது. அசையாத, இடையறாத தூய பேரின்பப் பிரக்ஞையே அந்த நீங்கா நிலை. அவ்வாறு இருந்தும், வாழ்வின் அன்றாட நடவடிக்கைகள் மற்றும் கண்ணோட்டங்களுக்கு இடையூறின்றி இழைந்து நிற்கத்தக்க நிலை அது.

இவ்வையகத்து வாழ்நாளில் இத்தகைய முழுநிறைவை எட்டுதல் மிக அறிது. ஸ்ரீபகவானின் விஷயத்திலோ சாதனை ஏதுமின்றி, பிரயாசை மேற்கொள்ளாமல் அந்த உச்ச நிலை அனுபவம் நிகழ்ந்தது.* அதனை அவரே பல ஆண்டுகளுக்குப்பின் இவ்வாறு மொழிந்துள்ளார்:

"மதுரையை முற்றிலும் விட்டுப் புறப்படுவதற்குச் சுமார் ஆறு வாரம் முந்தியிருக்கலாம். அப்போது தான் என் வாழ்க்கையில் அந்த மகத்தான மாறுதல் நடந்தது. திடீர் நிகழ்ச்சி அது! சிற்றப்பா வீட்டின் முதல் மாடியில் ஒரு நாள் தனியாக உட்கார்ந்திருந்தேன். வழக்கமான ஆரோக்கியத்துடனேயே இருந்தேன். வியாதி என்று எதுவும் ஒருபோதும் வந்ததில்லை. அன்றும் உடம்புக்கு ஒன்றும் இல்லை. ஆனாலும், திடீரென்று ஒரு மரண பயம் அழுத்தமாகக் கவ்வியது. 'நான் செத்து விடப் போகிறேன்' என்ற உணர்ச்சி உண்டாயிற்று. ஏனப்படித் தோன்றிற்று என்பதற்கு விளக்கம் சொல்வதற்கில்லை. எனக்கே அத்தருணம் அதை

* இந்த அனுபவம் 1896 ஜூலை மாத மத்தியில் கிட்டியது.

விளக்கிக்கொள்ளவும் முடியவில்லை. அவ்வாறு பீதிகொள்ளக் காரணம் ஏதும் உளதா என்று கண்டுபிடிக்கவும் தோன்றவில்லை. சாகப்போகி றோம் என்று தோன்றியவுடனேயே, அதைப் பற்றி மேலே என்ன செய்ய வேண்டும் என்பதிலேயே எண்ணம் போய்விட்டது. மருத்துவரிடம் ஆலோ சனை கேட்க வேண்டுமென்றோ, பெரியவர்களிடம் அல்லது நண்பர்களிடமாவது ஆலோசனை கலக்க வேண்டுமென்றோ கொஞ்சமேனும் தோன்றவில்லை. தனக்குத்தானே பிரச்சினையை அங்கேயே அப் போதே தீர்த்துக்கொள்ள எண்ணம் விழைந்தது.

"மரண பயத்தின் அதிர்ச்சியில் மனசு உள் முகமாகத் திரும்பியது. மானசீகமாக, வார்த்தை களால் கோத்தமைக்காமல் எனக்குள் சொல்லிக் கொண்டேன்: 'சரி, இப்போது சாவு வந்துவிட் டது. வரட்டும். சாவு என்றால் என்ன ? செத்துப் போவது எது ? இந்த உடம்புதான் மடிந்து போகிறது.' உடனே சாவுக் காட்சியை ஒரு நாடகம் போலவே செய்து பார்த்துக்கொண்டேன். கை கால்களை நீட்டிக்கொண்டு விறைப்பாக வைத்துக் கொண் டேன்–சவம் விறைத்துக் கிடப்பது போலவே! இந்த ஆராய்வை மேலும் தத்ரூபமாகச் செய்ய வேண்டும் என்பதற்காக ஒரு பிணத்தைப்போல பாவித்துக் கொண்டேன். மூச்சை விடாமல் அடக்கிக் கொண் டேன். தப்பித்தவறிக்கூட சப்தம் எழாதவாறு உதடு களை இறுக அழுத்திக் கொண்டேன். 'நான்' என்ற சொல்லோ வேறெந்த வார்த்தையோ வந்துவிடக் கூடாது என்ற உத்தேசம். தனக்குத்தானே மவுன மாய் கூறிக்கொண்டேன்: 'சரி, இந்த உடம்பு செத்து விட்டது. இந்த விறைத்த கட்டையை பாடையில் கட்டி மயானத்திற்கு எடுத்துப்போய் எரித்துச் சாம்ப லாக்கி விடுவார்கள். ஆனால், இந்த உடம்பின்

சாவோடு நானும் செத்துப்போய் விட்டேனா? 'நான்' என்பது இந்த உடல்தானா? உடல் மௌனமாக, செயலற்ற ஜடமாக இருக்கிறது. ஆனால் இப்போதும் ஜீவஸ்வரூபம் என்ற ஒன்றின் முழுச் சக்தி வீச்சும் தெரிகின்றதே? உடம்புக்குப் பிறிதாக, தனக்குள்ளேயே 'நான்' என்ற ஒலி அலையை உணர முடிகிறதே! ஆகவே, 'நான்' என்பது சரீரத்தைக் கடந்த ஓர் உணர்வு. ஜடமான உடம்பு சாகிறது. ஆனால் அதற்கு அப்பாற்பட்ட ஜீவ ஆன்மாவை சாவு தொடமுடியாது. அந்த சாவில்லாத ஆன்மாவே 'நான்' – என்று எனக்குத் தானே புரிந்துபோயிற்று. இது புத்திபூர்வமாய் எழுந்த எண்ண வரிசை அல்ல. உயிர்ப்புள்ள சத்தியமாகவே இது பளீரிட்டது. ஒரு வாதமுமில்லாமல் உடனுக்குடன் கண்டுகொண்ட பரம சத்தியம். 'நான்' முழுமெய்மை வாய்ந்தது, எனது (சாவு எனத் தோன்றும்) அந்த ஸ்திதியிலும் அது ஒன்றே சத்தியமாய் நிற்பது, என் உடலுடன் தொடர்புள்ள அனைத்து உணர்வு நடவடிக்கைகளும் அந்த 'நான்' ஒன்றையே மையமாகக் கொண்டுள்ளன என்றும் புரிந்தது.

"அன்றிலிருந்து அந்த 'நான்' அல்லது 'ஆத்மா' என்பதே ஒரு சக்திமிக்க ஆகர்ஷண வசியத்துடன் என்னைத் தன்னிலேயே தன் முழுக் கவனத்தையும் மையப்படுத்திக் கொண்டு விட்டது. மரண பயம் சடக்கென்று மறைந்து போயிற்று; நிரந்தரமாய் போயே போய்விட்டது. அந்தக் கணத்திலிருந்து இன்று இப்போதுவரை தன்னிலேயே ஒடுங்கியிருக்கும் நிலை இடையறாமல் நீடித்து வந்திருக்கிறது. சாகித்தியத்தின் சரளி வரிசை மாதிரி மற்ற நினைப்புக்கள் வரும், போகும். ஆனால், 'ஸ்புரணை' அல்லது தன்னுணர்வோ ஆதார சுருதிபோல சதா ஒலித்துக் கொண்டே இருக்கிறது. மற்ற ஸ்வரங்களும் அதை

யொத்து இழைய வேண்டியவையே. பேசுவதிலோ, படிப்பதிலோ, வேறு மற்ற காரியங்களிலோ உடம்பு ஈடுபட்டிருக்கும்போது கூட, 'நான்' என்பதிலே தான் யான் எப்போதும் மையப்பட்டிருப்பது. உடனே சாகப்போகிறோம் என்பதான அன்றைய தீவிர நெருக்கடி ஏற்படும் வரையில், 'நான் யார்' என்பதனைப் பற்றித் திட்டவட்டமான அபிப்பிராயம் ஏதும் இல்லாமல்தான் இருந்தேன். அதைப்பற்றி யோசிக்க வேண்டும் என்ற எண்ணங்கூடச் சிறிதளவும் இருந்ததில்லை."

வார்த்தை ஜாலங்களோ, பாசாங்குகளோ இல்லாமல் இதனை சாதாரணமாக சொல்லப்போனால் மேற்கூறிய நிலை அகந்தையெனும் தன்முனைப்பினின்றும் வேறுபட்டதல்ல என்றே தோன்றும். 'யான்' எனும் வழக்கச் சொல்லுக்கும் 'நான்' எனும் தனித்து நிற்கும் தன்மையைக் குறிக்கும் சொல்லுக்கும் இடையே எழும் பொருட் குழப்பமே இதற்குக் காரணம். இப்பொருள் வித்தியாசத்தை மரணத்தைப் பற்றிய மனப்பான்மை வேறுபாடுகளிலிருந்து ஒருவாறு அறியலாம். 'நான்' என்பது தனியொரு நானாக இருப்பது என்கிற அகந்தை நிலையைச் சார்ந்தோர், சாவை நினைத்து கதிகலங்குவர்; காரணம் 'நான் மடிந்துபோய்விடுவேனே' என்கிற பீதி. ஆனால், 'அழிவற்ற, அண்டமெங்கும் நிறைந்த ஆன்ம ஜோதியோடு ஒன்றியவனே நான்' என்ற அறிவு துலங்கும்போது மரண பயம் அடியோடு மறைந்துவிடுகிறது. இவ்வகையில், 'பரமாத்மாவுடன் ஐக்கியப்படும் ஜீவாத்மாவே நான்' என்று கூறுவதும்கூட சரியாகாது. ஏனெனில், அக்கருத்துப்படி, 'ஏதோ தனித்து இயங்கும் ஆன்மா என்ற இருப்பு ஒன்று, பரமாத்ம ஐக்கியப்பாட்டை அறியும்' என்று ஆகிவிடுகிறது. மாறாக, ஒருவருள் ஸ்புரணிக்கும் 'நான்' என்கிற பிரக்ஞையே பிரபஞ்சமெங்கும் நிறைந்த மெய்ப்பொருளாம்.

பல ஆண்டுகளுக்குப் பின்னர், பால் பிரண்டன் எனும் மேலைநாட்டு ஆர்வலரின் வினாக்களுக்கு விடையளிக்கையில் ஸ்ரீபகவான் இவ்விரண்டிற்கும் உள்ள வேறுபாட்டை விளக்கியுள்ளார்.*

பிரண்டன்: நித்தியமான "நான்" என்று எதைத் தாங்கள் நுட்பமாகக் கூறுகிறீர்கள்? தாங்கள் சொல்வது சரி என்றால் மனிதனுள் இரண்டு 'நான்'கள் ஒளிந்திருக்க வேண்டும் என்றாகிறது.

ஸ்ரீரமணர்: ஒரு மனிதனுள் இரு தன்மைகள், ஒரே சமயம் இரண்டு நான்'கள், இருக்க முடியுமா? இந்த விஷயத்தை சரிவரப் புரிந்துகொள்வதற்கு, மனிதன் முதலில் தன்னைத் தானே ஆராய்ந்து கொள்ள வேண்டியது அவசியம். மற்றவர்கள் நினைப்பதுபோலவே எவரும் நினைத்துவருவது வெகு காலமாகவே பழக்கத்தில் வந்துவிட்டது. ஆகவே, தனி மனிதன் தன்னை உண்மையாக ஆராய்ந்து தன் நிஜ ரூபத்தை உணர்ந்தானில்லை. தான் யார் என்கிற திருத்தமான உருவகம் அவனுக்கில்லை. தொன்றுதொட்டுத் தன்னை தனது உடல், மனம் இவற்றோடு மட்டுமே இனம்கண்டுகொண்டு வந்திருக்கிறான். அதனால்தான், "நான் யார்?" என்ற விசாரணையைத் தொடருமாறு உம்மிடம் கூறினேன்.

"நான்" என்பதின் உண்மையை உணர்த்துமாறு கேட்கிறீர்கள். என்னவென்று சொல்ல? "நான்" எனும் தன்மை எங்கிருந்து எழுகிறதோ அது அங்கேயே அடங்கி மறைந்துவிடவேண்டும். அந்த இருப்பே நிஜ "நான்".

* இவ்வினா–விடைகளும், வேறு சில வாசகங்களும், பால் பிரண்டன் என்ற ஆங்கிலேயப் பத்திரிகையாளர் எழுதி, லண்டன் ரைடர் அண்டு கோ பிரசுரித்த A Search in Secret India என்ற நூலிலிருந்து எடுக்கப்பட்டவை.

பிரண்டன்: மறைந்துவிட வேண்டுமா? ஒருவர் தம் தனித்தன்மையை, சுய உணர்வை எவ்வாறு இழக்க முடியும்?

ஸ்ரீரமணர்: "நான்" என்னும் நினைப்பே மனிதனின் மனத்தில் உதிக்கும் முதல் நினைவும், மேலோங்கும் எண்ணமும் ஆகும். "நான்" எனும் எண்ணம் பிறந்த பின்னரே ஏனைய எண்ணத் தொடர்கள் விரிகின்றன. தன்மை தோன்றிய பிறகே முன்னிலை – படர்க்கை தோன்றுகின்றன. தன்மையின்றி முன்னிலை–படர்க்கை இல்லை. "நான்" எனும் எண்ணச் சரட்டை அறுக்கவே 'நான் யார்?' என்ற ஆத்ம விசாரணை. பிற எண்ணங்கள் எழுந்தால், அவற்றைத் தொடர்ந்து பூர்த்தி செய்யாமல், உடனுக்குடன் 'அவ்வெண்ணங்கள் யாருக்கு உண்டாயின?' என்று விசாரிக்க வேண்டும். எத்தனை எண்ணங்கள் எழுந்தால்தான் என்ன? அவை யாருடைய எண்ணங்கள் என்று மனத்துள் வினவினால், "எனக்கே" என்று தோன்றும். பிறகு "அந்த 'நான்' யார்?" என்று விசாரணையை விடாப்பிடியாய்த் தொடர்ந்தால் மனம் தன் பிறப்பிடத்திற்கே திரும்பி விடும். "நான்" என்ற நினைப்பே முதன் முதலில் எழுவதுபோல, கடைசியில் மறைந்துபோவதும் அதுவே என்பது தெரியவரும். ஆராய்ந்து உணரக் கூடிய அனுபவமிது.

பிரண்டன்: ஒருவர் மனத்துள் இவ்வித விசாரணையில் இறங்க வேண்டும் என்கிறீர்கள்?

ஸ்ரீரமணர்: நிச்சயமாக! இத்தகைய அக–முக சிந்தனையின் மூலம், 'நான்' என்ற தன்மையில் கடைசி அலறல் மங்கி மெல்ல மறைந்து போவது சாத்தியமே.

பிரண்டன்: அந்நிலையில் மீதி இருப்பது என்ன? மனிதன் தன் நிலையை முற்றிலும் மறந்து உணர்வற்றுப்

போவான்; அல்லது முழுமூடன் ஆகிவிடுவான் இல்லையா ?

ஸ்ரீரமணர்: இல்லை. மாறாக, அழிவற்ற மனவிழிப்பு நிலையை – சுத்த இருப்புணர்வை – எட்டுகிறான். இவ்வாறு விழிப்புற்று உண்மைத் தன்மையை உணர்ந்தவனே பூரண விவேகி.

பிரண்டன்: ஆனாலும், அந்த நிலையிலும் கூட 'நான்' என்கிற தன்முனைப்பு இருக்குமல்லவா ?

ஸ்ரீரமணர்: 'நான்' எனும் முனைப்பு தனியொரு மனிதனின் உடலையும் புத்தியையும் சார்ந்தது. அவற்றைக் கடந்த நிஜ இருப்பை ஒருவன் முதன்முதலில் உணரும்போது அவனுள்ளிருந்து வேறு ஏதோ ஒன்று எழும்பி அவனை ஆட்கொள்கிறது. அந்த "ஏதோ ஒன்று", மனத்திரைக்கு அப்பாற்பட்டது; எல்லையற்றது; தெய்வீகமானது; சாசுவதமானது. சிலர் அதனை சுவர்க்க அருளாட்சி என்கிறார்கள். மற்றவர் பலர் அதையே ஆன்ம தரிசனம் என்றும், வேறுபலர் நிர்வாணம் என்றும் அழைக்கின்றனர். இந்துக்கள் அந்நிலையை முக்தி (விடுதலை) என்கிறார்கள். நீங்கள் என்னபெயர் வேண்டுமானாலும் சூட்டலாம். அப்பேரனுபவம் கிட்டிய மனிதன் தன்னை இழப்பதில்லை. மாறாக, தன்னைக் கண்டு கொள்கிறான்.

இத்தன்னாட்டத்தில் மனிதன் ஈடுபடாதவரை, ஐயப்பாடுகளும் உறுதியின்மையும் வாழ்நாள் முழுதும் தொடர்ந்தவண்ணமிருக்கும். பேரரசர்களும், அரசியல் ஆட்சியாளர்களும் மற்றவர்களை அடக்கியாள முற்படுகிறார்கள். ஆனால், தம்மைத்தாமே ஆண்டுகொள்ள இயலாதவர்கள் என்பதை அவர்களே மனத்துள் உணர்வார்கள். தன்னுள் ஆழ்ந்து தன்னைக் கண்டவரே உயர்ந்த அதிகாரம் படைத்தவர். 'தான் யார் ?' என அறியாதவர் ஏனைய யாவற்றையும்

அறிந்திருந்தும் யாது பயன்? உண்மை ஆன்ம நிலைக்களத்தைத் தேடி விசாரணை மேற்கொள் வதை மானிடர் தவிர்க்கிறார்கள். ஆனால் அதைத் தவிர வேறென்ன உன்னதத் தேடல் உளது?

பதினாறு வயதினிலே ஸ்ரீரமணரை ஆட்கொண்ட இச்சாதனை நிகழ்ச்சி அரைமணி நேரத்துக்குள்ளாகவே நடந்தேறியது. இருந்தும், நாமெல்லோருக்கும் அது முக்கியத்துவம் வாய்ந்தது; ஏனெனில் அது ஓர் தீவிர ஆன்மிக சாதனை; ஆன்ம ஒளியை எட்டும் திட முயற்சியே ஆகும். முயற்சியற்றுத் தானாக நிகழ்ந்த சம்பவம் அன்று. வழக்கமாக, ஒரு குரு தாம் வகுத்த நெறி முறையை சீடர்களும் கடைபிடிக்க வழிகாட்டுவார். பால ரமணர் விழைந்து கண்டதோ வாழ்நாள் முழுதும் அப்பியசித்து அடையக்கூடிய சாதனை முறை மட்டுமின்றி, பெரும் பாலான சாதகர்கள் பல பிறவிகளில் கடுஞ்சாதனை புரிந்து காணப்பெரும் சகஜ ஆன்மஞான நிலை அது. ஸ்ரீபகவான் அதனை அரைமணி நேரத்துக்குள் எட்டி விட்டார். அது மட்டுமல்ல; பிற்காலத்தில் தம்மை நாடுவோர்க்கு உபதேசித்த ஆன்ம விசார மார்க்கமும் அதுவே ஆகும். 'அவ்விசாரணை இட்டுச் செல்லும் உச்சக் கட்டம் பொதுவாக எவராலும் விரையில் எட்டக்கூடியதல்ல, நீண்ட கால முயற்சி தேவைப்படும்' என்றும் அவர் எச்சரித்துள்ளார். ஆயினும், அதே சமயம், "'நான் யார்?' விசாரமே உண்மையுருவாகிய எல்லையற்ற சுத்த சத்தியத்தை உணர்வதற்குத் தவறா உபாயம். அது ஒன்றே நேர் வழி" என்கிறார் (மகரிஷி வாய்மொழி, பாகம் 2,I). மேலும், இந்த அக–நாட்டச் சாதனை முழுநிறைவுபெற நீண்ட காலம் பிடிக்கலாம் என்றாலும், மனம் ஒருமுகப்படத் தொடங்கியதுமே சிந்தனையில் படிமாற்றங்கள் தொடர்ந்து நிகழும் என் றும் கூறியுள்ளார். "உடம்பையும் மனத்தையும் 'நான்'

ஆக எண்ணும் பாவம் படிப்படியாய்க் கழன்று, உடற் பற்று குறைந்து, சத்தியமான ஆன்மாவை மேன்மேலும் உணரத் தொடங்கலாம்.''

ஆன்மீக சாதனைத் தத்துவங்களையோ, அதற்கான நியமங்களையோ கிஞ்சித்தும் அறிந்திராத பால பக வான் வெங்கடராமன், ஒருமுக சிந்தனைக்கு உதவியாக "பிராணாயாமம்'' அல்லது மூச்சை இழுத்து அடக்கி வெளியிடும் யோக முறையையே மேற்கொண்டார் என் பது இங்கு குறிப்பிடத்தக்கது. பின்னர், மனத்தை அடக் கிக் கூர்நிலைப்படுத்துவதற்குப் பிராணாயாமம் உதவும் என்று ஒப்பினாராயினும், மனத்தைக் கட்டுப்படுத்தும் சகாயமாகவே அதனை அனுமதித்தாரே தவிர, மற்றபடி பிராணாயாம முறையை அவர் வற்புறுத்தவில்லை.

"பிராணாயாமம் (சுவாச ஒழுக்கம்) மனத்தை அடக் கும் சாதனம். மனம் ஏகாக்கிரத்தைப் பெறுவதற் கான உபாயங்களில் அதுவும் ஒன்று. சதா அலை பாயும் மனத்தை அடக்கி ஒரு நிலைப் படுத்து வதற்கு இது உதவுவதால் இதனை மேற்கொள்ள லாம். 'கூர்மதியால் பேச்சு மூச்சடக்கிக்கொண்டு உள்ளே ஆழ்ந்தறிதல்' இவ்வாறு சுலபமாகக் கூடும். சுவாசப் பயிற்சியால் மனம் ஏகாக்கிரம் அடைந்த பிறகோ மூச்சின்மீது கவனத்தைச் செலுத்தாமல் ஒருமையுணர்வுடன் மனத்தை உள்ளத்துள் திருப்பி, 'தான் யார்' என்று கடைசிவரை விசாரித்துக் கொண்டே போனால், மனம் நசித்து, ஆன்ம அனுபூதியில் இழைந்துவிடும்.''

பதினாறு வயதில் உடனடியாய் உணர்ந்த புது விழிப்பிற்குப்பின், வெங்கடராமனின் புற வாழ்வும் மாற்றம் கண்டது. உலக நடப்புகள் அவனுக்கு அடி யோடு சப்பிட்டு விட்டன. வாழ்வின் வழக்கமான எதிர் பார்ப்புகள் அர்த்தமற்றவை ஆகிவிட்டன. இதுகாறும் புறக்கணித்திருந்த ஆன்மீக எண்ணங்கள் அலை

மோதின. ஆன்மீக வாழ்வின் கோட்பாடுகள் ஏதும் அறியாத பள்ளிச் சிறுவன், பாவம், இந்த அகத் தூண்டுதலின் தாக்கம் நடைமுறை வாழ்விற்கு ஒத்துவரமாட்டாமல் திணறினான் போலும்! யாரிடமும் இதைப்பற்றி வாய்திறக்கவில்லை. வழக்கம்போல் பள்ளிக்குச் சென்றான். அன்றாட நடவடிக்கைகளில் தன் மனோநிலையை வெளிக்காட்டாமல் வளைய வந்தான். அவ்வாறு இருந்தும் கூட, அவனது குடும்பத்தினர் அவன் போக்கில் ஏற்பட்ட மாற்றங்களை வெகு விரைவில் கண்ணுற்றனர். சிலவற்றைக் கண்டிக்கவும் செய்தனர். இதையும் அவரே கூறக் கேட்கலாம்:

"புது விழிப்பின் விளைவுகள் விரைவிலேயே வாழ்க்கையில் தெரியலாயின. முதலாவதாக, நண்பர்கள், உறவினர்கள் முதலியவர்களோடு வெளித் தொடர்பு கொள்வதில் அதுவரை இருந்த சிறிதளவு ஈடுபாடும் இப்போது போய் விட்டது. படிப்பை ஏதோ இயந்திர கதியிலே தொடர்ந்தேன். நான் படிக்கிறேன் என்று வீட்டில் பெரியவர்கள் நினைக்கும்படி, அவர்களைத் திருப்தி செய்வதற்காகவே, ஒரு புத்தகத்தைப் பிரித்து வைத்துக் கொள்வேன். ஆனால் கவனமோ படிப்பு என்ற மேம்போக்கான விஷயத்திற்குத் தொலை தூரம் தள்ளி எங்கேயோ செல்லும்! உறவினர்களுடனும், நண்பர்களுடனும் பழகுவதில் பணிவும் தாழ்மையும் மேலோங்கின. முன்பெல்லாம் மற்ற பசங்களைவிட எனக்குக் கடுமையான வேலை கொடுக்கப்பட்டால் முணுமுணுத்து முரண்டு பிடிப்பேன். எந்தப் பயலாவது என்னைத் தொல்லை செய்தால் பதிலடி கொடுப்பேன். எவரும் கேலி செய்யவோ அல்லது வேறு விதத்தில் சுவாதீனமாய் என்னைச் சீண்டவோ பயப்படுவார்கள். இப்போது அதெல்லாம் மாறி விட்டது. எத்தனை வேலையானாலும், கேலி தமாஷானாலும், சீண்டினாலும் எல்லாவற்றையும் வாய்

பேசாது எளிமையாய் ஏற்றுக்கொள்வதாக மாறிற்று. மனஸ்தாபப்படுவது, எதிரடி கொடுப்பது போன்ற பழைய அகம்பாவம் மறைந்து போயிற்று. சிநேகிதர்களுடன் வெளியே விளையாடப் போவதும் நின்று போயிற்று. தனிமையையே நாடினேன். அடிக்கடி தன்னந்தனியாக உட்கார்ந்துகொண்டு – குறிப்பாக, தியானம் செய்ய ஏற்றபடி அமர்ந்து – கண்ணை மூடி ஆத்மாவிலேயே ஒடுங்கியிருக்கத் துவங்கினேன். அதாவது, உண்மையில் நானாகவுள்ள உயிர்த் தத்துவமோ, உயிர்ச் சக்தியோ, உயிரோட்ட ஆவேசமோ எதுவோ ஒன்றில் அப்படியே அடங்கியிருக்க ஆரம்பித்தேன். இதைக் கண்ணுற்ற என் அண்ணன் ஓயாமல் கேலி செய்வான்: 'ஞானியே! யோகீச்வரரே!' என்றெல்லாம் இகழ்ச்சி கலந்த குரலில் கூப்பிடுவான். 'பழங்கால ரிஷிகள் மாதிரி வனாந்திரத்தில் போயிருப்பது தானே ?' என்று பரிகாசமாய் புத்திமதி சொல்வான்.

"சாப்பாட்டில் இது பிடிக்கும், இது பிடிக்காது என்பதெல்லாம் போய்விட்டது. ருசியோ, அருசியோ, நல்லதோ, ஊசலோ, கிடைத்த உணவை விருப்பு வெறுப்பின்றி விழுங்க ஆரம்பித்தேன்.

"புது நிலை அம்சங்களில் ஒன்று மீனாக்ஷி சுந்தரேச்வரர் கோயில் (மதுரை) சம்பந்தப்பட்டது. முன்பெல்லாம் எப்போதாவது நண்பர்களுடன் அக்கோயிலுக்குப் போவதுண்டு. விக்கிரகங்களை வெறுமனே தரிசித்து, விபூதி குங்குமம் வாங்கி இட்டுக் கொண்டு விசேஷமாய் ஒரு உணர்ச்சியும் பெறாமல் வீடு திரும்புவேன். இப்போது புதிதாக ஒரு விழிப்பு ஏற்பட்ட பிறகோ, அனேகமாக தினந்தோறும் மாலை வேளையில் கோயிலுக்குப் போகத் தொடங்கி விட்டேன். தனியாகவே போவேன். சுந்தரேச்வர சுவாமி சந்நிதியிலோ, மீனாக்ஷி அம்மன் – நடராஜர் – அறுபத்துமூவர் ஆகியோரின் சிலைகளுக்கு

முன்னாலோ நெடுநேரம் நின்றபடி இருப்பேன். அலையலையாக உணர்ச்சி எழும்பி உள்ளத்தைப் பரவசப்படுத்திவிடும். தேஹாத்ம புத்தி (தான் உடல் என்ற கருத்து) அகன்று விட்டதால், உயிர் தனக்கு ஆலம்பனமாக (பிடிப்பாக) உடம்பை நினைத்து வந்த நிலை போய்விட்டது. அது இப்போது வேறு புதிய ஆதாரப் பிடிப்பை நாடித் தவித்தது. அதனால் தான் இப்படி அடிக்கடி கோவிலுக்குப் போனதும், அங்கே "ஆத்மார்த்தக்" கண்ணீர் பெருகுவதும் புது அனுபவமாயின. அண்டசராசரங்களையும், அனைவரின் விதியையும் ஆட்டிவைக்கும் ஈசனின் சந்நிதியில் நின்று, 'அப்பனே! உன் அருள் வீச்சு என்னை ஆட்கொள்ளட்டும்; என் உள்ளன்பைப் பெருக்கி, அறுபத்து மூவரது போன்று பக்தி பெருகி நிரந்தரமாக நிற்க அருள்புரியமாட்டாயா ?' என்று சிற்சில சமயம் பிரார்த்திப்பேன். ஆனால், பெரும் பாலும் எவ்வித பிரார்த்தனையும் இராது. ஆழங் காணாத அகக் கடல் பொங்கி, ஈசனாகிய பெருங் கடலில் பாய்ந்து சங்கமிக்க ஏங்கி, மனம் திறந்து, எண்ணம் துறந்து சமைந்து நிற்பேன். இப்படி உள்ளம் பொங்கிப் பாய்ந்ததின் அடையாளமாகவே கண்களில் நீர் பெருகியதே தவிர, வேறு உணர்ச்சி வசத்தால் உண்டான ஆனந்தக் கண்ணீரோ, துக்கக் கண்ணீரோ அல்ல. உணர்ச்சி வசப்படவில்லை என்பதனால் அவநம்பிக்கை கொண்டவனும் அல்ல. வாழ்க்கை பற்றி ஏதும் அன்று அறிந்திராத எனக்கு, அது துயரம் வாய்ந்தது என்பது போன்ற கருத்துக் களும் தெரியாது. மறுபிறவி வேண்டேன் என்றோ, மன வைராக்கியம், மோட்சம் அடைதல் வேண்டும் என்பதான விருப்பங்களோ எனக்கு இருக்க வில்லை. பிரும்மம், சம்சார சாகரம் முதலியவை பற்றி நான் கேள்விப்பட்டதில்லை. அன்றுவரை படித்திருந்த நூல்கள் பெரியபுராணம், பைபிள்

மற்றும் தாயுமானவர் அல்லது தேவாரப் பாடல் களில் சில மட்டுமே. புராணக் கதைகளில் வரும் ஈஸ்வரனின் உருவம் தான் நான் அறிந்தது. 'அனைத்துக்கும் அடிப்படையாக ஓர் அருவ மெய்ப்பொருளாம் பிரும்மம் என்பதாக உண்டு. ஈசனும் அந்த பிரும்மம் தான். ஜீவனான நானும் அந்த பிரும்மமே அல்லது அதன் அம்சமே' என்பது போன்ற சித்தாந்தங்கள் நான் அந்த வயதில் சற்றும் அறிந்திராதவை. பிற்பாடு திருவண்ணாமலையில் ரிபு கீதை முதலான வேதாந்த நூல்களை நான் கேட்க நேர்ந்த பிறகே இவ்விஷயங்களை என் கவனத்தில் இருத்தினேன். ஆய்வு அலசல் செய்யா மலும், பெயர்கள் இடாமலும் அனுபவ ஞானமாக முன்பே நான் உள்ளூர உணர்ந்தவற்றையே இந்த நூல்கள் அலசி ஆராய்ந்து பெயர் கொடுத்து விவரித்துள்ளன என்று அப்போது கண்டேன். நான் ஆன்ம விழிப்பில் நின்ற நிலையை வேதாந்த நூல்களின் கூற்றுப்படி 'சுத்த மனம்' (ஸத்), அஞ்ஞானம் அகன்ற விஞ்ஞானம், அல்லது சத்தியத்தில் நிலைத்தவரின் நேரடி உணர்வு (சூக்ஷ்ம திருஷ்டி) போன்ற பெயர்களாலும் வருணிக் கலாம்.''

ஸ்ரீபகவானின் ஆன்ம அனுபவ நிலை, ஒரு யோகி குறுகிய நாழிகை மெய்மறந்து ஆனந்த பரவசத்தில் ஆழும் நிலையினின்று முற்றிலும் வேறுபட்டது. பரவச நிலை ஓய்ந்த பின்னர் யோகி திரும்பவும் இருண்ட மனச்சுவர்களால் சூழப்படுகிறான். ஸ்ரீபகவானோ, நிலைத்து இடையின்றி நீடிக்கும் ஆன்ம உணர்வில் என்றென்றும் சமனம் எய்துவிட்டவர். அதன்பின் வேறேதும் சாதனையோ ஆன்மீக முயற்சியோ கிடையாது என்று திட்டவட்ட மாகப் பகன்றுள்ளார். ஆன்மாவில் நிலையாக ஒன்றி விட்ட பிறகு வேறு ஆன்மீக ஆற்றல் தேவை இல்லை; ஏனெனில், மனப் போராட்டங்களுக்குக் காரணமா

யுள்ள அகந்தை அறவே கரைந்து விட்ட நிலையில், போராட்டம் நிகழ ஏதும் மீதம் இல்லாமற் போய் விடுகிறது. அதன்பின்னர், உள்ளது உள்ளபடியான தன் இருப்பைத் தொடர்தலும், வெளி உலகிலும் சகஜ பாவத்துடன் இயங்கி, தம்மை நாடுவோர்க்கு அருள் பாய்ச்சுவதும் ஸ்ரீபகவான் வாழ்வில் ஒருங்கிணைந்து, முயற்சிகளற்று, இயல்பாய் நிகழ்ந்துவந்தது.

இவ்வாறாயினும், அன்று ஆன்மானுபவம் எய்திய பிறகும்கூட மேன்மேலும் ஆன்மீக வளர்ச்சிக்கு இட மிருந்தது என்பதை ஸ்ரீபகவானின் வாய்மொழி வாயி லாகத் தெரிய வருகிறது. ஆன்மா "புதிய ஆதாரப் பிடிப்பை நாடியது" என்பதும், அறுபத்துமூன்று நாயன் மார்களை முன்மாதிரியாகக் கொள்வதும், பெரியவர் கள் என்ன நினைப்பார்களோ என்ற கவலையும், விழிப் புணர்வு பெற்ற பால ரமணரிடம் எஞ்சிய இருமைப் பாங்கை சுட்டிக்காட்டுகின்றன. அதன் பின்னரே அவை மெல்ல அடியோடு மறைந்தன. ஆன்மீக வளர்ச்சிக் கட்டத்தில் உடல் சார்ந்த அறிகுறியையும் காண்கி றோம். மதுரையில் ஆன்ம விழிப்பு உணர்ந்து, பின்னர் (சில மாதங்களுக்குப்பிறகு) திருவண்ணாமலை கோயிற் கருவறைக்குள் நுழையும் காலம் வரை அவர் உடலில் வெப்பம் ஓங்கியிருந்தது போலும்! அருணாசலேச்வர லிங்கத்திற்கு முன் நின்ற தருணமே "இதுகாறும் உடலை எரித்த வெப்பம் மறைந்து உள்ளம் போல் உடலும் குளிர்ந்தது" என்று நினைவு கூறுகிறார் பகவான் ஸ்ரீ ரமண மகரிஷி.

# 3. தந்தை தேடிப் பயணம்

அன்றாட நடப்பில் வெங்கடராமனின் பிடிப்பற்ற மாற்றம் சிக்கல்களை எழுப்பியது. பள்ளிப் படிப்பில் முன்னைவிட கவனம் குறைந்தது. விளையாட்டுகளும் சப்பிட்டு மறைந்தன. தனித்துத் தன்னுள் ஆழ்தலும், மவுனப் பிரார்த்தனையும் அவனிடம் குடிகொண்டன. வீட்டில் சிற்றப்பனும் தமையனும் இவனுடைய அசட்டைப் போக்கைக் கண்டிக்கலாயினர். நடுத்தர வர்க்கத்துப் பிள்ளை முனைந்து படித்து முன்னேறி சம்பாதித்துக் குடும்பத்துக்கு உதவவேண்டும் என்பதே அவர்களது எதிர்பார்ப்பு.

வெங்கடராமனை ஒரு முடிவுக்குத் தூண்டிய நிகழ்ச்சி 1896, ஆகஸ்ட் 29ஆம் தேதி நடைபெற்றது. ஆன்ம அனுபவம் நிகழ்ந்து அப்போது சுமார் இரண்டுமாத காலம் ஆகியிருக்கும். பெயின் ஆங்கில இலக்கணப் புத்தகத்தின் பாடம் ஒன்றை அவன் படித்துச் செல்லாததால் ஆசிரியர் அதை அவன் மூன்று முறை எழுதி வருமாறு தண்டனை அளித்திருந்தார். அன்றைய தினம் முற்பகலில் மாடி அறையில் உட்கார்ந்துகொண்டு எழுத ஆரம்பித்திருந்தான். அண்ணன் நாகஸ்வாமியும் அதே அறையில் இருந்தான். பாடத்தை இருமுறை எழுதி விட்டான். மூன்றாம் முறை எழுதும்போது அந்த வெட்டி வேலையில் மனம் சலித்து, எழுதிய காகிதங்களை ஒதுக்கித் தள்ளினான். நிமிர்ந்து அமர்ந்து கண்களை மூடி நிஷ்டையில் ஆழ்ந்துவிட்டான்.

இதையெல்லாம் கவனித்துக் கொண்டிருந்த தமையன் நாகஸ்வாமி கோபம் கொண்டான். "இப்படியெல்லாம் இருக்கிறவனுக்கு இதெல்லாம் என்னத்துக்கு?" என்று மட்டுமே கடுகடுப்புடன் இரைந்தான். 'அதன்

உள்ளர்த்தத்தைக் குறிப்பாய் உணர்ந்தான் வெங்கட ராமன்: 'வீட்டோடு ஒட்டாமல் சாது மாதிரி கண்ணை மூடிக் காலங்கழிக்கிறவனுக்கு வீட்டுக் காப்பும் சௌகரியமும் என்னத்துக்கு?' அண்ணன் உரைத்ததில் உள்ள நியாயம் சிறுவனுக்கு உறைத்தது. அதில் பொதிந்த உண்மையை உணர்ந்தான். விருட்டென எழுந்தான். எல்லாவற்றையும் உதறிவிட்டு உடனடியாய் வீட்டை விட்டு வெளியேறத் தீர்மானித்தான். எங்கே போவது என்பதும் தெரிந்ததே. ஆம்! பவித்திரமான அருணாசலமாகிய திருவண்ணாமலைக்குத்தான் போய்ச் சேர வேண்டும்.

ஆனால் வெளியே போவதற்கு ஏதாவது காரணம் கற்பிக்க வேண்டுமே? அவனது எண்ணம் தெரிந்தால், கட்டுப்பாடான குடும்பத்தில் அவன் சிற்றப்பனும் அண்ணனும் அவனைப் போகவிட மாட்டார்கள். ஆகவே, "பள்ளிக்கூடத்தில் ஸ்பெஷல் கிளாஸ் இருக்கிறது. மின்சாரம் பற்றிப் பாடம். உடனே போகவேண்டும்" என்று சாக்குக் கூறிப் புறப்பட ஆயத்தமானான்.

பிரயாணத்திற்குப் பணம் வேண்டுமே? தன்னையறியாமல் அண்ணன் அதற்கும் ஏற்பாடு செய்கிறவன் போல, "சரி, அப்படியானால் கீழே பெட்டியிலிருந்து ஐந்து ரூபாய் எடுத்துக்கொள். பள்ளிக்குப் போகிற வழியில் என் காலேஜ் ஃபீஸையும் கட்டிவிட்டுப்போ" என்று பணித்தான்.

'வெங்கடராமனின் குடும்பத்தினர் அனைவருமே ஞான சூன்யர்களோ? அவனுக்கு அந்த வயதில் கிட்டிய சமாதி நிலையை குடும்பத்தில் எவருமே அறியாமற்போனது ஏனோ?' போன்ற சந்தேகக் கேள்விகள் எழத்தான் செய்யும். உண்மையில், குடும்பத்தினர் மட்டுமின்றி மற்றவர் எவருமே சிறுவனின் மாற்றத்தை உணர்ந்தாரில்லை. அவ்வுன்னத நிலையின் அருமை பெருமை

களும் தெய்விகத் தன்மையும் மறைமுகமாகவே இருந்தன. அவரது பள்ளித் தோழர் ரங்க அய்யர் என்பவர் பல ஆண்டுகளுக்குப் பின்னர் பழைய நண்பனை திருவண்ணாமலையில் கண்ட மாத்திரத்திலேயே பிரமித்து சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து எழுந்தார். ஆனால் முன்பு மதுரையில் கடைசி நாட்களிலும்கூட அவர் வெறும் வெங்கடராமன் எனும் தோழனை மட்டுமே கண்டு வந்தார். 'ஏன் எனக்கு உங்கள் மகிமை அன்றே தெரியாமற் போயிற்று?' என்று அவர் பிற்காலத்தில் கேட்க, அதற்கு பகவான், "என் மாற்றத்தை எவருமே அறியவில்லை" என்று மட்டுமே பதிலளித்தார்.

"ஆனாலும், வீட்டைவிட்டு ஓடிப்போவதைப்பற்றி என்னிடம்கூட ஒரு வார்த்தை கூறவில்லையே!", என்று ரங்க அய்யர் தொடர்ந்து வினவ, "எப்படிச் சொல்லியிருப்பேன்? எனக்கே தெரியாதே!" என்றாராம் ஸ்ரீ பகவான்!

வெங்கடராமன் மாடியைவிட்டுக் கீழே இறங்கிச் சென்றான். சித்தி ஐந்து ரூபாய் எடுத்துக்கொடுத்தாள். சாப்பாடு பரிமாறினாள். அவசர அவசரமாகச் சாப்பிட்டு முடித்தான். வீட்டில் இருந்த ஒரு அட்லஸைப் புரட்டி, தேசப் படத்தில் திருவண்ணாமலைக்கு அருகிலுள்ள ரயில் நிலையம் திண்டிவனம் எனக் கண்டான். உள்ளபடி, திருவண்ணாமலைக்கு ஒரு கிளை ரயில் பாதை ஏற்கனவே போடப்பட்டிருந்த போதிலும் அவன் பார்த்த பழைய அட்லஸில் அது இடம் பெறவில்லை. திண்டிவனத்திற்கு ரயில் கட்டணம் மூன்று ரூபாய்க்கு மேல் இருக்காது என அனுமானித்து, மூன்று ரூபாய் மட்டுமே எடுத்து வைத்துக் கொண்டான். வீட்டார் கவலைப்படக் கூடாது, தேடி அலையவும் வேண்டாம் என்பதற்காக ஒரு கடிதத்தை எழுதி அத்துடன் மீதி

இரண்டு ரூபாயையும் வைத்தான். கடித வாசகம் இது தான்:

> நான் என் தகப்பனாரைத் தேடிக்கொண்டு அவருடைய உத்தரவின்படி, இவ்விடத்தை விட்டுக் கிளம்பி விட்டேன். இது ஒரு நல்ல காரியத்தில் தான் பிரவேசித்திருக்கிறது. ஆகையால் இந்தக் காரியத்திற்கு ஒருவரும் விசனப்பட வேண்டாம். இதைப் பார்ப்பதற்காக பணமும் செலவு செய்ய வேண்டாம்.
>
> இப்படிக்கு
>
> ———
>
> உன் சம்பளத்தை இன்னும் செலுத்தவில்லை. ரூ.2 இத்தோடு கூட இருக்கிறது.

உடலோடு இழைந்திருந்த ஆன்மா அப்பிணைப்பினின்றும் கழன்றுவிட்ட போதிலும், ஒருமை உணர அவ்வுயிர் ஒரு "புதிய ஆதாரப் பிடிப்பை நாடித் தவித்தது" என்று ஸ்ரீபகவான் பின்னர் கூறியுள்ளதை இச்சம்பவம் பிரதிபலிக்கிறது. 'பள்ளியில் மின்சாரப் பாடம்' என்று சொன்ன நொண்டிச்சாக்கு குற்றமற்றது எனினும், அம்மாதிரியான சாக்குப்போக்குகளுக்குப் பின்னர் இடமே இல்லாமற்போயிற்று. 'தகப்பனாரைத் தேடிக் கொண்டு' செல்லவேண்டிய நிர்பந்தமும் பின்னர் மறைந்தது; ஞானத் தெளிவுற்றபின் தேடிச் செல்ல வேறேது? பக்தர்கள் அவரது காலடியில் வீழ்ந்து வணங்குகையில் அவரே பரமபிதாவுடன் ஒருங்கிணைந்தவராகத் திகழ்ந்து, தாம் வேறொரு பிதாவைத்தேட மாட்டாதவராக ஆகிவிட்டாரே! அன்பு, பக்தி புரிதல் போன்ற இருமை நிலை திரிந்து அமைதிப் பேரின்பத்தில் ஒருமித்து விடுவதின் எடுத்துக்காட்டாகவே சிறுவன் ரமணனின் கடிதம் விளங்குகிறது. "நான்", "என்

தகப்பனார்", அவரது "உத்திரவுப்படி" என்கிற இரு நிலைச் சொற்களுடன் தொடங்கும் கடிதம், அடுத்த வாக்கியத்தில் தன்னை "இது" என அஃறிணைப் பொரு ளாகக் குறிப்பிடும் ஞானப் பக்குவத்தைத் தழுவுகிறது. முடிவில் கையொப்பமிடும் கணத்தில் தன் வயம் அறவே அகன்று, கையெழுத்தின்றி வெறும் கோட்டுக் கீறல் மட்டுமே காண்கிறது. இதன் பின்னர் ஸ்ரீரமணர் ஒரு போதும் கடிதம் ஏதும் எழுதினாரில்லை; கையொப்ப மும் இட்டதில்லை. ஆயினும், தன் முன்னாள் பெயரை மட்டும் இருமுறை எழுதிக்காட்டியுள்ளார். பின்னர் பல ஆண்டுகளுக்குப்பின் சீன நாட்டினர் ஒருவர் ஆசிரமம் வந்திருந்தார். ஸ்ரீபகவான் அருளிய "நான் யார் ?" எனும் சிறு நூலின் ஆங்கிலப் பிரதியைப் பெற்றுக்கொண்ட அவர், அதில் ஸ்ரீபகவான் கையொப்பமிட்டுத் தரவேண்டு மாறு வினயத்துடன் மன்றாடினார். முடிவில் ஸ்ரீ பகவான் அதில் "ஓம்" என்கிற பிரணவத்தை சமஸ்கிருத குறியீட்டில் எழுதித் தந்தார்.

வெங்கடராமன் மூன்று ரூபாய்மட்டுமே எடுத்துக் கொண்டு, மீதி இருண்டு ரூபாயை கடிதத்துடன் வைத் தான். திருவண்ணாமலைப் பயணத்திற்கான ரயில் சத் தம் மட்டுமே கையிலேந்திக் கிளம்பினான் என்பது குறிப்பிடத்தக்கது.

வீட்டைவிட்டுப் புறப்பட்டபோது கிட்டத்தட்ட நடுப்பகல். மதுரை ரயில் நிலையமோ அரை மைல் தொலைவில். சரியாகப் பகல் பன்னிரண்டு மணிக்கு ரயில் வண்டி புறப்படுகிறது. வேக வேகமாக நடந்தான். ரயில் நிலையம் போய்ச் சேர தாமதமாகிவிட்டது. நல்லகாலமாக அன்று ரயிலும் தாமதமாகவே வந்தது. திண்டிவனத்திற்கு மூன்றாம் வகுப்பு ரயில் கட்டணம் இரண்டு ரூபாய் பதிமூன்றணா என அட்டவணைப் பலகையில் கண்டான். டிக்கட் வாங்கியபின் கையில்

மீதம் மூன்றே அணா (19 பைசா)! அட்டவணையின் அடுத்து சில வரிகளைப் பார்த்திருந்தால் திருவண்ணா மலைக்கே ரயில் இருப்பதும், அதற்குக் கட்டணம் சரி யாக மூன்று ரூபாய் என்பதும் தெரிந்திருக்கும்!

பையனின் இவ்வாறான பயண நிகழ்வுகள், சாதகன் ஒருவன் தன் இலக்கை அடைவதன்பொருட்டு மேற் கொள்ளும் கடின பயணத்தின் சோதனைகளுக்கு ஒத் தவை எனலாம். முதலில், ரயில் கட்டணத்திற்கான பணம் தெய்வாதீனமாக வலுவில் கிட்டியது. தாமத மாகப் புறப்பட்டவனுக்கு ரயிலும் நேரம் தாழ்ந்து வந்து ஏற்றிச்சென்றது. போகவேண்டிய இடத்திற்கு உரித் தான காசு கையிலிருந்தும் பயணியின் அசட்டைத் தனத்தால் பயண காலம் நீண்டது. வழியில் அல்ல லுற்று இடர்கள் பல எதிர்கொள்ள நேர்ந்தது.

வெங்கடராமன் ரயில் பெட்டியில் ஏறி அமர்ந் தான். ஆத்மனின் உள்ளீர்ப்பால் பேச்சடங்கிப்போன வன் மவுனமாய் உட்கார்ந்திருந்தான். பல ரயில் ஸ்டேஷன்கள் வந்து போயின. அந்தப் பெட்டியில் வெண்தாடியுடன் முஸ்லிம் மௌல்வி ஒருவர் மற்ற பிரயாணிகளிடம் பல மகான்களின் கதைகளையும் போதனைகளையும் விவரித்துப் பேசிக்கொண்டிருந்தார். அதில் கலந்துகொள்ள விழையாத அந்தண யுவனின் பாங்கைக் கவனித்த அவர் தாமே அவனிடம் பேச்சுக் கொடுத்தார்.

"சாமி எங்கிட்டுப் போவுது?"

"திருவண்ணாமலைக்கு"

"நாமும் தான்" என்றார் மௌல்வி.

"ஓ! திருவண்ணாமலைக்கா?"

"அங்கே இல்லை. அதுக்குப் பக்கத்து ஸ்டேஷன்".

"அது என்ன ஊர்?"

"திருக்கோயிலூர்"

தன் தவறை உணர்ந்த வெங்கடராமன் வியப்பில் குரலை உயர்த்திக் கேட்டான்: "அப்படியானால் திருவண்ணாமலைக்கு ரயில் போகிறதா என்ன ?"

"விசித்திரமான ஆளாயிருக்கியே சாமி! பின்னே எந்த ஊருக்கு டிக்கட் எடுத்திருக்கே ?" என வினவினார் மௌல்வி.

"திண்டிவனத்துக்கு"

"அடப் பாவமே! திண்டிவனம் போகத் தேவையே இல்லை. விழுப்புரத்தில் இறங்கி வேறே ரயில் மாறினால் திருவண்ணாமலை, திருக்கோயிலூர் எல்லாம் போகலாம்."

அருள் வாக்காய் தேவையான விவரம் பெற்றதும் வெங்கடராமன் திரும்பவும் உள்முகமாக ஆழ்ந்து விட்டான்.

அஸ்தமன சமயத்தில் ரயில் தொடர்வண்டி திருச்சிராப்பள்ளி ஜங்ஷன் அடைந்தது. பையனுக்குப் பசி எடுத்தது. அரையணாவுக்கு இரண்டு பேரிக்காய் வாங்கினான். ஆனால் அதில் ஒரு விள்ளல் சாப்பிட்டதுமே பசி அடங்கிவிட்டது. மேற்கொண்டு உண்ணமுடியவில்லை. அன்றுவரை வயிறுநிறைய சாப்பிட்டு வந்த அவனுக்கு இது வியப்பளித்தது. ரயில் காலை மூன்று மணிக்கு விழுப்புரம் செல்லும்வரை அவன் மன விழிப்புடன் கண் வளர்ந்தான்.

பொழுது புலரும் வரை விழுப்புரம் ரயில் நிலையத்திலேயே தங்கியவன், பின்னர் வெளியே வந்து வீதியில் நடக்கலானான். கையில் உள்ளதோ இரண்டரை அணா மட்டுமே. திருவண்ணாமலைக்கு கால்நடையாகவே செல்ல நினைத்தான். ஆனால் எந்த வழியே போகவேண்டும் என்றுதான் புரியவில்லை. வீதியில் ஒரு கைகாட்டியிலும் அவ்வூரின் பெயரைக் காணவில்லை. எவரையும்

கேட்டுத் தெரிந்து கொள்ளவும் விருப்பமில்லை. சங் கோசம் வேறு. நெடுநேரம் அலைந்து திரிந்தபின் களைத்துப் போனான். வயிறு பசித்தது. ஒரு சிறு ஓட்டலுக்குள் நுழைந்து சாப்பாடு கேட்டான். ஓட்டல் காரர் நண்பகலில்தான் சாப்பாடு தயாராகும் என்றார். அங்கேயே உட்கார்ந்து காத்திருக்கையில் திரும்பவும் உள்ளீர்ப்பில் சொக்கிவிட்டான். உணர்வு திரும்பிய போது போஜனமும் வந்து சேர்ந்தது. சாப்பிட்டபின் இரண்டணா காசை நீட்டினான். கட்டுக் குடுமியும் காதில் தங்கக் கடுக்கனும் முகச் சோபையும் கொண்ட பிராமண யுவன் துறவிபோன்று சாதுவாக அவ்வளவு நேரம் உட்கார்ந்திருந்ததைக் கவனித்திருந்த ஓட்டல் காரரின் மனம் கனிந்ததோ என்னவோ, அவன் கையி ருப்பு என்ன என்று பரிவுடன் கேட்டார். அவனிடம் இருப்பது மொத்தம் இரண்டரை அணா மட்டும் என்று தெரிந்ததும் சாப்பாட்டிற்காக பணம் ஏதும் பெற மறுத்து விட்டார். தவிர, மாம்பழப்பட்டு என்று வெங் கடராமன் கைகாட்டியில் கண்ட பெயர் திருவண்ணா மலைக்குப் போகும் வழியிலுள்ள ஊர் என்பதையும் விளக்கினார்.

ரயில் நிலையம் திரும்பிய வெங்கடராமன், தன் னிடமிருந்த இரண்டரை அணாவுக்கு மாம்பழப்பட்டு வரைதான் செல்ல முடியும் என்று அறிந்து அந்த ஊருக்கு டிக்கட் வாங்கிக் கொண்டான். அன்று பிற் பகல் மாம்பழப்பட்டு ஸ்டேஷனில் இறங்கினான். மீதி தூரம் நடந்தே செல்ல உத்தேசித்தான். மாலை மங்கி இருள் சூழ்வதற்கு முன் பத்துமைல் நடந்திருப்பான். எதிரில் ஒரு பெரும் பாறைமீது கட்டப்பட்ட கோயில் ஒன்றைக் கண்டான். அறையணி நல்லூர் சிவாலயம் அது. பெரும்பாலும் பகல் வெப்பத்தில் நீண்ட தூரம் நடந்ததால் களைத்துப் போனவன் அக்கோயில் வாயி லில் ஓய்ந்து உட்கார்ந்துவிட்டான். சிறிது நேரத்தில்

யாரோ வந்து கோயிற் கதவைத் திறந்தார்; குருக்கள் பின்னர் வந்து பூஜை செய்வதற்கும், தரிசனத்திற்கா கவும்தான் இருக்கும். வெங்கடராமன் உள்ளே சென்று கல் மண்டபத்தில் தூணோரமாக அமர்ந்தான். அம் மண்டபத்தில்தான் இருள் அவ்வளவு அதிகமில்லை. திடீரென்று ஒரு பேரொளி வெற்றுக் கோயில் முழு வதும் வியாபித்தது. கருவறையில் தெய்வ சந்நிதியி லிருந்துதான் அவ்வொளி வருகிறதோ என அதிசயித்து உடனே உள்ளே சென்று பார்த்தான். ஆனால் சந்நிதி யில் வெளிச்சம் ஏதும் காணவில்லை. வேறு ஒளி விளக்குகளும் இல்லை. ஜோதியும் மறைந்துவிட்டது. வியப்புற்ற வெங்கடராமன் அங்கேயே உட்கார்ந்து ஆழ்ந்த நிஷ்டையில் சமைந்துவிட்டான்.

'பூஜை முடிந்தாகிவிட்டது, கோயில் கதவை சாற் றிப் பூட்டவேண்டும்' என்று சுயம்பாகி வெளியிலிருந்து குரல் கொடுத்தபோதுதான் வெங்கடராமன் திடுக்கிட்டு எழுந்தான். குருக்களை அணுகி தனக்கு ஏதாகிலும் உணவு கிடைக்குமா என்று கேட்டபோது, அவர் ஒன்று மில்லையே என்று கைவிரித்தார். கோயிற் பிரகாரத்தி லேயே அவன் மறுநாள் காலை வரை தங்கிச் செல்லவும் குருக்கள் சம்மதிக்கவில்லை. ஆயினும், தாம் முக்கால் மைல் தொலைவிலுள்ள கீழூர் செல்வதாகவும், அங் குள்ள கோயிலில் அர்த்த ஜாமப் பூஜை முடிந்தபின் கோயில் உணவு கிடைக்கக்கூடும் என்று அவர் கூறிய தால், வெங்கடராமனும் அவருடன் சென்று கீழூர் வீரட் டேசுவரர் ஆலயம் போய்ச் சேர்ந்தான். ஆலயத்துள் நுழைந்ததுமே திரும்பவும் அவனுக்குச் சமாதிநிலை கூடிவிட்டது. இரவு ஒன்பது மணி சுமாருக்கு பூஜை முடிந்து அர்ச்சகர்கள் உணவு அருந்திய பின்னரே புற உணர்வு பெற்ற வெங்கடராமன், உண்பதற்குக் கோயிற் பிரசாதம் கேட்டு யாசித்தான். அர்ச்சகரோ அவனுக்குக் கொடுக்க மீதம் ஒன்றுமில்லை என்று மறுத்துவிட்டார்.

ஆனால் அவனுடைய தோற்றப் பொலிவால் கவரப் பட்ட மேளக்காரரோ, தன் பங்கிற்காக எடுத்துவைக்கப் பட்ட பட்டை சாதத்தை அவ்விளம் பிள்ளையாண்டா னுக்குக் கொடுக்க முன் வந்தார். வாழையிலைச் சருகில் அன்னம் ஏந்திப் பெற்ற வெங்கடராமன், முதலில் குடிநீர் வேண்டி நின்றான். 'பக்கத்தில் சாஸ்திரி வீட்டில் போய்க் கேள்' என்று அனுப்பிவிட்டார்கள். அன்னமும் கையுமாக வெளித்தெருவில் அவர்கள் சொன்ன சாஸ்திரி வீட்டு வாசலில் தண்ணீருக்காகக் காத்து நிற்கையில் களைப்போ உறக்கமோ மேலிட்டுத் தள்ளாடித் தடா லென கீழே சரிந்து வீழ்ந்துவிட்டான். சில நிமிடங் களில் அவன் விழிப்புற்றபோது தன்னைச்சுற்றி ஒரு சிறு கும்பல் கூடி வேடிக்கை பார்த்து நிற்பதைக் கண்டான். யாரோ கொடுத்த தண்ணீரை அருந்தினான். இலை சரிந்து சுற்றிலும் இறைந்துகிடந்த சோற்றுப் பருக் கைகளைத் திரட்டி சிறிதளவு வாயிலிட்டுக்கொண் டான். தெருவோரம் படுத்துத் தூங்கிப்போனான்.

மறுநாள் காலை ஆகஸ்ட் 31 (1896) திங்கட்கிழமை. அன்று கோகுலாஷ்டமி; கண்ணன் அவதரித்த புண் ணிய தினம். விழித்தெழுந்த வெங்கடராமன், போக வேண்டிய பாதை தேடி சிறிது தூரம் நடந்தான். அங்கிருந்து திருவண்ணாமலை இருபது மைல் தூரம். களைப்பும் பசியும் பீடித்தன. இனி நடை தாளாது என உணர்ந்தான். காதுக் கடுக்கன் ஞாபகம் வந்தது. அக்கா லத்து வழக்கப்படி, அந்தணச் சிறுவன் தங்கக் கடுக்கன் அணிந்திருந்தான். சிவப்புக்கல் பதித்த காதணிகள். அவற்றை அடகு வைத்துப் பணம் பெற்று ரயிலில் திருவண்ணாமலை போய்ச் சேரத் தீர்மானித்தான். ஆனால் எங்கே யாரிடம் அடகு வைப்பது ? ஏதோ ஒரு வீட்டின் வாசலில் தயங்கி நின்றான். முத்துக்கிருஷ்ண பாகவதர் என்பவரின் இல்லம் அது. பசிக்கு சிறிது அன்னம் வேண்டினான். வெளியே வந்த பாகவதரின் மனைவி,

கிருஷ்ண ஜயந்தியன்று படியருகே நிற்கும் அந்தண யுவனின் முகச் சோபையும் பளிச்சிடும் கண்களும் கண்டு மனம் நெகிழ்ந்திருக்கவேண்டும்! அவனை அழைத்து இலை நிறைய பழையது போட்டாள். இரண்டு நாட்களுக்கு முன்பு ரயில் பிரயாணத்தின்போது நேர்ந்தது போல இப்போது ஒரு கவளம் சோறு சாப்பிட்டதுமே பசி அடங்கிவிட்டாலும் கூட, அம் மாது அவனருகில் தாயார்போல பரிவுடன் நின்று அவனை நிறையச் சாப்பிடச்செய்தாள்.

பசி அடங்கியதும் கடுக்கன் பிரச்சினை எழுந்தது. அதன் விலை மதிப்பு இருபது ரூபாய் இருக்கக்கூடும். ஆனால் அவனுக்கு வேண்டியதோ ரயில் கட்டணத்திற்கும் வேறு சில்லறைச் செலவுக்குமாக சுமார் நான்கு ரூபாய் மட்டுமே. சந்தேகம் எழாமலிருக்க பாகவதரிடம் அவன் ஒரு சிறு பொய்ச்சாக்கு சொல்ல நேர்ந்தது. யாத்திரைக்குக் கிளம்பியவன் வழியில் கைச் சாமான் களவு போய்விட்டதாகவும் ஆகவே செலவுக்குக் கடுக்கனை அடகு வைத்துச் சிறிது பணம் பெறவேண்டிய நிலைமை என்றான். முத்துக்கிருஷ்ண பாகவதர் கடுக்கன்களை வாங்கிப் பார்த்துப் பொன்தானா என பரிசோதித்துத் திருப்தியடைந்தார். அவன் கேட்ட நான்கு ரூபாயைக் கொடுத்தார். ஆயினும், பிற்பாடு அடகு மீட்பதற்காகத் தன் விலாசத்தை எழுதிக் கொடுத்து, அவனுடைய விலாசத்தையும் பெற்றுக் கொண்டார். அவ்வினிய தம்பதிகள் அவனை நடுப்பகல் வரை தங்கள் இல்லத்தில் இருக்கச் செய்து மதிய உணவு அளித்தனர். கிருஷ்ண பூஜை நிவேதனத்திற்காகத் தயார் செய்த கோகுலாஷ்டமி பட்சணங்களை பூஜைக்கு முன்னரே பொட்டலம் கட்டி அவனிடம் கொடுத்து வழியனுப்பினர்.

பாகவதரின் வீட்டைக் கடந்து சென்றவுடனேயே அடகுமீட்புக்காக அவர் கொடுத்திருந்த விலாசத்தைக் கிழித்துப் போட்டான். பொற்காதணிகளை மீட்கும் உடமைப் பற்று இற்றுப் போய்விட்டவனன்றோ அவன்! திருவண்ணாமலைக்குச் செல்ல மறுநாள் காலைவரை ரயில் வண்டி கிடையாது என்று தெரிந்தது. இரவு ரயில்வே பிளாட்பாரத்திலேயே படுத்துத் தூங்கினான். 'பிரயாணம்' முற்றுப்பெற வேளை வரவேண்டுமல்லவா ?

மறுநாள், 1896 செப்டம்பர் முதல்தேதி செவ்வாய்க் கிழமையன்று திருவண்ணாமலைக்கு ரயிலில் வந்திறங்கினான் வெங்கடராமன். வீட்டை விட்டு வெளியேறிய மூன்றாம் நாள் அன்று. ரயில் பெட்டியிலிருந்து இறங்கியவன் உள்ளம் துள்ள ஓட்டமும் நடையுமாய் அருணாசலேச்வரத் திருக்கோயிலை நோக்கி விரைந்தான். பால ரமணனை வா வா வெனக் கைவிரித்தழைப்பது போன்று அடுத்தடுத்த மூன்று கோபுர வாயிற் கதவுகளும், உள் சன்னிதிக் கதவும் திறந்துகிடந்தன. அப்பிரும்மாண்ட ஆலயத்தில் அவனைத்தவிர வேறு யாருமே இருக்கவில்லை. மறுபடி கரு அடையா கதி பெற்றவன் நேரே கருவறை புகுந்தான். தந்தையாம் ஸ்ரீஅருணாசலேச்வர லிங்கத்தின் முன் தன்னை மறந்த ஆனந்தப் பரவசத்தில் தன்னந்தனியே நின்றான். ஆன்ம சமர்ப்பணப் பேரின்பத்தில் ஒன்றி மெய்யே வீடு வந்துற்றான் வெங்கடராமன். பயணம் முற்றுப்பெற்றுவிட்டது.

# 4. தவ நிலை?

கோயிலை விட்டு வெளியே வந்த வெங்கடராமன் திருவண்ணாமலை ஊரினுள் சென்று கால்போன போக்கில் நடக்கலானான். யாரோ அவனைக் கூப்பிட்டு "முடி இறக்கிக்கணுமா சாமி?" என உரத்து வினவினான். தெய்விக ஆஞ்ஞையாக எழுந்த கேள்வியோ அது? ஏனெனில் அந்த பிராமண இளைஞன் உலகைத் துறந்த, அல்லது துறக்கவிருக்கிற, யுவன் என்பதற்கான அறிகுறி ஏதும் வெளிப்படையாக இல்லை. வெங்கடராமனும் உடனே 'ஆமாம்' என சம்மதிக்கவே, அருகிலுள்ள ஐயங்குளக்கரையில் பல நாவிதர்கள் தொழில் புரியும் துறைக்கு அழைத்துச் செல்லப்பட்டான். அங்கே கட்டுக் குடுமி மழிக்கப்பட்டு, இளைஞன் தலை மொட்டையா யிற்று. பின்னர் குளத்துப் படிக்கட்டில் நின்றவன், இடுப்பு வேட்டி முடிச்சில் மிச்சமிருந்த மூன்றுரூபாய் சொச்சத்தை எடுத்துக் குளத்தில் வீசி எறிந்தான். அதன்பின் என்றென்றும் பணத்தைத் தீண்டியதே இல்லை. கையிலிருந்த கோகுலாஷ்டமி பட்சணப் பொட்டலமும் எட்ட எறியப்பட்டது. 'இந்த ஜட உடலுக்கு தின்பண்டம் ஒரு கேடா?'. ஜாதிச் சின்னமாகிய பூணூலையும் களைந்தெறிந்தான். உலகத் தொடர்பு அறுத்தவன் வீட்டையும் உடைமைகளையும் மட்டுமின்றி, தன் ஜாதியையும் சமுதாய அந்தஸ்தையும் விட்டொழித்தவனாகி விடுகிறான் அன்றோ?

தொடர்ந்து, இடுப்பு வேட்டியிலிருந்து ஒரு கோவணத் துணி மட்டுமே கிழித்தெடுத்து அணிந்துகொண்டு மீதி ஆடையை அவிழ்த்துத் தூரத் தள்ளினான்.

இவ்வாறு துறவுக்கோலத்துடன் கோவணாண்டியாய் கோயிலுக்குத் திரும்பினான். கோயிலருகில் வந்தவன்,

முடி சிரைத்த பின் குளிக்க வேண்டும் என்கிற சாத்திர விதி நினைவுக்கு வந்தும்கூட வாளாவிருந்தான். 'கட்டை உடலுக்குக் குளியல் வேறா ?' என்று எண்ணி னானோ ? ஆனால் ஆலயத்தை அணுகுமுன் திடீரென ஒரு சிறு மழை ஜோராகப் பெய்தது. கோயிலுள் நுழைவதற்கு முன்னர் இவ்வாறு வான்பொழிவால் சீராக நீராட்டப்பட்டான்.

இப்போது அவன் கோயில் சன்னிதிக்குச் செல்ல வில்லை. அதற்கான அவசியமும் அவனுக்கில்லை (மூன் றாண்டுக்குப் பின்னர் ஒரே ஒரு முறை மட்டுமே சன்னிதியுள் அடியெடுத்து வைத்துள்ளார்). ஆலயத் தின் ஆயிரக்கால் மண்டபத்தை அடைந்து ஒரு மூலை யில் நிஷ்டையில் அமர்ந்துவிட்டான். அன்ன விசாரம் அடியோடு மறந்து ஆன்ம ஈர்ப்பில் ஆழ்ந்தவனானான்.*

இரவு பகலாய் பல நாட்கள் அவர் இடம் பெய றாமல் அங்கே அமர்ந்திருந்தார் (உச்சத் துறவு ஏற்று விட்ட வெங்கடராமனை இனி ஒருமையில் குறிப்பிட லாகாதல்லவா ?). அவருக்கு மண்ணுலகு தேவையற்றுப் போயிற்று. மெய்ப் பொருளில் மனம் பதிந்து அமர்ந்து விட்டபின் மாய வாழ்வில் அக்கறை அகன்றது. வாரங் கள் சென்றன. இடத்தைவிட்டு அசையவில்லை. வாய் திறந்து பேசவில்லை.

ஆத்ம சாதனையின் இரண்டாம் கட்டம் இப்போது தொடக்கம் பெற்றது. முதல் கட்டத்தில் அவரது மாட்சி உள்ளடங்கிக் கிடந்தது. தினசரி வாழ்க்கையோடு இழைந்து முன்போலவே வெங்கடராமன் இயங்கி வந்தான்.

* (கோபுர சுப்ரமணியர் சன்னதியில் அமர்ந்திருந்த ஒரு மௌன சுவாமி இந்தத் தவக்கோல யுவனைக் கவனித்து மறுதினம் நடுப்பகல் தமது அடியார் மூலம் பழைய சோறு படைக்கச் செய்தபோதுதான் அண்ணாமலையில் அவன் முதற்கவளம் உண்டது - லா.சு.ர.)

ஆசிரியருக்கும் வீட்டுப் பெரியவர்களுக்கும் அடங்கி ஒடுங்கி நடந்தான். இப்போது இரண்டாவது கட்டத்திலோ ஆன்மாவின் உள்முகத் திருப்பம் வெளியுலகத் தொடர்பை அறவே புறக்கணித்து விட்டது. இந்நிலை படிப்படியாய் மூன்றாம் கட்டத்தை எட்டிய பின்னர் அரை நூற்றாண்டு காலம் உச்சிப் பகலவன் போல அண்டியோர் அனைவருக்கும் அருள் ஒளி வீசித் திகழ்ந்தார் என்பதனை இனிவரும் அத்தியாயங்களில் காண்போம். ஆயினும், இவ்வாறான வெவ்வேறு கட்டங்கள் அவரது நிரந்தர ஞான நிலையின் வெளிதரிசனங்களே ஆகும். பலமுறை இதனை அவரே தெளிவாய் எடுத்துரைத்துள்ளார், தமது மெய்யுணர்வு நிலையிலோ ஆன்மானுபவத்திலோ எத்தகைய மாற்றமோ புது வளமோ இருக்க வில்லை என்று.

சேஷாத்ரிசுவாமி என்ற மூத்த துறவு ஒருவர் இதற்குப் பல ஆண்டுகளுக்கு முன்னர் திருவண்ணாமலை வந்தடைந்து வாசம் செய்துவந்தார். திருவண்ணாமலையில் தொடக்க ஆண்டுகளில் 'பிராமண சுவாமி' என்று அழைக்கப்பட்ட வெங்கடராமனை, சேஷாத்ரி சுவாமி தான் இச்சமயம் பராமரித்துக் காவலாக இருந்து வந்தார். ஆனால் அவரது அனுசரணை அவ்வளவு அனுகூலம் அளிக்கவில்லை. ஏனெனில், காண்போருக்கு சேஷாத்ரிசுவாமி சற்று சித்தப்பிரமை பிடித்தவர் போலத் தோன்றினார். பள்ளிச்சிறுவர்கள் அவரைப் பைத்தியம் என கேலிசெய்து துன்புறுத்தினர். இப்போது அவர் பாதுகாக்க முன்வந்த இளைய சுவாமியாம் வெங்கடராமனுக்குச் 'சின்ன சேஷாத்ரி' எனப் பெயரிட்டு, சிறுவர்கள் தங்கள் குறும்புத்தனத்தை இவர் மீதும் திருப்பினர்; சிறு கற்களை வீசித் தொல்லை செய்தனர். கல்லடிகளுக்குக் கில்லாடிப் பசங்களின் போக்கிரித்தனம் மட்டுமே காரணம் அல்ல. 'தங்களை விட அதிக வயது வித்தியாசமில்லாத யுவனொருவன்

கற்சிலைபோல் உட்கார்ந்திருக்கிறானே அவன் நிஜ மனிதனா என்று பரிசோதிப்பதற்கும்தான்' என்று பின்னர் அவர்களில் ஒருவன் சொல்லியுள்ளான்!

சேஷாத்ரி சுவாமிகளால் அவர்களைத் தீவிரமாய் விரட்ட இயலவில்லை. பல சமயம் விளைவு எதிர் மாறாயிற்று. இவற்றைத் தவிர்க்கும்பொருட்டு பிராமண சுவாமி அந்த ஆயிரக்கால் மண்டபத்திலேயே இருக்கும் பாதாள லிங்கம் என்பதோர் சிறு நிலவறைக்கு தாமே இடம் மாறினார். அங்கோ அதி கும்மிருட்டு, ஈரம் கசியும் மண்தரை. ஒரே புழுக்கம். யாரும் அதனுள் புகுவதில்லை. எறும்பு, புழு, பூச்சிகளும் கொசுக்களும் தான் அங்கு வாசம். அவை அவரது உடலைப் பிடுங்கி எடுத்தன. தொடை முழுதும் சீழும் ரத்தமுமாக விரண காயம் பரவிற்று (வாழ் நாள் பூராவும் அதன் தழும்புகள் தங்கின). அந்த இருட்டு நிலவறையுள் அவர் நிஷ்டையில் கழித்த சில வார காலம் நரகக் குழி வாசமே என்றாலும், மெய்மறந்து ஆத்ம சாந்நித்தியத்தில் அமைதி பூத்து அமர்ந்திருந்தவர் உடல் வேதனையைப் பொருட்படுத்தினாரில்லை. அவரைப் பொருத்தவரை மெய் வருத்தம் மெய் அல்லவே! ரத்தினம்மாள் என்ற பக்தி நிறைந்த மாது ஒருத்தி அந்த நிலவறைக்குள் உணவுத் தட்டோடு இறங்கி, அவரைத் தன் வீட்டிற்கு வந்து விடும்படி வேண்டினாள். ஆனால் அவரோ அவள் சொன்னது எதையும் செவிமடுத்த அறிகுறி ஏதுமின்றி சமாதி நிலையில் அசைவற்று அமர்ந்திருந்தார். அவள் ஓர் சுத்தமான துண்டை அங்கு விரித்து அதன்மீது உட்காரவோ அல்லது பூச்சி பொட்டுகளை விரட்டவோ அதனைப் பயன்படுத்துமாறு மன்றாடிக் கூறிச் சென்றாள். ஆனால் அவர் அத்துணியைத் தீண்டினாரில்லை.

விஷமக்காரச் சிறுவர்களுக்கு அந்த பாதாள இருட்டறைக்குள் இறங்கப் பயம். ஆகவே எட்ட நின்று

கற்களையும் உடைந்த பானைச் சில்லுகளையும் அதன் வாயிலில் விட்டெறிவதைப் பொழுதுபோக்காகக் கொண் டனர். சில்லு சிதறித் தெறித்து உள்ளே விழும். சேஷாத்ரி சுவாமிகள் அவ்வப்போது அவருக்குக் காப்பாக இருந் தும் விஷமத்தனம் கூடிக்கொண்டே போயிற்று. ஒரு நாள் ஆயிரக்கால் மண்டபத்திற்கு வந்த வெங்கடாசல முதலி என்பவர் கல்லெறிந்து கும்மாளம் போடுகிற சிறுபிள்ளைகளைக் கண்டு ஆத்திரமடைந்து கம்பைச் சுழற்றி அவர்களை வெளியே விரட்டியடித்தார். திரும்ப வும் மண்டபத்திற்கு வந்தவர் பாதாளலிங்க அறையி லிருந்து சேஷாத்ரி சுவாமிகள் வெளியே வருவதைக் கண்டு திடுக்கிட்டார். "பொடிப் பசங்கள் கல்லெறிந் தார்களே, தங்களுக்கு அடிபட்டதா" என பதறிக் கேட் டார். "இல்லை... ஆனால் உள்ளே ஒரு சின்ன சுவாமி இருக்கிறது; போய்ப் பார்" என்று கூறிவிட்டுச் சென்றார்.

வியப்பு மேலிட்ட முதலியார் குறுகிய நிலவறைப் படிகளில் மெல்ல கீழே இறங்கினார். பட்டப்பகல் வெளிச்சத்திலிருந்து இருட்டறைக்குள் நுழைந்தவருக்கு முதலில் ஒன்றுமே புலப்படவில்லை. இருட்டில் கண் மெல்ல மெல்லப் பழகியதும் அங்கே ஓர் இளம் சுவாமி யின் உருவம் மங்கலாய்த் தெரிந்தது. கண்டதும் திகைத் துத் திகிலுற்றார்; அவசரமாய் வெளியேறி, அருகிலிருந்த ஆலயப் பூங்காவில் சில சீடர்களுடன் தோட்டவேலை யில் ஈடுபட்டிருந்த சாமியார் ஒருவரிடம் தாம் கண்ட தைக் கூறினார். அவர்கள் அனைவருமாக உடனே வந்து பார்த்தனர். இளம் சுவாமியோ புற உணர்வு முற்றும் அற்று பேசாது ஆடாது அசையாது அவர்கள் உரத்துக் கூறியவை ஏதும் அறியாது தவக்கோலத்தில் அமர்ந் திருந்தார். ஆகவே, அவர்களில் சிலர் யுவ யோகியை

அப்படியே கட்டித்தூக்கி பாதாளலிங்க அறையிலிருந்து* வெளியே கொண்டு வந்தனர். அருகிலிருந்த கோபுரம் சுப்பிரமணியர் ஆலயத்தில் இளம் யோகி இருக்கை வைக்கப்பட்டார். தன்னைச் சுற்றி நடப்பது ஏதும் உணராது கண்மூடி உட்காரந்த வண்ணமே இருந்தார் பிராமண சுவாமி (சுமார் பத்தாண்டுகளுக்குப் பிறகு கணபதி முனிவரால் 'ரமண மகரிஷி' என்று பெயர் சூட்டப்படும் வரையில் 'பிராமண சுவாமி' என்பதே அவர் பெயராக வழங்கியது).

சுமார் இரண்டரை மாத காலம் சுப்பிரமணிய ஆலயத்திலேயே பிராமண சுவாமி தங்கியிருந்தார். பெரும் பாலும் சமாதி நிலைதான். உணவு கொண்டுபோய் வைத்தாலும் ஏதும் உண்ணமாட்டார். ஆகவே எப்போ தாகிலும் அவர் கண் விழிக்கும் தருணம், பால், கஞ்சி, பழத்துண்டுகளை சிலர் சுவாமியின் வாயில் ஊட்டி விடுவதுண்டு. ஒரு சில வாரங்கள் அவர் கோவணத் துணிகூட அணிய மறந்து சமைந்திருந்தார். ஆலயத் திலிருந்த மௌன சுவாமி என்பவர் இவரைக் கவனமாகப் பேணி வந்தார். அண்ணாமலை ஆலய அம்பிகை உமா தேவிக்கு தினந்தோறும் பாலாபிஷேகம் நடைபெறும். மஞ்சள் பொடி, சர்க்கரை, வாழைப்பழத்துண்டுகள் கலந்து அபிஷேகித்த பாலில் ஒரு டம்ளர் எடுத்துவந்து மௌனசுவாமி அவருக்குக் கொடுப்பார். பிராமண சுவாமி அதனை அப்படியே மடக்கென்று ருசி அறியாமல் விழுங்குவார். அதை மட்டுமே அக் காலகட்டத்தில் தமது உணவாகக் கொண்டிருந்தார்.

---

* ஸ்ரீரமணரின் முதற் தவக்கோலத்தால் புனிதம் கூடிய பாதாள லிங்க சன்னிதி 1946-ஆம் ஆண்டு புத்துருவம் பெற்றது. அந்த ஆண்டு மே மாதம் அந்நாள் கவர்னர் ஜெனரலான ராஜாஜி அவர்கள் அக்குகையினுள் ரமண மகரிஷியின் திருவுருவப்படத்தைத் திறந்துவைத்தார். அதுமுதற்கொண்டு உள்ளே மின்விளக்கு போடப் பட்டு, நிலவறை சுத்தமாக வைக்கப்பட்டு வருகிறது

ஒரு சில வாரங்கள் சென்றபின் அண்ணாமலை ஆலய வளாகத்திற்குள்ளேயே அமைந்திருந்த நந்தவனத் திற்கு சுவாமி இடம் மாறினார். பத்து பன்னிரெண்டு அடி உயரமுள்ள அரளிச் செடிகள் அடர்ந்த தோட்டம் அது. அங்கும் சமாதி நிலைதான். சில சமயம் தம் வயமிழந்த பரவச நிலையில் இடம் மாறுவார். சுய உணர்வு பெற்றதும் தாம் எவ்வாறு வேறு புதரடியில் அமர்ந்திருக்கிறோம் என அவருக்கு விளங்காது. பின் னர் இவ்வாறே வாகன மண்டபத்திற்கு இடம் பெயர்ந் தார். அதன்பின் சிலகாலம் கோயிலின் வெளிப் பிரகாரத் திலுள்ள இலுப்பை மரத்தடி வாசம். அப்புறம் மங்கை பிள்ளையார் ஆலயம்.

வருடாவருடம் நவம்பர் அல்லது டிசம்பர் மாதம் நிகழும் கார்த்திகை தீப திருவிழாவுக்கு மக்கள் கூட்டங் கூட்டமாக திருவண்ணாமலைக்கு யாத்திரை வருவார் கள். சிவபெருமான் ஓர் ஒளிப் பிழம்புத் தூணாய் எழுந்தருளிய ஐதிகத்தை சித்தரிக்கும் வகையில் (ஐதிக விளக்கம் ஆறாம் அத்தியாயத்தில்) திருவண்ணாமலைக் குன்றின் உச்சியில் பெரும் ஜோதியாய் தீபம் ஏற்றுவார் கள். அந்த ஆண்டு (1896) குழுமிய யாத்திரிகர்களில் பற்பலர் இளம் பிராமண சுவாமியைக்காண வரலா யினர். பலர் அவர் முன் விழுந்து வணங்கிச் சென்றனர். இச்சமயத்தில்தான் இளம் சுவாமியின் நிலையான முதல் பக்தன் அவரை அண்டிப் பணிபுரியலானார். பெயர் உத்தண்டி நாயினார். தமிழில் வேதாந்த நூல்கள் பல படித்துவந்த நாயினாருக்கு மனச்சஞ்சலம் தீரவில்லை. இளம் சுவாமியொருவர் இடையறாது சமாதி நிலையில் மெய்மறந்து அமர்ந்திருப்பதைக் கண்டு, 'ஆஹா, ஞான சொரூபியான இவர்மூலமே தாம் மனச்சாந்தி பெறக் கூடும்' என நிச்சயித்தார். அந்த யுவ ஞானிக்குத் தொண்டு புரிய விழைந்தார். ஆனால் வேறு பராமரிப்புப் பணி இல்லாமற்போனதால் அவர் அருகில் காப்பாளராக

நின்று, காண வரும் மக்கள் கூட்டம் மிக நெருங்கி வராமலும், துஷ்டப் பையன்களை தூர விரட்டியும் கண்காணித்தார். மீதி நேரத்தில் சுவாமியின் பக்கத்தி லேயே அமர்ந்து, தமிழிலுள்ள அத்வைத சித்தாந்த நூல்களைப் பாராயணம் செய்தபடி காவல் காத்திருந் தார். பிராமண சுவாமியின் வாய்மொழி வாயிலாய் ஞான உபதேசம் பெறவேண்டும் என்பதே அவரது எதிர்பார்ப்பு. சுவாமியோ வாய் திறந்து பேசினாரில்லை. தாம் வாய்க்கொடுத்து சுவாமியின் மௌனத்தைக் கலைக் கவும் உத்தண்டி நாயினாரும் விரும்பவில்லை.

இளம் சுவாமி இலுப்பை மரத்தடியில் அமர்ந் திருந்த காலத்திலேதான் அப்பக்கமாக வந்த அண்ணா மலைத் தம்பிரான் என்ற சாமியார் இன்னொரு தொண்ட ராகச் சேர்ந்தார். தனித்து அமர்ந்து கவலையோ எண்ண ஓட்டமோ அற்று, சாந்தமே உருவாய் இருந்த சுவாமியின் சௌந்தர்யத்தில் தம்பிரான் மனம் லயித்து நெகிழ்ந்து போனார். அவரது காலடியில் நெடுஞ்சாண் கிடையாக விழுந்து நமஸ்கரித்தார். அன்றுதொட்டு நாள்தோறும் அங்கு வந்து வீழ்ந்து வணங்கிச் செல்ல லானார். அண்ணாமலைத் தம்பிரான் சில அடியார் களுடன் ஊர் வீதிகளில் பக்திப் பண் இசைத்துச் சுற்றிவருவார். ஆங்காங்கே மக்கள் வழங்கும் தானம் பெற்று அதைக் கொண்டு ஏழைகளுக்கு அன்னமிடு தலும், திருவண்ணாமலைப் புறநகரிலுள்ள குருமூர்த்தம் என்கிற தமது ஆதீன குருவின் சைவமட சமாதி ஆலயத் தில் பூஜை வழிபாடுகளும் நடத்திவந்தார்.

இளம் சுவாமியை குருமூர்த்தத்திற்கே அழைத்துச் சென்று விட்டால் வெட்டவெளி வெப்பதட்பம் தவிர்த்து, வேறு தொந்திரவுகள் அதிகமின்றி சுவாமி இருந்துவர லாமே என்று ஒரு சமயம் அண்ணாமலைத் தம்பிரானுக் குத் தோன்றியது. தமது யோசனையை உத்தண்டி

நாயினாரிடத்தும் தெரிவித்தார். ஆனால் இருவரும் அந்நாள் வரை இளம் சுவாமியிடம் பேச்சுக் கொடுத்ததே இல்லை. ஒருவாறு தைரியத்தை வரவழைத்துக் கொண்டு தங்கள் விருப்பத்தை அவருக்கு வினயத்துடன் உணர்த்தினர். சுவாமியும் சம்மதித்தார். இவ்வாறு 1897ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் பிராமண சுவாமி குருமூர்த்தம் சென்றார். அவர் திருவண்ணாமலை வந்தடைந்த அரை யாண்டிற்குள் இது நிகழ்ந்தது.

குருமூர்த்தம் வந்து சேர்ந்த பிறகும் இளம் சுவாமியின் புற உணர்வற்ற இயல்பில் மாற்றம் ஏதும் காணவில்லை. அவ்வாலயத்தின் தரையெங்கும் கட்டெறும்புகள் மலிந்திருந்தன. தம் மீது அவை ஊர்வதையும் கடிப்பதையும் சுவாமி உணரவேயில்லை. நாட்கள் சில சென்றபின் அவர் உட்கார்ந்திருப்பதற்காக சுவற்றோரம் ஒரு முக்காலி போடப்பட்டது. எறும்பு மேலே ஏறி வராமலிருக்க, முக்காலிக்கு அடியே தண்ணீர் தேக்கி வைக்கப்பட்டது. இருந்தும் அவர் சுவற்றில் சாய்ந்த வண்ணம் உட்கார்ந்திருந்த போதெல்லாம் எறும்புகள் சுவற்றின் வழியே பாலம் அமைத்து அவரது முதுகில் ஏறின. வாரக்கணக்காக சாய்ந்து உட்கார்ந்து உட்கார்ந்து அச்சுவற்றில் நிரந்தரமாக அவரது முதுகுத் தடமே பதிந்து காணப்பட்டது.

ஊருக்கு ஒதுக்குப் புறமான அங்கேயும் யாத்ரீகர்களும் காணவருவோரும் கூடிக்கொண்டே போயினர். பலர் இளம் சுவாமியின் முன் விழுந்து விழுந்து வணங்கினர். இன்னும் பலர் வரம் அருள் வேண்டி நிற்பர். வேறு பலர் தூய மரியாதை செலுத்தி விலகுவர். இவ்வாறு கும்பல் கூடத்தொடங்கியதும் அவர்கள் மிக அருகில் நெருங்கி அவரைத் தொடாதவாறு மூங்கில் பிளாச்சுக்களால் சுவாமியைச் சுற்றி தடுப்பு வேயப் பட்டது.

குருமூர்த்த ஆலயத்தில் நிவேதனம் செய்யப்பட்ட அன்னபானங்களில் சிறிதளவு இளம் சுவாமிக்கு ஆகார மாகத் தம்பிரானால் அளிக்கப்பட்டு வந்தது. ஆனால், குறுகிய காலத்திற்குள் தம்பிரான் வேறு அலுவலாகத் திருவண்ணாமலையை விட்டு வெளியூர் செல்ல நேரிட் டது. ஒரு வாரத்திற்குள் திரும்பி விடுவதாக உத்தண்டி நாயினாரிடம் கூறிச்சென்ற அண்ணாமலைத் தம்பிரான் திரும்பிவருவதாகக் காணோம். ஒரு சில வாரங்களுக்குப் பின் நாயினாரும் தம் மடத்திற்குச் சென்றுவிட வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. ஓர் ஏவலாளை அமர்த்திவிட்டு அவரும் போய்விட்டார்.

விரைவிலேயே இன்னொரு நிலையான தொண்டர் வந்துசேர்ந்தார். அவர்தான் பழநிஸ்வாமி எனப் பெயர் கொண்ட மலையாளிப் பண்டாரம். விநாயக வழி பாட்டில் ஈடுபட்டு மிக்க எளிமையாக வாழ்ந்துவந்தார். ஒருவேளைச் சாப்பாடுதான். அதுவும் விநாயகக் கடவு ளுக்கு பூஜை நைவேத்தியமாக வைத்த உப்பில்லாத ஆகாரம் மட்டுமே. அவரது நண்பர் சீனுவாச அய்யர் என்பார் ஒரு நாள் அவரிடம் "நீர் ஏன் ஓய் கல்லுப் பிள்ளையாரைக் கும்பிட்டுக் காலம் கழிக்கிறீர்? குரு மூர்த்தத்தில் உடலும் உயிருமுள்ள நிஜ சுவாமி ஒருவர் இருக்கிறார் தெரியுமோ? புராணக் கதையில் வரும் பால துருவன் மாதிரி தவ நிலையில் ஆழ்ந்து கிடக் கிறார் அவர். அங்குபோய் அவருக்குக் கைங்கர்யம் செய்து கொண்டு கூடவே இருந்துவிடும்; உமது ஜென்மம் சாபல்யமடையும்" என்றார்.

கிட்டத்தட்ட அதே சமயம் வேறு பலரும் அந்த இளம் சுவாமியைப் பற்றிப் பண்டாரத்திடம் எடுத்து ரைத்தனர். தற்போது அங்கே பணிபுரிய வேறு யாரு மில்லை. 'அவருக்குத் தொண்டு செய்தல் மாபெரும் பாக்கியம்' என்றெல்லாம் கூறினர். போய்ப் பார்ப்

போமே என்று பழநிஸ்வாமிப் பண்டாரமும் குருமூர்த் தம் சென்றார். அங்கு சுவாமியைக் கண்ட மாத்திரத்தி லேயே உள்ளம் பொங்கிப் பரவசமானார். திரும்பி வந்தவர் விநாயகர் ஆலயத்தில் கடமை உணர்வுடன் தொடர்ந்து வழிபாடு நடத்திவந்தபோதிலும் இதயபூர்வ மாய் இளம் சுவாமியையே நாடினார். நாட்கள் செல்லச் செல்ல அவர் மீதான பக்திப் பற்று பழநிஸ்வாமியை முழுதும் ஆட்கொண்டு விட்டது. கடைசியில் அவ ரிடமே போய்ச் சேர்ந்தார். தொடர்ந்து இருபத்தோறு ஆண்டுகள் பணியாளராக உடனிருந்து, அவ்வாறே தம் மீதி வாழ்நாள் முழுவதையும் அப்பணிக்கே அர்ப்பணித் தார்.

பணிசெய்து கிடக்கும் கடனைத் தவிர பழநிஸ்வா மிக்கு வேறேதும் பெரிதாய் செய்வதற்கில்லை. அடியார் கள் கொண்டுவரும் பலவகைப் படையல்களை வாங்கி வைத்துக் கொள்வார். ஆனால் சுவாமியோ அக்கலவை யில் ஒரு சிறு கிண்ணம் மட்டுமே தினமும் மதியம் ஒரு முறை அருந்துவார். மீதமுள்ள அனைத்து உணவுப் பண்டங்களும் வருவோர்க்குப் பிரசாதமாக வழங்கப் பட்டுவிடும். பழநிஸ்வாமி வேறு வேலை நிமித்தமாக ஊருக்குள் செல்ல நேரும்போதெல்லாம் குருமூர்த்த ஆலயத்திற்குள் சுவாமியைப் பூட்டிவைத்துப் போய் விடுவார். திரும்ப வந்து பார்க்கையில் அவர் விட்டுச் சென்ற இடத்திலேயே சுவாமி நிஷ்டையில் கிடப்பார்!

உணவிலும் வெளியுணர்விலும் நாட்டமற்று இருந் தமையால் சுவாமியின் உடல் வாடியது. ஜட உடற் சிந்தனை அறவே இல்லை. நீராடவில்லை. கேசபாரம் மண்டிவளர்ந்து அழுக்கும் பிசிக்கும் படிந்து சிக்குப் பிடித்துச் சடையாயிற்று. கை–கால் நகங்கள் வெட்டப் பெறாமல் நீண்டு வளர்ந்து சுருண்டன. அவற்றைப் பார்த்த பலர், நூற்றுக்கணக்கான வயதாகியும் யோக

மகிமையால் இளமையாகவே இருக்கும் சித்த புருஷர் இவர் என்று பேசிக்கொண்டனர். உண்மையில் அவரது உடல் அளவுக்குமீறி பலவீனமாகிவிட்டது. மலஜலம் கழிக்க எழுந்து செல்லக்கூட மிகச் சிரமமாயிற்று. சற்றே எழ முயற்சிப்பார்; உடல் தளர்ந்து தலை கிறு கிறுத்து உட்கார்ந்துவிடுவார். பல தடவை முயன்ற பிறகே ஒருவாறு எழுந்து நிற்பார். ஒரு சமயம் கதவு வரை சென்றவர் தள்ளாடித் தடுமாறி இருகைகளாலும் கதவைப் பிடித்தபடி நின்று விட்டார். பழநிஸ்வாமி தம்மைத் தாங்கலாகப் பிடித்து நிற்பதை அப்போது தான் உணர்ந்தவர், "இதை ஏன் யாரும் பிடித்துக் கொள்ள வேண்டும்?" என வினவினாராம். அவ்வாறு உதவிபெறுவதை அவர் அன்றும் என்றும் விரும்பிய தில்லை. "சுவாமி, தாங்கள் கீழே விழுந்துவிடாமல் தாங்கிக் கொண்டேன். வேறொன்றுமில்லை" என்றா ராம் பழநிஸ்வாமி.

தெய்விகத்துடன் ஒருங்கிணைந்து திகழ்பவர்களை சில சமயம் கோயிற் கடவுள் சிலையாகவே பாவித்து மலர்தூவி கற்பூர தீபங்காட்டி ஆராதிப்பதும் உண்டு. குருமூர்த்தத்தில் இளம் சுவாமியை அவ்விதம் பூஜிக்க தம்பிரான் ஒரு சமயம் ஆசைப்பட்டார். முதல் நாள் அவ்வாறே அர்ச்சித்துத் தூப தீபம் காட்டியபோது வியப்பில் ஆழ்ந்த சுவாமி அவரைத் தடுத்து நிறுத்த முற்படவில்லை. ஆனால் மறுநாள் தம்பிரான் கிண்ணத் தில் உணவுடன் வந்தபோது, சுவாமி சாய்ந்திருந்த சுவற்றின்மேல் கரித்துண்டால் "இதற்குத் தொண்டு இதுவே" என்று சுவாமி கைப்பட எழுதப்பட்டிருந்தது. "இவ்வுடலுக்கு உணவு அளிப்பதுமட்டுமே போதும்" என்பதுதான் அதன் பொருள்.

சுவாமி கல்வியறிவுடையவர், எழுதப்படிக்கத் தெரிந் தவர் என்ற உண்மை மேற்கூறிய நிகழ்ச்சியால் தெரிய

வந்தபோது அன்பர்கள் ஆச்சரியப்பட்டனர். 'சரி, வாய் திறந்துதானே பேசுவதில்லை? எவ்வாறேனும் எழுத்து மூலம் அவரது ஊரையும் பெயரையும் தெரிந்துகொள்ள வேண்டும்' என்று வயது முதிர்ந்த அன்பர் ஒருவர் ஆர்வம் கொண்டார். அவர் பெயர் வெங்கடராம அய்யர். டவுன் தாலுக்கா ஆபிசில் தலைமை கணக்கர். தினமும் காலையில் வந்து சுவாமியின் முன்னிலையில் சற்று நேரம் கண் மூடி அமர்ந்து தியானம் செய்த பின்னரே தம் அலுவலகம் செல்வார். 'சுவாமியின் மௌன விரதத் தைக் கலைப்பது ஆகாது தான்; ஆனாலும் ஏதாகிலும் எழுதிக் காட்டுவதில் தவறென்ன' என்ற எண்ணத் துடன் சுவாமியை அவ்வாறு வற்புறுத்தத் துணிந்தார். பழநிஸ்வாமி கொண்டு வந்த புத்தகத்தின் மீது ஒரு காகிதத்தையும் பென்ஸிலையும் சுவாமியின் முன் வைத்து, பெயரையும் பூர்விக ஊரையும் எழுதும்படி வேண் டினார்.

சுவாமியோ அவருடைய மன்றாடல்களுக்கு அசைந் தாரில்லை. இறுதியில், 'கோரிய தகவல் தெரிந்தாலன்றி அலுவலகம் போகமாட்டேன், உண்ணாவிரதம் இருப் பேன்' என்று வெங்கடராம அய்யர் அடம் பிடிக்கவே, இளம்சுவாமி பென்ஸிலைக் கையிலெடுத்தார். "வெங்கட ராமன், திருச்சுழி" என்று ஆங்கிலத்தில் எழுதினார். சுவாமிக்கு ஆங்கிலமும் தெரியும் என்பது அன்பருக்கு மேலும் வியப்பளித்தது. ஆனால் "திருச்சுழி" (Tiruchuzhi) என ஆங்கிலத்தில் எழுதியதில் "ழி" என்ற உச்சரிப் புக்கு "zhi" என்று எழுதியிருப்பது அய்யருக்குப் புதி ராக இருந்தது. அதைப் புரிந்து கொண்ட சுவாமி, காகிதத்தடியிலிருந்த தமிழ்ப் புத்தகத்தை எடுத்து, 'ழி' எழுத்தைத் தேடிப் புரட்டினார். அது பெரிய புராண நூல். சுந்தரமூர்த்தி நாயனாரால் பாடல்பெற்ற திருத் தலமாகிய திருச்சுழி அதில் இடம் பெற்றுள்ள பத்தியை அய்யரிடம் சுட்டிக் காட்டினார்.

குருமூர்த்தத்தில் ஓராண்டுக்குமேல் தங்கியிருந்த சுவாமி, 1898–ஆம் வருடம் மே மாதம், அடுத்திருந்த மாந்தோப்புக்கு இடம் மாறினார். தோப்பின் சொந்தக்காரரான வெங்கடராம நாயக்கர் என்பவரே பழநிஸ்வாமி பண்டாரத்திடம் விண்ணப்பித்து, இருவரையுமே தமது தோப்பினுள் வந்திருக்கச் செய்தார். வெளியார் தொந்திரவு இல்லாத ஏகாந்தமான இடம், வெளியே போவதானால் வேலிக் கதவைச் சாற்றிப் பூட்டி விட்டுப் போகலாம் என்பது அவரது யோசனை. ஒரு மாமரத்து நிழலில் கட்டப்பட்ட இரு தனித்தனி காவல் பரண்கள் அவ்விருவரின் இருப்பிடமாயின. பழநிஸ்வாமியின் அனுமதியின்றி யாரையும் உள்ளே விடக்கூடாது என்று தோட்ட வேலையாளுக்குக் கட்டளையிட்டார் உரிமையாளர் நாயக்கர்.

மாந்தோப்பில் சுவாமி ஆறுமாத காலம் தங்கியிருந்தார். பிற்காலத்தில் அவரிடம் அமைந்த ஆழ்ந்த புலமையின் அடித்தளம் இந்நாட்களிலேதான் உருவாயிற்று. படித்தறியவேண்டும் என்ற சொந்த விருப்பம் அவருக்கில்லை எனினும், தம்மை அண்டிய பக்தனுக்குப் புரியவைக்க வேண்டும் என்பதற்காகவே தத்துவ விளக்கங்களை ஊன்றிப் படித்தார் என்ற தனிச் சிறப்பு இங்கு குறிப்பிடத்தக்கது. பழநிஸ்வாமி தாம் படிப்பதற்காக ஆன்மிக வேதாந்த நூல்களைக் கொண்டுவருவது வழக்கம். அவருக்குக் கிடைத்தவையோ தமிழ்மொழிப் புத்தகங்கள். மலையாளியான பழநிஸ்வாமிக்கோ தமிழ் சரிவரத் தெரியாது. படித்துத் தெரிந்துகொள்ள மிகவும் சிரமப்பட்டார். அவரது அவதியைக் கண்ணுற்ற இளம் சுவாமி அப்புத்தகங்களை அவ்வப்போது தாமே எடுத்துப் புரட்டி முழுவதும் படித்தபின் அவற்றில் கண்டுள்ள தத்துவக் கருத்துக்களை தெளிவாய் சுருக்கமாய் பழநிஸ்வாமிக்கு எடுத்துரைப்பார். முன்பே எட்டிவிட்ட ஆன்மிக ஞானம் காரணமாய், ஒரு நூலை மேலெழுந்த

வாரியாகப் படித்த மாத்திரத்திலேயே அதன் தத்துவ விளக்கங்கள் அவரது மனதில் பளிச்சிடும். படித்ததை மனதில் பதிக்கும் அபார ஞாபக சக்தியும் அவருக்கு இயல்பானது. இவ்வாறு, பிரயாசையின்றியே சுவாமி புலமை மிக்கவரானார். இவ்விதமே அவர் பின்னர் சமஸ்கிருதம், தெலுங்கு, மலையாளம் ஆகிய மொழிகளில் கிடைக்கப் பெற்ற நூல்களையும் படித்தறிந்து, அம்மொழி வாயிலாகவே விடைகளும் அளித்து வரலானார்.

# 5. திரும்பி வருவாரோ?

வாலிப வெங்கடராமன் வீட்டைவிட்டுப் போனது அவன் குடும்பத்தினருக்குப் பேரதிர்ச்சி. பையனின் வித்தியாசமான போக்கும் குடும்பத்தைத் தொடரும் சாபக்கேடும் தெரிந்திருந்தும்கூட, எவரும் இந்த திடீர்த் திருப்பத்தை எதிர்பார்க்கவில்லை. எங்கெங்கோ தேடியும் விசாரித்தும் பயனில்லை. மானாமதுரையில் தன் உறவினருடன் வசித்துவந்த விதவைத் தாயார் அழகம்மாளோ தவியாய்த் தவித்தார். தன் மைந்தனை எங்கு சென்றாகிலும் தேடித் தரும்படி மைத்துனர் சுப்பையரிடமும், நெல்லையப்ப அய்யரிடமும் மன்றாடி நின்றாள். ஓடிப்போன வெங்கடராமன் திருவனந்தபுரத்தில் ஏதோ நாடகக் கம்பெனியில் சேர்ந்து புராண நாடகங்களில் நடித்துவருவதாக ஓர் வதந்தி கிளம்பியது! நெல்லையப்ப அய்யர் உடனடியாய் அங்கு சென்று எல்லா நாடகக் குழுவினரிடத்தும் தீர விசாரித்து ஏதும் தகவலின்றித் திரும்பிவந்தார். அங்கே இல்லை என்ற செய்தியை அன்னை அழகம்மாள் ஏற்க மறுத்தார். தன்னையும் அழைத்துக் கொண்டு இன்னொரு தரம் போய்த் தேட வேண்டும் எனப்பிடிவாதம் பிடித்தார். அவ்வாறே திருவனந்தபுரம் சென்றபோது ஓரிடத்தில் சற்று தூரத்தில் வெங்கடராமனின் சாயலையொத்த பையன் ஒருவனைக் கண்டார். அதே உயரம், வயது, தலைமுடி. அப்பையனோ சட்டென்று திரும்பி மறுபுறம் விரைந்து கூட்டத்தில் மறைந்து விட்டான். அது தன் மகனேதான், தன்னைப் பார்க்க இஷ்டப்படாமல் ஓடி ஒளிகிறான் என்று எண்ணிய தாயார் மனம் ஒடிந்து ஊர் திரும்பினார்.

முன்பு மதுரையில் பள்ளிப் படிப்பின்போது வெங்கடராமன் தன் மூத்த சிற்றப்பாவான சுப்பையர் வீட்டில் தங்கியிருந்தானல்லவா ? சுப்பையர் 1898 ஆகஸ்ட் மாதம்

காலமானார். இளைய சிற்றப்பாவான நெல்லையப்ப அய்யர், தன் குடும்பத்தாரோடு தமையனின் ஈமச் சடங்கிற்காக மதுரை வந்தார். காணாமற்போன வெங்கடராமனைப் பற்றி அச்சமயம்தான் ஒரு சேதி கிடைத்தது. சடங்கில் கலந்துகொண்ட ஒருவர் தாம் உள்ளூரில் ஒரு மடத்திற்குச் சென்றபோது கேட்டறிந்ததைக் கூறினார். அம்மடத்தில் அண்ணாமலைத் தம்பிரான் என்பவர் திருவண்ணாமலையில் உள்ள இளம் சுவாமியொருவரைப் பற்றி பயபக்தியுடன் பேசிக்கொண்டிருந்தாராம். பூர்வீகம் திருச்சுழி என்று குறிப்பிட்டதும், தாம் மேலும் விபரம் தூண்டிக் கேட்டபோது, அந்த சுவாமியின் பெயர் வெங்கடராமன் என்று தெரியவந்ததாம். "அது உங்கள் வெங்கடராமனாகத்தான் இருக்க வேண்டும். இப்போது மரியாதைக்குரிய சுவாமிகள் ஆகிவிட்டார்" என்று முடித்தார்.

நெல்லையப்ப அய்யர் மானாமதுரையில் ஒரு சாதாரண வக்கீல். செய்தி கேட்டதும் நேரில் கண்டறிய நண்பர் ஒருவரையும் அழைத்துக்கொண்டு திருவண்ணாமலைக்கு விரைந்தார். சுவாமி இருக்குமிடத்தைக் கேட்டறிந்தார். மாந்தோப்பில் சுவாமி தங்கியிருந்த சமயம் அது. தோப்புச் சொந்தக்காரர் நாயக்கரோ அவர்களை தோப்பினுள் பிரவேசிக்க அனுமதிக்கவில்லை. "அவரோ மௌன விரதம் இருந்து வருகிறார். ஏன் வீணாகத் தொந்திரவு செய்கிறீர்கள் ?", என்று தடுத்தார். 'நாங்கள் அவரது உறவினர்' என வாதாடியும் கேட்கவில்லை. 'எழுத்துமூலம் குறிப்பு மட்டும் அனுப்பலாமே' என்று நாயக்கர் முடிவாகச் சொல்லி விட்டார். ஆகவே, நெல்லையப்ப அய்யர் தன்னிடமிருந்த ஒரு துண்டுக் காகிதத்தில் "மானாமதுரை வக்கீல் நெல்லையப்பர் தரிசனம் செய்ய விரும்புகிறார்" என்று எழுதி அனுப்பினார்.

வெளியுலக நடப்புகளில் பிடிப்பு அறவே அற்று மெய்யுணர்வில் மூழ்கிவிட்டவர் எனினும் சுற்றிலும் நிகழ்வன அனைத்தும் அறிந்தவண்ணமே பிற்காலம் முழுவதும் இயங்கிவந்தார் என்பதனைக் கண்டு பக்தர்கள் வியப்பது உண்டு. அத்தகைய இயல்புக்கான அறிகுறி அப்போதும் இருந்தது என்பது பின்னர் தெரிய வந்தது. கிடைத்த துண்டுக் காகிதத்தில் எழுதியிருந்த குறிப்பைப் படித்தபின் அதை சற்றே திருப்பிப் பார்த்தார். பின் பக்கப் பாதித் தலைப்பிலிருந்து அது பதிவீடு இலாக்காவின் தாளிலிருந்து கிழிக்கப்பட்ட துண்டு எனப் புரிந்ததாம். தமது அண்ணன் நாகஸ்வாமியின் கையெழுத்து வரிகளையும் அதில் கண்டதும், 'ஓகோ, நாகஸ்வாமி ரிஜிஸ்ட்ரேஷன் டிபார்ட்மெண்டில் குமாஸ்தாவாகச் சேர்ந்துவிட்டானா' என எண்ணிக் கொண்டாராம். இதே போன்று, பிந்தைய ஆண்டுகளில், கடித உறையைத் திருப்பிப் பார்த்து, அனுப்பியவர் பெயரையும் தபால் பட்டுவாடா முத்திரைகளையும் கவனித்தபிறகே உறையைக் கிழித்துக் கடிதத்தைப் பிரிப்பது வழக்கம்!

அவ்விருவரும் தம்மைக் காண அனுமதி வழங்கினார். ஆனால் அவர்கள் வந்ததும் கவனியாமல் அக்கறை ஏதுமின்றி மௌனமே உருவாய் அமர்ந்திருந்தார். காகிதக் குறிப்பைப் படித்தபோது காட்டிய கவனம் கூட இப்போது காணோம்! அக்கறை செலுத்தினால் தாம் திரும்பி வந்துவிடக்கூடும் என்று வீணாக எதிர்பார்ப்பார்கள் அன்றோ ? வெங்கடராமனை நேருக்குநேர் அந்நிலையில் கண்ட நெல்லையப்ப அய்யர் மனம் நெகிழ்ந்தார்: 'சுவாமி ஆகிவிட்டாலும் இதென்ன கோலம் ? குளியல் காணாத பரட்டைச் சடை; நீண்டு வளர்ந்த நகங்கள்; கோவணாண்டி.' அய்யர் சற்றே சுதாரித்துக் கொண்டார். மௌனி என்பதால் அவரோடு நேரடியாய்ப் பேசாமல், பக்கத்திலிருந்த பழநிஸ்வாமியிடமும் நாயக்கரிடமும் உரையாடினார். தமது குடும்பத்தைச்

சேர்ந்த ஒரு இளைஞன் இவ்விதம் உயர்நிலை அடைந்து விட்டதைக் கண்டு மனம் பூரிப்பதாகவும், இருந்தும் இவ்வாறு தேகத்தை வருத்தி உடல் நலனைப் புறக் கணிக்கலாகாது அல்லவா, எனக் கூறினார். உறவினர் கள் தங்களருகில் அவர் இருந்துவர விரும்பினர். 'அவரது பிரதிக்ஞைகளையோ வாழ்க்கை முறைகளையோ விட்டு விடுமாறு ஒரு போதும் வற்புறுத்த மாட்டோம். மௌன சந்நியாசியாகவே இருந்து வரட்டும். ஆனால் நாங்கள் இருக்கும் மானாமதுரைக்கே சுவாமி வந்து விடட்டுமே? ஒரு மகா ஞானியின் சமாதி மடம் மானாமதுரையில் உள்ளது. அங்கேயே தங்கி வரலாம். சுவாமிக்கு யாதொரு தொந்திரவும் தராது அவரது தேவைகள் பூராவையும் கவனித்துக் கொள்கிறோம்...' – இவ்வாறெல்லாம் பேசி வக்கீல் தன் வாதத்திறமையைக் காட்டினார். ஆனால் அவரது வாதம் ஏதும் எடுபடவில்லை. ஆடாது அசை யாது அவர் சொல்வதொன்றும் காதில் விழாதவர்போல் ஜடமாய் அமர்ந்திருந்தார் இளம் சுவாமி. வேறு வழி யின்றி நெல்லையப்ப அய்யர் தன் தோல்வியை ஒப்புக் கொண்டு வெளியேறினார். அழகம்மாளுக்கு உடனே கடிதமொன்று எழுதித் தபாலில் சேர்த்தார். அவளு டைய பிள்ளையைக் கண்டுபிடித்துவிட்ட நற்செய்தியை அடுத்து, பையன் முற்றிலும் மாறிவிட்டான், திரும்பிவர மறுத்துவிட்டான் என்ற சங்கடச் சமாச்சாரமும் தாங்கிய கடிதம் அது. திருவண்ணாமலையில் ஐந்து நாட்கள் இருந்தபின் நெல்லையப்ப அய்யர் மானாமதுரை திரும்பினார்.

இது நிகழ்ந்து சிறிதே காலத்திற்குள், சுவாமி மாந் தோப்பை விட்டகன்று ஐயன்குளத்திற்கு மேற்கே அமைந்துள்ள அருணகிரிநாதர் (அருணாசலநாதர்) சிற்றா லயத்திற்கு இடம் பெயர்ந்தார். பிறர் உதவியை என்றும் எதிர்பார்க்க விரும்பாத அவர், இனி பழநிஸ்வாமி தமக் காக உணவு எடுத்து வருவதைத் தவிர்த்துத் தாமே

உணவை பிட்சையாகப் பெறத் தீர்மானித்தார். "இனி நீர் உமது போக்கில் வேறு பக்கம் பிட்சைக்குப் போய் விடும். நான் வேறுபுறம் பிட்சைபெற்று வரவிருக்கி றேன். இன்றுமுதல் நாம் சேர்ந்து இருக்கவேண்டாம்" என்று பணித்தார். பழநிஸ்வாமிக்கு இது பேரிடி போன்ற ஆணை ஆயினும் அவர் பணித்தபடி தனித்து வெளியே சென்ற பண்டாரம் அன்று இரவுக்குள் திரும்பவும் வந்து விட்டார். உடனிருந்து சுவாமிக்குப் பணிவிடை புரியாமல் பழநிஸ்வாமியால் வாழமுடியுமா? அவர் தம்முடன் தங்குவதற்கு சுவாமியும் மனமிசைந்தார்.

இக்கால கட்டத்திலும் சுவாமி பெரும்பாலும் மௌனமே அனுஷ்டித்துவந்தார். அக்கோயிலில் வாசம் செய்த ஒரு மாத காலம் முழுதும் ஓர் பிட்சாண்டியாகத் திரு வண்ணாமலை வீதிகளில் இரந்துண்டு வந்தார். ஒரு வீட்டு வாசலில் நின்று கைகளைத் தட்டுவார். யாரே னும் உணவு கொண்டு வந்து அளித்தால் இரு கரம் ஏந்திப் பெற்று, நடுத்தெருவில் நின்ற வண்ணமே புசிப் பார். வருந்தி அழைத்தாலும் யார் வீட்டினுள்ளும் செல்ல மாட்டார். ஒவ்வொருநாளும் வெவ்வேறு தெருக்களுக் குப் போவார். ஒரே வீட்டில் இரண்டாம் முறை யாசிக்க மாட்டார். இவ்வாறு திருவண்ணாமலையில் அநேக மாக எல்லாத் தெருக்களிலும் பிச்சை எடுத்திருப்ப தாகப் பிற்காலத்தில் கூறியுள்ளார்.

அருணகிரிநாதர் ஆலயத்தில் ஒரு மாதம் தங்கிய பின் அருணாசலேச்வரர் கோயிலின் ஒரு கோபுரத் தடியிலும், அதன்பிறகு ஆலயத்து அரளித் தோட்டத் திலும் இருந்து வரலானார். இதற்குள் அவர் எங்கு சென்றாலும் சில பக்தர்கள் பின்தொடரத் தொடங்கி விட்டனர். கோயில் வளாகத்தினுள் ஒரு வார காலம் மட்டுமே தங்கியவர், பிறகு அருணாசல மலையின்

கிழக்குச் சரிவிலுள்ள தொடர்க்குன்றான பவழக்குன்றி லுள்ள சிறு கோயிலை இருப்பிடமாகக் கொண்டார்.

அங்கும் அவர் முன்போல சமாதிநிலையிலேயே சமைந்திருக்கலானார். பழநிஸ்வாமி இல்லாத சமயங் களில் மட்டும் பிட்சை பெறுவதற்காக வெளியே சென்று வருவார். அவர் கோயிலுள் இருக்கிறாரா இல்லையா என்று தெரிந்துகொள்ளும் சிரத்தையின்றி பல சமயங் களில் அர்ச்சகர் பூஜை முடிந்தபின் இளம் துறவி உள்ளே இருக்கும்போதே கோயிலைப் பூட்டிச் சென்று விடுவார்.

பவழக்குன்றில் இருக்கை கொண்டிருந்த போது தான் அன்னை அழகம்மாள் தன் மகனைக் காண வந்தார். நெல்லையப்ப அய்யரிடமிருந்து தகவல் கிடைத்த பிறகு கிறிஸ்துமஸ் விடுமுறைநாட்கள் வரை காத்திருக்க நேரிட்டது. ஏனெனில் அந்த லீவு நாட்களில்தான் அவரது மூத்த மகன் நாகஸ்வாமியும் கூடவே திருவண் ணாமலை செல்ல முடிந்தது. பவழக்குன்றில் ஓர் பாறை மீது வற்றிய தேகமும் சடைபிடித்த தலையுமாக வீற்றி ருந்த தன் மகனை அடையாளம் கண்டவுடன் அன்னை நிலைகுலைந்தார். 'பெற்ற மனம் பித்து' அன்றோ! மெலிந்த உடலையும் ஆண்டிக்கோலத்தையும் பார்த் துப் பரிதவித்துப் புலம்பலானார். தங்களோடு ஊருக் குத் திரும்பிவருமாறு மன்றாடினார். ஆனால் 'பிள்ளை மனம் கல்லு' என்பதற்கொப்ப, அவர் மசியவில்லை. புலம்பல் ஏதும் காதில் ஏறாததுபோல பதிலொன்றும் கூறாது இமை மூடி அமர்ந்திருந்தார். அழகம்மாளும் நாகஸ்வாமியும் ஊருக்குள் தங்கியிருந்து, விதவிதமான தின்பண்டங்களுடன் தினந்தோறும் அடுத்தடுத்து சுவாமி யின் இருப்பிடம் வருவர். வீடுதிரும்புமாறு கெஞ்சியும் மிஞ்சியும் கேட்பர். பலன் பூஜ்யம்.

அம்மா என்ற பாச உணர்வின்றிப் பாராதீனமாய் இருந்துவரும் பிள்ளையை எண்ணி மனம் வெதும்பிய அன்னை அழகம்மாள் ஒருநாள் துக்கம் தாங்கவொண்ணாமல் 'ஓ'வெனக் கதறிக் கண்ணீர் விடலானார். அப்போதும் அவர் பதில் பேசாதிருந்தார். ஆனால் எங்கே தாம் ஆறுதல் கூறப்போய் அது அவளிடம் வீணாக நம்பிக்கை மூட்டிவிடுமோ என்று எண்ணி அவர் சட்டென எழுந்து அவ்விடத்தை விட்டு அகன்றார். இன்னொரு நாள், சுற்றிலும் கூடியிருந்தோரிடம் தாய் முறையிட்டார். அவர்களில் பச்சையப்பப் பிள்ளை என்ற ஒருவர் முன்வந்து, "சாமி! பெற்ற தாயார் அழுது அழுது கஷ்டப்படறாங்களே. உங்க மனசில இருக்கறத்தை 'உண்டு', 'இல்லை'ன்னு சொல்லிவிடலாமில்லெ ? மௌன விரதத்தைக் கலைக்க வேணாம். பதிலை எழுதியாவது காட்டக் கூடாதா ?" என்று விண்ணப்பித்து, ஒரு பென்ஸிலையும் காகிதத்தையும் சுவாமியின் முன் வைத்தார்.

அவர் அவற்றை எடுத்து, இவ்வாறு பொதுப்படையாக எழுதினார்:

> "அவரவர் பிராரப்தப் பிரகாரம் அதற்கானவனாங்காங்கிருந்தாட்டுவிப்பன். என்றும் நடவாதது என் முயற்சிக்கினும் நடவாது; நடப்பது என்ன தடை செய்யினும் நில்லாது. இதுவே திண்ணம். ஆகலின், மௌனமாயிருக்கை நன்று."

இதன் சாராம்சமும், ஏசுநாதர் அன்று தமது அன்னைக்கு அருளிய வாக்கும் ஒன்றே தான்: "அம்மணி! தங்களுக்கும் எனக்கும் யாது சம்பந்தம் ? நான் எனது பிதாவின் பணியை மேற்கொள்ள விதிக்கப் பெற்றுள்ளேன் என்பதனைத் தாங்கள் அறியீரோ ?" என உரைத்தாரன்றோ திருப்புதல்வர் ? அன்னையின் மன்றாடலுக்கு விடை, 'இல்லை இனி வரமாட்டேன்' என்ற மறுப்புரையாக மட்டுமே இருக்கும் என்றபோது ஸ்ரீ பகவான்

மௌனம் சாதித்தார். அதனை விடையாக ஏற்காது மற்றவர் வேண்டுகோளின்படி பதிலை எழுதிக் காட்டிய போது அதன் வாசகம் குறிப்பாக எவரையும் சார்ந்ததாக இல்லாமல் ஏதோ தத்துவ வாக்குப் போன்று அமைந்தது; அதே வாசகம் குறிப்பிட்ட வினாவுக்குத் தேவையான விடையாகவும் வாய்த்தது. இத்தகைய உத்திகள் ஸ்ரீ பகவானுக்குக் கைவந்த கலை!

'நடப்பது நடந்தே தீரும்' என்பதனை ஸ்ரீ பகவான் பலமுறை உறுதியாய் மொழிந்துள்ளார். அதே சமயம் நடப்பன யாவும் முன்வினைப் பயன், அவரவர் பிராரப் தப்படி முன் வினையின் பாக்கிப் பகுதிக்கேற்ப இப்பிற வியில் பலன் அனுபவிப்பதைத் தடுக்க இயலாது எனவும் போதித்துள்ளார். ஊழ்வினைப்படி நடப்பவனவற்றில் நியாய–அநியாயங்களைக் காணுதல் உணர்ச்சிவயப் பட்ட எண்ணங்கள்தாம் என்பதும் அவரது கூற்று. ஊழ்க்கட்டுப்பாடற்ற சுயேச்சைச் செயல், தலைவிதி பற்றிய சர்ச்சைகளில் சிக்க அவர் இறுதிவரை மறுத்து வந்தார். அத்தகைய சித்தாந்தங்கள் பகுத்தறிவுக்கு எட்டா தவை எனினும் அவை உண்மையின் வெவ்வேறான பிரதிபலிப்புக்களே என்பது அவரது கூற்று. " 'தலை விதி யாருக்கு, சுயேச்சை செயல் புரிவது யார்?' என்பதை முதலில் தெரிந்து கொள்ளலாமே" என்பார்.

"ஊனுடல் மடியும் வரை நிகழ்த்த வேண்டிய அனைத்துச் செயல்களும் ஜன்மம் எடுக்கையிலேயே விதிக்கப்பட்டு விடுகின்றன. உனக்குள்ள சுதந்திரம் ஒன்றே ஒன்றுதான்: 'உனது உடல்தான் நீயா அல்லது நீ வேறா' என உணர்ந்து கொள்வதற்கான சுதந்திரம்'', எனத் திட்டவட்டமாகக் கூறியுள்ளார். இதனை ஓர் உவமை யால் ஓரளவு விளக்கக்கூடும். நாடகமேடையில் ஒருவன் நடிக்கிறான். அவன் நடித்துப் பேச வேண்டிய வசனம் மற்றும் முழு நாடக ஸீன்களும் ஏற்கனவே எழுதப்பட்டு

விடுகின்றன. அதன்படியே தான் நடிக்கும் பாத்திரத்துடன் ஒன்றி உணர்ச்சிபொங்க நடித்து, வரிகளை ஒப்பிக்க வேண்டியதே நடிகனின் வேலை. கத்திக்குத்து பெறும் ஜூலியஸ் சீசராக நடித்தாலும் சரி, அல்லது அவ்வாறு குத்திக் கொலை செய்யும் புரூடஸ் வேடத்தில் நடித்தாலும் சரி, உண்மையில் தான் அவன் அல்ல என்பதை நடிப்பவன் நன்கு அறிவான். அதே போன்று, சாவு அற்ற ஆன்மாவே நான் என உணர்ந்தவன், உலக நாடக மேடையிலும் பயம் பதற்றம் நம்பிக்கை ஏமாற்றம் ஏதுமின்றி, நடிக்கும் பாத்திரத்தின் நிஜ பாதிப்பின்றி நடிக்கிறான். 'அதெல்லாம் சரி, இப்படி எனது எல்லா நடவடிக்கைகளும் ஏற்கனவே நிச்சயிக்கப்பட்டவை என்றால் எனக்கென்று மிஞ்சும் உண்மை என்னவோ?', என்று வினவப்போனால் அவ்வினாக்கள் முடிவில் ஒரே ஒரு வினாவிற்குத்தான் இட்டுச்செல்லும். "அப்படியானால், 'நான் யார்?'" என்பதே அம் முடிவான கேள்வி: முடிவுகள் எடுப்பது நான் தான் என்று எண்ணுகிற அகந்தை மெய்யான "நான்" இல்லை. இருப்பினும் என்னுள் 'நான், நான்' என்று ஒன்று தனித்து ஸ்புரித்துவருவதை உணரமுடிகிறதே? என்னை என்னுள் உணரும் மெய்ப்பாடு யாது?

மேற்கூறிய விளக்கம், ஸ்ரீபகவான் அறுதியிட்ட ஆன்ம விசாரத்திற்கான ஓர் முன்னேற்பாடான உதாரணம் மட்டுமே. ஆயினும் வெறும் எண்ணக் கோர்வையாய் அமைந்த இந்த விளக்கம், உண்மையான ஆன்ம நாட்டத்திற்கு நம்மை தயார்செய்துகொள்ள உதவக்கூடும்.

'விதி வலிது' என்பதற்கு எதிர்மாறாக, 'தன் விதியைத் தானே வகுத்துக் கொள்ளுதல்' என்பதும் உண்மையே. ஏனெனில், காரண—காரிய நியமப்படியே அனைத்தும் நிகழ்கின்றன. ஒவ்வொரு எண்ணமும், ஒலி வடிவமும், செயலும் எதிர்—அதிர்வை எழுப்புகின்றன.

ஏனைய ஞான ஆசான்களைப் போலவே ஸ்ரீபகவானும் இக்கருத்தை வலியுறுத்தியுள்ளார். சிவப்பிரகாசம் பிள்ளை என்ற பக்தருக்கு ஆதியில் அளித்த விடையில், "ஈசன் சன்னிதான விசேஷ மாத்திரத்தால் நடக்கும் முத்தொழில் அல்லது பஞ்ச கிருத்தியங்களுக்கு உட்பட்ட ஜீவர்கள், தத்தம் கர்மானுசாரத்தை சேஷ்டித்து அடங்குகின்றனரே தவிர, ஈசன் சங்கல்ப சகிதர் அல்லர்" (ஆண்டவன் ஆட்டுவிக்கவில்லை) என்று விடை பகன்றுள்ளார் (சிவப்பிரகாசம் பிள்ளைக்கு ஸ்ரீரமணர் அளித்த ஏனைய விடைகளை பத்தாம் அத்தியாயத்தில் காண்க). சுய முயற்சியின் அவசியத்தை அவர் அடிக்கடி வலியுறுத்தியுள்ளார். "மகரிஷி வாய்மொழி"யில் கண்டுள்ள ஓர் விடையிலும் அதே கருத்து வெளிப்படுகிறது. ஒரு பக்தர் இவ்வாறு முறையிட்டாராம்: "அக்டோபரில் ஆசிரமத்தை விட்டுப் போனபிறகு, பகவத் சன்னிதியில் எந்த சாந்தி சுகத்தில் ஆழந்துகிடந்தேனோ அந்த சுகம் பத்து நாட்கள் வரையில் என்னைவிட்டு நீங்கவில்லை. நான் வேலை செய்துகொண்டிருக்கும் பொழுதெல்லாம் ஒரு சாந்தி ரஸத்தின் தாரை உள்ளே இருந்துகொண்டிருந்தது. சாரமற்றதோர் உபந்நியாஸத்தைக் கேட்கும்போது விழித்துக் கொண்டே தூங்குவது போன்ற இரட்டை உணர்வு இருந்து கொண்டிருந்தது. பிறகு அது முற்றிலும் மறைந்து விட்டது. மறுபடியும் பழைய மூடத்தனங்களெல்லாம் வந்துவிட்டன. வேறு வேலைகளைத் தவிர்த்துத் தனியே தியானம் செய்ய நேரம் கிடைக்கவில்லை. வேலை செய்யும்போதே அடிக்கடி 'நான் இருக்கிறேன்' என்ற நினைப்பு இருந்தால் மட்டும் போதுமா?" இக்கேள்விக்கு ஸ்ரீ பகவானின் பதில் இதுதான்: "மனத்தை திடப்படுத்திக் கொண்டால் அந்த சாந்தி ஸ்திரமாக இருக்கும். அடிக்கடி பழகுவதால் கிடைக்கும் மனோபலத்துக்குத் தக்கபடி அந்த சாந்தி

நீடித்திருக்கும். அப்படிப்பட்ட மனத்துக்கு ரஸ தாரையைப் பற்றிக் கொள்ளுதல் சுலபம்...''

அறுதியிட்ட விதிக்கும் தன்முயற்சிக்கும் இடையே எழும் முரண்பாட்டை ஒரு பக்தர் சுட்டிக்காட்டியபோது ஸ்ரீபகவான் அளித்த வேறொரு விளக்கம் "உபதேச மஞ்சரி" யில் காணப்படுகிறது. ''ஈச்வரன் சர்வ வியாபகனாயினும், 'அவனருளாலே அவன் தாள் வணங்கல்' என்பதாகிய வாக்கியங்களால், ஈச்வரனை அறிதல் அவன் அருளாலேயே கூடும் என்றாகிறது. ஈச்வர அனுக்கிரகமின்றி ஜீவன் தன் சுய முயற்சியால் ஆன்ம சாட்சாத்காரம் பெறுவது எங்ஙனம்?'', என வினவுகிறார் ஒரு பக்தர். விடையாக ஸ்ரீ பகவான் கூறியதாவது: "ஈச்வரனுக்கு 'ஆன்மா' எனவும், 'அனுக்கிரகம்' என்பதற்கு (ஆன்ம) பிரசன்னம் அல்லது ஆன்ம 'விளக்கம்' எனவும் பொருள் கொள்ளலாம். ஈச்வரன் விளங்காததோர் காலமே இல்லை... அனுக்கிரகமே சொரூபமாய் இருந்துவரும் ஈச்வரனுக்குத் 'திருவருள்' என்றதோர் பெயரும் பிரசித்தம். ஆகவே, நிரந்தரம் அனுக்கிரகத்தையே சொரூபமாக உடைய ஈச்வரனுக்கு அனுக்கிரகம் 'செய்வது' என்பதோர் வேலையுமில்லை. அருள் புரிவதற்கென்று ஓர் காலமும் இல்லை."

''ஆதலின், மௌனமாயிருக்கை நன்று'' என்ற கடிதத்தின் கடைசிவரி அவருடைய தாயாருக்குத் தெரிவிக்கும் தெளிவான பதிலாக அமைந்தது. ஏனெனில், நடக்கவொண்ணாத ஒன்றை அன்னை வற்புறுத்தி வேண்டுகிறாள் அன்றோ! அதே பதில், 'விதிப்படி நடப்பதை தடைசெய்ய மாட்டாது' என்ற பொருளில், அனைவருக்குமே பொதுவாகப் பொருந்தும் வாக்கும்கூட. ஆயினும், அதன் காரணமாய் சுய முயற்சி ஏதும் மேற்கொள்ளத் தேவையில்லை என்பதும் அர்த்தமில்லை. 'வருந்தி அழைத்தாலும் வாராது வராது', ஆகவே ஏன் வீண் முயற்சி என்ற மனப்பான்மையும் தவறு. ஏனெனில்,

என்ன விதித்திருக்கிறது என்று யார் அறிவார்? முயற்சி செய்ய வேண்டும் எனவும் விதிக்கப்பட்டிருக்கலாம் அல்லவா? 'உயிர்கள் தமது இயல்புக்கு ஏற்றவாறு வினையாற்றி முன்னேற்றமடைய வேண்டும்; தடை செய்வதால் ஆவதென்ன?' என்று பகவத் கீதையில் கிருஷ்ணபரமாத்மா அர்ச்சுனனுக்கு வழங்கிய போதனையையும் இங்கு குறிப்பிடத்தக்கது (கீதை அத். 3.33).

தாயார் துயரத்துடன் வீடு திரும்பினார். சுவாமியும் முன்போலவே அமைதியாய் இருந்துவரலானார் எனினும், அவரது போக்கில் சற்று மாற்றமும் இழைந்தது. இரண்டேகால் ஆண்டுகாலமாக திருவண்ணாமலையில் ஆலயங்களிலும் மடங்களிலும் இருந்து வருகையில் அவரிடம் குடிகொண்ட உடல்மறந்த முழு மௌன நிலை மெல்லக் கழன்று வெளி முகமாகப் பழகுவதற்கான அறிகுறிகள் தோன்றலாயின. வேளாவேளைக்கு சிறிது உணவு உட்கொள்ள ஏற்கனவே தொடங்கி விட்டார். பிறருக்கு பாரமாக இருக்கவிரும்பாமல் தாமே சென்று உண்டியாசித்துவரலானார். குருமூர்த்தத்தில் பழநிஸ்வாமியுடன் ஒரு சில வார்த்தைகள் பேசிவந்தார். இப்போது தம்மை அணுகும் அன்பர்கள் கொண்டுவரும் ஆன்மீக நூல்களைப் படித்து, அவர்களின் வேண்டுகோளுக்கிணங்க அவற்றின் சாராம்சத்தை எடுத்துரைக்கவும் செய்தார்.

திருவண்ணாமலை வந்தடைந்தது 1896–ஆம் ஆண்டின் பிற்பகுதி. பக்தர்களின் வினாக்களுக்கு எழுத்து மூலம் விடையளிக்கத் தொடங்கியது 1899–இல். வந்த புதிதில் புற உணர்வு அறவே அற்று, முற்றிலும் மெய் மறந்த நிலையில் மவுனம் சாதித்தார். அன்பர் எவரேனும் அன்னம் இட்டாலன்றி அவராக வாய் திறந்து கேட்டதில்லை. அவர்கள் கொண்டுவரும் உணவில் சிறிதளவே உட்கொள்வார். இந்த இடைக்காலத்தில் இளம் துறவி தவம் புரிந்து வந்தார் என்று கூறுவோரும் உண்டு.

"தவம்" என்ற சொல்லில் பல்வேறு அர்த்தங்கள் உள்ள டக்கம். மனத்தை ஒரு நிலைப்படுத்தி தியானத்தில் ஆழ்ந்து கடும் துறவறம் மேற்கொள்ளுதலே தவ நிலை. பாப விமோசனத்தின் பொருட்டும் தவம் புரிதல் உண்டு. இச்சைகளை அறவே விலக்கி, அந்தக்கரணமாகிய மனது புறக்கரணங்களாகிய ஐம்புலன்கள் இவைகளி டத்து விரையமாகும் சக்தியை உள்ளடக்கி ஸித்தி பெற விழைவதும் தவநிலை ஆகும். அதாவது, 'ஞான வைராக் கியம் பெறத் துறவறம் பூண்டு தன்னை ஒறுத்தலே தவம்' என்பது பொதுவழக்கு. ஸ்ரீபகவானைப் பொருத்தவரை யிலோ உடல் வறுத்தல், கடும் விரதம், சிரமித்த புலன டக்கம் போன்ற அடிப்படைக் கூறுகள் முற்றிலும் கிடையாது. ஏனெனில், 'உடல் நான் அல்ல' என்ற பூரண விழிப்பு அவருக்கு ஏற்கனவே உண்டாகி, கருவிக் கரணங்கள் ஒய்ந்துவிட்டன. துறவறம் என்ற செயற்கை யான சாதனை ஏதும் அவர் புரியவில்லை. ஜீவனின் உண்மை இயற்கை நிலையான ஆன்மாவாக அவர் இயல்பாகவே இருந்தாரே அன்றி வேறொன்றும் புரிந்தாரில்லை. "நான் உணவருந்தவில்லை; ஆகவே 'உபவாசம் கிடக்கிறார்' பேசவில்லை; மௌனவிரதம் அனுஷ்டிக்கிறார்' என்றார்கள்," என்று பிற்காலத்தில் அவரே அந்நிலைக்கு விளக்கம் அளித்துள்ளார். இதனை எளிதாகக் கூறப்போனால், ஆன்ம ஞானத்தை நாடிப் பெறுவதற்காக அவர் உடல் வருத்தி மோனத்தவம் மேற் கொள்ளவில்லை. ஆன்மாநுபவத்தைச் சாதித்தே விட்ட வருக்கு அமைந்த இயல்பானதொரு பாங்கே அத்தவநிலை ஆகும் எனலாம். சிற்றப்பனின் வீட்டில் ஏற்பட்ட ஞான விழிப்புக்குப் பின்னர் சாதனை ஏதும் தாம் மேற் கொண்டதில்லை என்பதையும் அவரே திட்டவட்ட மாகக் கூறியுள்ளார்.

வெளியாருடன் தொடர்புகளை அறுத்துக் கொள்ள வேண்டும் என்பதற்காக வாய் திறவாது மௌனியாக

இருந்து விடுவது பொதுவழக்கு. ஆனால், ஸ்ரீ பகவான் விஷயத்தில் அதுவல்ல காரணம். உலகாயதத் தேவைகள் ஏதும் அவருக்கு இல்லாமற் போய்விட்டதால் வாய் திறந்து பேசத் தேவையும் எழவில்லை. தவிர, யாரோ ஒரு மௌனியைக் கண்டாராம். 'நாமும் இப்படி வாய் பேசாது இருந்துவிட்டால் தொந்திரவே இல்லையே' என்று தோன்றியதாகவும் விளக்கியுள்ளார்.

ஆத்மாநுபூதியில் சமைந்து கிடந்த தொடக்க மாதங்களில் சுற்றிலும் நிகழ்வன ஏதும் அறியாதவராகவே இருந்து வந்தார். "சில சமயம் கண்ணைத்திறந்து பார்ப்பேன்; காலை வேளையாக இருக்கும். வேறு சமயத்தில் மாலைப் பொழுதாக இருக்கும். சூரியன் எப்போது உதித்தது, எப்போது மறைந்தது என்றே தெரியாது!" இவ்வாறு தமது தொடக்க நாட்களின் நிலையை அவருக்கே உரித்தான வசீகரப் பாணியில் பின்னர் எடுத்துரைத்துள்ளார். ஓரளவு இதே நிலை தொடர்ந்து இருந்து வந்த போதிலும், நாளாவட்டத்தில் புற உணர்வற்ற அந்நிலை படிப்படியாய்க் குறைந்து அரிதாகி விட்டது. பிந்தைய ஆண்டுகளில்கூட ஸ்ரீபகவான் ஒருமுறை இவ்வாறு கூறியுள்ளார்: "வேத பாராயணம் தொடங்கும் போது பல சமயம் காதில் விழும்; அப்புறம் பாராயணம் முடியும்போது ஒலிக்கும். நடுவில் என்ன நிகழ்ந்தது என்ற பிரக்ஞையே இல்லாமல் ஸ்தம்பித்து இருப்பேன். 'என்னது, பாராயணம் இவ்வளவு சீக்கிரம் முடிந்து விட்டதே? இடையில் எதையாவது விட்டுவிட்டார்களோ?', என்று அதிசயிப்பேன்!" ஆனாலும், திருவண்ணாமலை வாசத்தின் ஆரம்ப காலத்திலும்கூட, தம்மைச் சுற்றி நிகழ்ந்த பலவன பற்றி உணர்ந்தும் உள்ளார். ஏனெனில், அந்நாட்களில் நிகழ்ந்த பல சம்பவங்களை வெகு ஆண்டுகளுக்குப் பின்னரும் நினைவுபடுத்திக் கூறியுள்ளார்.

ஆன்ம ஜோதியில் ஒருமித்து, அதன் விளைவாக புற உலக உணர்வு முழுவதும் இழந்து சமைந்துவிடும் ஸ்திதியே 'நிர்விகல்ப சமாதி' எனப்படும். அத்தகைய ஆன்மானந்த பரவச நிலை ஸ்திரமானது அல்ல. அதனை ஓர் உவமையால் எடுத்துரைத்துள்ளார்: "கேவல நிர்விகல்ப் சமாதி, கிணற்றில் கயிற்றால் கட்டித் தொங்கும் தோண்டி போன்றது. தோண்டியிலுள்ள தண்ணீர் (மனம்), கிணற்றுள் தோண்டி அமிழும்போது கிணற்று நீருடன் (ஆன்மாவுடன்) ஒன்று கலந்து விடுகிறது. ஆயினும் தோண்டியில் நிரம்பிய ஜலமோ கயிற்றின் (அகந்தையின்) மற்றொரு நுனியால் வெளியே இழுக்கப்பட்டுவிடும்" (மகரிஷி வாய்மொழி, பாகம் I, அத்.1). மாறாக, அனைத்திற்கும் இறுதியான உயர்நிலையே 'சகஜ சமாதி' என்பதாம். இரண்டாம் அத்தியாயத் தொடக்கத்தில் இந்நிலை சுருங்கக் கூறப் பட்டுள்ளது. ஆன்மாவை ஆசிரயித்த பூரண தூய உணர்வே சகஜ சமாதி. உடல், மனம் ஆகிய இரு தளங்களும் கடந்த நிலை அது எனினும், வெளியுலக நடப்புகள் யாவற்றையும் வெறுமனே உணர்ந்த வண்ணம், அவற்றால் பாதிப்பின்றி தேக, உள சார்புகளை இயல்பாய் பயன்படுத்துவதுமான இயக்கம் சார்ந்த சமநிலை. பற்றற்ற பரிசுத்த அறிவொளியாய், பரமானந்தத்தையும் கடந்த என்றுமுள்ள நித்திய சத்திய வஸ்துவாய் வளைய வரும் சகஜ நிலையாம் அது. "சமுத்திரத்தில் கலந்து தன்னை இழந்த நதிபோல்" என்று அவர் இப்பெருநிலைக்கு ஒப்புமை காட்டியுள்ளார். அதுவே பரிபூரண விடுதலை; தூய பிரக்ஞை. உடலையும், தன்மை–முன்னிலை–படர்க்கைகளையும் தாண்டி நின்று, தன்னைத் "தான்" என்கிற இருப்புணர்வில், சுத்த சைதன்யத்தில், நிலைத்துப் பதித்தல்.

ஸ்ரீ பகவான் ஏற்கனவே அத்தகைய முக்தி நிலை கிட்டியவர் என்றபோதிலும், வெளிநடப்பில் பிறருடன் சகஜமாய் அளவளாவிய மாற்றம் தொடர்ச்சியின்றியே

நிகழ்ந்துவந்தது. அனேக ஆண்டுகளுக்குப் பின்னரே அவர் பரமார்த்த உண்மையிலும், வியவகாரிக உலகிலும் சீராய் சர்வ சகஜமாய்ப் பழகலானார். இருந்தும், சூழ்நிலையால் எவ்வகையிலும் பாதிக்கப்படாமல் அசலமாய் இயங்கி வந்தார். "மகரிஷி வாய்மொழி"யில் (பாகம் I, அத்.5) அவர் இதனை இவ்வாறு விளக்கியுள்ளார்:

"ஞானிக்கு அகந்தையின் எழுதலோ இருப்போ தோற்ற மாத்திரமே. இப்படி எழுவதும் இருப்பதுமாகத் தோன்றினாலும் அவன் எப்பொழுதும் அதன் மூலத்தில் லட்சியம் வைத்துத் தன் அகண்ட, அதீத (மூன்று நிலைகளையும் கடந்த) அநுபூதி உட்கொண்டவன். அவனுக்கு இவ்வகந்தையால் அபாயமில்லை. இது எரிந்த கயிற்றின் சாம்பல் உருப் போன்றது. அதற்குக் கயிற்றின் உருவம் இருக்கிறதேயொழிய, அதைக் கொண்டு ஒன்றையும் கட்ட முடியாது. நிரந்தரமாக மூலத்தில் கவனம் நிறுத்தப்பட்டால், கடலில் உப்புப் பொம்மை போல் அகந்தை அம்மூலத்தில் அழிவுறும்.



''கருணா ணவமாய்க் கருதக் கதிநல்
கருணை சலசிவ மீதாம்'' —ஸ்ரீ பகவான்

# 6. அருணாசலம்

கரடு முரடான காட்சி அது. அரக்கன் ஒருவன் தாறுமாறாய்க் கலைத்துப்போட்டது போன்று சிதறிக் கிடக்கும் கற்பாளங்கள். வேலி வரிசைகளாய் மண்டிக் கிடக்கும் காய்ந்த முட்புதர்கள், கள்ளிச்செடிகள். வெப் பத்தால் வரண்ட வயல்வெளி. சீரற்று சிதைந்து ஒட்டி உலர்ந்த சிறு குன்றுகள். ஆயினும், புழுதி நிறைந்த பாதையோரம் நெடுக ஓங்கி வளர்ந்த நிழல்தரும் மரங் கள். ஆங்காங்கே குளம் அல்லது கேணிகளுக்கு அருகா மையில் அங்கொன்றுமிங்கொன்றுமாக பச்சைப் பசே லெனப் பசுமை நிறம்பிய நெல் வயல்கள். இந்த வரட்டு வனாந்தர வனப்பினூடே எழும்பி நிற்கிறது அருணா சலக் குன்று. இச்சிறு மலையின் உயரம் 2,682 அடி மட்டுமே என்றாலும், அந்நிலப்பரப்பு முழுவதையும் மலையின் கம்பீரம் ஆக்கிரமிக்கிறது. அதன் தென்புற அடிவாரத்தில் தான் ஸ்ரீரமணாசிரமம் அமைந்துள்ளது. அத் தெற்குப் பகுதியிலிருந்து கண் நிமிர்ந்தால், அவ் வருணாசலக்குன்று பார்வைக்கு எளிமையாகவே தோற்ற மளிக்கும் – சரிசீர் அமைவுடைய மலை. அதன் இரு புறமும் ஏறத்தாழ ஒரே மாதிரியான இரு அடிவாரக் குன்றுகள். இந்த ஒத்திசைவை உறுதி செய்வது போன்று காலை வேளையில் மலைச் சிகரத்திற்குக் கிரீடம் அணி வித்தாற்போல வெண்மேகம் அல்லது பனிப்படலம் அதைத் தழுவிச் சூழ்ந்திருக்கும். ஆயினும் மலையைச் சுற்றி நெளியும் எட்டுமைல் நீளப் பாதையில் வழக்குப் படி வலமாக நடந்து செல்லுகையில் மலையின் தோற் றம் மேன்மேலும் வியக்கும் வகையில் விதவிதமாய் மாறுபடுகிறது. காணும் கோணம் ஒவ்வொன்றிலும் தனிச் சிறப்பும் ஓர் குறிவடிவமும் வெளிப்படுகின்றன. ஓரிடத்தில் எழுப்பும் எந்த ஒலியும் குன்றில் எதிரொ லித்து நம்மைத் திரும்பத் தாக்கும். மற்றோரிடத்

திலிருந்து காண்கையில் இரு குன்றுகள் நடு மலையை முழுவதும் மறைத்து, அண்ணாமலைச் சிகரம் மட்டுமே இடைவெளியில் சிறிதளவு தெரியும் – இரு எண்ண ஓட்டங்களுக்கிடையே எழும் சூன்ய இமைப்பொழுதில் ஆன்ம ஸ்வயம்பிரகாசம் தோன்றி மறைவதுபோல. வேறொரு இடத்தில் ஐந்து குன்றுகளின் சிகரங்களை வரிசையாய் காணலாம் – அவை சிவன், சக்தி முதலான தெய்வ தரிசனம் என்பது ஐதிகம்.*

கிரிப் பிரதட்சிணப் பாதையின் எட்டு திக்குகளை அடையாளமிடும் வகையில் மூலைக்கொன்றாக அஷ்ட புனிதக் குளங்கள் அமைந்துள்ளன. ஆங்காங்கே குறிப்பிட்ட இடங்களில் எளிய கல்தூண் மண்டபங்களும் உள்ளன. தெற்குப்புறம் உள்ள தக்ஷிணாமூர்த்தி மண்டபம் அவற்றுள் மிக முக்கியத்துவம் வாய்ந்தது. ஏனெனில், சிவபெருமான் மௌன–உபதேசம் புரியும் கோலமே தக்ஷிணாமூர்த்தி. அவரே மலையுரு அருணாசலர். இந்த தாத்பரியத்தை எண்சீர் விருத்தமாகப் புனைந்துள்ளார் ஸ்ரீபகவான்:

*கண்டவ னெவனெனக் கருத்தினு ணாடக்*
*கண்டவ னின்றிட நின்றது கண்டேன்*
*கண்டன னென்றிடக் கருத்தெழ வில்லை*
*கண்டில னென்றிடக் கருத்தெழு மாறென்*
*விண்டிது விளக்கிடு விறலுறு வோனார்*
*விண்டிலை பண்டு நீ விளக்கினை யென்றால்*
*விண்டிடா துன்னிலை விளக்கிட வென்றே*
*விண்டல மசலமா விளங்கிட நின்றாய்.*

*[அருணாசல அஷ்டகம், பாடல் 2]*

[பொருள்: 'கண்ணால் காண்பவன் எவன்?' என்று என்னுள் ஆழ்ந்து வினவியபோது, அவ்வாறு காண்பவன் என்று தனித்த

* அண்ணாமலை, உண்ணாமுலை, சுப்பிரமணியர், விநாயகர், சண்டிகேஸ்வரர் ஆகிய ஐந்து உற்சவ மூர்த்திகளின் வெளிப்பாடே இந்த ஐந்து குன்றுகள் என்பது பொதுநம்பிக்கை. இவை பஞ்சானன (ஐந்துமுக) சிவபெருமானின் நான்கு திசைப் பார்வையையும், ஐந்தாவதாக மேல் நோக்கு (ஈசான்ய) முகத்தையும் குறிக்கின்றன என்பதும் சான்றோர் மரபுரை.

ஒருவன் இல்லாமற் போனதைக் கண்டேன். 'கண்டவன் நான் தான்' என்ற கருத்து (எண்ணம்) எழவில்லை. அவ்வாறெனில், 'காண்பவன் நான் அல்ல' என்கிற கருத்தும் எவ்வாறு எழுகிறது? இதனை வார்த்தையால் விண்டு விளக்கம் கூற யாரால் முடியும்? ஏனெனில் தாங்கள்கூட விளக்கமாட்டாமல், விளக்கவொண்ணாத தங்கள் நிலையை விளக்குவதற்கென்றே விண்ணையும் மண்ணையும் அளாவிய சலனமற்ற மா மலையாய் எழுந்தருளியுள்ளீரே ஐயனே!]

கிரிப் பிரதட்சிணம் மேற்கொள்வதை ஸ்ரீ பகவான் எப்போதும் ஊக்குவித்தார். வலிமை குன்றியவர்களும் வயோதிகர்களும் கூட கிரிவலம் போவதை அவர் தடுக்க மாட்டார். மெள்ள, சாவதானமாக நடவுங்கள் என்றே அறிவுறுத்துவார். வாஸ்தவத்தில், பிரதட்சிணம் மெதுவாகத்தான் செய்யவேண்டும் – "நிறை கர்ப்பமான அரசி நடைபயில்வது போல" என்பது முதுமொழி. வாகனம் கூடாது. வெறுங்காலுடன் தான் நடக்க வேண்டும். சிவ ராத்திரி மற்றும் கார்த்திகா பௌர்ணமித் திருநாட்களில் அருணாசல கிரியை வலம் வருதல் மிக மிக விசேஷம். அந்த புண்ணிய தினங்களில் மலையைச் சுற்றி மாலை அணிவித்தாற்போல, பக்தர்கள் இடைவிடாமல் சாரி சாரியாக பிரதட்சிணம் போய்க்கொண்டே இருப்பார்கள்.

கால் இரண்டும் சுவாதீனமற்றுப் போன வயது முதிர்ந்த ஒருவர் கவட்டுக்கட்டைகளின் உதவிகொண்டு மலையைச் சுற்றி விரியும் பாதையில் நொண்டி நொண்டி நடந்து வந்தார். அவர் அவ்வாறு அடிக்கடி பிரதட்சிணம் செய்வதுண்டு. அன்று அவர் கடைசி முறையாக கிரிவலம் கிளம்பியிருந்தார். ஏனெனில், தமது குடும்பத்திற்குப் பாரமாக தாம் இருந்துவருவதாக அவருக்கு மனக்கசப்பு முற்றிவிட்டது. வீட்டில் சச்சரவுகள் மலிந்தன. குடும்பத்தினரை விட்டு விலகி எங்கேனும் ஒரு குக்கிராமத்தில் காலந்தள்ளத் தீர்மானித்து விட்டார்.

பிரதட்சிணப் பாதி வழியில் ஓர் பிராமண வாலிபன் எதிர்பட்டான். அருகே வந்தவன், "ஓய்! உமக்கு இதெல் லாம் ஆகாது" என்று கூறிக் கொண்டே அவருடைய முடவன் கோல்கள் இரண்டையும் விருட்டெனப் பிடுங்கி எறிந்துவிட்டு நடையைக் கட்டினான். முதியவர் கோபா வேசத்தில் முகம் சிவந்தார்; வாலிபனைக் கண்டபடி திட்டித் தீர்க்க வாயெடுத்தபோது தான் தமது நிலை உணர்ந்தார். உடல், மனம் சிலிர்த்து நின்றார் – ஆம். கால் ஊனம் நீங்கி, கவட்டுக் கட்டைத் தாங்கலின்றி நேராய் நின்றுகொண்டிருந்தார் அதன்பின் அவர் திரு வண்ணாமலை விட்டு வேறெங்கும் போகவில்லை. மீதி வாழ்நாள் முழுதும் குடும்பத்தினரோடு ஒத்து வாழ்ந் திருந்த அப்பெரியவரை அவ்வூரில் பலர் அறிவர். ஸ்ரீ பகவான் இந்த சம்பவத்தை சில பக்தர்களிடம் விவ ரித்துக்கூறி, அருணாசல தலப்புராணத்தில் வரும் அதே போன்ற முற்காலத்து நிகழ்ச்சி ஒன்றுடன் ஒத்திட்டு உரைத்துள்ளார். அவர் இளம் சுவாமியாக அருணா சலக் குன்றில் வாசம் செய்த கால கட்டத்தில் இச் சம்பவம் நிகழ்ந்ததாம். ஆனால் அந்தண வாலிபனாக வந்தவன் தாமே தான் என்பதை மட்டும் அவர் ஒரு போதும் கூறிக்கொண்டதில்லை!

பாரத நாட்டின் மிகத் தொன்மை வாய்ந்த பெரும் புண்ணியத் தலங்களில் ஒன்றாக விளங்குகிறது அருணா சல மலை. இதுவே பூவுலகின் இதய ஸ்தானம், ஆன்மிக மையம், எனப் பகன்றுள்ளார் ஸ்ரீபகவான். ஆதி சங்கரர் இதனை இதிகாச மேரு பர்வதத்திற்கு இணையாகப் போற்றியுள்ளார். 'புண்ணிய ஸ்தலங்களுள் மிகச் சிறந்தது அருணாசலமே. அதுவே புவியின் இதய மத்தியம். சிவபெருமானின் மகோன்னத மறைநிலை இதய கமலம் அதுவே' எனக் கந்தபுராணம் இதன் மகிமையை எடுத் துக் கூறுகின்றது. முனிவர் பற்பலர் தமது அருட் தூய்மையை அக் கிரியின் பவித்திரத்துடன் இழை

சேர்த்து வாழ்ந்து வந்திருந்தனர். இன்றும் கூட அங்குள்ள குகைகளில் சில சித்தர்கள் பூத உடலுடனோ அல்லது சூட்சும ஆவி ரூபமாகவோ இருந்து வருவதாகக் கூறப் படுவதை ஸ்ரீ பகவானும் ஆமோதித்துள்ளார். இரவு வேளைகளில் அவர்கள் ஒளி உருவில் உலாவுவதைக் கண்ணாரக் கண்டுள்ளதாகவும் பலர் தெரிவித்துள்ளனர்.

அருணாசலக் குன்றைப் பற்றிய ஓர் புராணக் கதை உண்டு. படைக்கின்ற தெய்வம் பிரும்மாவுக்கும், காக்கும் தெய்வமாகிய விஷ்ணுவுக்கும் இடையே தம் இருவருள் எவர் பெரியவர் என்பதைக் குறித்து விவாதம் எழுந்தது. அந்த தெய்வ சச்சரவின் விளைவாக பூலோகத்தில் குழப்பங்கள் ஏற்பட்டன. அது கண்ட தேவர்கள், மகா தேவனாகிய பரமசிவனை அணுகி அந்த விவாதத்திற்குத் தீர்வு காணும்படி பிரார்த்தித்தனர். அதன்பேரில் சிவ பெருமான் ஓர் ஒளிப் பிழம்புத் தூணாக விண்–மண் அளாவி நின்றார். 'என் பாதத்தை அல்லது சிரசைக் காண்பவரே உயர்ந்தவர்' என்ற அசரீரி வாக்கு ஒளிப் பிழம்பினின்றும் ஒலித்தது. மகாவிஷ்ணு வராக வடிவம் எடுத்து பூமியைக் கெல்லி, நெருப்புத் தூணின் அடித் தளம் காணப் பாதாளம் வரை பாய்ந்தார். பிரும்மாவோ அன்னப் பட்சியாக மாறி மேல் நோக்கி உயர உயரப் பறந்து உச்சியைத் தேடலானார். ஒளித்தூணின் முடி வற்ற அடியைக் காணமுடியாமற் போன விஷ்ணுவுக்கு, அது ஆதியந்தமில்லாத அகண்ட வஸ்து எனும் உண்மை பளிச்சிட்டது. யாவர் உள்ளத்தும் ஒளிர்கிற அப்பேரொ ளியைத் தன்னுள் கண்டு தனைமறந்து தியானத்தில் ஆழ்ந்தார். உயரச் சென்ற பிரும்மா, வானில் மிதந்து விழுந்துகொண்டிருந்த தாழம்பூவைப் பற்றிக் கொண்டு முடிகாணமாட்டாமல் திரும்பியவர், "ஜோதிர்லிங்கத் தின் உச்சியைக் கண்டுவிட்டேன், அங்கிருந்து எடுத்த மலர் இதோ!" எனப் பொய் உரைத்தார்.

விஷ்ணுவோ தமது தோல்வியை ஒப்புக்கொண்டு பரமசிவனைப் பிரார்த்தித்தார்: 'சிவ சாயுஜ்யமே ஆன்ம ஞானம். தாங்களே ஓம் எனும் பிரணவ விளக்கம். ஆதி – மத்தி – அந்தம் யாவும் தாங்களே. தோற்றங்கள் அனைத்தும், சகல தோற்றங்களுக்கும் அப்பால் அகண்ட வஸ்துவாக விளங்கும் பரசிவவெள்ளமே தாங்கள்தாம் பிரபோ' என்றெல்லாம் துதி செய்தாராம். 'விஷ்ணுவே உயர்ந்தவர்' எனத் தீர்ப்பு அளிக்கப்பட்டது. பிரும்மா வெட்கித்துத் தன் தவறை ஏற்றுக் கொண்டார்.*

மனம், அறிவு, ஆன்மா ஆகிய மூன்றும் முறையே விஷ்ணு, பிரும்மா, சிவன் என்று இப்புராணக் கதையில் உருவகப்படுத்தப்பட்டுள்ளன எனலாம்.

நெருப்புத் தூணாக, பிரும்மாண்ட ஜோதிர் லிங்கமாகத் தோன்றிய பரமேசுவரனின் அருவத்தைக் காணக் கண் கூசும் என்பதனால் பின்பு அருணைப் பொருப்பாகக் குளிர்ந்து அருணாசலமாக, கிரியுருவாகிய கிருபைக் கடலாகக் காட்சியளிக்கிறார் எனச் செப்புகிறது புராணம். அதன் வரலாற்றுப்படி பரமசிவனின் திருவாக்கு இதுவாம்: "சூரியனிடமிருந்து சந்திரன் ஒளி பெறுவது போல, அருணாசலத்தின் மகிமையால் ஏனைய புண்ணியத் தலங்களும் பவித்திரமடைகின்றன. எம்மை வழிபட்டு ஞான ஒளிபெற விழைவோரின் நன்மையின் பொருட்டே யாம் கிரியுருவில் இங்கு சமைந்துள்ளோம். அருணாசலமே ஓங்காரத்தின் உறைவிடம். ஆண்டுதோறும் கார்த்திகை நாளன்று இம் மலை உச்சியில் சாந்தி நல்கும் தீபமாகக் காட்சியளிப்போம்" இவ்வாசகம் திருவண்ணாமலையின் புனிதத்திற்குச் சான்றுரைக்கும்

* தவறு இழைத்த காரணத்தினால்தான் சிருட்டிக் கடவுள் பிரும்மாவுக்குப் பிரத்தியோகமாக பூஜை இல்லாமற்போய்விட்டது என்பது புராண ஐதிகம். அடிமுடி எல்லையின்றி ஜோதி சொரூபமாய் பரமசிவன் உத்பவித்த இரவே சிவராத்திரியாம்.

– லா.சு.ர.

கடவுள் வாக்கு என்று மட்டுமே அர்த்தம் கொள்வானேன் ? பின்னாளில் அதே மலை மீதும் அதன் பின் மலையடிவாரத்திலும் ஸ்ரீரமணர் வாசம் கொண்டு சிவ போதமாகிய அத்வைத சாரத்தையும் ஆன்ம விசார மார்க்கத்தையும் அறிவுறுத்தும் ஆன்மிக் மையமாகத் திகழப்பேர்வதையும் உணர்த்தும் குறிப்பாகவும் அவ் வாசகம் அமைந்துள்ளது அன்றோ ? "முடிவில் ஒவ் வொருவரும் அருணாசலத்தை அடைந்தே தீர வேண்டும்" என்ற எளிய வாக்கியத்தில் அருணாசலத் தத்துவத்தை சுருங்கக் கூறி விளங்க வைத்துள்ளார் ஸ்ரீபகவான்.

1896 – ஆம் ஆண்டு திருவண்ணாமலையில் அடிவைத்த நாளிலிருந்து இரண்டாண்டு காலத்திற்கு மேலாக ஸ்ரீ பகவான் ஏதேனும் கோயில் மண்டபத்திலோ, மடத் திலோ தங்கியிருந்தார். 1898ஆம் ஆண்டு இறுதியில் தான் மலை வாசம் தொடங்கிற்று. முதலில், அருணா சலத் தொடர்க் குன்றான பவழக்குன்றில் உள்ள சிறு ஆலயத்தில் தங்கினார். பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் மாமுனிவர் கௌதம ரிஷியின் வாசத்தால் புனிதம் பெற்ற இடம் அது. பவழக்குன்றில் இருந்தபோதுதான் ஸ்ரீ பகவானின் தாயார் அங்கு தம் மகனைக் காண வந்தார். அதன்பின் ஸ்ரீ பகவான் அருணாசலத்தை விட்டு அகன்றதேயில்லை. அடுத்த ஆண்டின் தொடக்கத்தில் பவழக்குன்றிலேயே அமைந்த குகையொன்றுக்கு இடம் பெயர்ந்தார். பின்னர் அண்ணாமலையிலேயே வெவ் வேறு குகைகளில் வாசம் புரியலானார். 1922ஆம் ஆண் டில்தான் அவர் மலையை விட்டிறங்கி, அடிவாரம் வந்து சேர்ந்தார். மலையடிவாரத்திலேதான் இன்றைய ஆசிரமம் வித்திட்டு வளர்ச்சியடைந்தது. இறுதிநாள் வரை (1950) ஆசிரமத்திலேயே காலம் கழித்தார்.

குன்றின் மீது இருந்துவந்தபோது, ஏறத்தாழ அக் காலம் பூராவுமே அதன் தென்கிழக்குச் சரிவிலேயே

வசித்தார். பின்னரே தெற்கு அடிவாரத்தில் தட்சிணா மூர்த்தி கல்மண்டபத்தின் பின்புறம் ஆசிரமம் உருவா யிற்று. இப்போது தினந்தோறும் பகவானின் சமாதிக்கு முன்னிலையில் உச்சாடனம் செய்யும் 108 நாமாவளி யில், 'ஓம் தக்ஷிணாபிமுகாய நம:'.... என்பதும் ஓர் பெயராக அர்ச்சிக்கப்பட்டு வருகிறது. அச்சொல் பொதுப் படையாக ஆன்மிக மேன்மையை உணர்த்தும் குறி யீடே ஆகும். உலக சுழற்சிக்குத் தென் துருவமே அச் சாணி போன்று, சத்–குருவே ஆன்மிக உலகத்தின் துருவம் அன்றோ! அதே சொல் தட்சிணாமூர்த்தியையும் குறிக்கின்றது. மௌனோபதேசம் புரியும் பரமசிவனின் வடிவமே தட்சிணாமூர்த்தி. ஸ்ரீ பகவான் இயற்றிய பின் வரும் வெண்பாவில், ரமணரும் அருணாசலமும் ஒன்றே என்று உரைத்துள்ளார்:

*அரியாதியி தரசீவர தகவாரிச குகையில்*
*லறிவாய்ரமி பரமாத்தும னருணாசல ரமணன்*
*பரிவாலுள முருகாநல பரனார்ந்திடு குகையார்ந்*
*திறிவாம்விழி திறவாநிச மறிவாயது வெளியாம்.*

[அருணாசல பஞ்சரத்னம் – விருத்தம்]

பொருள்:

[அரி(விஷ்ணு) முதற்கொண்டு இதர ஜீவன்களின் இதயக் குகையில் பேரறிவாய் உறைந்துள்ளது பரமாத்மாவே. அதுவே அருணாசலமும் ரமணனும் ஆகும். இதயக் குகையில் உறங்கிக் கிடக்கும் அவ்வறிவை பரிவோடு உள்ளம் உருகித் தழுவுங்கால் ஆன்ம விழிப்பு ஏற்பட்டுத் தூய பிரஜ்ஞையாய்த் துலங்கும்.]

பவழக்குன்றை விட்டகன்றபின் ஸ்ரீ பகவான் நீண்ட காலம் தொடர்ந்து தங்கியிருந்த இடம், அண்ணாமலை யின் தென்கிழக்குச் சரிவிலுள்ள விரூபாட்ச குகை. அப்பெயர் தாங்கிய ஒரு யோகி (13ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவர் என அறியப்படுகிறது) அக்குகையில் வாசம் செய்து வந்தாராம். அவரது சடலமும் அங்கே புதைக் கப்பட்டதாம். குகையின் அமைப்பு அரிதாய் ஓம் என்கிற சமஸ்கிருத புனித எழுத்து வடிவில் உள்ளது. அதன்பின் ஓரத்தில் யோகியின் சமாதி. குகையினுள்

'ஓம்' என்ற ஒலிகூட எழுவதாகக் கூறப்படுகிறது. ஊர்ப் புறம் உள்ள விருபாக்ஷ மடத்து அறக்கட்டளைக்குச் சொந்தமானது அக்குகை. வருடாவருடம் கார்த்திகைத் திருநாளையொட்டி வரும் யாத்திரிகர்கள் பலர் குகையைக் காண வரும்போது அவர்களிடமிருந்து ஒரு சிறு கட்டணமும் முன்பு வசூலிக்கப்பட்டு வந்தது. மடத்தின் உரிமையைக் குறித்து இரு சாராரிடையே எழுந்த தகராறின் காரணமாக, கட்டண வசூல் கைவிடப்பட்டு, விவகாரம் வழக்கு மன்றத்தில் முடிவுறாமல் இருந்தது. அச்சமயம்தான் ஸ்ரீபகவான் அக்குகைக்கு இடம் பெயர்ந்தார். கோர்ட்டு தீர்ப்பு ஆனபிறகு, மடத்து உரிமையாளர்கள் குகைக்கு வருவோரிடம் திரும்பவும் கட்டணம் வசூலிக்கத் தொடங்கினர். ஸ்ரீ பகவானைக் காணவே மக்கள் அங்கு அதிக அளவில் வருகிறார்கள் என்பதால், அவரது தரிசனத்திற்காகப் பணம் கட்டவேண்டிய நிலைமையாக வசூல் மாறிவிட்டது. அது கூடாது என்பதற்காக, ஸ்ரீபகவான் தாமே அக்குகையை விட்டு வெளியேறி, அதன் எதிரே உள்ள சமதளத்தில் ஓர் மரத்தடி நிழலில் அமரலானார். அதையடுத்து, கட்டணம் வசூலிப்பவனும் குகை வாயிலை விடுத்து, மரத்தடிக்கு வெளியே இடம் மாறி மரத்துப் பக்கம் வருவோரிடமும் பண வசூல் தொடர்ந்தான். அது கண்ணுற்ற ஸ்ரீ பகவான், அந்த இடத்தை விட்டகன்று, மலைச் சாரலில் சற்று கீழே அமைந்துள்ள சத்குருஸ்வாமி குகைக்கு இடம் பெயர்ந்தார். அங்கு சிறிதே காலம் இருந்துவந்தபின், வேறொரு குகைக்குச் சென்று விட்டார். விருபாட்ச குகையைக் காண வருவோர் யாருமில்லாமற் போயிற்று. 'வசூலும் இல்லை, சுவாமிக்கும் அனாவசியமாகத் தொந்தரவளித்து விட்டோமே' என்று உணர்ந்த உரிமையாளர்கள், அவரைத் திரும்பவும் விருபாட்ச குகைக்கே வந்துவிடுமாறு கேட்டுக்கொண்டனர். இனி கட்டணம் ஏதும் வசூலிக்கப்பட மாட்டாது எனவும் உறுதி

அளித்தனர். அந்நிபந்தனையின் பேரில் அவர் விரு பாட்ச குகைக்குத் திரும்பிவந்தார்.

கோடைகாலத்தில் விருபாட்ச குகையில் வெப்பம் தாங்க மாட்டாது. மலையடிவாரத்தில் முலைப்பால் தீர்த்தக் குளத்தருகே ஒரு குகை உள்ளது. அங்கு சற்று குளிர்ச்சியாக இருக்கும். குளத்துத் தண்ணீரும் சுத்த மான குடிநீர். குகைக்கு மேலே நிழல்தரும் பெரிய மாமரம். அதனால் அக்குகைக்கு 'மாமரத்து குகை' என்ற பெயர் ஏற்பட்டது. குகை வாயிலில் துருத்திக் கொண்டிருந்த பாறையை ஸ்ரீ பகவானின் பக்தர்களான இரு சகோதர்கள் தகர்த்து குகை வாயிலை சீராக்கினர். வெளிச் சுவர் எழுப்பி வாயிற் கதவும் அமைத்தனர். கோடை மாதங்களில் அவர் அங்கேதான் தங்கி வரலானார்.

1900—ஆம் ஆண்டு ஸ்ரீ பகவான் குன்றின் மீது வாசம் புரியத் தொடங்கிய காலத்தில் நல்லபிள்ளை எனும் பக்தர் கும்பகோணத்திலிருந்து திருவண்ணாமலைக்கு வந்தபோது இளம் சுவாமியை போட்டோ படம் பிடித் தார். அதுவே நம்மிடம் உள்ள அவரது திருவுருவின் முதல் புகைப்படம்.

மலைவாசத்தின் தொடக்க ஆண்டுகளிலும் ஸ்ரீ பகவான் மௌனத்தையே கடைபிடித்தார். ஏற்கனவே அவரது சோபையால் ஈர்க்கப்பட்டு ஓர் பக்தர் குழாமே உருவாகி யிருந்தது. ஆசிரமும் எழும்பியது. ஆன்மிக நாட்டம் கொண்டோர் மட்டுமே அவரைத் தேடி வந்தார்கள் என்றில்லை. எளிய மக்கள், சிறார்கள் — ஏன், விலங் குகளும் கூட — அவரால் கவரப்பட்டன. திருவண்ணா மலை ஊர்ப்புறத்திலிருந்து பல சின்னஞ் சிறுவர்கள் மலைமீது ஏறி விருபாட்ச குகைக்கு வந்து அவர் அரு கில் உட்கார்ந்திருப்பார்கள்; அவரைச் சுற்றி விளையாடு வார்கள். மகிழ்ச்சி துள்ளத் திரும்பிச் செல்வார்கள்.

அணில்களும் குரங்குகளும் அவரருகே சென்று அவர் வழங்கும் உணவுப் பண்டங்களை அவருடைய கையி லிருந்தே எடுத்துத் தின்னும்.

தமது சீடர்களுக்காக எப்போதாவது எழுத்துமூலம் விளக்கங்கள் அல்லது செயல்முறை போதனைகள் அளிப்பார். இவ்வாறு வாய் பேசாது இருந்த காரணத் தால் அக்காலகட்டத்திலோ அல்லது பின்னரோ, நாடி வந்தோரின் ஆன்மிகப் பயிற்சிக்கு உண்மையில் குந்தகம் ஏதும் நிகழவில்லை. ஏனெனில், அன்றும் பின்னர் பேசத் தொடங்கிய பிறகும் அவரது உள்ளார்ந்த போத னைகள் தக்ஷிணாமூர்த்தி மரபையொட்டி மௌன மொழி வாயிலாகவே பதிந்தன. பண்டைய சீன தேசத்து லாவோட்ஸு மற்றும் தாவோ சித்தாந்த ஞானியரும் கூட அதேபோன்ற மரபுக்கு எடுத்துக்காட்டாகத் திகழ்ந் துள்ளனர். "எந்த அறிவு அறிபடும் பொருளாக விளக் கப்படுகின்றதோ அது மெய்யான அறிவு அன்று" என்பது சீனத்து மெய்யறிவாளர்களின் வாக்கு. இவ் வாறு மௌனமாய் நிகழ்விக்கப் பெறும் போதனைகள் தாம் நேரடியாய் ஆன்மிக எழுச்சியை விளைவித்து மனதில் உண்மை பளிச்சிடுகிறது. அவ்விதம் கிரகிக்கப் பட்ட மெய்யறிவை மனம் தன் சக்திக்குத் தக்கபடி ஏற்று விளக்கம் அளித்துக்கொள்கிறது. ஸ்ரீபகவானை நாடி வந்த மேலை நாட்டவருள் முதலாமவரான ஹம்ப்ரீஸ் என்பவர் தாம் உணர்ந்த அனுபவத்தை பின்வருமாறு வடித்தெழுதியுள்ளார்:

"குகையை அடைந்ததும் நாங்கள் அவரது காலடி யில் வாய் திறவாது அமர்ந்தோம். இவ்வாறு வெகு நேரம் பேசாமல் இருக்கையில் நான் என் வய மிழந்து என்னுள் எழுச்சியுறுவதை உணர்ந்தேன். அரைமணி நேரம் நான் மகரிஷியின் கண்களையே உற்று நோக்கிய வண்ணமிருந்தேன். ஆழ்ந்த தியானத் தில் செருகியிருந்த அக்கண்கள் நிலைபெயரவே

இல்லை. புனித ஆவியின் ஆலயமே உடல் என்பதை ஒருவாறு உணரத் தொடங்கினேன். எதிரே அமர்ந்திருந்த மகரிஷியின் உடல் அவர் அல்ல என்கிற உணர்வும் தோன்றியது. கடவுளின் செயற் கருவியே அவர்; எதிரே வெறுமனே அசைவற்று உட்கார்ந்த பாணியில் உள்ள உருவம் உயிரற்ற உடல் மட்டுமே; அவ்வுடல் மூலம் கடவுள் சரமாரியாகக் கதிரொளி பரப்புகிறார்...என்னுள் எழுந்த எண்ணங்களை வெறும் வார்த்தைகளால் விவரிக்க வொண்ணாது.''*

இன்னொருவர், பால் பிரண்டன் என்பவர்**, ஸ்ரீ பகவானின் விசேடத் தன்மையில் நம்பிக்கையற்றவராகவே வந்தார். ஆனால் முதல் சந்திப்பிலேயே மகரிஷியின் முன்னிலையில் நிலவிய அமைதியின் ஆற்றலை உணர்ந்த அவர் அவ்வனுபவத்தைப் பின்வருமாறு விவரித்துள்ளார்:

"எந்த ஒரு மனிதனின் தனிநிலைக் கூறுகளையும் அவனது கண்களை உற்று நோக்கியே பட்டியலிட்டு விடலாம் என்றே நான் வெகு காலமாக எண்ணியிருந்தேன். ஆனால், மகரிஷியின் கண் வீச்சுக்கு எதிரில் நான் தயங்கித் தடுமாறினேன்; திகைத்தேன்; திணறிப் போனேன்...

"எனது பார்வையை அவரை விட்டு அகற்ற இயலவில்லை. முதலில் ஏற்பட்ட மனத் தடுமாற்றம், 'நம்மை அறவே புறக்கணித்து விட்டாரே' என்ற

* பிரிட்டிஷ் இந்தியப் போலீஸ் அதிகாரியாக வந்த எஃப்.ஹெச். ஹம்ப்ரீஸ், 1911–ஆம் ஆண்டு மலையின் மீது ரமண மகரிஷியைத் தரிசித்த பிறகு லண்டனிலுள்ள தன் சினேகிதிக்கு எழுதிய கடிதத்திலிருந்து இவ்வாசகம் எடுக்கப்பட்டுள்ளது. இக்கடிதம் பிற்பாடு இண்டர் நேஷனல் சைகிக் கெஜட் என்ற லண்டன் பத்திரிகையில் பிரசுரமாயிற்று.

** ஆங்கிலேயரான பால்பிரிண்டன் பிரபல பத்திரிகையாளர். வாழ்வின் ஆன்மிக ரகசியங்கள், மனோவசியம், போன்ற அசாதாரணத் தகவல்களை நேரில் கண்டறியும் தேட்டத்துடன் 1930ஆம்

மனக் குழப்பம் யாவும் மெல்ல மெல்ல மறை கின்றன. இந்த இனந்தெரியாத ஈர்ப்பில் நான் மேன்மேலும் சிக்குண்டு வயமிழக்கிறேன். ஆனாலும், இந்த அசாதாரண நிகழ்வு இரண்டு மணி நேரம் நீடித்தபின் என் மனத்துள் சந்தடியின்றி, எதிர் மறைகள் இன்றி எழும் மாற்றத்தை நான் உணரத் தொடங்குகிறேன். ரயில் பிரயாணத்தின் போது யோசித்துத் திட்ப நுட்பமாக நான் தயாரித்து வைத்த கேள்விகள் ஒன்றன்பின் ஒன்றாய் ஒடுங்கிச் சரிகின்றன. ஏனெனில், அக்கேள்விகளைக் கேட் பதா வேண்டாமா என்பதைப் பற்றிய அக்கறை இப்போது ஒரு பொருட்டாகப் படவில்லை. என்னை இதுகாறும் வருத்திய சந்தேகங்கள் தெளி வுறுமா உறாதா என்கிற கவலையும் இப்போது எனக்கு இல்லை. என் அருகே ஓர் அமைதியான நதி சீராக ஓடிக் கொண்டிருக்கிறது. பேரமைதி என் மன அடித்தளம் வரை ஊடுருவிப் பாய்கிறது. எண்ணங்களால் துன்புறும் மனம் சற்றே அடங்கத் தொடங்குகிறது."

அறிவுஜீவிகளின் அல்லலுறும் மனம் மட்டுமே பக வானின் கருணையால் அமைதி பெறும் என்பதில்லை. துயர் தோய்ந்த நெஞ்சத்தோர்க்கும் அமைதி அளித்து ஆட்கொள்ள வல்லவர். ஆசிரமத்தாரால் எச்சம்மாள் என்று அழைக்கப்பட்ட மாது ஒருத்தி (இயற்பெயர் லட்சுமியம்மாள்) மண்ட கொளத்தூர் கிராமத்தில் மகிழ்ச்சி

---

ஆண்டு இந்தியாவுக்கு வந்தவர், நாட்டின் பல பாகங்களிலுள்ள யோகியரைச் சந்தித்து விபரம் சேகரித்தார். அவரை ரமண மகரிஷியிடம் அனுப்பி வைத்தவர் ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்க ராச்சாரியப் பெரியவர் சந்திரசேகர சரஸ்வதிசுவாமிகள் என்பதும் குறிப்பிடத்தக்கது. பின்னர் பால் பிரண்டன் எழுதிய "ரகசிய இந்தியாவில் ஒரு தேடல்" (A Search in Secret India) என்ற புத்தகம் 1934-ல் லண்டனில் வெளியிடப்பட்டு, உலகெங்கும் பெருமளவு வரவேற்புப் பெற்றது - லா.சு.ர.)

நிரம்பிய குடும்பத்தில் வாழ்ந்து வந்தாள். ஆனால் 25 வயதிற்குள்ளாகவே அடுத்தடுத்துத் தன் கணவன், மகன், மகள் யாவரையும் இழந்து நிர்க்கதியாகிவிட்டாள். குடும்பச் சாவுகளும் பழைய நினைவுகளும் அவளை வாட்டி யெடுத்தன. முன்பு மகிழ்ச்சியாக வாழ்ந்துவந்த இடத்தையும் சூழ்நிலையையும் விட்டுவிட்டு மனமாற்றத்திற்காக வேறெங்காவது போய்விடத் துணிந்தாள். அவ்வாறே, அன்றைய பம்பாய் மாகாணத்திலிருந்த கோகர்ணம் எனும் சிவத்தலத்திற்குப் பயணித்து, அங்குள்ள சாதுக்களுக்குப் பணிவிடை புரியலானாள். ஆனால் மனப்பாரமோ கொஞ்சமேனும் குறையவில்லை. சோகமே உருவாய் ஊர் திரும்பினாள். 'திருவண்ணாமலையில் இளம் சுவாமி ஒருத்தர் இருக்கிறார்; அண்டுவோர்க்கு மனச் சாந்தி அளிக்கிறார்' என்று குடும்ப நண்பர்கள் சொல்லக் கேட்டு, எச்சம்மாள் உடனே புறப்பட்டு விட்டாள். திருவண்ணாமலையில் அவளுக்கு உறவினர் உண்டு என்றாலும் அவர்கள் முகத்தில் விழிக்க விரும்பவில்லை. துணைக்கு வந்தவருடன் குன்றின் மீது ஏறி சுவாமியின் குகையை அடைந்தாள். அவர் முன் சொல்லற்று அசைவற்று நின்றுவிட்டாள். தன் சோகக் கதையைக் கூறவில்லை. கூறவேண்டிய அவசியமும் நேரவில்லை. அவரது கண்கள் வீசிய கருணையின் விளைவால் தனது துயரம் குறைவதை உணர்ந்தாள். ஒரு வார்த்தைகூடப் பேசாமல் அவ்வாறு ஒரு மணி நேரம் நின்றவள், பின்னர் மெதுவாய்த் திரும்பி மலையிறங்கி ஊர்ப்புறம் சென்றுவிட்டாள். நடை இலேசாயிற்று. மனச்சுமை இறங்கிவிட்டது (1906–இல் இது நிகழ்ந்தது).

அன்றுமுதல் தினந்தோறும் சுவாமியை தரிசித்துப் போனாள். அவளது கவலைகள் அனைத்தும் சூரியனைக் கண்ட பனிபோல் விலகிவிட்டன. இறந்துபோன தன் ஆசைச் செல்வங்களை இப்போது அவளால் சோகமின்றி நினைவுகூற முடிந்தது. தந்தை விட்டுப்போன

சேமிப்பையும் உடன் பிறந்தோரின் உதவியையும் கொண்டு ஊர்க்கோடியில் ஒரு சிறு வீடு எடுத்துக் கொண்டாள். ஆசிரமத்துக்கு வந்துபோகும் பக்தர்கள் பலரும் அவளது விருந்தினர் ஆயினர். ஸ்ரீ பகவானுக்காக நாள்தோறும் வீட்டில் உணவு சமைப்பாள் – அதாவது ஆசிரமத்தில் உள்ளோருக்குமாகச் சேர்த்து சமையல். ஏனெனில், மற்றவர்களுடன் பங்கிடாமல் தாம் மட்டும் அவர் எந்த உணவையும் ஏற்பதில்லை. வயதுமுதிர்ந்து உடல் நலம் குன்றி தள்ளாமை மேலோங்கிய நாள் வரை 'சாமி'க் காக சமைத்த உணவை எச்சம்மாள் தானே மலைக்கு எடுத்துப்போவாள். அனைவரும் சாப்பிட்டு முடிக்கும் வரை தான் ஏதும் சாப்பிடமாட்டாள். ஆசிரம விருந் தினர்களின் எண்ணிக்கை கூடிக்கொண்டே போனதால் ஆசிரமத்துப் பொது சமையலில் எச்சம்மாளின் பங்கு சிறிதளவே ஆயிற்று. ஆயினும், எச்சம்மாள் சமைத்த உணவை அவள் எடுத்துக்கொண்டு ஆசிரமத்திற்கு வர என்றாவது தாமதமானால், அவள் மனம் நோகக்கூடாது என்பதற்காக அவள் வரும்வரை ஸ்ரீ பகவான் காத் திருப்பார்.

கடந்த கால துயர்ச் சம்பவங்கள், பின்னர் கிடைத்த மன அமைதி இவற்றையெல்லாம் தாண்டி எச்சம்மாளின் தாய்ப் பாசம் ஓர் புதிய பற்றை நாடியது. ஸ்ரீபகவானின் அனுமதியுடன் செல்லம்மாள் எனும் சிறுமியை வளர்ப்புப் பெண்ணாக ஏற்றாள். பெண்ணுக்கு வயது வந்ததும் மணமும் செய்வித்தாள். பேரன் பிறந்ததும் மனமகிழ்ந் தாள். அக்குழந்தைக்கு ரமணன் என்றே பெயரிட்டாள்.

ஒரு நாள் மருமகனின் கிராமத்திலிருந்து பேரிடி யாய் ஓர் தந்தி, 'செல்லம்மாள் இறந்துவிட்டாள்' என்ற சாவுச் செய்தி தாங்கி வந்தது. எச்சம்மாளை துக்கம் திரும்பவும் கவ்வியது. ஓடி மலைமேல் ஏறிச் சென்று சுவாமியிடம் தந்தியைக் காட்டினாள். அதைப் படித்த

வுடன் அவரது கண்களில் நீர் சுரந்தது. எச்சம்மாளைத் தேற்றினார். சாவுச் சடங்கிற்காக அவள் துக்கத்துடன் கிராமம் சென்றாள். பேரக் குழந்தையுடன் திரும்பி வந்தவள், குழந்தையை ஸ்ரீ பகவானின் கைகளில் வைத்து ஆசி வேண்டி நின்றபோது அவரது கண்கள் பனித்தன. அவரது கருணை அவளுக்குத் திரும்பவும் அமைதி அளித்தது.

எச்சம்மாள் குத்திட்ட பார்வையுடன் ஓர் யோக நிலையைப் பயில்வதுண்டு. வட இந்திய பைராகி ஒருவ ரிடமிருந்து அதனைக் கற்றிருந்தாள். நுனி மூக்கில் பார்வையைப் பதித்து மெய் மறந்து சமைந்துபோய், அப்பரவச நிலையில் கண்முன்னால் தோற்றமாய் எழும் ஒளியை மணிக்கணக்கில் தியானித்தவண்ணம் திக்பிரமை பிடித்தாற்போல் உட்கார்ந்து கிடப்பாள். அவளுடைய யோகப் பயிற்சியைப் பற்றி சிலர் ஸ்ரீபகவானிடம் பிரஸ் தாபித்த போது அவர் பதில் ஏதும் பேசவில்லை. முடிவில் ஒரு நாள் எச்சம்மாளே அதைப் பற்றி அவ ரிடம் சொன்னபோது, அத்தகைய அப்பியாசங்களை மேற்கொள்ள வேண்டாம் என அறிவுறுத்தினார். "உனக்கு வெளியே உனக்குத் தோன்றும் ஒளிகள் ஏதும் உன் னுடைய உண்மையான லட்சியம் அல்ல. உன்னுள் ஒளிரும் ஆன்மாவைக் காண மனம் ஒடுங்க வேண்டும். வேறொன்றுமில்லை" என்றார். அதன்பின் அவள் அந்த யோக முறையைக் கைவிட்டாள். ஸ்ரீபகவானிடம் பூரண நம்பிக்கை வைத்தாள்.

வட நாட்டிலிருந்து வந்திருந்த சாஸ்திரி ஒருவர் விருபாட்ச குகையருகே ஸ்ரீ பகவானுடன் பேசிக் கொண் டிருந்தார். அப்போது அங்கு சாப்பாடு எடுத்துக் கொண்டு பரபரப்புடன் வந்து சேர்ந்த எச்சம்மாள் உடல் நடுங்கக் கலவரத்துடன் காணப்பட்டாள். 'ஏன், என்ன ஆச்சு' என்று வினவியபோது அவள், தான் சத்குருஸ்வாமி

குகைப்பக்கமாக நடந்துவரும்போது ஸ்ரீபகவான் யாரோ ஒரு வெளியாருடன் பாதையோரம் நின்று கொண்டிருப்பது போல் கண்ணுக்குத் தெரிந்ததாம். அவர்களைக் கடந்து சற்று தூரம் சென்றவுடன், பின்னாலிருந்து ஒரு குரல் "இங்கே இருக்கும்போது மேலே என்னத்துக்குப் போகிறது ?" என்று கேட்டதாம். திரும்பிப் பார்த்தால் யாரையும் காணோமாம். பயந்துபோய் இங்கு ஆசிரமத்துக்கு ஓடோடி வந்து விட்டதாகச் சொன்னாள்.

சாஸ்திரி ஆச்சரியப்பட்டார். "என்ன சுவாமிகளே! நீங்கள் இங்கே என்னுடன் பேசிக்கொண்டிருக்கும்போது நீங்களே வேறெங்கோ பாதையில் இந்த அம்மாளுக்கு எதிரில் தோன்றியிருக்கிறீர்களே, எனக்கும் இதுமாதிரி ஏதாகிலும் உங்களது அனுக்கிரக பாக்கியம் கிடைக்காதா ?" என்று வியந்துரைத்தார். அதற்கு ஸ்ரீ பகவான், "அதெல்லாம் ஒன்றுமில்லை. எச்சம்மாள் என்னையே சதா நினைத்திருப்பதால் அந்தமாதிரி மனத்தோற்றம் கண்டிருப்பாள்; அவ்வளவேதான்", என்று விளக்கம் அளித்தார்.

ஸ்ரீ பகவானின் உருவெளித்தோற்றத்தை எச்சம்மாள் மட்டுமே காணப்பெற்றாள் என்று கூறமுடியாது. ஆயினும், எனக்குத் தெரிந்தவரை அத்தகைய தோற்றத்தை கண்ட பலர் எச்சம்மாள்போல் அச்சப்படவில்லை. பல ஆண்டுகளுக்குப் பின்னர் வயதான கனவான் ஒருவர் மேலைநாட்டிலிருந்து ஆசிரமத்திற்கு வந்திருந்தார். மதிய உணவுக்குப்பின் மலைமீது ஏறி சுற்றிப் பார்க்கச் சென்ற அவருக்கு வழி தவறிவிட்டது. வெயிலில் நடந்து நடந்து களைத்துப்போய் எந்தப் பக்கம் போவதென்று திசை தெரியாமல் தவித்தார். அச்சமயம் அவ்வழியாக வந்த ஸ்ரீ பகவான், ஆசிரமத்திற்குத் திரும்பிப் போகும் பாதையை அவருக்குச் சுட்டிக் காட்டினார். அவ்வாறே அவர் ஆசிரமத்திற்குத் திரும்பி வந்தபோது

எல்லோரும் அவருக்காகக் கவலையுடன் காத்திருப்பதைக் கண்டார். 'எங்கே போய்விட்டீர்கள், என்ன நேர்ந்தது' என்று கேட்டதற்கு அந்த மேலை நாட்டவர், "வெளியே சுற்றிப்பார்க்கலாமே என்று மலைமீது ஏறி வெகுதூரம் போனேன்; வழிதப்பி விட்டது. வெப்பமும் அலைச்சலும் மேலிட்டு செய்வதறியாது சோர்ந்து போனேன். நல்லவேளையாக அந்த சமயத்தில் பகவான் அப்பக்கமாக வந்தவர் ஆசிரமத்திற்கு இறங்கிப்போகும் வழியைக் காட்டினார்" என்றார். அனைவரும் திகைப்பில் ஆழ்ந்தனர். ஏனெனில், அன்று ஆசிரமத்தை விட்டு ஸ்ரீபகவான் வெளியே நகரவே இல்லை!

ருத்திரராஜ் பாண்டே என்பவர் நேபாளத்தில் காட்மண்டுவிலுள்ள திரிச்சந்திரா கல்லூரியின் முதல்வர். ஆசிரமத்துக்கு வந்த அவர் திருவண்ணாமலையைவிட்டுப் புறப்படுமுன் அருணாசலேச்வரர் கோயிலுக்குத் தரிசனத்திற்காகச் சென்றார். அவர் எழுதியுள்ளார்:

"கோயிலின் உள் மண்டபக் கதவுகள் திறந்து விடப்பட்டன. எனது வழிகாட்டி எங்களை உள்ளே அழைத்துச் சென்றார். சற்று இருட்டாக இருந்தது. எங்களுக்கு முன்புறம் சில கஜ தூரத்தில் கருவறையில் ஒரு சிறு திரிவிளக்கு சுடர்விட்டு எரிந்து கொண்டிருந்தது. என்னுடன் வந்த வாலிப நண்பர் 'ஹே அருணாசலா' என உரக்க உச்சரித்தார். கருவறையில் காட்சியளித்த சிவலிங்கத்தில் கண் பதித்தேன். ஆனால் என்ன விநோதம்! லிங்கத்திற்குப் பதிலாக அவ்விடத்தே பகவான் ஸ்ரீரமண மகரிஷியின் திருவுருவத்தை அல்லவா காண்கிறேன்? அதே மந்தகாச வதனம். அதே ஒளிமிக்க நயனங்களால் என்னைக் கடாட்சிக்கின்றாரே? அதைவிட ஆச்சரியம் என்னவெனில், நான் காண்பது ஒரு மகரிஷியை மட்டுமல்ல; இருவர் அல்ல, மூவர் அல்ல – நூற்றுக்கணக்கான ரமணமகரிஷி வடிவங்

களைக் காண்கிறேன். அதே புன்னகை முகங்கள், கருணைக் கண் வீச்சுகள். கருவறையுள் எப் பக்கம் நோக்கினும் அவர்களின் தோற்றமே. மகரிஷியின் திருவுருவம் முழுமையாகப் புலப்படவில்லையெனினும், முகவாய்க்குமேல் அவரது மலர்ந்த முகம் தெள்ளத் தெரிகின்றது! அதி ஆனந்த பரவசம் எய்துகிறேன். விவரிக்கவொண்ணா மகிழ்ச்சியில் திளைக்கிறேன். அப்போது நான் உணர்ந்த பரம சுகத்தையும் மனச் சாந்தியையும் வெறும் வார்த்தைகளால் எவ்வாறு விளக்குவேன்? என் கண்கள் ஆனந்தக் கண்ணீர் உகுத்தன. அருணாசலேச்வரப் பெருமானை தரிசிக்கும்பொருட்டுக் கோயிலுக்குச் சென்ற நான் உயிர்வாழும் ஸ்ரீபகவான் ரமண மகரிஷியின் ரூபத்தில் மகேசன் காட்சியளித்ததைக் கண்டு சிலிர்க்கும் பாக்கியம் பெற்றேன். அந்த புராதனக் கோயிலில் நான் அன்று பெற்ற அந்த ரங்க அனுபவத்தை என்னால் என்றென்றும் மறக்க முடியாது.''

– ஸ்ரீ ரமணாச்ரமத்துப் பொன்விழா நினைவு மலரிலிருந்து
(இரண்டாம் பதிப்பு, பக்கம் 166)

இவை எவ்வாறாயினும், ஒளியுருத் தோற்றங்களில் நாட்டங்கொள்வதையோ அதனை விரும்புவதையோ ஸ்ரீ பகவான் ஒருபோதும் ஆதரிக்கவில்லை. இது போன்ற காட்சிகள் எல்லா பக்தர்களுக்கோ அல்லது சீடர்களுக்கோ தோன்றியதும் இல்லை.

ஸ்ரீபகவானிடம் மிகவும் பக்திப் பற்று கொண்டவர்களில் சேஷாத்ரி சுவாமி என்பவரும் ஒருவர். இளம் சுவாமி திருவண்ணாமலைக்கு வந்த புதிதில் கல்லெரிந்து குறும்பு செய்த சிறுவர்களை விரட்டியடித்த அதே சேஷாத்ரி சுவாமிதான் இவர். இப்போது மலை மீது விருபாட்ச குகைக்குக் கீழ்ச் சரிவில் சஞ்சரித்து

வந்தார். அடிக்கடி மேல்குகைக்குச் சென்று ஸ்ரீபகவானை சந்திக்கலானார். சேஷாத்ரி சுவாமி ஆன்மிக மேன்மை எட்டியிருந்தார். காருண்யமும் அருட்பொலிவும் நிறைந் தவர் என்பதை இப்போதுள்ள அவரது உருவப் படங்கள் உணர்த்துகின்றன. ஒட்டாமல் ஒதுங்கி ஏதோ வானத்துப் பறவை போல் திரிந்து வந்தார். அவரை யாரும் இலேசில் அணுக முடியாது. எப்போதாவதுதான் வாய்திறந்து பேசுவார். அப்படிப் பேசினாலும் புதிர்போல் பொருள் விளங்காது. பதினேழு வயதில் வீட்டைத் துறந்து வெளி யேறியவர், யார் யாரிடமோ மந்திர ஜபங்கள் கற்று அபூர்வ சக்திகளை வளர்த்துக் கொண்டார். சிலசமயம் இரவு பூராவும் மயானத்தில் அமர்ந்து காளி உபாசனை யில் ஆழ்ந்துவிடுவார்.

தேடிவரும் பக்தர்களிடம், 'ரமண சுவாமி'யைப் போய்ப் பார்க்கும்படி தூண்டுவார் (இளம் ஸ்ரீரமணரை அப்பெயர் கொண்டே அவர் குறிப்பிட்டுவந்தார்). அது மட்டுமின்றி சிற்சில சமயம் தானும் ரமணசுவாமியும் ஒருவரே என்பதுபோல் காட்டிக்கொள்வார். எதிரில் இருப்பவரின் எண்ணங்களைப் படித்தறியும் மனோ சக்தி வாய்ந்தவர். ஸ்ரீபகவான் ஒரு பக்தரின் வினாக் களுக்கு விளக்கவிடை அளித்தபின், அதே கேள்விகளை இவரிடமும் சென்று அந்த பக்தர் கேட்டால், "நான் தான் ஏற்கனவே சொல்லியாகி விட்டதே, எதற்காக அதே கேள்வியைக் கேட்கிறாய்?" என்பார். அல்லது "அப்படியே செய்வதற்கென்ன?" என வினவுவார். யாருக்கேனும் மந்திரோபதேசம் செய்வது மிக அரிது. அவ்வாறு உபதேசம் வேண்டி இறைஞ்சுவோர் ஏற் கனவே ரமணசுவாமியின் பக்தர் என்றுணர்ந்தால், மந்திரம் வழங்க ஒருங்கே மறுத்துவிடுவார். "அவ்விடமே மனம் தங்கலாமே, அதுவே உபதேச உச்சம்; மவுன வழி காட்டி" என்பார்.

மிக ஆபூர்வமாக ஒரு தருணம் சேஷாத்ரி சுவாமி தமது பக்தர் ஒருவரை தீவிர ஆன்ம சாதனை மேற் கொள்ளுமாறு தூண்டினார். அந்த பக்தரின் பெயர் சுப்பிரமணிய முதலியார். அவர் தமது வருவாயில் பெரு மளவை சாதுக்களுக்கு அன்னதானம் செய்வதிலேயே செலவிட்டுவந்தார். இக் கைங்கர்யத்தில் அவரது மனை வியும் தாயாரும் உடனிருந்து பங்குகொண்டனர். எச்சம்மாளைப் போன்று, அவர்களும் ஸ்ரீபகவானுக்கும் ஆசிரமத்தில் உள்ளவர்களுக்கும் உணவு சமைத்து எடுத்துப் போய்வந்தனர். தவிர, சேஷாத்ரிசுவாமி எங்கேனும் தென்பட்டால் அவருக்கும் சாப்பாடு கொண்டு செல்வர். முதலியார் ஓர் நிலச்சுவான்தார். குணசீலராக இருந்தும் கூட தமது நிலபுலன்களை மேன்மேலும் பெருக்கிக் கொள்வதில் மும்முரம் காட்டினார். அதன் காரணமாக கோர்ட், வழக்கு என்றெல்லாம் அலைவார். பக்தி மனப் பான்மை மிக்க இவருக்கு சொத்துடமைகளில் பற்று எதற்கு என்று வருந்திய சேஷாத்ரி சுவாமி, அத்தகைய விசாரங்களை மறந்து, ஆண்டவன் பணியிலும் ஆன்மிக வளர்ச்சியிலும் முழுமனதாய் ஈடுபடுமாறு அறிவுறுத்தி வந்தார். ஒரு சமயம், "முதலியார்வாள், இதைக் கேளும். என் இளைய சகோதரனின் வருமானம் பத்தாயிரம் ரூபாய். எனது வருமானமோ ஆயிரம் ரூபாய். நீர் நூறுரூபாய் சம்பாத்தியமாவது தேடக்கூடாதா?" என்று புதிர் போட்டார். இளைய சகோதரன் என்று குறிப் பிட்டது ரமணசுவாமியை. வருமானம் என்பது ஆன்மிக நிதி. சுப்பிரமணிய முதலியாரோ அதற்கெல்லாம் அசைந்து கொடுப்பவராக இல்லை. சேஷாத்ரி சுவாமியோ மேன் மேலும் வற்புறுத்தினார். "நீர் பிரும்மஹத்தி என்கிற மகா பாபம் இழைக்கிறீர் தெரிகிறதா?" என்று எச்சரித் தார். முதலியாருக்கு ஸ்ரீபகவான் மீது அபார நம்பிக்கை யுண்டு. ஆகவே அவரை அணுகி சேஷாத்ரி சுவாமி அவ்வாறு கூறுவது உண்மையா என வினவினார்.

அதற்கு ஸ்ரீபகவான், ''வாஸ்தவம்தான். நீங்களேதான் பிரம்மன் என்பதைத் தெரிந்து கொள்ளாமற் போனதால் பிரும்மனை கொலை செய்துவிட்டதாக உங்கள் மீது குற்றம் சாட்டலாம் இல்லையா?'' என்று மந்தகாசத்துடன் விளக்கம் அளித்தார்.

ஒரு சமயம் மாமரத்தடி குகையில் ரமணசுவாமியின் நேரெதிரில் சேஷாத்ரிசுவாமி உட்கார்ந்து அவரையே தீவிரமாய் உற்று நோக்கிய வண்ணம், ஸ்ரீரமணரின் எண்ண ஓட்டத்தைத் தம் மனோ சக்தியால் படித்தறிய விழைந்தார். ஆனால், நிச்சலமான ஆன்மாவில் உறைந்து கிடக்கும் ஸ்ரீபகவானின் மனதில் எண்ண அலைகள் ஏது? சேஷாத்ரி சுவாமி குழப்பமடைந்து, 'இந்த மனுஷன் என்ன நினைக்கிறான் என்று ஒன்றுமே புரியவில்லையே' என்று முணுமுணுத்தார்.

ஸ்ரீபகவானோ பதிலொன்றும் பேசாமலிருக்கவே, சேஷாத்ரி சுவாமி சற்றே நிதானித்து, ''அருணாசலேச்வரரை வழிபட்டால் முக்தி அளிப்பார்'' என்று தொடர்ந்து கூறினார்.

''வழிபடுபவன் யார்? அவ்வாறு வழிபடப்படுவன் எவன்?'' என்று வினவினார் ஸ்ரீபகவான்.

அதுகேட்ட சேஷாத்ரி சுவாமி உரக்கச் சிரிக்கலானார். "அதுதானே எனக்குப் புரியவில்லை " என்றார் முடிவில்.

அதன்பின்னர் ஸ்ரீபகவான் பாரமார்த்திக சத்தியத் தத்துவத்தை அவருக்கு விரிவாய் எடுத்துரைத்தார். மெய்ப் பொருள் ஒன்றே. அது ஒன்றே பிரபஞ்சத்தில் காணப் பெறும் சகல உருவங்களாகவும் தன்னைத் தோற்றுவித்துக் கொள்கிறது. ஆயினும், இத்தோற்ற வியாபகங்களால் பரம்பொருள் மாற்றம் ஏதுமின்றி அவற்றிற்கெல்லாம் அப்பால் அகண்ட வஸ்துவாக உளது. அதுவே பரம

சத்தியம். அந்த நித்திய சத்திய உணர்வே வழிபடுவனின் ஆன்ம உணர்வும் ஆகும், என்றெல்லாம் விளக்கினார்.

அவர் கூறியவற்றை சேஷாத்ரி சுவாமி அமைதியாகச் செவிமடுத்தார். பிறகு எழுந்து நின்று சொன்னார்: "என்னத்தைச் சொல்ல? இவை ஒன்றுமே எனக்குப் புரியவில்லை. எது எப்படியோ, நான் ஈசனை வழிபடுகிறேன்." அவ்வாறு கூறிக்கொண்டே அருணாசல மலை உச்சியை நோக்கித் திரும்பி சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரித்தபின் இடத்தை விட்டு அகன்றார்.

இது இவ்வாறாயினும், சேஷாத்ரி சுவாமியும் கூட அனைத்தும் ஒன்றே என்பதாகவும் பேசுவார். காண்பவை யாவும் பரப்பிரும்மனின் வியாபகங்களே என்ற நோக்கு கொண்டவர். ஆனால் தமது கருத்தைக் கூறும் பாணியில் ஓர் வரண்ட, அலங்கோல ஏளனம் தொக்கி நிற்கும். ஒருநாள் அவர் ஒரு எருமை மாட்டின் அருகில் அப்பிராணியையே உறுத்து நோக்கி நிற்பதைக் கண்ட நாராயணசாமி என்பவர், "சுவாமிகள் எதை உற்றுப் பார்த்துக் கொண்டிருக்கிறாரோ?" என்று கேட்டார்.

"இதைத்தான் பார்க்கிறேன்" என்று பதிலுரைத்தார் சேஷாத்ரி சுவாமி.

"இந்த எருமை மாட்டையா இப்படி சுவாமி பார்த்து நிற்கிறார்?" என்று நாராயணசாமி தொடர்ந்து கேட்டார்.

உடனே சேஷாத்ரி சுவாமி இவர் பக்கம் திரும்பி எருமையை சுட்டிக்காட்டி, "இது என்னவென்று தெரியுமா உமக்கு?" என அதட்டலாகக் கேட்க, "இது ஒரு எருமை மாடு" என்று பேதமையாய் பதிலளித்தார் நாராயணசாமி.

அதைக் கேட்டதும் சேஷாத்ரி சுவாமி வெகுண்டார் "என்னது? எருமையா? எருமையா? எருமை!

பிரஹ்மம் என்று சொல்" என இரைந்துவிட்டு அங்கிருந்து போய்விட்டார்.

1929 ஜனவரி மாதம் (நான்காம் தேதி) சேஷாத்ரி சுவாமிகள் காலமானார். சந்நியாசியின் சடலத்தை எரிக்காமல் புதைத்து விடுவது பொது வழக்கு. அவ்வாறே சேஷாத்ரி சுவாமியை சமாதி வைக்கும் போது ஸ்ரீ பகவான் அவ்விடத்தில் மௌனமாக நின்று சடங்குகளைப் பார்வையிட்டார். திருவண்ணாமலையில் சேஷாத்ரி சுவாமிகள் அடக்கம் செய்யப்பட்ட சமாதிக்கு* இன்றும் மக்கள் வணக்கம் செலுத்திச் செல்கின்றனர்.

மலைமீது ஸ்ரீபகவான் வாசம் செய்துவந்த ஆரம்ப ஆண்டுகளில் மெள்ள புற உணர்வு மேலோங்கி, வெளி நடப்பில் பிறருடன் சகஜமாகப் பழகும் மாற்றம் அவரிடம் படிப்படியாய் நிகழ்ந்தது. மலையின் வெவ்வேறு பகுதிகளில் சுற்றித் திரியத் தொடங்கினார். பல நூல்களைப் படித்துப் பொழிப்புரையும் எழுதலானார். பத்மநாப சுவாமி என்பவர் மலைச் சரிவில் ஆசிரமம் அமைத்து வாழ்ந்துவந்தார். ஜடாமுடியும் தாடியுமாகக் காட்சியளித்த அவரை ஜடைசுவாமி என்றும் குறிப்பிடுவதுண்டு. தமது ஆசிரமத்தில் வடமொழி நூல்கள் பல சேகரித்து வைத்திருந்தார். தத்துவார்த்த நூல்களும், ஆயுர்வேதம் போன்ற ஆன்மீகம் சார்ந்த செயல்முறை விஞ்ஞான நூல்களும் அவற்றில் இடம் பெற்றிருந்தன. ஸ்ரீபகவான் அவரைச் சந்திக்கச் செல்வதுண்டு. அவரிடமுள்ள புத்தகங்களையும் அவ்வப்போது புரட்டிப் பார்ப்பார். எதையும் மேலெழுந்த வாரியாகப் படிக்கும் போதே விஷயத்தை கிரகித்துக் கொள்ளும் அவரது அபார ஞாபக சக்தியின் காரணமாய், ஒரு தரம் படித்ததை திரும்பக் கூறுவது மட்டுமின்றி புத்தகத்தில் எந்த அத்தியாயம் எத்தனாவது செய்யுள் என்பதையெல்லாம்

* ஸ்ரீரமணாச்ரமத்து வளாகத்தை அடுத்துள்ள திடலில் சேஷாத்ரி சுவாமியின் சமாதி உள்ளது.

கூடச் சொல்லக் கூடியவர். கோட்பாடுகள் குறித்து பத்மநாபசுவாமிக்கு ஏதேனும் ஐயம் எழுந்தால் ஸ்ரீபக வானின் கருத்தைக் கேட்டறிந்து அதனையே பிரமாண மாக ஏற்றுக் கொள்வார்.

அருணாசல மலையுச்சியின் அருகே வடபுறச் சரி வில் எளிதில் அணுக முடியாத தனித் தளத்தில் ஓர் ஆலமரத்தடியில் அருணாசல யோகி எனும் சித்த புருஷர் நிரந்தரமாய் அமர்ந்து மவுனமாய் ஞான உரை வழங்கி வருவதாக ஒரு ஐதிகம் வழங்கி வருகிறது. ஸ்ரீஅருணாசலேச்வரர் தமது கருணாவிலாசத்தால் மக்க ளுக்கு மௌன உபதேசம் வழங்கி ஆன்ம விசார வாயி லாய் முக்தியளிக்க வல்லவராக அருணாசலத்தில் நிலைத்து நிற்பவர் என்றாலும், இக் கலியுகத்தில் மக்களால் எட்ட மாட்டாது மறைந்து கிடக்கிறார் என்பதே இக் கர்ண பரம்பரைக் கதையின் உட்கருத்து எனலாம். இருந்த போதிலும், இவ்வரலாறு உணர்த்தும் உவமை உருவ ரீதியாகவும் உண்மைக்குப் புறம்பானது அல்ல என்ப தைப் பின் வரும் சம்பவம் உணர்த்துகிறது. ஏறத்தாழ 1906–ஆம் ஆண்டில் ஒரு நாள் மலையின் வடபுறச் சரிவில் ஸ்ரீ பகவான் உலாவி வருகையில் குறுக்கிட்ட ஓர் வரண்ட நீரோடையின் நடுவே மிகப் பெரிய ஆலிலை ஒன்றைக் கண்ணுற்றார். உணவு பரிமாறி சாப்பிடும் அளவுக்கு அந்த இலை பெரிதாக இருந்தது. எங்கோ மலை உயரத்திலிருந்து ஓடை நீரில் மிதந்து வந்த இலை இங்கு படிந்திருக்க வேண்டும் என்று ஊகித்தார். அவ்வளவு பெரிய இலைகள் கொண்ட ஆலமரத்தைக் காணத் தீர்மானித்தார். அதன் பொருட் டுப் பிறிதொரு சமயம் அங்கு திரும்பவும் சென்று அந்த நீரோடை அமைந்த வழியாகவே மலைமீது ஏறி உயரச் சென்றார். கரடுமுரடான செங்குத்துப் பாதையில் வெகு உயரே சென்றபோது மேலே ஓரிடத்தில் தட்டையான பாறைமீது அவர் தேடி வந்த ஆலமரத்தைக் கண்டார்.

கரும்பச்சை இலைகள் நிறைந்த மிகப்பெரிய ஆலமரம் அது. வரண்ட பாறைமீது அப்படியொரு ஆலமரம் வளர்ந்து நிற்பதைக் கண்டு ஆச்சரியப்பட்டுப் போனார். அதனருகே செல்வதற்காக பாறைகள் மீது மேலும் உயரே ஏறியபோது காட்டுக் குளவிக் கூடு ஒன்றின் மீது கால் இடறி கூடு கலைந்து போயிற்று. கூட்டுக் குளவி கள் வெளியே பறந்து தமக்குத் தீங்கிழைத்த கால்களை சீற்றத்துடன் தாக்கிக் கொட்டித் தீர்த்தன. அவை மொய்த்துக் கொட்டி முடிக்கும் வரை ஸ்ரீ பகவான் அவ்விடத்தே ஆடாது அசையாது நின்ற வண்ணம் அவற்றின் கூட்டைக் கலைத்ததற்கான தண்டனையாக எதிர்ப்பின்றி ஏற்றுக்கொண்டார். அதற்கு அப்பால் ஆலமரம் இருக்கும் இடத்தை நெருங்கலாகாது என்ப தற்கான அறிகுறியாகவும் அதனை எண்ணி, வந்த வழியே திரும்பினார். வெகு நேரமாகியும் போனவரைக் காணோமே என்று பக்தர்கள் கவலையுடன் காத்துக் கிடந்தனர். பெரிதாய் வீங்கிச் சிவந்த காலுடன் அவர் திரும்பிவந்தபோது பதறிப் போயினர். யாரும் எளிதில் நெருங்கமுடியாத உயரத்தில் தாம் கண்ட ஆலமரம் இருக்கும் இடத்தை அவர் பின்னர் பக்தர்களுக்குச் சுட்டிக் காட்டினார். ஆனால் அதன் பின் அவர் அங்கே திரும்பவும் சென்று பார்க்கவில்லை. அங்கு செல்ல விரும்பிய பக்தர்களின் முயற்சியையும் தடுத்து வந்தார்.

ஒரே ஒரு சமயம் பக்தர்களின் அணியொன்று அவ் விடத்திற்கு ஏறிச்சென்று பார்த்தே தீர்வது என்ற உறுதி யுடன் புறப்பட்டது. அவர்களுள் ஆங்கிலேயர் ஒருவரும் இருந்தார். மலைமீது சென்றவர்கள் சிறிது நேரம் வீராப் புடன் மேலும் உயரே ஏறிப் போனபின் அதற்கு அப்பால் செல்லமுடியாத, இடர்செரிந்த முகட்டில் சிக்கினர். மேலே போகவும் துணிவில்லை; கீழே பத்தி ரமாய் இறங்கவும் வழியில்லை. 'ஸ்ரீபகவானே துணை'' என மனமாரப் பிரார்த்தித்து நின்றனர். பிறகு

எப்படியோ ஒரு வழியாக இடையூறின்றி ஆசிரமம் திரும்பிவந்து சேர்ந்தனர். அதன்பின் அவர்கள் ஒரு போதும் அம்முயற்சியில் ஈடுபடவில்லை. வேறு பலரின் முயிற்சிகளும் கைகூடவில்லை.

ஒரு காரியத்தை மேற்கொள்ளலாகாது என்று ஸ்ரீ பகவான் மறுதலிப்பாரேயன்றி திட்டவட்டமாகத் தடை கூறமாட்டார். எக்காரியம் உகந்தது, எது ஒவ்வாதது என்பதை அவரவர்கள் தாமே உள்ளுணர்ந்துகொள்வதே நன்று. மேற்சொன்ன ஆலமரம் காண விழையும் முயற்சியை ஞான ஆசானே கைவிட்டபின், அவரது பக்தர்கள் அதனை மேற்கொள்ள முயற்சித்தது சரியல்ல என்பது தெளிவு.

ஆரம்ப கால கட்டத்தில் ஸ்ரீ பகவான் அருணாசல மலைச் சரிவுகளில் அடிக்கடி சுற்றித் திரிந்த வண்ணமிருந்தார். பிராந்தியம் பூராவும் அவருக்கு அத்துபடி. ஒரு நாள் தனிமையில் அவர் அலைந்து கொண்டிருக்கையில் மலைப் பாதையில் வயதான மாது ஒருத்தி விறகுச் சுள்ளிகளைச் சேகரித்துக் கொண்டிருந்தாள். கீழ்க்குடியைச் சார்ந்த அம்மையாகத் தோற்றமளித்த அவள் இளம் சுவாமியை நோக்கி தைரியத்துடன் தனக்கு சரிநிகரானவர் போல கடிந்துரைத்தாள்: "பாடையிலே வைக்க ஒன்னை! ஏன் இப்படி வெயிலுல திரிஞ்சிட்டிருக்கயோ தெரியலை. ஒரு எடத்துலெ சும்மா குந்திக் கிடக்கக் கூடாதோ?"

"அவள் ஓர் சாதாரண மூதாட்டியாக இருக்க முடியாது. உண்மையில் அவள் யாரோ? யாருக்குத் தெரியும்?", என்று பின்னர் பக்தர்களிடம் இந்நிகழ்ச்சியை கூறுகையில் வியந்து மொழிந்தார். ஒரு சுவாமியிடம் எந்த ஒரு கீழ்க்குடி மகளிரும் இவ்வாறு துணிவுடன் பேசுவதற்கில்லை. அருணாசலத்து மாய உருவான அருணகிரி சித்தரே அந்த மூதாட்டி வடிவில் வந்ததாக பக்தர்கள்

அனுமானித்தனர். அந்நாள் முதற்கொண்டு ஸ்ரீ பகவான் மலைச்சரிவுகளில் சுற்றித் திரிவதைக் கைவிட்டார்.

ஸ்ரீ பகவான் 1896—இல் திருவண்ணாமலை சேர்ந்த பின் பல ஆண்டுகாலம் பல சமயங்களில் தன்வயமிழந்த நிலையில் நடமாடி வந்ததைப் பற்றி ஏற்கனவே விளக்கி யுள்ளோம். சுமார் 1912—ஆம் ஆண்டு வரை நீடித்த அத்தகைய நிலை அவ்வாண்டில் கடைசியாக நிகழ்ந்த முழுமையான மரண அனுபவத்திற்குப் பிறகு முற்றுப் பெற்றது. ஒரு நாள் காலை, பழநிஸ்வாமி, வாசுதேவ சாஸ்திரி மற்றும் சிலரோடு கூட ஸ்ரீ பகவான் விரூபாட்ச குகையிலிருந்து புறப்பட்டு பச்சையம்மன் கோயிலுக் குச் சென்றார். கோயிலுக்கு எதிரேயுள்ள குளத்தில் எண்ணெய் ஸ்நானம் செய்துவிட்டுத் திரும்பிவந்து கொண்டிருந்தார். வரும் வழியில் ஆமைப்பாறை அருகே திடீரென்று உடல் அயர்ந்து தள்ளாடி நின்றார். தமக்கு நேர்ந்த அனுபவத்தை பின்னர் ஸ்ரீ பகவானே சொல்லக் கேட்போம்:

“என் கண்முன் விரிந்த நிலக் காட்சி மங்கி மறைந்தது. ஏதோ ஒரு வெள்ளைத் திரை மூடினாற் போல் ஆகிவிட்டது. காட்சி ம்றைவும், திரையின் விரிப்பும் படிப்படியாய் நிகழ்ந்தன. ஒரு தருணத் தில், ஒரு பகுதியில் நிலப் பசுமையும் மற்றோர் புறம் மெல்ல மூடிவரும் திரையின் வெண்மைப் படலமும் ஒரே சமயத்தில் என் முன் தோன்றின. ‘ஸ்டிரியோஸ் கோப்’பில் படக் காட்சியைப் பார்த்துக் கொண்டிருக்கும் போது வெள்ளைக் கண்ணாடி வில்லையால் கருவியை மெல்லமெல்ல மறைப்பது போல இருந்தது. கீழே விழுந்துவிடுவேனோ என்ற எண்ணத்தில் மேலே நடக்காமல் அப்படியே நின்று விட்டேன். வெண் திரை விலகியதும் மீண்டும் நடக்கத் தொடங்கினேன். இதே போல இரண் டாவது முறை கண் இருண்டு உடல் தளர்ந்தபோது

பாறை மீது கையூன்றித் தாங்கலாகச் சாய்ந்தேன். தெளிவுற்றதும் நிமிர்ந்தேன். ஆனால் தொடர்ந்து மூன்றாம் முறை இவ்வாறு உணர்ந்ததும் பாறை அருகில் ஆசனமிட்டு உட்கார்ந்து விட்டேன். இதற்குள் பிரகாசமான வெண்திரை என் பார்வை பூராவையும் மறைத்துவிட்டது. என் தலை கிறுகிறுத்தது. ரத்த ஓட்டமும் மூச்சும் நின்று விட்டன. உடல் தோல் கன்றி வெளிறிப் போயிற்று. பின்னர் சவம்போல நீலம் பாரித்து மேன்மேலும் உடலெங்கும் கருமை நிறம் ஏறிற்று. நான் நிஜமாகவே செத்துப் போய்விட்டதாக எண்ணி வாசு (வாசுதேவ சாஸ்திரி) என்னைக் கட்டிப்பிடித்து ஓவெனக் கதறி அழத்தொடங்கி விட்டான்.

“வாசுவின் அணைப்பு, அவனது உடல் நடுக்கம், ஓலம், என்னைச் சூழ்ந்துள்ளோரின் பேச்சு இவை அனைத்தையும் நான் தெளிவாய் உணர்ந்த வண்ணமிருந்தேன். என் உடலின் நிற மாற்றம், அடங்கி வரும் இதயத்துடிப்பு, மூச்சின்மை, கை கால் ஜில்லிட்டுப் போனது யாவற்றையும் அந்நிலையிலும்கூட கண்டுணர முடிந்தது. ஆயினும் என்னுள் பயம் ஏதும் இல்லை. எனது எண்ண ஓட்டமும் அக உணர்வும் நிற்கவில்லை. என் உடல் நிலையைப் பற்றி எவ்வித கவலையும் தோன்றவில்லை. பாறையருகில் என் வழக்கமான பத்மாசன பாணியில் அப்படியே விறைத்து உட்கார்ந்து கிடந்தேன். இந்த அனுபவம் பத்து அல்லது பதினைந்து நிமிடம் நீடித்தது. பின்னர் திடீரென்று ஓர் அதிர்வு உடலை ஊடுருவியது. ரத்த ஓட்டம் மிக வேகமாய்ப் பரவிற்று. சக்தி வியாபித்தது. மூச்சு கிளம்பியது. உடலெங்கும் வியர்த்தது. உடலின் கரு நிறம் நீங்கி பழைய நிலை அடைந்தது. கண்களைத் திறந்தேன். எழுந்தேன். ‘வாருங்கள், போகலாம்’

என்றேன் வேறு தொல்லைகள் இன்றி விருபாட்ச குகை போய்ச் சேர்ந்தோம்.''

பின்னர் இந்த நிகழ்ச்சியைப்பற்றி எழுந்த தவறான கணிப்புக்களைத் திருத்தும் வகையில் அவர் மேலும் கூறினார்:

"அத்தகைய எழுச்சிநிலையை நான் வேண்டுமென்றே தருவித்துக் கொள்ளவில்லை. இறந்தபின் என் உடல் எவ்வாறு தோற்றமளிக்கும் என்று பார்க்கவும் விரும்பவில்லை. முன்னறிவிப்பின்றி இவ்வுடலைக் கிடத்தி மறைந்து விடமாட்டேன் என்று எவரிடமும் கூறியதில்லை. இம்மாதிரி அனுபவங்கள் முன்பும் கூட எனக்கு நிகழ்ந்ததுண்டு. இந்த முறை அது மிகவும் தீவிரமாக அமைந்தது. அவ்வளவு தான்.''

பதினாறு வயதினிலே பள்ளிச்சிறுவன் ரமணனுக்கு மரணானுபவ வாயிலாய் கிட்டிய ஆன்ம விழிப்பு இவ்வாறு பதினாறு ஆண்டுகளுக்குப்பின் மீண்டும் 1912இல் நிகழ்ந்தது. ஆனால் இம்முறை, உடல் வீழ்ந்தாலும் தூய ஆன்ம உணர்வு மடியாது என்பதை திரும்பவும் நிரூபிக்கும் வகையில் முக்கியத்துவம் வாய்ந்தது.

"ஆதி அந்தம் இல்லாத ஆதிஅ நாதிஎனும்
ஜோதி இன்பத் தூடே துளையுநாள் எந்நாளோ''

என முறையிடும் தாயுமானவர் பாடலை இது நினைவூட்டுகிறது. தாயுமான சுவாமிகள் ஏராளமாய் இயற்றிய தெள்ளிய தமிழ்ப் பாக்களிலிருந்து ஸ்ரீ பகவான் அடிக்கடி மேற்கோள் காட்டுவது வழக்கம்.

வெளி நடவடிக்கைகளில் பூரண சகஜ நிலைக்கு ஸ்ரீ பகவான் திரும்பிய இறுதிக் கட்டமாக மேற்சொன்ன நிகழ்ச்சி அமைந்தது என்றே கருதலாம். அது முதற் கொண்டு அவர் எத்துணை இயல்பான, எத்துணை மனிதாபிமானத்துடன் கூடிய வாழ்க்கை முறையை மேற்கொண்டார் என்பதை சரிவர எடுத்துரைப்பது

கடினம். அவரது முந்தைய துறவுக்கோலத்தைப் பற்றி இதுவரை படிப்பவர்களுக்கு அவர் கனிவற்றவர், எவரையும் அணுகவிடாத தனியார் என்றே தோன்றக்கூடும். நேர்மாறாக, அவர் இயற்பாங்கு செறிந்த இனிமையாளர். புறக் கட்டுப்பாடுகள் அறவே அற்றவர். புதிதாக வருவோரும்கூட தங்குதடையின்றி அவரை அணுகலாம். எவரும் அவரருகில் சகஜ பாவத்தை இயல்பாய் உணர்ந்தனர். அவரது உரையாடலில் நகைச்சுவை ததும்பும். கபடமிலாக் குழந்தைபோல குலுங்கிச் சிரித்து, சூழ்ந்துள்ளோரையும் சிரிப்பில் ஆழ்த்துவார். தமிழ்மொழி தெரியாதவர்களும் கூட தம் வயமிழந்து அச்சிரிப்பில் சேர்ந்துகொள்வார்கள். அவரையும் ஆசிரமத்தையும் சார்ந்த அனைத்துமே அப்பழுக்கற்றவை; பரிசுத்தமானவை. ஸ்ரீ ரமணாச்ரமம் முறையாக நிறுவப் பெற்றதிலிருந்து அவ்வமைப்பு சீரான அலுவலகம் போல காரியங்கள் மிகக் கவனத்துடன் நடைபெறலாயின. கடிகாரங்கள் நிமிஷம் தப்பாமல் சரியாக ஓடின. காலண்டர்கள் சரிவர மாதம் தேதி காட்டின. எப்பொருளும் வீணாக்கப்பட்டதில்லை. உதாரணமாக, ஏற்கனவே கத்தரித்த மீதிக் காகிதம் இருக்கையில் ஒரு புத்தகத்தை பைண்டு செய்வதற்காக ஒரு முழுத் தாளை எடுத்துவந்த பணியாள் கண்டிக்கப்பட்டதை நான் கண்டிருக்கிறேன். உணவு விஷயத்திலும் அப்படியே. ஸ்ரீ பகவான் சாப்பிட்டு முடித்த இலையில் ஒரு பருக்கை கூட மீத மிராது. கறிகாய் சீவிய தோல்களை தூர எறியாமல் ஆடுமாடுகளின் தீனிக்காக எடுத்து வைப்பார்கள்.

இயல்பான எளிமையும் விநயமும் ஒருங்கே பொருந்தியவராக அவர் திகழ்ந்துவந்தார். ஒரு சில சந்தர்ப்பங்களில் மட்டுமே கோபப்படுவது போலக் காட்டிக் கொள்வார். உணவு பரிமாறும்போது பந்தியிலுள்ள மற்றவர்களுக்கு இடுவதைக் காட்டிலும் தமது இலை

யில் சற்று கூடுதலாக தின்பண்டங்கள் வைத்தால் கோபிப்பார். கூடத்தினுள் அவர் பிரவேசிக்கையில் மற்றவர்கள் மரியாதையுடன் எழுந்து நிற்பதை விரும்ப மாட்டார். எல்லோரும் அமருமாறு சைகை காட்டுவார். ஒரு நாள் பிற்பகல் நேரத்தில் அவர் மலைப்புறத்தி லிருந்து இறங்கி ஆசிரமத்தை நோக்கி மெல்ல நடந்து வந்து கொண்டிருந்தார். நல்ல உயரம். செம்பொன்னிற மேனி. ஏற்கனவே நரைத்துபோன தலை. மெலிந்த தளர்ந்த உடல். சற்றே கூன்விழுந்த முதுகு. கீல்வாதத் தின் காரணமாக கைத்தடி ஊன்றி சாய்ந்த நடை. அவரோடுகூட குட்டையாய் கருப்பாய் ஓர் பணியாள். பின்னால் பக்தன் ஒருவன் வந்துகொண்டிருந்தான். குறுகிய பாதையில் ஸ்ரீ பகவான் ஓர் ஓரமாக ஒதுங்கி நின்று, "நீ இளையவன். வேகமாக நடப்பாய். நீ போ முதலில்" என்று கூறி பக்தனுக்கு வழிவிட்டார். அன்பாதரவான சின்னச் செயல்தான் இது. இருந்தும், சீடனுக்கு ஆசான் வழிவிட்டு நிற்பது அசாதாரண அடக்கம் அன்றோ?

இப்படி எவ்வளவோ சொல்லிக் கொண்டே போக லாம். இத்தகைய சிறப்புக் கூறுகள் சிலவற்றை வரும் அத்தியாயங்களில் ஆங்காங்கே காணலாம். ஆனாலும், முழுதும் இயல்பான நிலைக்குத் திரும்பிய இந்த கால கட்ட விவரணையில் அவர் மனித நேயமும் கருணையும் மிக்க வாழ்வையே மேற்கொண்டார் என்பதை அறி முகப்படுத்துவது அவசியமாயிற்று.

# 7. எதிர்ப்பின்மை

நிலைநாட்டப்பெற்ற மதம் ஒன்றில் முழுமையான சாத்வீகம் அல்லது எதிர்ப்பின்மையைக் கடைபிடிப்பது நடைமுறையில் சாத்தியம் அன்று. ஏனெனில், எந்த நாட்டிலும் சமூகக் கட்டுப்பாட்டை அமல் செய்வதற்காக வழக்கு மன்றங்கள், காவல்துறை மற்றும் ராணுவமும்கூட அத்தியாவசியமாகின்றன. ஆயினும், மதம் என்பது இரு வெவ்வேறு மட்டங்களில் கடமைப்பாட்டுக்குரியது. அம்மதத்தைப் பின்பற்றுவோர்க்கும், அது ஸ்தாபனம் பெற்ற நாட்டிற்கும் அதற்குரிய சமூகப் பொறுப்புகள் ஓர் புறம் இருக்க, உலகாயத அனுகூலங்களை துச்சமாக மதித்து, சமய நெறி வழிமுறைகளை சரிவர அனுசரித்து திருவருட்பேறு ஒன்றை மட்டுமே நாட்டமாகக் கொண்ட வாழ்வை மேற்கொள்வோர்க்கு உகந்த வழிவகுப்பது மற்றொரு தளம் ஆகும். இவற்றில் முழுவதும் இரண்டாம் தளத்தைச் சேர்ந்ததே ஸ்ரீபகவான் நிறுவிய ஞான விசார மார்க்கம். ஆகவே, அவர் தமக்கும் விதித்துக் கொண்டு, தம்மைப் பின்பற்றுவோர்க்கும் கூறத்தக்கது "தீமையை எதிர்க்க வேண்டாம்" என்பதாகத் தானே இருக்க முடியும்? ஜன சமூகம் முழுவதற்கான சமுதாய வாழ்க்கை நெறியை அவர் அறிவிக்கவில்லை. தம்மை நாடுவோர்களுக்கு மட்டுமே அவர் ஓர் வாழ்க்கை முறையை எடுத்துரைத்தார். கடவுளின் சித்தத்திற்கு அடிபணிந்து, வாழ்வில் தமக்கு வாய்ப்பவை எவையும் உலக தராதரப்படி துரதிஷ்டம் போலத் தோன்றினாலும் கூட அவையே சரியானவை, அவசியமானவையும்கூட என்று ஏற்கும் மனப்பக்குவம் கொண்டவர்களுக்கு மட்டுமே ஸ்ரீ பகவானின் வழிமுறை ஏற்புடையதாக அமையும். ஒருமுறை பக்தர் ஒருவரிடம் ஸ்ரீபகவான் பின்வருமாறு கூறினாராம்: "உனக்கு உண்டாகும் நன்மைகளுக்காக மட்டும் கடவுளுக்கு நன்றி செலுத்துகிறாய்.

ஆனால் உனக்குத் தீமை போலத் தோன்றுபவை நிகழ்ந்தாலோ அவற்றிற்காக ஆண்டவனுக்கு வந்தனம் செலுத்துவதில்லையே, ஏன் ? இங்கேதான் நீ தவறு செய்கிறாய்.''

இத்தகைய எளிய நம்பிக்கைக்கும் ஸ்ரீ பகவான் போதித்த 'அனைத்தும் ஒன்றே' என்கிற தத்துவத்திற்கும் யாதொரு தொடர்பும் இல்லையே என்று மறுப்புக் கூறக்கூடும். ஆயினும் இவ்விரு வகையான சித்தாந்தங்கள் குறித்து மனத்தளத்தில் மட்டுமே வாதப் பிரதிவாதங்கள் எழும். ''தெய்வம், குரு, ஆத்மா இவை ஒன்றே''[1] என்று அவரே விளம்பியுள்ளார். இம்மூன்று வகையான சரணாகதித் தத்துவங்கள் உண்மையில் வெவ்வேறானவை அல்ல என்பதைப் பின்னொரு அத்தியாயத்தில் காண்போம். இங்கு ஒன்றை மட்டும் தெளிவுறுத்தினால் போதுமானது. அதாவது, ஆன்ம உணர்வு மட்டுமே மெய் என்கிற உறுதிப்பாடு கொண்ட ஒருவருக்கு, வெளி நிகழ்வுகள் அனைத்துமே கனவுத் தோற்றங்கள் அல்லது சினிமாத் திரைக்காட்சி போல ஆன்மாவின் அடித் தளத்தில் தோன்றி மறைபவை. ஆகவே, நிகழ்வன யாவற்றையும் அத்தகையோர் வெறுமனே காட்சி மாத்திரமாகப் பார்த்தவாறே அவற்றால் பாதிக்கப்படாமல் இருந்து வருவர். தீங்கு அல்லது தொல்லைகள் அச்சுறுத்திய ஒரு சில சம்பவங்களின்போது ஸ்ரீபகவான் அதேபோன்ற மனப்பான்மையே காட்டினார்.

குருமூர்த்த மடாலயத்திற்கு வெளியே புளிய மரங்கள் இருந்தன. அவர் அம்மடத்தில் தங்கியிருந்த காலத்தில் சிற்சில சமயம் ஏதாவதொரு புளிய மரத்தடியில் உட்கார்ந்திருப்பது வழக்கம். ஒருநாள் யாருமில்லாத சமயம் பார்த்து புளியம்பழங்களைப் பறித்துச் செல்ல திருட்டுக் கும்பல் ஒன்று வந்தது. இளம் சுவாமியோ ஓர் மரத்தடியில் வாய் பேசாது உட்கார்ந்திருந்தார்.

1. (மகர்ஷி வாய்மொழி, பாகம் 1. அத்.7)

அவரைக் கண்ணுற்ற ஒரு திருடன் தன் கூட்டாளியிடம், "டேய், போய் எருக்கஞ்செடி பிடுங்கிவா. அதன் சாறு பிழிந்து இவன் கண்ணில் ஊற்றுவோம். அப்போதாவது இவன் வாய் திறந்து பேசுகிறானா பார்க்கலாம்" என்று கெக்கலித்தான். எருக்கம்பால் கண்ணில் பட்டால் கடும் எரிச்சல் எடுத்துக் கண் குருடாகவும் ஆகக் கூடும். ஆனால் சுவாமியோ தன் கண்ணைப் பற்றியோ கொள்ளை போகும் புளியம்பழங்களைப் பற்றியோ சிந்தனை சிறிது மின்றி வாளாவிருந்தார். கும்பலில் இன்னொருவன், "இவனைப்பற்றி என்னடா கவலை? இவனால் நமக்கு என்ன கெடுதல்? விட்டுவிடு. நாம் வந்த காரியத்தை கவனிச்சிட்டுப் போவோம்" என்று சமாதானம் கூறி னான்.

அருணாசல மலை மீது இருந்து வந்த துவக்க ஆண்டுகளின் போது சில தறுவாய்களில் அவர் இடை யூறுகளையும் எதிர்ப்பையும் சந்திக்க நேர்ந்தது. சாதுக் களின் உலகம் விசித்திரமானது. அவர்களில் சிலர் வெளி வேஷம் பூண்ட மோசக்காரர்கள். வேறு சிலரோ யோக முறையில் பல அபூர்வ சித்திகள் பெற்றவராயினும் தமது கீழ்த்தர இச்சைகளை விட்டொழித்தவர்கள் அல்ல. இளம் வயதினரான சுவாமி ஒருவரிடம் திவ்ய ஒளி கண்டு அடியார்கள் பெருகி வருகிறார்கள் என்பதைக் கண்ணுற்று, பக்குவமற்ற ஒரு சில சாதுக்களின் மனதில் பொறாமைத் தீ மூண்டது. ஆயினும், பெரும்பாலான சாதுக்கள் இளம் சுவாமிக்குத் தலை வணங்கி அவரது அருளை நாடி வந்தவண்ணமிருந்தனர்.

வயது முதிர்ந்த சாது ஒருவர் மலைமீதுள்ள ஓர் குகையில் வாசம் செய்து வந்தார். ஸ்ரீபகவான் குருமூர்த் தத்தில் இருந்து வந்த காலத்தில் அந்த சாதுவும் இளம் சுவாமியிடம் மரியாதை காட்டி வந்தவர்தான். விரு பாட்ச குகைக்கு இடம் பெயர்ந்த பிறகு ஸ்ரீபகவான் சில

சமயங்களில் மூத்த சாதுவிடம் சென்று அவருடன் மௌனமாய் அமர்ந்திருந்து திரும்புவதுண்டு. கடும் துறவறம் அனுசரித்த அந்த சாதுவைப் போற்றிப் பின்பற்றுவோரும் பலர் இருந்தனர். ஆயினும் மனித மாச்சரியங்களைக் கடக்க இயலாத அந்த வயதான சாதுவுக்கு, இளம் சுவாமியை நாடுவோர் கூடி வருவதையும், தன்னை வேண்டுவோர் குறைந்து போவதையும் காணப் பொறுக்கவில்லை. ஸ்ரீபகவானை ஒழித்துக்கட்ட வேண்டும், அல்லது பயமுறுத்தி மலையைவிட்டு விரட்டியடிக்க வேண்டும் என்ற வஞ்சகத் தீர்மானத்துடன் செயல்பட விழைந்தார். விரூபாட்ச குகைக்கு நேர்மேலே மலைச்சரிவில் ஒளிந்து கொண்டு, அங்கிருந்து பாறைகளையும், பெருங் கற்களையும் கீழே உருட்டித் தள்ளுவார். ஓர் சமயம் பாறாங்கல் ஸ்ரீபகவானின் மேல் உராய்ந்தாற்போல் மிக அருகில் தெறித்து விழுந்தபோதுங்கூட அவர் எவ்வித கலக்கமும் இன்றி அமர்ந்தவண்ணமிருந்தார். கூர்ந்த கவனமுள்ள ஸ்ரீபகவானுக்கு அது யார் வேலை என்று புரிந்து விட்டது. ஒரு சமயம் அவர் ஓசைப்படாமல் துரிதமாய் மலைச்சரிவின் உயரே ஏறிச்சென்று அந்தக் கிழச் சாதுவைக் கையுங் களவுமாய்ப் பிடித்து விட்டார். அப்போதுங்கூட அவ்வஞ்சகர் "சும்மா விளையாட்டுக்குத்தான் இப்படி..." என்று சிரித்து மழுப்பி விட்டார்.

இந்த முயற்சியில் தோல்வியுற்ற அத்துறவி, மற்றொரு நயவஞ்சகனின் துணையைத் தேடிக் கொண்டார். பாலாநந்தா என்ற பெயர் கொண்ட அக்கசடன் பார்ப்பதற்கு ரம்மியமான, மெத்தப்படித்த ஆசாமி. துறவுக்கோலம் தாங்கி, தான் ஒரு மகா யோகி என்று அறிமுகப்படுத்திக் கொண்டான். ஸ்ரீபகவானின் பெயரைச் சொல்லிப் பணமும் புகழும் திரட்டத் திட்டம் தீட்டினான். இளம் சுவாமியோ தீங்கினை எதிர்க்கும் மனப்பான்மைக்கு அப்பாற்பட்ட புனிதர் என்பதை நன்கறிந்த இந்த ஆசாமி, தான்தான் அவரது குரு

என்பதான பாவனை மேற்கொண்டான். வருபவர்களிடமெல்லாம், "இந்த பால்ய சுவாமி எனது சீடன், தெரியுமா ?" என்பான்; அல்லது, "இந்த பாலகனுக்கு இனிப்புப் பண்டங்கள் கொடுங்கள்" என்றெல்லாம் கம்பீரமாகக் கூறிவிட்டு, ஸ்ரீபகவானின் பக்கம் திரும்பி, "குழந்தாய் வெங்கடராமா, இதோ இவர்கள் சமர்ப்பிக்கும் தின் பண்டங்களை எடுத்துக்கொள்" என்பான். தனது 'சீடனுக்கு' வேண்டிய பொருட்களை வாங்கி வருவதாகச் சொல்லி ஊர்ப்பக்கம் சென்று நாடகமாடுவான். அவனது அத்துமீறிய வெட்கங்கெட்டத் தனத்தை என்னவென்று சொல்ல ? ஸ்ரீபகவானுடன் தனித்திருக்கும் தருணத்தில் "நான் தான் உன் குரு என்று சொல்லி எல்லோரிடமும் பணம் பறிப்பேன். இதில் உனக்கென்ன நஷ்டம் ? ஆகவே நான் சொல்பவற்றை யாரிடமும் மறுத்துப் பேசாதே" என்று பச்சையாக முழங்குவான்.

இந்த ஆளின் அகம்பாவத்திற்கும் அடாவடித்தனத்திற்கும் அளவே இல்லாமற் போயிற்று. ஓர் இரவு, விரூபாட்ச குகையின் வெளி முற்றத்திலேயே மலஜலம் கழிக்கும் அளவுக்கு அவன் திமிர் முற்றிவிட்டது. மறு நாள் விடியற்காலையில் தன் மாற்று உடைகளைக் குகையினுள் வைத்துவிட்டு அவன் வெளியே கிளம்பிய போது ஸ்ரீபகவான் அவனிடம் ஏதும் கேட்கவில்லை. அசுத்தத்தைக் கண்ட பழநிஸ்வாமி, குகை முற்றத்தை நன்றாக சுத்தம் செய்த பின்னரே ஸ்ரீபகவானுடன் புறப்பட்டார். அதற்கு முன், பாலாநந்தா உள்ளே வைத்திருந்த மாற்று ஆடைகளை (அவற்றில் சில, சரிகைக் கரையிட்ட பட்டு அங்கிகள்) பழநிஸ்வாமி வெளியே தூர எறிந்தார்; குகைவாயிலை சாற்றிப் பூட்டிய பிறகே ஸ்ரீபகவானுடன் வெளிக்கிளம்பினார். இருவரும் வெகு தூரம் நடந்து சென்றனர். ஓர் புனித குளத்தில் ஸ்ரீபகவான் நீராடினார்.

திரும்பிவந்த பாலாநந்தா கோபத்தில் கொதித்தான். "என் ஆடைகளை நீ எவண்டா தொடுவது?" என்று பழநிஸ்வாமி மீது பாய்ந்தான். அந்தக் கணமே பழநி ஸ்வாமியை வெளியே துரத்துமாறு ஸ்ரீபகவானுக்கு ஆணையிட்டான். இருவரும் ஏதும் பதில் பேசவில்லை. பாலாநந்தாவின் கோபாவேசத்தையும் பொருட்படுத்த வில்லை. மூர்க்க வெறி மேலிட்ட பாலாநந்தா, ஸ்ரீபகவான் மீது காரி உமிழ்ந்தான். அப்போதுங்கூட ஸ்ரீபகவான் நிச்சிந்தையாக அமர்ந்திருந்தார். உடன் வந்திருந்த சீடர் களும் எவ்வித எதிர்ப்பும் காட்டாமல் சாத்வீகமாய் வாய்திறவாது உட்கார்ந்திருந்தனர். ஆனால், அவ்விடத் திற்குக் கீழே உள்ள குகையொன்றில் இருந்து வந்த பக்தர் ஒருவர், நடந்த அபசாரத்தைக் கேள்விப்பட் டதும்தான் தாமதம், மேலே ஓடோடி வந்தார். "யாரடா களவாணிப்பயல் நீ எங்கள் சுவாமி மீது துப்பத் துணிந் தது?" என்று கூவிக் கொண்டே பாலாநந்தா மீது ஆக்ரோஷத்துடன் பாய்ந்தபோது மற்றவர்கள் மிகப் பிரயாசைப்பட்டு அவரைத் தடுத்து நிறுத்தினர்.

தான் எல்லை மீறிவிட்டதை உணர்ந்த பாலாநந்தா திருவண்ணாமலையை விட்டு வெளியேறுவதே நன்று, இல்லையேல் ஆபத்து, என்ற முடிவுக்கு வந்தான். அரு ணாசல மலை ஆன்மீகத்திற்கு உகந்த இடம் இல்லை என்று அறிவித்து விட்டு தனக்கே உரிய இறுமாப்புடன் ஊரைவிட்டு கிளம்பினான். ரயில்வே ஸ்டேஷனுக்குச் சென்றவன், டிக்கட் வாங்காமல் இரண்டாம் வகுப்பில் ஏறி அமர்ந்தான். அதே ரயில் பெட்டியில் ஓர் இளம் தம்பதிகள் பிரயாணம் செய்தனர். அந்த இளைஞனிடம் நீட்டி முழக்கி அதிகார தோரணையுடன் பேசலானான். இளைஞன் தன் பேச்சை அசட்டை செய்வதை அவம திப்பாக எண்ணிய பாலாநந்தா, "என்னது? நான் பேசிக் கொண்டே போகிறேன். நீ கவனிக்காமல் இருக்கிறாயே. அந்தப் பெண்ணின் மேலுள்ள மையலில் கிறங்கிக்

கிடக்கிறாய். அதனால்தான் எனக்குரிய மரியாதை தர வில்லை" என்று இறைந்தான். அதைக்கேட்டு ஆத்திரம் கொண்ட அவ்வாலிபன் தன் செருப்பைக் கழற்றி பாலா நந்தாவை நன்றாய்ப் புடைத்துத் தள்ளிவிட்டான். வெகு நாட்களாகக் கிடைக்க வேண்டிய அடி அன்று கிடைத்து விட்டது.

சில மாதங்களுக்குபிறகு பாலாநந்தா திரும்பவும் திருவண்ணாமலைக்கு வந்து சேர்ந்து தொந்திரவு கொடுக் கத் தொடங்கினான். ஒரு சமயம் ஸ்ரீபகவானுக்கு நேர் எதிரே உட்கார்ந்து கொண்டு அவரது கண்களை உற் றுப் பார்க்க வேண்டுமென அடம்பிடித்தான். அவ்வாறு ஊடுருவி நோக்கி, சுவாமிக்கு தான் நிர்விகல்ப சமாதி (ஆன்ம பரவச நிலை) புகட்டப் போவதாக அறிவித் தான். ஆனால் நடந்ததோ வேறு. உற்று நோக்கியவன் கண் அயர்ந்து தூங்கிப் போனான். ஸ்ரீபகவானும், கூடி யிருந்த பக்தர்களும் எழுந்து இடத்தை விட்டகன்றனர். அதன்பின் பாலாநந்தாவை எவரும் மதிக்கவில்லை. இனி இந்த இடம் தனக்குச் சரிப்படாது என்று அறிந்து ஊரைவிட்டு ஓடிய பாலாநந்தா அப்புறம் திரும்பி வர வில்லை.

இதுபோன்று இன்னொரு சாது ஒருவர் இளம் சுவாமிக்கு குருவாக நடித்து செல்வாக்கு பெற விழைந் தார். காளஹஸ்தியிலிருந்து வந்த அவர் நம் சுவாமி யிடம், "சீடனே! ஆன்மிக சாதனையில் நீ எவ்வளவு தூரம் முன்னேறியுள்ளாய் என்பதைக் கண்டறியவே திரும்பி வந்துள்ளேன். இப்போது உனக்கு 'தத்தாத்ரேய மந்திரம்' வழங்க விருப்பம் கொண்டுள்ளேன்" என அனைவரும் அறிய உரைத்தார். ஸ்ரீபகவானோ அசைய வில்லை; வாய் திறந்து பேசவில்லை. சாது சற்றே நிதானித்து மேலும் தொடர்ந்து, "கடவுள் என் கனவில்

தோன்றி உனக்கு இந்த மந்திர உபதேசம் ஓதுமாறு ஆக்ஞாபித்தார்'' என்றார்.

''ஓ! அப்படியா ?'' என்று சாவதானமாக வினவிய ஸ்ரீபகவான், ''சரி, அந்தக் கடவுள் என் கனவிலும் வந்து உமது உபதேசத்தை ஏற்றுக் கொள்ளுமாறு ஆணை யிடட்டும். பிறகு நான் தயார்'' என்று பேச்சைத் திருப் பினார்.

''இல்லை இல்லை. மந்திரம் மிகச் சுருக்கமானது. ஒரு சில வார்த்தைகள்தாம். இதோ இப்போதே அதை நீ உச்சரிக்கத் தொடங்கலாம்'' என சாது அவசரித்தார்.

''ஆனால் உமது உபதேசத்தால் யாது பயன் ? நான் தான் அதை ஜபம் செய்யப் போவதில்லையே ? உபதேச மந்திரத்தை ஏற்கத் தகுதியுள்ள சிஷ்யனை தேடிப் போங்கள். அதற்குத் தகுந்தவன் நான் அல்ல'' என்று தீர்மானமாக உரைத்தார் ஸ்ரீபகவான்.

இது நிகழ்ந்த சில நாட்களுக்குப்பின், அந்த சாது தியானத்திலிருந்தபோது அவரது மனக்கண்முன் ஸ்ரீபக வானின் உருவம் தோன்றி ''உம்மையே நீர் ஏமாற்றிக் கொள்ளாதீர்'' எனக் கூறி மறைந்து போயிற்றாம். சாது நடுநடுங்கிப் போனார். 'ஸ்ரீபகவான் அபூர்வ சக்திகள் படைத்தவர், அவற்றைத் தனக்கு எதிராகத் தூண்டி விடுகிறார்' என்றெல்லாம் நினைத்து நிலைகலங்கிய அவர் உடனே விருபாட்ச குகைக்கு விரைந்தார். தன்னை மன்னித்து, இனி அவ்வாறான மனப் பிராந்தியிலிருந்து விடுவிக்குமாறு வேண்டி நின்றார். தான் எவ்வித மனோ சக்தியும் பிரயோகிக்கவில்லை என்று கூறி ஸ்ரீபகவான் அவரைத் தேற்றினார். தன்மீது ஸ்ரீபகவானுக்கு எள் ளளவு கோபமோ வெறுப்போ இல்லை என உணர்ந்த சாது மனம் நெகிழ்ந்தார்.

இம்மாதிரி ஊறு விளைவிக்க மற்றொரு முயற்சியும் நடந்தது. குடிபோதையுடன் சாமியார்க் கும்பல் ஒன்று வந்து சேர்ந்தது. ஒருநாள் அச்சாமியார்கள் விரூபாட்ச குகை வாயிலில் கும்பலாய்க் கூடி நின்று "நாங்கள் பொதிகை மலையிலிருந்து வந்திருக்கிறோம். அந்தப் புனித பர்வதத்தில் புராணகாலத்து அகஸ்திய முனிவர் ஆயிரமாயிரம் ஆண்டு காலமாகத் தொடர்ந்து தவம் புரிந்தவராய் இன்றும் இருந்து வருகிறார். அம் மாமுனிவர்தாம் எங்களுக்கு ஆணை பிறப்பித்து அனுப்பியுள்ளார். சித்தர்கள் சபை ஸ்ரீரங்கத்தில் கூடவிருக்கிறது. அங்கு உம்மை இட்டுச் சென்று, பின்னர் பொதிகை மலைக்கு அழைத்து வரவேண்டும் என்பதே அவரது ஆணை. நீர் அதிஅற்புத சக்திகளைப் பெறுவதற்கு தடையாக இருக்கும் உமது பூத உடலின் உப்புக் கரிசல்களை வடித்தெடுத்த பின்னர் பொதிகையில் உமக்கு உரிய தீட்சை வழங்கப்படும்" என்று ஆர்ப்பரித்தனர்.

ஸ்ரீபகவான் முன்போலவே பதிலொன்றும் பேசாது வாளாவிருந்தார். ஆனால் இந்தத் தடவை அவரது பக்தப் பணிமகன் பெருமாள்சாமி என்பவர் சாமியார்களின் பொய்க்கூற்றை முறியடிக்க மாற்றுப் பொய்யொன்று புனைந்து வீசினார்: "ஹே சித்தர்களே நீங்கள் இங்கு விஜயம் செய்யப் போவதைப் பற்றி எங்களுக்கு அசரீரி வாக்காகத் தகவல் ஏற்கனவே கிடைத்துவிட்டது. உங்கள் வரவையே எதிர்நோக்கிக் காத்திருந்தோம். அசரீரி எமக்கு இட்டுள்ள ஆணை என்ன தெரியுமா ? "நீங்கள் வந்ததும் உங்கள் உடல்களை சுண்ணாம்புக் காளவாயில் போட்டு தீ எழுப்பி வாட்டி எடுக்க வேண்டும்' என்பதே அதன் உத்தரவு." இவ்வாறு உரத்துக் கூறிய பெருமாள்சாமி தன் அருகிலிருந்த இன்னொரு அடியாரை நோக்கி, "ஐயா, உடனே சென்று பெரிய குழி வெட்டுங்கள். இவர்களை வாட்ட நெருப்பு மூட்ட

வேண்டும்" என்று பரபரத்தான். வந்த சாமியார்க் கும்பல் எடுத்ததே ஓட்டம்!

1924 – ஆம் வருடம், மலையடிவாரத்தில் இன்றுள்ள ஆசிரமத்தில் ஸ்ரீபகவான் வாசம் புரிந்து வந்த காலத்தில் சில கள்வர்கள் ஆசிரம வட்டாரத்துள் நுழைந்தனர். முதல்முறை, அன்னையின் சமாதி மீது அப்போது எழும்பியிருந்த கொட்டகைக்குள் புகுந்து அங்கிருந்த சில பொருட்களைக் களவாடிச் சென்றனர். இது நடந்து சில வாரங்களுக்குப் பின் திரும்பவும் மூன்று திருடர்கள் ஆசிரமத்துள்ளே புகுந்தனர்.

அன்று ஜுன் 26ஆம் தேதி. இரவு மணி சுமார் பதினொன்றரை; கும்மிருட்டு. அன்னையின் சமாதிக்கு எதிரே உள்ள சிறு கூடத்தில் அமைந்திருந்த மேடை மீது ஸ்ரீபகவான் சயனிக்கச் சென்றுவிட்டிருந்தார். ஜன்னல்களுக்கருகே நான்கு பக்தர்கள் படுத்துறங்கலாயினர். அவர்களில் இருவர் – குஞ்சுஸ்வாமியும், மஸ்தான் என்ற பணியாளும் – வெளியே ஏதோ அரவம் கேட்டுக் கண் விழித்தனர். "உள்ளே ஐந்தாறு ஆளுங்க படுத்திருக்காங் கடா" என்று தாழ்ந்த குரல் கேட்கவே, "யாரது வெளியே ?" என்று குஞ்சு கூச்சலிட்டார். பதிலுக்கு அக்கள்வர்கள் உள்ளிருப்போரை அச்சுறுத்துவதுபோல, ஒரு ஜன்னலை இடித்து உடைக்கத் தொடங்கினர். குஞ்சுஸ்வாமியும், மஸ்தானும் சட்டென எழுந்து ஸ்ரீபகவான் இருந்த மேடை யருகே நகர்ந்தனர். பின்னர் திருடர்கள் மேடைப் பக்க மிருந்த ஜன்னலைத் தகர்க்க ஆரம்பித்தனர். ஸ்ரீ பகவானோ நிச்சிந்தையாக எழுந்து அமர்ந்து கொண்டார். கள்வர்கள் கூடத்துக்கு வெளியே தென்புறம் இருந்தனர். குஞ்சுஸ்வாமி வடக்குப் பக்கக் கதவு வழியே ஓடிச் சென்று வேறொரு குடிலில் தூங்கிக் கொண்டிருந்த ராமகிருஷ்ணஸ்வாமி எனும் பக்தனை எழுப்பித் துணைக்கு இட்டு வந்தார். கதவைத் திறந்தவுடன் ஆசிரமத்து

நாய்களான ஜாக்கும் கருப்பனும் வெளியே பாய்ந்து வர, திருடர்கள் அவற்றைத் தடியால் அடிக்க, ஜாக் தப்பி ஓட, கருப்பன் திரும்பவும் கூடத்திற்குள் ஓடி ஒளிந்து கொண்டது.

ஆசிரமத்துள் அவர்கள் எடுத்து போக சொற்ப சாமான்களே உள்ளன என்றும் இருப்பவற்றை இஷ்டம் போல் எடுத்துச் செல்லலாம் என்றும் ஸ்ரீபகவான் உள்ளேயிருந்தபடியே சாந்தமாகக் கூறினார். தங்களை ஏய்ப்பதற்கான பேச்சு என்று எண்ணியோ அல்லது வெறுங் கையுடன் திரும்பும் வழக்கமற்றவர்கள் என்ற காரணத்தாலோ, கள்வர்கள் எதையும் காதில் வாங்கிக் கொள்ளாமல் ஜன்னல் சட்டத்தைத் தகர்ப்பதிலேயே கவனம் செலுத்தினர் (இரும்புக் கம்பி போட்ட ஜன்னலாதலால், வெளிச் சட்டத்துடன் பெயர்த்தாக வேண்டும்). அது பொறுக்காத ராமகிருஷ்ணஸ்வாமி திருடர்களை எதிர்த்துத் தாக்க பகவானின் அனுமதி கேட்டபோது அவரைத் தடுத்து நிறுத்தி ஸ்ரீபகவான் இவ்வாறுரைத்தார்: "அவர்கள் தர்மத்தை அவர்கள் செய்யட்டும். நாம் நமது தர்மத்தைக் கடைபிடிப்போம். நாம்தான் எதையும் தாங்கிப் பொறுத்துக் கொள்ள வேண்டும். அவர்கள் விஷயத்தில் தலையிடுவானேன் ?"

'வாசற்கதவு திறந்துதான் இருக்கிறது; உள்ளே வரலாம்' என்று ஸ்ரீபகவான் அழைத்த போதும் கள்வர்கள் உடைப்பதை நிறுத்தவில்லை. தம்மிடம் துப்பாக்கி வெடிகள் உள்ளன போல காட்டிக் கொள்வதற்காக ஜன்னலருகில் பட்டாசுகளை வெடித்தனர். உள்ளே வந்து வேண்டியவற்றை எடுத்துப் போகும்படி திரும்பவும் கூறிய போதிலும் பதிலுக்கு உருட்டல் மிரட்டலே மிஞ்சின. இதற்கிடையில் குஞ்சுஸ்வாமி பின்பக்கமாக வெளியேறி உதவிக்கு ஆள் சேர்க்க ஊர்ப்புறம் ஓடினார்.

"ஏன் அனாவசியமாக கலாட்டா செய்கிறீர்கள், எது வேண்டுமோ எடுத்துக் கொண்டு தொலையுங்களேன்" என்று ராமகிருஷ்ணஸ்வாமி திரும்பத் திரும்பக் கூச்சலிட்டும் பயனில்லை. மேற்கூரைக்குத் தீ வைத்து கூடத்தைக் கொளுத்துவோம் என்று திருடர்கள் பயமுறுத்தினர். அதற்கு ஸ்ரீ பகவான், அவ்வாறு அவர்கள் செய்யலாகாது என்றும், வேண்டுமானால் தாம் அனைவரும் கூடத்தை விட்டு வெளியே போய் விடுவதாகவும் கூறினார். திருடர்களின் விருப்பமும் அதுவே எனினும் உள்ளே களவாடும்போது அவர்கள் திரும்பிவந்து தங்களைத் தாக்கக்கூடும் என்றும் உள்ளூர பயந்தனர் போலும். ஸ்ரீபகவான், முதலில் நாய் கருப்பனை வேறு பத்திரமாக கொட்டகைக்குத் தூக்கிப் போய்விடும்படியும், கூடத்திலேயே அதை விட்டுச் சென்றால் திருடர்கள் அடித்துத் துன்புறுத்துவர் என்றும் ராமகிருஷ்ணஸ்வாமியிடம் பணித்தார். பின்னர் ஸ்ரீபகவானும் மற்ற மூவர்களான மஸ்தான், தங்கவேலுப்பிள்ளை மற்றும் முனிசாமி என்ற சிறுவன் (ஆசிரமத்தில் பூஜை செய்யும் பையன்) ஆகியோருடன் வடக்குப்புறக் கதவு வழியாக வெளியேறினர். திருடர்களோ கதவோரம் கைத்தடியுடன் நின்று கொண்டு, வெளியே வரும் ஒவ்வொருவரையும் தடியால் அடித்து அனுப்பினர். ஒருக்கால் எதிர்த்துத்தாக்க எண்ணியிருந்தால் அடிபட்ட பயத்தில் எதிர்க்க மாட்டார்கள் என்றோ அல்லது அவர்களை பலவீனமாக்க வேண்டும் என்ற நினைப்பிலோ தடியடி மேற்கொண்டனரோ என்னவோ? கடைசியாக வெளி வந்த ஸ்ரீபகவானின் இடது தொடையில் அடி விழுந்தது. பகவானோ நின்று நிதானித்து, இன்னமும் திருப்தியில்லை என்றால் இன்னொரு காலிலும் அடிக்கலாம்" என்றார். அச்சமயம் ராமகிருஷ்ணசுவாமி திரும்ப ஓடி வந்து குறுக்கே விழுந்து பகவான் மீது மேலும் அடி விழாமல் தடுத்தார்.

ஸ்ரீபகவானும் மற்ற நால்வரும் கூடத்து வடபுறம் அமைந்திருந்த கூரைக் கொட்டகையில் உட்கார்ந்திருந்தனர். (அக்கொட்டகை பின்னர் எடுக்கப்பட்டு விட்டது.) "அந்த இடத்தை விட்டு நகரக் கூடாது. அசைந்தால் மண்டையை உடைத்து நொறுக்கி விடுவோம்" என்று கள்வர்கள் கத்தினர்.

"கூடம் முழுவதும் உங்களுக்குத்தான்; இஷ்டப்படி செய்" என்று பகவான் பதிலிறுத்தினார். ஒரு திருடன் அவர்களை அணுகி 'அரிக்கன் விளக்கு வேண்டும்' என்று அதட்டிக் கேட்டான். ஸ்ரீபகவானின் கட்டளைப் படி ராமகிருஷ்ணஸ்வாமி ஓர் விளக்கை ஏற்றி அவனிடம் கொடுத்தார். இன்னொருத்தன் திரும்பவும் வந்து அலமாரிச் சாவிகளைக் கேட்டான். சாவிக் கொத்தை குஞ்சுஸ்வாமி எடுத்துப் போய் விட்டார் என்று தெரிந்ததும் திருடர்கள் அலமாரிக் கதவுகளை உடைத்துத் திறந்தனர். அவற்றுள் அவர்களுக்குக் கிடைத்தவை விக்கிரக அலங்கரிப்புக்கான மெல்லிய வெள்ளித் தகடுகள் சிலவும், ஒரு சில மாம்பழங்களும், கொஞ்சம் அரிசியும் (எல்லாமாகச் சேர்ந்து பத்து ரூபாய் மதிப்புள்ளவை) மட்டுமே. தங்கவேலுப் பிள்ளைக்குச் சொந்தமான ஆறு ரூபாயையும் அபகரித்தனர்.

கிடைத்தவை மிகச் சொற்பமே என்று ஏமாற்றம் அடைந்தனர். ஒரு திருடன் திரும்பவும் அவர்களை அணுகி "பணத்தையெல்லாம் எங்கே பதுக்கி வெச்சிருக்கே, மரியாதையா சொல்லிவிடு" என்று தடியைச் சுழற்றிக் கேட்டான்.

அவனை நோக்கி ஸ்ரீபகவான், "நாங்களோ ஏழை சாதுக்கள். மற்றவர் இடும் பிச்சையில் காலம் ஓட்டி வருகிறோம். ரொக்கப் பணம் ஏதும் என்றும் கிடையாது" என்றார். திருடன் தொடர்ந்து வெருட்டிக் கேட்ட

போதிலும் அதே பதிலையே கேட்டுத் திருப்தியடைந்து கூடத்திற்கு திரும்ப நேர்ந்தது.

ராமகிருஷ்ணஸ்வாமியையும் மற்றவர்களையும் அடிபட்டுக் கன்றிய காயத்திற்குக் களிம்பு பூசிக் கொண்டு வருமாறு ஸ்ரீபகவான் பணித்தார்.

''தங்களுக்குக் காயம் ஏதும் படவில்லையா ?'' என்று கவலையுடன் வினவினார் ராமகிருஷ்ணஸ்வாமி.

பகவான் சிரித்தவாறே சிலேடையாக, ''எனக்கும் கொஞ்சம் பூசை கிடைத்தது'' என்றாராம்.

அவரது தொடையில் ஏற்பட்ட கைத்தடி வரித் தழும்பைக் கண்ணுற்ற ராமகிருஷ்ணஸ்வாமி திடீரென கோபாவேசம் கொண்டார். அருகில் கிடந்த இரும்புக் கடப்பாறைக் கையிலெடுத்தார். கூடத்தினுள் சென்று திருடர்களைக் கடப்பாறை கொண்டு தாக்கப் பதற்றத்துடன் அனுமதி கேட்டார். ஆனால் பகவானோ அவரைத் தடுத்து அறிவுரைத்தார்: ''நாமோ சாதுக்கள். நமது தர்மத்தைக் கைவிடலாமா ? நீர் உள்ளே போய் அடிதடியில் இறங்கினால் சிலர் செத்துப் போவார்கள். அப்போது உலகம் நம்மைத்தான் குறை கூறும்; கள்வர்களை அல்ல. அவர்களோ முறைகெட்டுப்போன ஆட்கள். அறியாமை அவர்களது கண்ணை மறைக்கிறது. ஆனால் நாமோ நன்மை தீமைகளை அறிந்து நேர்மையைக் கடைபிடிக்க வேண்டியவர்கள். நீர் தவறுதலாக நாக்கைக் கடித்துக் கொண்டால் அதற்காக உமது பல்லை உடைத்துத் தூர எறிவீரா ?''

இரவு இரண்டு மணி அளவில்தான் கள்வர்கள் இடத்தை விட்டு அகன்றனர். சிறிது நேரத்தில் குஞ்சுஸ்வாமி கிராம அதிகாரியுடன் இரண்டு போலீஸ்காரர்கள் சகிதமாகத் திரும்பி வந்தார். அச்சமயம் வடப்புறக் கொட்டகையிலேயே அமர்ந்தவண்ணம் பக்தர்க

ளுடன் ஆன்மிக விவகாரங்களைப் பற்றியே ஸ்ரீபகவான் அளவளாவிக் கொண்டிருந்தார். என்ன நடந்தது என போலீஸார் விசாரித்தபோது அவர், 'ஒரு சில அறி விலிகள் ஆசிரமத்துள் புகுந்து, திருடிப் போக ஒன்றும் கணிசமாகக் கிடைக்காமல் ஏமாந்து திரும்பிப் போய் விட்டனர், அவ்வளவுதான்' என்றார். அவ்வாறு குறித்துக் கொண்டபின் போலீஸ்காரர்களும் கிராம அதிகாரியும் திரும்பிச் சென்றனர். அப்போது சிறுவன் முனிசாமி அவர்கள் பின்னால் ஓடிச் சென்று, 'திருடர்கள் சுவாமி யையும், மற்றவர்களையும் தடியால் அடிக்கவும் அடித் தனர்' என்று கூறினான். காலையில் போலீஸ் சர்க்கிள் இன்ஸ்பெக்டரும், சப்–இன்ஸ்பெக்டரும் தலைமை கான்ஸ்டபிளும் விசாரிக்க வந்தனர். பின்னர் டிபுடி சூப்பிரண் டண்டும் வந்தார். அவர்கள் யாரிடமும் ஸ்ரீபகவான் தாம் காயம் அடைந்ததைப் பற்றித் தாமாக ஏதும் கூறினாரில்லை.

சில நாட்களுக்குப்பின், திருட்டுப்போன சாமான் கள் பிடிபட்டன. கள்வர்கள் கைது செய்யப்பட்டு சிறை தண்டனைக்குள்ளாயினர்.

# 8. அன்னை அழகம்மாள்

*1900—ஆம் ஆண்டு ஸ்ரீ பகவானின் தாயார் தமது துறவி மகனை அழைத்துப்போகும் முயற்சியில் தோல்வி யுற்றுத் திரும்பிய சிறிது காலத்திற்குள் அவரது மூத்த மகன் நாகசாமி காலமாகி விட்டார். இரண்டாண்டு களுக்குப் பிறகு கடைசி மகன் நாகசுந்தரம், பதினேழு வயது இளைஞன், முதன் முறையாக திருவண்ணாமலை சென்று தமையனைக் கண்டார். பார்த்தவுடன் உணர்ச்சி மேலிட்டு அண்ணனை அணைத்தபடி கதறி அழுதார். ஸ்ரீ பகவானோ மனச்சலனமின்றி மவுனமாய் அமர்ந் திருந்தார்.*

*பின்னர், 1914—இல் தாயார் அழகம்மாள் திருப்பதி யாத்திரை சென்று திரும்பி வருகையில் தனையனைக் காண திருவண்ணாமலை வந்தார். வந்தவுடன் நோய் வாய்ப்பட்டுப் படுத்துவிட்டார். டைபாய்டு காய்ச்சலுக் கான அறிகுறிகள் தோன்றி வாரக்கணக்கில் படுத்த படுக்கையாகக் கிடந்தார். அந்நாட்களில் ஸ்ரீ பகவான் ஆழ்ந்த அக்கறையோடு அன்னையைப் பராமரித்தார். சுரவேகம் தீவிரமாக இருந்தபோது தாயார் குணமடை வதற்காக சிவனைப் பிரார்த்திக்கும் முறையில் ஸ்ரீ பகவான் நான்கு வெண்பாக்கள் இயற்றினார். வரும் விளைவுகளை மாற்ற வல்ல மறை ஆற்றல் படைத்தவர் அவர் என்பதற்கான ஒரே சான்றாக அப்பாடல்கள் அமைந்தன.*

**அலையா வருபிறவி யத்தனையு(ம்) மாற்ற**
**மலையா(க) எழுந்த மருந்தே — தலைவாநின்**
**றாள்கதியாய் வாழுமென் றாய் தாப மாற்றியே**
**யாள்வதுவு முன் கடனே யாம்.**

**காலகா லாவுன் கமல பதஞ்சார்ந்த**
**பால னெனை யீன்றாள் பாலந்தக் — காலன்றான்**

**வாரா வகையுன்கால் வாரிசமே காட்டுவா**
**யாராயிற் காலனுமே யார்?**

**ஞானாங்கி யாயோங்கு நல்லருண வோங்கலே!**
**ஞானாங்கி யாலன்னை நல்லுடலை – ஞானாங்க**
**மாகச்செய் து(உ)ன்பதத்தி லைக்கியமாக் கிக்கொள்வாய்**
**சாகத்தீ மூட்டுவதேன் சாற்று.**

**மாயா மயக்கமதை மாற்றருண மாமலையென்**
**றாயாரு மயக்ககற்றத் தாமதமேன்– றாயாகித்**
**தன்னையடைந் தார்வினையின் றாக்கறுத்தான் வாருலகி**
**லுன்னையலா லுண்டோ வுரை.**

*'காய்ச்சலிலிருந்து அன்னையைக் காத்தருளுக அரு ணாசல சிவமே' என்ற பிரார்த்தனைப் பாடலாக மேற் சொன்ன வெண்பாக்கள் தோன்றினாலும் 'காய்ச்சல் போன்ற மாய உலக வாழ்வினின்றும் தாயாரை விடு விடுத்து ஒருமையாம் உண்மையில் அவளைச் சேர்த்து விடு' என்பதே அவ்வேண்டுதலின் உட்பொருளாகும்.*

*அழகம்மாள் பூரண குணமடைந்தார் என்று சொல் லத் தேவையில்லை. பின்னர் அன்னை மானாமதுரை திரும்பிச் சென்றார். ஆயினும், மகரிஷியான மகனின் பிரார்த்தனையைத் தொடர்ந்தாற்போல் சூழ்நிலையும் விரைவில் வெகுவாகமாறி, தாயாரை லோகாயத வாழ் விலிருந்து மீட்டு ஆசிரமத்தில் சேர்ப்பித்தது. பழைய கடன்களை அடைப்பதற்காகவும் மற்ற செலவுகளுக் காகவும் திருச்சுழியிலிருந்த பரம்பரை வீட்டை விற்று விட நேர்ந்தது. அவரது மைத்துனர் நெல்லையப்ப அய்யரும் காலமானார். அன்னையின் கடைசி மகன் நாகசுந்தரத் தின் மனைவி மங்களம் ஓர் ஆண்மகவை விட்டு விட்டு 1915–இல் இறந்து போனாள். மூன்றே வயதான அக் குழந்தையை அத்தை அலமேலு வளர்ப்பு மகனாக*

ஏற்றாள். நிர்க்கதியாகிவிட்ட அழகம்மாள் இனி வய தான காலத்தில் சுவாமிமகனுடன் இறுதி நாட்களை கடத்தத் தீர்மானித்தவராய் 1916–ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் திருவண்ணாமலை வந்தடைந்தார்.

முதலில் எச்சம்மாளுடன் சிலநாட்கள் தங்கினார். ஸ்ரீபகவானுடன் அன்னை தங்குவதை சில பக்தர்கள் விரும்பவில்லை. ஏனெனில் அதற்கு ஒவ்வாமல், 1896–இல் வீட்டைவிட்டு வெளியேறியதுபோல, இப்போது மவுனமாய் வேறு இருப்பிடம் தேடிச் சென்றுவிடுவாரோ என்று அவர்களுக்கு பயம். ஆனால் இப்போதோ விஷயமே வேறாகிவிட்டதே! எவ்வாறெனில், இன்று வீட்டைத் துறந்து வந்திருப்பது தாயார் அழகம்மாள்தான். வீட்டில் முன்பு அடைபட்டுக்கிடந்த வெங்கடராமன் அல்லவே!

ஸ்ரீபகவானின் கம்பீரம் எவர்க்கும் மலைப்பூட்டக் கூடியது. கனிவார்ந்த பாங்குள்ளவராயினும் இம்மாதிரி யான விஷயங்களை யாரும் அவரிடம் நேரடியாகக் கேட்கத் துணிய மாட்டார்கள். யாரேனும் அவரை அவ்வாறு வினவினாலும்கூட, நிச்சிந்தையாக, பதிலொன் றும் கூறாது அமர்ந்திருப்பார். அவருக்கேது விருப்பு வெறுப்பு மறுப்புகள்? முன்பு நோய் வாய்ப்பட்ட அன்னை குணமடைவதன் பொருட்டு அவர் புனைந்த பாடல்கள் இவ்வகையில் ஓர் தனித்த விதிவிலக்கு எனக் கொள்ளலாம். இப்போது மக்களோடு சகஜமாகப் பழகிவரும் நிலையை ஸ்ரீ பகவான் அடைந்து விட்டமையால், தாயாரையும் ஆசிரமக் குடும்பத்தில் ஒருவராக ஏற்றார்.

தாயார் தனையனுடன் தங்கத் தொடங்கிய சிறிது காலத்திற்குள்ளாகவே ஸ்ரீ பகவான் விரூபாட்ச குகை வாசத்தை விட்டு, ஸ்கந்தாசிரமத்தை உறைவிடமாகக் கொண்டார். மலைச் சரிவில் விரூபாட்சத்திற்கு சற்று உயரே அமைக்கப்பட்ட விசாலமான குகைத் தளமே

ஸ்கந்தாசிரமம் என்பது. அவ்விடத்தில் ஓர் பாறைக் கசிவைக் கண்ணுற்ற ஸ்ரீ பகவான், அதற்கடியில் நீர் ஊற்று தேங்கிக் கிடக்கிறது என சரியாக ஊகித்திருந்தார். அவ்விடத்தை வெட்டி, பாறைகளை உளியால் குடைந்து தகர்த்து ஊற்றைக் கிளப்பி, ஆசிரமத்துக்குத் தேவையான தண்ணீர் எப்போதும் கிடைக்க வகை செய்யப்பட்டது. குகைக்கு முன்புறம் ஓர் சிறு நந்தவன மும் அமைக்கப்பட்டது.[1] ஆசிரமவாசிகளுக்கும் வந்து போவோருக்கும் அன்னை அழகம்மாளே அன்னம் சமைக் கலானார். இவ்வாறு ஆசிரம வாழ்க்கை ஓர் புதுத் திருப்பம் பெற்றது.

தமது கடைசி பிள்ளை நாகசுந்தரத்தையும் ஆசிர மத்திற்கே அழைத்துக்கொள்ள விரும்பிய அழகம்மாள், அவ்வாறே ஓர் பக்தர் மூலம் செய்தி சொல்லியனுப் பினார். திருவங்காடு அலுவலகமொன்றில் தன் வேலையை ராஜீனாமா செய்துவிட்டு, நாகசுந்தரமும் திருவண்ணா மலை வந்து சேர்ந்தார். ஆரம்பத்தில் டவுனிலேயே தங்கியிருந்து, நண்பர் வீட்டிலோ வேறெங்கோ உண வருந்தி, தினந்தோறும் ஆசிரமத்துக்கு வந்து போக லானார். கூடிய விரைவில் முறையாக சந்நியாசம் ஏற்று, காஷாயம் தரித்து 'நிரஞ்சனாநந்த சுவாமி' எனப் பெயர் பூண்டார். சுவாமியின் இளைய சகோதரர் என்பதனால் ஆசிரமத்தில் பெரும்பாலும் அவரை 'சின்ன சுவாமி' என்றே விநயமாக அழைக்கலாயினர். சிறிது காலம் வரை அவர் நாள்தோறும் ஊர்ப்புறம் சென்று பிட்சை பெற்று உண்டு வந்தார். எல்லோருக்கும் ஆசிரமத்தி லேயே உணவு கிடைக்கும்போது சுவாமியின் சொந்தத்

1. உழைப்பாளியான கந்தசாமி எனும் பக்தன், சில கூலி யாட்களின் உதவியோடு முட்புதர்களை அகற்றி, பாறையை உடைத்துக் கற்களைப் பரப்பி சமதளமாக்கி நந்தவனத்தையும் அமைத்ததால், 1917-இல் நிறுவப்பட்ட அந்த ஆசிரமம் அதனை சாதித்த கந்தசாமியின் வடமொழித் திரிபுப் பெயரால் 'ஸ்கந்தா சிரமம்' என்று அழைக்கப்படலாயிற்று.

தம்பி அவ்வாறு யாசிக்கச் செல்வது எவ்விதத்திலும் பொருந்தாது என்று எண்ணிய பக்தர்கள் அவரை ஆசிரமத்திற்கே வந்து தங்கிவிடுமாறு வற்புறுத்தி சம்மதிக்க வைத்தனர்.

ஸ்ரீபகவான் கிட்டத்தட்ட குடும்ப வாழ்க்கைக்குத் திரும்பி விட்டவர் போன்று சகஜமாகப் பழகலானார். அவரது 'குடும்பம்' என்பதில் ஆசிரம வாசிகளும் பக்தர்களும் அடக்கம். சில சமயங்களில் ஆசிரமத்தைத் தமது குடும்பம் என்று அவரே குறிப்பிட்டுள்ளார். துறவு நிலையும், குடும்பம் போன்ற ஆசிரம வாழ்வும் ஒன்றுக்கொன்று முரணானவை என்ற நினைப்பின் காரணமாகவே அவரது தாயாரும் தம்பியும் ஆசிரமத்தில் அவரோடு வசிப்பதை ஆரம்பத்தில் தவிர்த்து வந்தனர். ஆசிரம குடும்பத்தைப் பற்றி சேஷாத்ரி சுவாமிகள் ஒருமுறை தமக்கே இயல்பான விசித்திரக் கேலி மொழியில் விமரிசித்துள்ளார். அவரைக் காண வந்த அன்பர் ஒருவர், மலைமீது ஏறி ரமண சுவாமியையும் தரிசித்துச் செல்ல விரும்பினார். உடனே சேஷாத்ரி சுவாமிகள், "அப்படியா, பேஷாய்ப் போய்ப் பார்த்துவாரும். அங்கே ஒரு குடும்பமே நடக்கிறது உமக்கு தோசை இட்லி எல்லாம் கூடக் கிடைக்கலாம்'' என்றாராம்!

சேஷாத்ரி சுவாமியின் வேடிக்கைப் பேச்சின் கருத்து என்னவென்றால், குடும்பஸ்தனின் நிலை ஓர் சாதுவின் உயரிய துறவு நிலைக்குத் தாழ்வானதே; ஏனெனில் குடும்ப பந்தங்கள் அற்ற துறவியே ஆன்மிகத் தேட்டத்தில் முழுக் கவனம் செலுத்தக் கூடும். குடும்பத்தோடு வாழ்பவரோ எத்தனையோ வேலைகளை கவனிக்கவேண்டியிருக்கிறது. வீட்டையும் உடைமைகளையும் ஒருங்கே துறக்க முற்படும் வைராக்கியமே ஆன்மிக முன்னேற்றத்தின் முதற் படியாகக் கருதப்படுகிறது. ஆகவேதான் அவ்வாறு துறவு மேற்கொள்ளுதல் அவசியம்தானே

என்று பக்தர்கள் ஸ்ரீ பகவானைக் கேட்பதுண்டு. ஆனால் அவரோ ஆன்ம சாதனைக்குத் துறவறம் பூணுவதை ஒரு போதும் ஆதரிக்கவில்லை. துறவு மேற்கொள்ளுதல் என்பது எதனை விட்டும் விலகிக் கொள்வது அல்ல, அன்பை விரித்து அனைவரையும் அரவணைப்பதே உண்மைத் துறவின் தாத்பரியம் என்பதை விளக்கிய ஓர் உரையாடலை கீழே கொடுத்துள்ளோம்:

பக்தன்: என் வேலையை ராஜீனாமா செய்துவிட்டு ஸ்ரீபகவானுடனேயே சதா இருந்துவர விரும்புகிறேன்.

பகவான்: பகவான் எப்போதும் உம்முடனேதான் இருந்து வருகிறார். உமதுள்ளும் உள்ளார். உம்முள் உறைந்துள்ள ஆன்மாவே பகவான். அதைத்தான் நீர் அறிந்துகொள்ளவேண்டும்.

பக்தன்: ஆனால் பந்தங்கள் அனைத்தையும் விடுத்து, உலகைத் துறந்து சந்நியாசி ஆகிவிட வேண்டும் என்ற உந்தல் என் உள்ளூர உள்ளதே?

பகவான்: 'துறப்பது' என்றால் உடைகளைக் களைந்து காஷாயம் தரிப்பதோ அல்லது வீடு வாசலைத் துறப்பதோ அல்ல. ஆசாபாசங்களையும் பற்றுக் களையும் விட்டுவிடுவதே உண்மைத் துறவறம் ஆகும்.

பக்தன்: ஆனாலும், உலகைத் துறந்தாலன்றி கடவுளை ஒரு முகமாக வழிபட இயலாமற் போகுமே?

பகவான்: அப்படியில்லை. மெய்யான துறவு மேற் கொள்பவர் உலகை இழப்பதில்லை; உலகத்தோடு தம்மை இழைத்துக் கொள்கிறார். உள்ளன்பை விரித்து வையகம் முழுவதையும் அன்பால் அரவணைத் துக் கொள்கிறார். உலகளாவிய அன்பே ஓர் பக்த னின் நோக்கு. வீட்டைத்துறந்து காவியுடை தரிப் பதைக் காட்டிலும் உலகம் தழுவிய அன்புப் பெருக்கே ஓர் உண்மை பக்தனின் அணுகுமுறை என்பதே சரியான விளக்கமாக அமையும்.

பக்தன்: பந்தபாசங்களிலிருந்து மீள்வதற்கு துறவு மேற் கொள்வதுதானே சிறந்த மார்க்கம்?

பகவான்: பாச வலையில் சிக்காமல் சுதந்திர மனோ பாவம் கொண்டவர்களுக்கு அவ்வாறு இருக்கக் கூடும். ஆனால் நீர் துறவு என்பதன் உட்கருத்தை சரியாக உணரவில்லை. உலக வாழ்வை துச்சமெனத் துறந்த மகான்களெல்லாம் குடும்ப வாழ்க்கையின் மேலுள்ள வெறுப்பினால் அவ்வாறு செய்யவில்லை. மானிட குலம் உட்பட சகல ஜீவராசிகளைத் தழுவிய அவர் களது மன விசாலமும் அன்புப் பரிமாணமுமே மகான்களின் துறவு மனப்பான்மைக்குக் காரண மாக அமைந்தன.

பக்தன்: குடும்ப பந்தங்களை எப்போதாவது களையத் தானே வேண்டும்? அதனால் நான் முதற்படியாக இப்போதே சொந்த பந்தங்களை ஏன் முறித்துக் கொள்ளக் கூடாது? அப்போதுதானே நான் அனைவரிடமும் சமமாக அன்பு செலுத்த இயலும்?

பகவான்: அத்தகைய நிறையன்பு காட்ட நீர் விழைந் தால் – உயிரினங்கள் அனைத்திற்கும் உமது இதயத் தில் இடமளிக்கும் அளவிற்கு எண்ண விசாலம் ஏற்பட்டு விட்டது எனில் – இதையோ அதையோ எதையோ துறக்கவேண்டும் என்பது போன்ற சிந்தனை எழாது. நன்கு பழுத்த பழம் மரக் கிளையிலிருந்து தானாக உதிர்ந்து விழுவது போல நீர் விவகார வாழ்கையினின்றும் ஒதுங்கி விடுவீர். வையகம் பூராவுமே உமது குடும்பம் என்பதை உணர்ந்துகொள்வீர்.

இம்மாதிரியான கேள்விகள் அடிக்கடி எழுந்தன. அவற்றிற்குக் கிடைத்த பதில்களோ பலரையும் திகைக்க வைத்தன என்பதில் வியப்பென்ன? ஏனெனில், இவ் விஷயத்தில் ஸ்ரீ பகவானின் அபிப்பிராயம், சம்பிரதாய

வழக்குக்கு மாறாக இருந்தது. தொன்றுதொட்டு வழங்கப்பட்ட ஆன்மிக உண்மைகள் காலத்தால் மாற்றவொண்ணாதவை என்றபோதிலும், நித்திய சத்தியத்தை உணருவதற்கான பயிற்சி முறைகள் யுக தர்மத்தையொட்டி ஞான ஆசான்களால் திருத்தியமைக்கப் பட்டதுண்டு. தற்கால நவீன உலகில் துறவு மேற்கொள்வது என்பது முற்றிலும் இயலாத செயல். ஏன், ஆசார அனுஷ்டானங்களைக்கூட முழுமையாகப் பின்பற்ற முடிவதில்லை. பக்தர்களில் பலர் வணிகர்கள், தொழிலதிபர்கள், அலுவலர்கள், மருத்துவர்கள், வழக்குரைஞர்கள், பொறியியலாளர்கள். இத்தகையோர் நாகரீக நகர்ப்புற வாழ்க்கைப் பாணியில் பல விதமாகப் பிணைந்துள்ளார்கள். இருந்தும், மோட்சம் அல்லது ஆன்ம விடுதலையை நாடுபவர்கள்.

ஸ்ரீபகவான் திரும்பத் திரும்ப அளித்துள்ள விளக்கம் இதுவே: உண்மையான துறவு மனத்தளவில் நிலைநாட்டப்பட வேண்டியதொன்று. உடல் சார்ந்த தன்னல மறுப்புக்கள் மூலமாக மட்டுமே அடையக் கூடியது அன்று. கடமை, உடமை தொடர்ந்தபோதிலும் துறவு மனப்பான்மைக்கு அவை தடையாக இராது.

"நீ கிருஹஸ்தன் என்று நினைத்துக்கொள்வானேன் ? சந்நியாசி ஆனபிறகும்கூட 'நான் சந்நியாசி' என்ற புது எண்ணம் உன்னைத் தொடரும். நீ வீட்டிலிருந்தாலும், அதைத் துறந்து காட்டுக்குப் போனாலும் உன் மனம் உன்னை விடாது தொடரும். அகந்தையே எண்ணங்களின் மூலம். அதுவே உடலையும் உலகத்தையும் தோற்றுவித்து உன்னை கிருஹஸ்தன் என்று எண்ணிக் கொள்ளும்படி செய்கிறது. நீ துறவு பூண்டால், 'நான் கிருஹஸ்தன்' என்னும் நினைவிற்குப் பதிலாக 'நான் சந்நியாசி' என்ற நினைவையும், வீட்டு நினைவிற்குப் பதிலாகக் காட்டு நினைவையுமே கூட்டிவைக்கும்.

இப்படிப்பட்ட மனத் தடைகள் எப்பொழுதுமே உண்டு. இந்த வன சமூகத்தில் அவை இன்னும் அதிகரிக்கவும் செய்யும். இருக்கும் ஸ்தலத்தை மட்டும் மாற்றிவிடுவதால் ஒரு லாபமும் இல்லை. மனமே பெரும் தடை. வீட்டிலிருந்தாலும் காட்டிலிருந்தாலும் இத்தடையை மாற்றவேண்டும். காட்டில் மாற்றக் கூடியதை வீட்டில் ஏன் மாற்றக் கூடாது? ஆகையால் ஸ்தலத்தை ஏன் மாற்ற வேண்டும்? இருப்பிடம் ஏதாக இருந்தாலும், உன் பிரயத்தனத்தை இப்பொழுதே செய்யலாம்'' (மகர்ஷி வாய் மொழி, பாகம் 1, அத்தியாயம் 1).

செய்யும் தொழில் சாதனைக்குத் தடையாக அமைவதில்லை, எத்தகைய மனப்பான்மையுடன் வேலை செய்கிறோம் என்பதைப் பொருத்தே தடைகள் உண்டாகின்றன, அல்லது விலகுகின்றன என்றும், பற்றின்றிச் செய்யும் வேலை, செய்வோனை பந்தப்படுத்துவதில்லை என்றும் அவர் விளக்கம் கூறியுள்ளார். மகரிஷி வாய் மொழி வாசகப்படி, " 'நான் வேலை செய்கிறேன்' என்ற உணர்ச்சியே தடை. 'வேலை செய்வது யார்?' என்று விசாரித்து, உன் உண்மை சொரூபத்தை நினைவிற் கொள்; வேலை தானாக நடக்கும். உன்னை பந்தப் படுத்தாது.''

இது பற்றிய ஸ்ரீபகவான் அளித்த விரிவான விளக்கத்தை "பகவானுடன் நாள்தோறும்'' (மார்ச் 1945 முதல் ஜனவரி 1947 வரை) என்ற ஆங்கில நூலில் தேவராஜ முதலியார் குறிப்பெடுத்து பின்வருமாறு தந்துள்ளார்:

"வாழ்க்கையில் அனைத்து நடவடிக்கைகளிலும் பற்றின்றி செயல்படுவது சாத்தியமே ஆகும். ஆன்ம சொரூபத்தில் லயித்துப்போன எவரும் அன்றாடக் கடமைகளை சரிவரச் செய்யமுடியாது என எண்ணுவது தவறு. இது ஓர் நடிகனின் செயல்போல. நடிகன் தான் ஏற்கும் கதாபாத்திரத்திற்கான

உடைகளை அணிகிறான். அவ்வாறே நடிக்க முற்படுகிறான். நடிக்கும் பாத்திரமாகவே தன்னை பாவித்துக்கொண்டு உணர்ச்சி பொங்க செவ்வனே நடிக்கிறான். ஆனாலும் அவனுக்கோ மிக நன்றாகத் தெரியும், நடிப்பவனான தான் வேறு, தாங்கி நடிக்கும் நாடக பாத்திரம் வேறு என்று அதே போன்று, இவ்வுடல் 'நான்' அல்ல, ஆன்மாவே நான் என நீ உணர்ந்து கொண்டுவிட்டால், இவ்வுடலே நான் என்ற நினைப்போ, தேகாயதமான மற்ற எண்ணங்களோ உன்னை ஏன் தொந்திரவு செய்ய வேண்டும்? ஆன்மாவில் ஒருங்கே ஒடுங்கிவிட்ட ஒருவரை உடல் சார்ந்த செயல் ஏதும் அசைக்க மாட்டாது. இவ்வாறு ஆன்ம உணர்வில் ஒன்றியபின் கடமைகளையும் காரியங்களையும் உடல் செவ்வனே புரிந்துவருவதில் ஆன்ம உணர்வு எவ்விதத்திலும் குறுக்கிடாது. உண்மையில் தான் வேறு என்று நடிகன் நன்கறிந்திருந்தும், மேடையில் நடிக்கும்போது அவ்வுண்மை அவனது தேர்ந்த நடிப்பை பாதிப்பதில்லை அல்லவா? அதே போலத்தான் இதுவும்.''

தியானமோ அல்லது தோத்திர ஸ்மரணமோ தொழிலில் குறுக்கிடுவதில்லை. செய்யும் தொழிலும் தியானத்திற்கு இடையூராகாது. பால் பிரண்டனுடன் நிகழ்ந்த சம்பாஷணையில் இதனை விளக்கினார்:

பகவான்: செயல் வடிவான வாழ்க்கையை விட்டுவிட வேண்டியதில்லை. தினந்தோறும் ஒரு மணி அல்லது இரண்டு மணி நேரம் தியானம் செய்தால் மற்ற நேரங்களில் உமது கடமைகளை ஆற்றிவரலாமே? சரியான முறையில் தியானம் புரிந்து வந்தால் அதன் விளைவாகத் தூண்டப்பெறும் மன ஆற்றல், மற்ற வினையாற்றல்களில் ஈடுபடும்போதும் தொடர்ந்து ஊடுருவும். இவ்விரு செயல்களும் ஒரே கருத்தை இரு விதமாக எடுத்துரைப்பது போன்று அமைந்

துள்ளன எனவும் கொள்ளலாம். தியான நிலையில் உம்மை ஆட்கொள்ளும் மனப்பாங்கே நீங்கள் மேற் கொள்ளும் அலுவல்களிலும் இழைந்தோடும்.

பிரண்டன்: அவ்வாறு செய்வதால் ஏற்படும் விளைவு என்னவோ ?

பகவான்: அவ்வாறு தொடர்ந்து தியானம் சார்ந்து தொழில் செய்து வருகையில், மக்கள், நிகழ்ச்சிகள், பொருட்கள் மீதான உமது அணுகுமுறை மாற்றம் கண்டு வருவதை உணர்வீர்கள். உம்மையறியாம லேயே உமது செய்வினைகள் தியான நோக்கி லேயே நடைபெற்று வரும்.

உலகத்தோடு பிணைக்கும் சுயநலத்தை மனிதன் சரணடைவித்து, பொய்யான 'நான்' எனும் அகந் தையைக் கைவிடுதலே உண்மையான துறவு.

பிரண்டன்: உலகாயத நடவடிக்கைகள் நிரம்பிய வாழ்க் கையில் எவ்வாறு தன்னலம் தவிர்த்து செயலுறக் கூடும் ?

பகவான்: வேலைக்கும் விவேகத்திற்கும் இடையே முரண் பாடு ஏதும் இல்லை.

பிரண்டன்: அப்படியென்றால் ஒருவர் எப்போதும் போல் தமது பணிகளில் தொடர்ந்து ஈடுபட்டு வரலாம் என்கிறீர்களா ? உதாரணமாக, ஒரு தொழிலை மேற்கொண்டவன் அதனைத் தொடர்ந்து நடத்திக் கொண்டு, அதே சமயம் ஞான விவேகமும் பெற முடியும் என்று கூறவருகிறீர்களா ?

பகவான்: ஏன் முடியாது ? ஏனெனில், அவ்வாறு தியா னத்துடன் தொழில் செய்பவர், தாம் முன்பு இயங்கி வந்த அதே நபர் அல்ல என்பதையும் உணரத் தொடங்கி விடுவார். அவரது உளப்பாடு மெல்ல மெல்ல மாறித் திரிந்து விரிந்து, சிறுமையான 'தான்' எனும் அகந்தையினின்றும் கழன்று, அப்பா லுள்ள 'அதனில்' ஒன்றிவிடும்.

'தொழிலைத் தொடரவும்' என்ற வலியுறுத்தல் பலரையும் முதலில் குழப்பத்தில் ஆழ்த்திற்று. அவ்வாறு தொழிலைத் திறன்பட நடத்திச் செல்ல இயலுமா என்று அவர்கள் சந்தேகித்தனர். ஆயினும், ஸ்ரீபகவானே ஓர் முன்னுதாரணமாக இருக்கிறாரே எனவும் வியந்தனர். ஆம்! செய்வன யாவற்றையும் மிகத் திருத்தமாய்ச் செய்வார் அவர். புரூஃப் தாள்கள் திருத்துவது, புத்தகம் 'பைண்டு' செய்வது, உணவு சமைப்பது, காய்கறி நறுக்குவது, கொட்டாங்கச்சியைக் அகப்பையாகச் செய்வது போன்று அவராகவே எடுத்துக் கொண்ட எந்தக் காரியத்திலும் கண்ணும் கருத்துமாக இருப்பார். பார்க்கப் போனால், செயலாற்றுபவன் 'நான்' என்ற போலிக் கருத்து அல்லது மனமயக்கத்தைக் களைவதற்கு முன்னதாகவே கூட, சொந்தப் பற்றொழித்த மனப் பாங்குடன் ஓர் காரியம் மேற்கொண்டு அதனைக் கருத்துடன் செயலாற்றினால், திறமை கூடுமே தவிர குறைவதில்லை. ஏனெனில் அத்தகைய மனப்பாங்கு வேலைத் தரத்தில் அக்கறையின்மைக்கு ஒப்பானதல்ல. செயல் புரிபவரின் அகந்தையுணர்வு அவரது காரியத்தில் குறுக்கிடாது; அவ்வளவே தான். அகந்தையின் தலைதூக்கலே திறமைக் குறைவுக்கும் உரசல் நெரிசலுக்கும் காரணமாக அமைகிறது. எல்லோரும் அவரவர் அலுவல்களை மனமுவந்து ஏற்று அகம்பாவமோ சுயநலமோ இல்லாமல் செயல்பட்டால் சமூகத்தில் சுரண்டல்கள் மறைந்துபோம். அனைத்து முயற்சிகளும் நேர்மையான வழியில் செல்லும். போட்டா-போட்டிகள் ஒழிந்து ஒருங்கிணைந்து செயலாற்றுவார்கள். இவ்வாறு உலகின் பிரச்சினைகள் பலவும் தாமே தீர்வு காணும்.

தன்னலம் தவிர்த்த காரியத்தில் திறமைக்குறைவு ஏதும் இராது என்பதற்கான சான்றுகளைக் கண் கூடாகக் காண்கிறோம். ஒவ்வொரு மதத்தின் நம்பிக்கை தழைத்த காலகட்டங்களில் தோன்றிய கலைச் செல்வங்கள்

அவற்றை ஆக்கியோரின் அளவற்ற திறமைக்கு எடுத்துக் காட்டாக விளங்குகின்றன. இடைக்காலத்து ஐரோப்பியக் கிறித்துவ தேவாலயங்களில் காணப்பெறும் சிற்பப் பாணிகளும், இஸ்லாமிய தொழுகை மாடங்களும், இந்துக்களின் பண்டைய சிற்பச் சிலைகளும் கோபுரங்களும், சீனத்து தாவோ ஓவியங்களும் போன்ற உன்னதப் படைப்புகளை வழங்கிய கலைஞர்கள் தங்களைச் செயற் கருவிகளாகவே பாவித்துப் பணியாற்றியவர்கள்; தமது பெயர் அல்லது ஊரைக்கூடத் தெரிவித்துக் கொள்ளாமல் கலைப்பணியில் தம்மை அர்ப்பணித்துக் கொண்டவர்கள். ஏன் ? இன்றைய மற்ற தொழில்களிலும் கூட இதற்கான உதாரணங்களைக் காணலாம். ஒரு டாக்டர் உணர்ச்சிவசப்படாமல் மன அமைதியுடன் மருத்துவம் மேற்கொள்ளும்போதுதான் திறமை மிக்கவராகிறார். இதன் காரணமாகவே மருத்துவர் பெரும்பாலோர் தமது குடும்பத்தினருக்குத் தாமே வைத்தியம் பார்க்க விரும்புவதில்லை. சொந்த முதலீடு செய்து புரட்டாத நிதிவிவகார வல்லுநர்தான் (ஃபைனான்ஸர்) மனம் கலங்காமல் திறமையுடன் பண விவகாரத்தில் செயல்படுவார். விளையாட்டுப் போட்டிகளையும் தான் எடுத்துக்கொள்ளுங்களேன் ? தன்னை மறந்து ஆட்டத்தில் இறங்கும் வீரனுக்கே அதிர்ஷ்டம் அடிக்கிறது!

குடும்பத்திலேயே இருந்துவரலாம் என்ற அறிவுரை ஸ்ரீபகவான் விஷயத்திலேயே பொருந்தவில்லையே, அவரே தமது வீட்டைவிட்டு வெளியேறியவர் தாமே என்ற வாதமும் எழுந்தது. “அது அவரவர் பிராரப்தம்” என்றே அவர் சுருக்கமாக பதிலிறுத்தினார். தினசரி வாழ்வில் அவர் வெளிமுகமாகப் பங்கேற்று சர்வசகஜமாகப் பழகியது என்பதென்னவோ அவரது பிந்தைய ஆண்டு காலத்தில்தான் என்றாலும் அத்தகைய சகஜ நிலையை தம்மைப் பின்பற்றுவோரும் ஏற்குமாறு வலியுறுத்தினார். மதுரையில் சிறிய தந்தை வீட்டில் அவருக்கு

ஆன்ம விழிப்பு வாய்த்ததையொட்டி உடனடியாக சகஜ நிலையை தம் விஷயத்திலேயே கடைபிடிக்கவில்லையே என்ற வினாவும் இங்கு எழக்கூடும். பிந்தைய ஆண்டுகளில் ஸ்ரீபகவானுக்கு சாத்தியமான இயல்பு நிலையையே அவர் தம்மை அண்டுவோரும் அடைய அருட்பாலிக்கிறார் என்பதே இதற்கு விடையாக அமையும்.

தாயாரின் சரிதைக்குத் திரும்புவோம்: தொடக்கத்தில் அன்னை அழகம்மாள் கடும் பயிற்சிக்கு ஆளாக நேர்ந்தது. ஆசிரமத்திலுள்ள மற்றவர்களை ஸ்ரீ பகவான் அவ்வப்போது கவனித்து அவர்களோடு பேசுவார். ஆனால் தாயாரின் பக்கம் திரும்பிப் பார்ப்பதே கிடையாது. அன்னை ஏதாவது பேச்செடுத்தாலும் பதிலொன்றும் கூறாது அகன்றுவிடுவார். "நான் என்ன பாபம் செய்தேனடா, முகம்கொடுத்துப் பேசமாட்டேனென்கிறாயே" என்று அன்னை முறையிட்டால் அவர், "நீ மட்டும் தான் அல்ல என் அம்மா; எல்லாப் பெண்மணிகளுமே என் தாய்மார்கள்தாம்" என்பார். ஏசு கிறிஸ்துவின் வாக்கை நினைவுபடுத்துவதாக உள்ளது இது. 'தங்கள் அன்னையும் சகோதர்களும் ஜனக் கூட்டத்து விளிம்பில் நின்று தங்களோடு பேசிப் போவதற்குக் காத்திருக்கிறார்கள்' என்று ஏசுநாதரிடம் யாரோ தகவல் தெரிவித்தபோது அதற்கு அவர், "பரமண்டலத்திலுள்ள என் பரமபிதாவின் திருவுளப்பிரகாரம் இயங்கிவரும் அனைவருமே என் சகோதரர், சகோதரி மற்றும் அன்னை தாம்"[1] என்றுரைத்தாராம்.

துறவி மகனின் நிர்த்தாட்சண்யத்தால் மனம் வெதும்பி எரிச்சலுற்ற அன்னை ஆரம்பகாலத்தில் கண்ணீர் மல்கி மறுகுவதுண்டு. ஆனால் போகப்போக அவருள் விவேகம் உருவாகிற்று. தான் ஒரு மகரிஷியின் தாயார் என்ற

1. Whosoever does the will of my Father Who is in heaven is my brother, sister and mother.

தற்பெருமை அகன்றது. அகந்தையுணர்வு க்ஷீணித்தது. விரைவில் அவர், ஆசிரமத்திற்கு வரும் பக்தர்களுக்குப் பணிவிடை புரிவதில் முழுமையாக ஈடுபடலானார்.

அச்சமயம் கூட அன்னையின் ஆசார அனுஷ்டானங்களைக் குறித்து ஸ்ரீபகவான் அவரைக் கேலி செய்வதுண்டு. பிராமணரல்லாத ஒருவர் மீது அன்னையின் புடவை சற்றே பட்டுவிட்டால், "அடடா, பார், தீட்டுப் பட்டுவிட்டதே, குலாசாரமே குடிமுழுகிப் போச்சு" என்று நையாண்டியாகப் பரபரத்துக் குரலெழுப்புவார். ஆசிரமத்தில் சுத்த சைவ சமையல் மட்டுமே உண்டு. ஆயினும், ஆசாரமிக்க சில பிராமண ஸ்திரீகள் போல அழகம்மாளும் ஒருசில காய்கறிகளை 'அசத்துவம்' என ஒதுக்கிவந்தார். அதுகுறித்தும் ஸ்ரீபகவான் கிண்டலடிப்பார்: "அதோ பார் வெங்காயம்! தொட்டுவிடாதே. மோட்சம் பெற அது ஒரு பெரும் முட்டுக்கட்டை, தெரியுமோல்யோ ?"

இங்கு இதையும் சொல்லத்தான் வேண்டும். அதாவது, ஸ்ரீபகவான் வைதீக நியமங்களுக்குப் பொதுவாக என்றும் மறுப்புத் தெரிவித்ததில்லை. ஆசார நியதிகளை கடைபிடிப்பதற்கான வெளித் தோற்றங்களில் அளவுக்குமீறி மோகம் கொள்வதையே மேற்சொன்ன சம்பவங்களில் கேலி செய்தார். பொதுவாக அவரும் பரிசுத்த சாத்விக உணவின் அவசியத்தை வலியுறுத்தினார். வெளிப்புற நடை உடை பாவனைகள் குறித்து எவ்விதமான கட்டுப்பாடுகளையும் அவர் விதிக்கவில்லை. ஸ்ரீபகவானின் வழக்கமான அணுகுமுறை இதுவே: 'ஆன்ம சிந்தனையை இதயத்தில் விதைத்து, அது உள்ளூர வளர்ந்து வருகையில், வெளிவிவகாரங்களிலும் அவ்வுணர்வை தானே படர விட்டுவிடுதல் வேண்டும். நியதிகள் பற்றிய எந்த ஆணையும் மனத்துள்ளிருந்து பிறப்பிக்கப்பட வேண்டும்'.

மேலைநாட்டவர் ஒருவர் ஆசிரமத்திற்கு வந்திருந்தார். முழுதும் புலாலுணவே அவரது நித்திய ஆகாரம். சாப்பிடுவதற்கு இறைச்சி மட்டுமே சிறந்தது, ருசிமிக்கது என்ற தீர்மானம் கொண்டவர் அவர். அவரது சொந்த உணவு பற்றி ஆசிரமத்தில் எவரும் பேச்செடுக்கவேயில்லை. ஆயினும் இறைச்சி என்ற சொல்லைக்கூட அறவே வெறுத்துத் தள்ளும் அளவுக்கு மனமாற்றம் அவருக்கு வெகு விரைவில் விளைந்தது.

இந்துக்கள் அல்லாதோர்க்கு இவ்விடத்தே ஓர் விளக்கம் அளிக்க வேண்டும். தாவர உணவு மட்டுமே உட்கொள்ளும் பழக்கத்திற்கான காரணம், உணவுக்காக உயிர்வதை செய்யலாகாது என்பதோ அல்லது மாமிசம் மீதான வெறுப்போ மட்டுமன்று. இவை முக்கிய காரணமாக இருப்பினும் கூட, இன்னொரு காரணமும் உண்டு. 'அசத்துவ' உணவு (இறைச்சி மட்டுமின்றி சிலவகை காய்கறிகளும் இதனில் அடக்கம்) மிருக இச்சைகளை அதிகரிக்கச்செய்து, ஆன்மிக முயற்சிக்கு இடையூறாக உள்ளது என்பதே அக்காரணம்.

தான் ஈன்றெடுத்த மகன் ஓர் தெய்வப் பிறவி என்பதை வேறுசில வழிகளிலும் அன்னையால் உணர முடிந்தது. ஒரு சமயம் அழகம்மாள் அவர் முன் உட்கார்ந்திருக்கையில் எதிரே மகனின் உருவம் மறைந்து, அவ்விடத்தே தூய ஜோதி வடிவில் ஓர் லிங்கம் தோன்றியதைக் கண்டார். மனித உருவைத் துறந்து ஜோதியில் கலந்துவிட்டார் என்று எண்ணிய அன்னை துக்கம் தாளாமல் கண்ணீர் விட்டார். ஆனால் விரைவில் லிங்கம் மறைந்துபோய் மகனின் நிஜ உருவம் மீண்டது. மற்றொரு தருணம், பரமசிவனைப் போலத் தன் பிள்ளையின் கழுத்தைச் சுற்றி நாகப்பாம்பு தவழ, சுற்றிலும் பாம்புகள் சூழ்ந்திருப்பதாகக் கண்ட தாயார் ஓவென்று அலறி, ''மகனே, பாம்புகளைத் துறத்திவிடேன்; எனக்கு

திகிலாக இருக்கிறது'' என்று பதறினார். மனித வடிவிலேயே தம்முன் நடமாடி வருமாறு மகனை வேண்டினார். இத்தகைய மாயாரூபங்களின் நோக்கம் நிறைவேறிற்று. தான்பெற்றெடுத்த மகனாக கண்டுகளித்து அன்பு செலுத்தும் வடிவமும்கூட மற்ற மாயா ரூபங்களைப் போலவே மனத்தோற்றமே என்பதாக அன்னை உணரலானார்.

1920–ஆம் ஆண்டில் அழகம்மாளின் உடல் நலம் குன்றியது. ஸ்கந்தாசிரமத்தில் முன்போல் அதிகப் பணிகளில் ஈடுபடமுடியாமற்போய், ஓய்வெடுக்க வேண்டி வந்தது. நோய்வாயப்பட்டுப் படுத்திருந்த போது ஸ்ரீபகவான் எப்போதும் அன்னையோடு கூடவே இருந்து கவனித்துவந்தார். அடிக்கடி இரவு வெகுநேரம் கண் விழித்து அன்னையருகிலேயே அமர்ந்திருந்தார்.

1922, மே மாதம் 19–ஆம் தேதி அன்னை மரணமடைந்தார். அன்று வைகாசி பகுளநவமி பண்டிகை நாள். இறுதி தினத்தன்று ஸ்ரீபகவானும் ஒரு சில அடியார்களும் அன்னையருகில் அன்ன ஆகாரமின்றிக் காத்திருந்தனர். அந்தி நேரத்தில் உணவு தயாரிக்கப்பட்டது. மற்றவர்களை உணவருந்தச் செல்லுமாறு பணித்த ஸ்ரீ பகவான் தாம் மட்டும் ஏதும் உட்கொள்ளவில்லை. மாலைப் பொழுதில் பக்தர்கள் குழு ஒன்று அன்னையைச் சூழ்ந்தமர்ந்து வேத பாராயணமும், ராம நாம ஜபமும் செய்துகொண்டிருந்தனர். தொடர்ந்து இரண்டு மணிநேரம் சுவாசம் திணற, மார்பு இரைப்புடன் நினைவின்றி அழகம்மாள் படுத்திருக்க, ஸ்ரீபகவான் தமது வலக்கரத்தை அன்னையின் இதயத்திலும், இடது கையை சிரசிலும் பதித்த வண்ணம் அவரருகே அமர்ந்திருந்தார். இந்தத் தடவை அன்னையின் உயிரை மீட்டு வாழச் செய்வதற்கான பிரயாசை ஏதும் இல்லை. தாயின் மனதை அமைதிப்படுத்தி, சாந்தி அருளி, மரணம் மகா

சமாதியாக—அஃதாவது ஆன்ம கமலத்துள் அடங்கி விடுவதாக – அமைதல் வேண்டும் என்பதே பிரார்த்தனை.

இரவு எட்டுமணிக்கு உயிர் உடலை விட்டுப் பிரிந்தது. உடனடியாய் ஸ்ரீபகவான் மனநிறைவோடு எழுந்து நின்றார். "இனி நாம் சாப்பிடப்போவோம். எல்லோரும் வாருங்கள். தீட்டு ஏதும் கிடையாது" என்றார்.

இதில் ஓர் ஆழ்ந்த அர்த்தம் பொதிந்துள்ளது. ஒரு இந்து இறந்ததும், சுற்றார் மற்றும் கூடியுள்ளோர்க்குச் சாவுத் தீட்டு உண்டு. ஈமக்கிரியைகள் முடிந்தபின் தீட்டு விலக அனைவரும் நீராடி உடை மாற்றவேண்டும். ஆனால் இங்கோ அன்னை சாகவில்லை. தம்முள் திரும்பவும் சாசுவதமாக அடங்கிவிட்டார். ஆத்மா பிரிந்து செல்லவில்லை. பரமாத்மாவுடன் ஐக்கியப்பட்டுவிட்டது. ஆகவே, தீட்டு போவதற்கான சடங்குகள் தேவையில்லாமற் போயின. நாட்கள் சில சென்றபின் ஸ்ரீ பகவானே இதனை உறுதிப் படுத்தினார். தாயாரின் மறைவைக் குறித்து யாரேனும் துக்கம் தெரிவித்தால் அதற்கு அவர், "அம்மா போய்விடவில்லை. தன்னுள் அடங்கிவிட்டாள்" என்று சட்டெனத் திருத்திக் கூறுவார்.

அன்னை மெய்யுணர்வாகிய ஆத்மனில் அடங்கிய முறையை அவர் பின்னொரு சமயம் இவ்வாறு விவரித்துள்ளார்: "இயல்பான மனப்பாங்கும், சென்றுபோன உள்ளனுபவங்களும் இனி வருங்காலத்தில் அவை எவ்வாறு திரிபு பெறும் என்ற எண்ணமும் அவளது கடைசி நாட்களில் அவளுள் மேலோங்கின. நினைவிழந்து புற உணர்வற்றுக் கிடந்த இறுதி நிலையில் பற்பல பழங் கர்ம வாசனைகளும் வருங்காலக் காட்சிகளும் அவள் மனக்கண்முன் உருண்டோடின. முடிவில் அவ்வாசனைகள் யாவும் ஒடுங்கியழிந்து, மறு பிறப்புக்கு வழியின்றி இதயாகாசத்தில் வந்து பிரும்ம சொரூபமாக ஐக்கிய

மாயின. சரீரம் அகன்றதும் அஞ்ஞானம் திரும்ப மாட்டா முக்தி நிலையுற்றாள் அன்னை.''

ஸ்ரீபகவானது திருக்கரத்தின் அருட்சக்தியே முக்தி அளிக்க உதவிற்று என்ற போதிலும், அழகம்மாளின் அகத்தூய்மையும், தற்பெருமை மற்றும் ஏனைய பற்றுக்கள் முன்னதாகவே துறந்து, அடியார்க்கு அடியாராக ஆற்றிவந்த பணிகளும் அவரை முக்தி நிலைக்குத் தகுந்த பாத்திரமாக்கின எனலாம். ஸ்ரீபகவானே பின்னர் இவ்வாறு கூறியுள்ளார்: "ஆம். தாயார் விஷயத்தில் மட்டுமே வெற்றியாக முடிந்தது. முன்பொரு முறை பழநிஸ்வாமி மரணத் தருவாயில் இருக்கும்போது அவ்வாறே அவன்மீது கை வைத்து அமர்ந்திருந்தேன். அவனோ வெறுமனே கண்ணைத் திறந்து பார்த்தான். இறந்து போனான்.'' ஆயினும் பழநிஸ்வாமியைப் பொருத்த வரை தமது முயற்சி முழுவதும் வீணாகிவிடவில்லை என்றும் விளக்கியுள்ளார். 'ஆன்ம ஐக்கியம் கிட்டவில்லையெனினும், பழநிஸ்வாமி நல்ல மறுபிறவி எடுப்பான் என்பதற்கான அறிகுறிகள் மரணத் தருவாயில் தெரிந்தன' என்றும் கூறியுள்ளார்.

யாரேனும் பக்தர்களின் குடும்பத்தில் இழப்பு நேரிட்டால், ஸ்ரீபகவான் அவர்களுக்குத் தேறுதல் சொல்லி, உடல் மட்டுமே மரிக்கிறது. 'இவ்வுடலே நான்' என்ற மனமயக்கமே மரணம் துயர்மிக்க நிகழ்வாகத் தோன்ற வைக்கிறது, என்று நினைவுறுத்துவார். இப்போது அன்னை இறப்பில் அவருக்கே இழப்பு நேர்ந்தபோது எவ்விதத்திலும் வருத்தம் பாராட்டவில்லை. இரவு பூராவும் அவரும் அடியார்களும் சூழ்ந்தமர்ந்து பக்திப்பாடல்களை பாடிய வண்ணமிருந்தனர். தாயாரின் பூத ஊடல் மடிந்ததில் எவ்வித பாதிப்பும் அற்ற மனப்பான்மையே முன்பு அன்னை காய்ச்சலாய்க் கிடக்கையில் ஸ்ரீ பகவான்

இயற்றிய பிரார்த்தனைப் பாடலடிகளுக்கு மெய்யான விளக்கவுரையாகும்.

சடலத்தை என்ன செய்வது என்ற பிரச்சினை எழுந்தது. 'அன்னை ஆத்மனுள் அடங்கிவிட்டாள்; இனி அவள் ஆத்மா மறுபிறவி எடுத்து மாய அகந்தையில் உழலாது' என ஸ்ரீபகவானே சான்றுரைத்திருந்தார் என்றாலும், புனிதவதி ஒருத்தியின் உடலை தகனம் செய்யாமல் புதைக்கலாமோ என்ற ஐயம் பலரிடம் எழத்தான் செய்தது. முன்பு 1917–ஆம் ஆண்டில் கணபதி சாஸ்திரியும் அவரது குழுவினரும் ஸ்ரீபகவானிடம் கேட்ட கேள்வி வரிசையில் இதே போன்ற வினாவும் உண்டு. சாத்வினியைப் புதைக்கலாம் என்று பொருள்பட ஸ்ரீ பகவான் அளித்த விடையில், "ஞானமோ முக்தியோ பெருவதில் ஆண்–பெண் வித்தியாசம் ஏதும் கிடையாது. சந்நியாசினியின் உடலை தகனம் செய்யவேண்டியதில்லை. அத்தகைய மகளிர் உடலும் கடவுளின் இருப்பிடமே ஆகும்" என்று திட்டவட்டமாகக் கூறியுள்ளார்.

அன்னை முன்பு ஆசிரமத்தைவிட்டு ஊர் திரும்பிய போதோ, பின்னர் ஆசிரம வாசியாகச் சேர்ந்த போதோ ஸ்ரீபகவானின் கருத்தை அறிய எவரும் துணியவில்லை. அவரும் அதுபற்றித் தமது அபிப்பிராயம் ஏதும் தெரிவிக்கவில்லை. ஆனால், 1914–ஆம் ஆண்டு (அன்னை நோய்வாய்ப்பட்டுக் கிடந்தபோது) ஸ்ரீபகவான் இயற்றிய வெண்பா வரிகளில் இப்பிரச்சினைக்கு விடை பகன்று விட்டாரே என்பது யாருக்குமே தோன்றாமற் போயிற்றே! "ஞானாங்கியால் அன்னை நல்லுடலை ஞானாங்கம் ஆகச் செய்து (உ)ன் பதத்தில் ஐக்கியமாக்கிக் கொள்வாய், சாகத் தீ மூட்டுவதேன் சாற்று" என்று அன்றே கூறிவிட்டாரல்லவா ?

தாயின் இறுதிச் சடங்குகளில் கலந்துகொள்ளாமல் ஸ்ரீபகவான் அமைதியாக நின்று நோக்கிய வண்ண மிருந்தார். அழகம்மையாரின் உடல் அருணாசல மலை யடிவாரத்தில் பாலிதீர்த்தக் குளத்திற்கும் தட்சிணாமூர்த்தி மண்டபத்திற்கும் இடையே தென்கோடியில் சமாதி செய்விக்கப்பட்டது. உற்றார் உறவினர்களும் நண்பர்களும் சடங்கில் பங்குபெறக் குழுமியிருந்தனர். ஊர்ப்புறத்தி லிருந்து ஜனங்கள் கூட்டங் கூட்டமாக வந்தனர். வீபூதி, கற்பூரம், மற்றும் வாசனைத் திரவியங்கள் சமாதிக் குழியில் உடலைச் சுற்றி போடப்பட்டன. குழியை மூடி கற்களால் சமாதி எழுப்பினார். அதன்மீது காசியி லிருந்து வருவித்த ஓர் லிங்கம் பிரதிஷ்டை செய்யப் பட்டது. அதைச் சுற்றி எழும்பிய சிறுகோயில் 1949—இல் பூர்த்தியாயிற்று. மாத்ருபூதேசுவரர் (அன்னையுருக் கட வுள்) ஆலயம் என்ற பெயருடன் அது விளங்கிவருகிறது.

தாயார் ஆசிரமம் வந்தடைந்து தங்கத்தொடங்கிய போது ஆசிரம வாழ்வு ஓர் புதுத் திருப்பம் கண்டது. அதே போல, அவரது மறைவும் திருப்புமுனையாக அமைந்தது. ஆசிரம வளர்ச்சி தடையுறுவதற்கு மாறாக மேன்மேலும் விரிவடையத் தொடங்கிற்று. அவ்விடத்தே அழகம்மையாரின் நிரந்தரத்தை அன்னை பராசக்தி உருவில் என்றென்றும் உணரும் பக்தர்கள் பலரும் உண்டு. "அம்மா எங்கே போய்விட்டாள்? இங்கேயே தான் இருக்கிறாள்" என்று ஸ்ரீ பகவானே ஒரு சமயம் மொழிந் துள்ளார்.

நிரஞ்சனாநந்த சுவாமி, தமது அன்னையின் சமா திக்கு அருகில் அமைக்கப்பட்ட சிறு கீற்றுக் கொட்ட கையில் வசிக்கலானார். ஸ்ரீபகவானோ மலை உயரே ஸ்கந்தாசிரமத்தில் தொடர்ந்து இருந்தவண்ணம் நாள் தோறும் மலையைவிட்டு இறங்கிச்சென்று சமாதிக்கு வந்து திரும்புவார். அரைமணிநடைதூரம் அது. சுமார்

ஆறு மாதங்களுக்குப் பிறகு ஒரு நாள் அவர் உலாவச் சென்றபோது இனி கீழே சென்று சமாதியருகிலேயே தங்கிவிடவேண்டும் என்ற உந்துதல் உணர்ந்தார். அன்று கீழே சென்றவர் திரும்பிவரப் போவதில்லை என்று அறிந்த ஸ்கந்தாசிரம அடியார்களும் மலையடிவாரத் திற்கே வந்து தங்கிவிட்டனர். இவ்வாறு (1922–ஆம் ஆண்டு இறுதியில்) ஸ்ரீரமணாசிரமம் அங்கு உருவா யிற்று. “ஸ்கந்தாசிரமத்தை விட்டுச் சென்றது என் இச்சைப்படி அல்ல. ஏதோ ஒன்று என்னை இங்கு இழுத்தது. நான் இணங்கினேன். முடிவு எனதல்ல. ஆண் டவன் சித்தம் அது” என்று பின்னர் அவரே பகர்ந் துள்ளார்.

# 9. அத்துவைதம்

ஸ்ரீபகவான் ஓர் தத்துவதரிசி அல்லர். அவரது படிப்பினையில் புதிய பரிணாம வளர்ச்சி ஏதுமிருக்க வில்லை. முதன் முதலில் அவர் அருளிய "விசாரசங் கிரகம்" மற்றும் "நான் யார் ?" இவ்விரண்டிலும் கண்டுள்ள விளக்கங்கள், கடைசி ஆண்டுகளில் வாய் மொழியாக வார்த்த சித்தாந்தக் கோட்பாடுகளி னின்றும் வேறுபடவில்லை. பதினாறு வயதினிலே பரப்பிரும்மத்துடன் – பொருண்மையுடன் – தமது ஒருமையை உணர்ந்த அவரது மரண அனுபவம் உரு வற்றது; உள்ளுணர்வு சார்ந்தது. அதற்கான சித்தாந்த ஊகங்கள் பின்னரே தோன்றின. "அனைத்திற்கும் அடிப் படையாக ஓர் சாராம்சம் அல்லது தனித்து ஒளிரும் உண்மை உண்டு என்பதாகவோ, ஜீவாத்மாவும் பரமாத் மாவும் அப்பேருண்மையில் அடக்கம் என்றெல்லாம் அந்த வயதில் எனக்கு ஒன்றுமே தெரியாது. பின்னர் திருவண்ணாமலையில் ரிபு கீதை மற்றும் வேறு வேதாந்த நூல்களைப் படிக்கக் கேட்ட பின்பே எனக்கு இவைபற்றித் தெரியவந்தன. விண்டு ஆராயாமலும், தத்துவார்த்தப் பெயர்கள் அறியாமலும் நான் நேரடி யாய் அன்று உணர்ந்தவற்றையே அந்நூல்கள் பெயர் சூட்டி விண்டுரைக்கின்றன என்பதனை அறிந்தேன்" என்று கூறியுள்ளார். சத்தியம் பற்றிய கருத்துக்களை கேட்டுணரவில்லை, நித்திய சத்திய தரிசனம் நேரில் கண்டவர் அவர். அதாவது, படித்தறிந்து பற்றுறுதி பெறவில்லை; தாம் உள்ளூர உணர்ந்த உண்மை, சிந்தாந்த வாயிலான உண்மை உரைக்கு ஒத்துவருகிறது என்று அறிந்தார்.

இந்து மதம் வெவ்வேறு முறைகளையும் படிநிலை களையும் உள்ளடக்கிய சமய சாகரம். அவை யாவுமே

ஏற்புடையவை, வெவ்வேறான மனப்பக்குவமும் வளர்ச்சியும் உடைய மக்களின் அணுகு முறைகளுக்கு அனுசரணையாக அமையப் பெற்றவை. மேற்கத்திய அல்லது பண்டைய யூத, அராபிய, அசிரிய சமயங்களில் உள்ளதுபோன்று தனிப்பட்ட கடவுளை, இஷ்ட தேவதைகளை ஆராதித்து சம்பிரதாயமாய் வழிபடும் முறையும் உண்டு. அனைத்து ஜீவராசிகளும் ஆண்டவனின் படைப்பே, ஆகவே மக்கள் சேவையே மகேசன் சேவையாகும் என்ற கர்ம மார்க்கமும் உண்டு. இருப்பினும், அனைத்துள்ளும் ஒளிரும் ஆத்மனே பிரும்மன், பிரபஞ்ச உணர்வாய் ஊடுருவும் மெய்ப் பொருள் அல்லது பரப்பிரும்மமே முடிவான பேருண்மை என்ற தூய சித்தாந்தமே இந்து மதத்தின் ஏனைய படிநிலைத் தத்துவங்களைக் கடந்து நிற்கிறது. அதே சமயம், மற்ற வழிமுறைகளிலோ அவற்றிற்கேற்ற படிநிலைகளிலோ பொதிந்துள்ள உண்மையும் மறுக்கப்படவில்லை. பிரும்மம் என்கிற ஒரே சத்திய வஸ்துவுக்குப் புறம்பாக எதுவுமே இல்லை என்ற சித்தாந்தமே அத்துவைதம் (இரண்டற்றது) எனப்படுகிறது. முற்காலத்து ரிஷிபுங்கவர்கள் அனுபூதியில் உணர்ந்து அறிவுறுத்திய 'இருநிலை தவிர்த்த பெருநிலை'யை, ஆதி சங்கரர் அத்துவைத சித்தாந்தமாக நிலைநாட்டினார். அண்ட சராசரங்களின் கடுஞ்சிக்கல்களுக்கு அப்பாற்பட்ட சத்தியத்தை எளிமையாக எடுத்துரைக்கும் சித்தாந்தக் கோட்பாடு அது. எளிமையானது என்றபோதிலும் தடம்காணா ஆழமிக்கது.

'இரண்டற்றது' என்றால், பிரும்மம் எனும் மெய்ப்பொருள் ஒன்று மட்டுமே உளது என்றாகிறது. அனைத்துப் பிரபஞ்சமும் பிரும்மத்தில் அடக்கம். ஜடப் பிரபஞ்சம் பிரும்மத்தின் தோற்றமேயன்றி வேறல்ல. பிரும்மம் அழிவற்றது. மாற்றம் காணாது நிலைத்து நிற்பது. வடிவமற்றது. ஒருவன் கனவு காண்கிறான். மனிதர்களும் நிகழ்வுகளும் கனவில் நிஜம்போலத் தோன்றுகின்றன. ஆயி

னும் கனவு காண்பவனுக்குப் பிரிதாக அக்காட்சிகளுக்குத் தனி இருப்போ தோற்றமோ கிடையாதல்லவா? கனவில் காட்சிகள் உதித்தபோது ஏதும் புதிதாக அவனுக்குச் சேரவில்லை. கனவு கலைந்த பின்னர் அவன் எதையும் இழக்கவும் செய்யவில்லை. அதே போன்று, பிரபஞ்சத்தில் காணப்பெறும் அனைத்தும் ஒரே பிரும்மத்தின் ஆன்ம சொரூபங்களே. ஆகவே "நான் யார்?" என்று தொடர்ந்து ஆன்ம வினா எழுப்பி, தன்னுள் துலங்கும் ஆன்மாவை நாடினால், மனிதன் பிரபஞ்ச வியாபகமான பரமாத்மாவுடன் தனக்குள்ள ஐக்கியத் தொடர்பை உணரக்கூடும். இத்தகைய பரிபூரண அத்துவைதத்தையே ஸ்ரீபகவான் அறிவுறுத்தினார்.

பரம்பொருள் ஒன்றே உளது என்கிற சித்தாந்தப்படி, தமக்காக ஒரு கடவுளை வழிபடுவதற்கு வழியில்லாமற் போகிறதே என்று சிலர் ஐயப்படுவர். ஆனால் அவ்வாறு அச்சமுற அவசியமில்லை. ஏனெனில், ஓர் கடவுளை நான் வழிபடுகிறேன் என்ற அகந்தை வாயிலாய் எழும் எண்ணம் மெய்போலத் தொடர்ந்து இருந்து வரும்வரை, வழிபடப்படும் கடவுளும் நிஜம்தான். அதாவது, ஒரு மனிதன் தன் உடலுடன் இழைந்த அகந்தையுணர்வை உண்மையெனக் கொண்டால், அவனுக்கு வெளியே உள்ள உலகமும், உலகை ஆட்டிவைக்கும் கடவுளும் அவனைப் பொருத்தவரை உண்மைகள்தாமே? அனந்தமாக இருக்கிற பிரம்மத்தைப்போலவே, அனந்தமாகத் தெரிகிற பிரபஞ்சமும் உண்மையானது என்பதே துவைத சித்தாந்த சார்புள்ள சமயங்களின் தத்துவத்திற்கும், தனிப்பட்ட மூர்த்தி வழிபாட்டிற்கும் அடிப்படை ஆகும். இதுவும் உண்மையே, ஆயினும் நிரந்தர உண்மை எனக் கொள்ளலாகாது. "அனைத்து சமயங்களும் மூன்று அடிப்படைகளை வகுத்தளிக்கின்றன, முறையே, தனிமனிதன் (ஜீவன்), உலகம் (ஜகத்), பெரிய பொருளான பரம்பொருள் (பரம் அல்லது கடவுள்).

'உடலே நான்' என்ற மனமயக்கமாகிய அகந்தை இருக்கும் வரைதான் ஆதிஅந்தமற்ற ஒரே பொருள் மூன்றாகப் பரிணமிக்கிறது, அல்லது மூன்றும் உண்மையில் தனித் தனியானவை என்பதாக அறியப்படுகிறது" என்று ஸ்ரீ பகவான் இயற்றிய உள்ளது நாற்பது தொகுப்பிலுள்ள ஒரு பாடலில் எடுத்துரைக்கிறார்.[1]

மெய்ப்பொருளின் அனந்த உண்மையை ஏற்பவர்களில் பலர், உலகம் ஓர் மாயை என்ற கூற்றை எதிர்க்கிறார்கள். காரணம், உலகத் தோற்றம் மெய்யல்ல என்று எந்த அர்த்தத்தில் கூறப்படுகிறது என்பதை அவர்கள் சரிவரப் புரிந்து கொள்ளவில்லை. இதனை பகவான் பலமுறை விளக்கியுள்ளார். அதன் தெளிவை பகவான் சொல்லக் கேட்டு எஸ்.எஸ். கோஹன் என்பவர் குறிப்பெடுத்த பின்வரும் வாசகத்தில் காணலாம்:

> "உலகம் மாயை என்ற சித்தாந்தத்தை அளித்த ஆதிசங்கராச்சாரியாரை பலர் குறை கூறுகிறார்கள். அவர் மூன்று பிரமாணங்கள் அறிவித்தார்: பிரம்மன் மெய்யானது. பிரபஞ்சம் மெய் இல்லை. பிரும்மனே பிரபஞ்சமும். இரண்டாவதோடு நிறுத்திக் கொள்ளவில்லை அவர். மூன்றாவது கூற்று முதல் இரண்டையும் விளக்குகிறது. பிரம்மனைத் தவிர்த்துக் காணப்பெறும் பிரபஞ்சம் உண்மையல்ல, வெறும் மாயத்தோற்றமே என்பதையே குறித்துக் காட்டுகிறது. இதனால் தெரிவதென்ன! பிரும்ம மயமாக, ஆத்ம சொரூபமாக உலகை நோக்குகையில் அது உண்மையே. ஆத்மாவைத் தவிர்த்துக் காணப் பெறும் உலகு வெறும் மாயைதான்."

ஸ்ரீ பகவானின் போதனைகள் நடைமுறைக்கு ஏற்றவை. அவற்றைக் கடைபிடிப்பதற்கு அவசியமான அடிப்

1 மும்முதலை யெம்மதமு முற்கொள்ளு மோர்முதலே
மும்முதலாய் நிற்குமென்று மும்முதலு–மும்முதலே
யென்னலகங் கார மிருக்குமட்டே யான்கெட்டுத்
தன்னிலையி னிற்ற றலை. – உள்ளது நாற்பது, பாடல் 2.

படைகளே அவர் எடுத்துரைத்த தத்துவார்த்த விளக்கங்கள். அவையும் கூட சாதகர்கள் அவ்வப்போது எழுப்பிய வினாக்களுக்கு விடையாக வாய்த்தவையே. 'கடவுளைப் பற்றிய விசாரணைகளை புத்தபிரான் புறக்கணித்தாரல்லவா ?' என்று ஒரு பக்தன் வினவியபோது, அவர் அதனை ஆமோதித்து மேலும் உரைத்தார்: "கடவுளைப் பற்றி யுக்தி வாதம் செய்துகொண்டிருப்பதைக் காட்டிலும் இங்கேயே இப்பொழுதே சாதகனை இன்புறச் செய்யும் பாதையில் நடத்திச் செல்வதையே புத்தர் உண்மையில் தமது தர்மமாகக் கொண்டார்" (மகர்ஷி வாய்மொழி, பாகம் 2,II). ஆண்டவனைப்பற்றி அறிய விழையும் பக்தர்களின் ஆவலை ஸ்ரீபகவான் தீர்த்துவைக்க மறுத்துவிட்டார். அவ்வாறு கேள்விகள் எழும்போதெல்லாம், சாதனை, முயற்சி என்றெல்லாம் பேச்சை மாற்றிவிடுவார். 'சாவுக்குப்பின் ஜீவனின் கதி என்ன ?' என்று கேட்டபோது அவர் அளித்த பதில் இதுதான்: "இப்போது இங்கே இருக்கும் நமக்கேன் அக்கவலை ? நம் சமாச்சாரத்தை நாம் பார்ப்போம். இப்போது நாம் எப்படி இருக்கிறோம் என்பதைப் புரிந்துகொண்டால் இதுபோன்ற கேள்விகள் எழாது."[1] மனிதன் இப்போதும் எப்போதும் இந்த ஜன்மத்திலும் வேறு பிறவிகளிலும் அழிவற்ற ஆன்மாவே. ஆனால் இவ்வாறு சொல்வதோ அதை நம்புவதோ மட்டுமே போதாது. அதனை உள்ளார்ந்து உணர்தல் வேண்டும். இவ்வாறே கடவுளைப் பற்றி கேள்விகள் எழும்போதெல்லாம் அவர், "கடவுளை சும்மா விட்டுவை. முதலில் நீ யார், உன் நிலை என்ன என்று அறிந்துகொள்" என அடுக்குவார்.

தன்னைத்தானே அறியும் வழிமுறையை பின்னொரு அத்தியாயத்தில் விளக்குவோம். ஆயினும், பக்தர்களுக்கு ஸ்ரீபகவான் வழங்கிய செயல்முறை போதனைகள் அடுத்த

1 ஸ்ரீபகவத் வசனாம்ருதம், பாகம்1, ஜூன் 5, 1935

அத்தியாயத்தில் விவரிக்கப் படுவதால், அவரது போதனைச் சாரத்தை இங்கு எடுத்துரைக்க வேண்டி வருகிறது.

''தத்துவம்'' என்ற சொல் பொதுப்படையாக 'மெய் விளக்க சித்தாந்தம்' என்றே அறியப்படுகிறது. ஆனால், ஸ்ரீபகவானின் போதனைகள் அத்தகைய தத்துவ விசாரம் அல்ல என்பது சிவப்பிரகாசம் பிள்ளைக்கு அவர் அளித்த விடைகளில் (அடுத்த அத்தியாயத்தில்) தெரியவரும். தத்துவப் பிரச்சினைகள் பற்றி பக்தர்களை அவர் சிந்திக்க வைக்கவில்லை. சிந்தனையையே நீக்கிவிடுமாறு அறுதி யிட்டவர் அவர். எண்ணங்களை அகற்றினால் மூடத் தனம் தானே மிஞ்சும் எனத் தோன்றலாம். ஆனால், பால் பிரண்டனுடன் நிகழ்த்திய உரையாடலில் குறிப்பிட்டது போல (இரண்டாம் அத்தியாயத்தில் காண்க), அதற்கு நேர் மாறாக பூரண மன விழிப்புநிலை கிட்டும். மனிதன் ஆன்மாவில் அடங்கியுள்ளான். சுத்த சைதன்யமே ஆன்மா. அதுவே தூய பிரக்ஞை. பரமானந்தம். ஆயினும், மனிதன் தன்னைத் தனியொரு பிரகிருதியாக பாவித்துக் கொள்கி றான். இந்த பாவனையைக் கற்பிப்பது மனமே. ஆழ்ந்த உறக்கத்தில் மனம் அடங்கிவிடுகிறது. எண்ணங்கள் ஓய்ந்த அவ்வுறக்க நிலையில் மனிதன் அவனையுமறி யாமல் ஆன்ம ஐக்கியத்தில் அமிழ்கிறான். யோக சமாதி நிலையின்போதோ அதே ஐக்கியத்தை பூரண விழிப் புடன் உள்ளூர உணர்கிறான்; தூக்கம் போன்ற மன இருட்டில் அல்லாமல், ஒளி நிறைவில் ஆன்ம ஒளி காண்கிறான். மனத்தின் குறுக்கீட்டை நிறுத்தி வைத் தால் குருவின் அருளால் ஆன்ம ஒளி இதய கமலத்தை மலர்ப்பிக்கும். அவ்வாறே பரமசுகமான ஆன்ம ஐக்கியம் சித்திக்கும். மனம் இருண்ட, மந்த நிலை அல்ல அது. தேஜோமயமான மெய்யறிவு, சுத்த சைதன்யம், பரமா னந்தப் பெருநிலை, தூய ஆன்ம சுயம்பிரகாசம் ஆகும்.

மனோநாசம் அல்லது தான் என்ற நினைப்பை அறுத்தல் (இரண்டும் ஒன்றுதானே ?) என்ற கருத்து பலரை அதிர்ச்சிக்கு உள்ளாக்கிப் பின்வாங்கச்செய்யும். ஆயினும் அத்தகைய நிலை நாள்தோறும் உறங்கும் போது நிகழ்கிறதே ? யாரும் தூங்கப் போவதற்கு பயப் படுவதில்லையே! ஆழ்ந்த நித்திரை சுகத்தை அனைவரும் விரும்புகிறார்களே ? ஆனாலும், தூங்கும்போது நம்மை யறியாமல் மனம் அடங்கி ஒடுங்கிவிடுகிறதன்றோ ? இன் னொருபுறம், விழித்த நிலையில் ஆனந்த பரவசம் அல்லது மெய்மறந்த மகிழ்ச்சி கொள்ளும்போதெல்லாம் மனம் சில கணமேனும் பரமானந்தப் பெருநிலையில் லயிக்கிறது. அக்கணநேரப் பேரின்ப நிலையே ஒருவரின் மெய்யான இயல்பு. அவ்வுனுபவத்தைக் குறிக்கும் இரு சொற்களுமே சுய உணர்வை மீறிய நிலையை சுட்டிக் காட்டுவதாக அமைந்துள்ளனவே! 'பரவசம்' என்றாலே 'தன்ன மறந்த' நிலை அன்றோ! 'மெய்மறந்த மகிழ்ச்சி' யில் 'மெய்' எனும் உடல் சார்ந்த தன்னுணர்வை மறக்க வேண்டியிருக்கிறதே! இதே போன்று, கண்கொள்ளாக் காட்சி கண்டு 'பிரமித்து மூச்சடைத்து' நின்றேன் (breath–taking) என்ற சொற் பிரயோகத்தில் மூச்ச டைத்தலும், மனம் (எண்ணம்) ஸ்தம்பித்துவிடுவதும் ஒன்றேதான். ஏனெனில், எண்ணம், மூச்சுவிடுதல் ஆகிய இரண்டிற்கும் அடிப்படை ஒன்றே தான். பிராணாயா மத்தைப் பற்றிக் கூறுகையில் ஸ்ரீபகவான் இவ்விரண் டிற்கும் உள்ள தொடர்பை விளக்கியுள்ளார்.

ஓர் ஆதார உண்மையை எளிதாய் விளக்கும் பொருட்டே இச்சொற் ஜாலங்களை இங்கே வீச நேர்ந்தது. இவை உணர்த்தும் உண்மையாதெனில், உச்ச நிலையான ஆனந்த அனுபவத்தில் அகந்தை எனும் தன்நிலை நீக்கி, அனந்த (முடிவற்ற) ஆன்ம நிலைக்கு நம்மை விஸ்தரித்துக் கொள்கிறோமே அன்றி எதையும் இழப்பதில்லை.

எண்ணத்தைக் கடந்து நிற்கும் ஆழ்ந்த ஆன்ம உணர்வில் மனதை ஒருமுகப்படுத்துவதன் பொருட்டே எண்ண அலைகளை ஓயச்செய்தல் அவசியமாகிறது. இது மனதை பலவீனப்படுத்த மாட்டாது. மாறாக, உறுதி ஏற்றி அகமுக சிந்தனையைக் கற்பிக்கவல்லது என்று ஸ்ரீபகவான் அடிக்கடி வலியுறுத்தியுள்ளார். கட்டுப்பாடற்ற, நலிந்த மனதையே வேண்டாத எண்ணங்கள் சீண்டுகின்றன; கவலைகள் வாட்டியெடுக்கின்றன. உறுதி பெற்ற மனமோ எடுத்த எந்தக் காரியத்தையும் தீவிரத்துடன் மேற்கொண்டு அதனில் லயிக்கும். அத்தகைய மனம், தான்பெற்ற மனஉறுதியில் எண்ணம் ஒழிந்து, ஆன்ம நாட்டத்தில் ஈடுபட உதவும். இதையே எதிர் நிலையாகக் கூறப்போனால், நிர்ணயிக்கப்பட்ட முறைப்படி எண்ணங்களை மடக்கியடக்க மேற்கொள்ளும் சாதனா முயற்சிமூலம் ஒருமுகச் சிந்தனை கைகூடும். ஆன்ம வேட்பு கிட்டியபின்னரும் மன ஆற்றல் மறைவதில்லை. ஞானியரின் மனதை நடுப்பகல் சந்திரனோடு ஒப்பிட்டு ஸ்ரீபகவான் இதற்கு இவ்வாறு உவமை கூறியுள்ளார்: "உச்சிப் பகலிலும் வானத்துச் சந்திரன் ஒளி பிரதிபலித்தாலும், அதற்கு ஒளிகொடுக்கும் பகலவனின் பரந்த பிரகாச நிதர்சனத்தில் நிலாவொளி தேவையில்லாமற் போவதுபோல" என்றார்.

# 10. தொடக்க கால பக்தர்களில் சிலர்

ஸ்ரீபகவான் விதித்த கோட்பாட்டில் மாற்றம் ஏதும் இருக்கவில்லை என்றாலும், கேள்வி எழுப்புவோரின் இயல்புக்கும் புரிந்துகொள்ளும் திறனுக்கும் ஏற்றவாறு அவர் வழங்கிய அறிவுரைகளில் மாறுபாடுகள் இருந்தன. அவர் மலைமீது வாசம் புரிந்துவந்த காலத்தில் (1898–1922) அவரை அண்டிய சில அடியார்கள் தங்களுக்கு வாய்த்த அனுபவங்களையும், கிடைக்கப்பெற்ற விளக்கங்களையும் குறித்து வைத்துள்ளனர். அவற்றில் சில கீழே கொடுக்கப்பட்டுள்ளன. உண்மையிலேயே, அவரது பக்தர்கள் எழுதிவைத்த குறிப்புகள், கேட்டறிந்த நிகழ்ச்சிகளின் தொகுப்பே ஸ்ரீபகவானின் வாழ்க்கை வரலாறாக அமைந்தது. ஏனெனில், நிகழ்ச்சிகளாலும் செயல் பாடுகளாலும் மாற்றம் காணமாட்டாது நிலைத்துவிட்டவர் அன்றோ அவர்!

## சிவப்பிரகாசம் பிள்ளை

அறிவுத்திறன் வாய்ந்த ஆதி பக்தர்களுள் ஒருவர் சிவப்பிரகாசம் பிள்ளை என்பவர். கல்லூரியில் தத்துவம் படித்த பட்டதாரி. ஏற்கனவே மெய்ம்மையின் மர்மங்களைக் குறித்துச் சிந்தித்து வந்தவர். 1900–ஆம் ஆண்டில் இவர் தென்னாற்காடு ஜில்லாவில் வரிவசூல் இலாக்காவில் வேலைநியமனம் பெற்றார். இரண்டு ஆண்டுகளுக்குப் பின்னர் வேலை விஷயமாக திருவண்ணாமலை சென்றவர், மலை மீது இருக்கைகொண்ட இளம் சுவாமியைப் பற்றிக் கேள்விப்பட்டார். முதன் முதலில் சுவாமியைக் கண்டதும் கவரப்பட்டு, பக்தனாகிவிட்டார். பதினான்கு வினாக்களை விநயத்துடன் வினவினார். இளம் சுவாமி அப்போது தொடர்ந்து மௌனமே பூண்டிருந்தமையால், வினாக்களும் விடைகளும் எழுத்து மூலமே நிகழ்ந்தன. கடைசிக் கேள்விக்கான விடையை சுவாமி ஒரு

கற்பலகையில் எழுதிக்காட்ட, சிவப்பிரகாசம் பிள்ளை அதனை உடனே அப்படியே நகலெடுத்து எழுதிவைத்துக் கொண்டார். முந்தைய பதின்மூன்று விடைகளும் பின்னர் ஞாபகப்படுத்தி எழுதப்பட்டவை என்றாலும், அவற்றைப் பிரசுரிக்குமுன் ஸ்ரீபகவானால் சரிபார்க்கப்பட்டவை. அவற்றில் சில, சற்றே எளிய நடையில் கீழே வழங்கப் பெறுகின்றன:

சிவப்பிரகாசம்: சுவாமி, நான் யார் ?

பகவான்: தூல தேகம் நானன்று; ஞானேந்திரியங்கள் ஐந்தும் கர்மேந்திரியங்கள் ஐந்தும் நானன்று; பிராணனும் நானன்று, நினைக்கின்ற மனமும் நானன்று, அறிவின்மையாம் உறக்கமும் நானன்று.

சிவ: இவையெல்லாம் நானல்லாவிடின் பின்னர் நான் யார் ?

பக: மேற்சொல்லிய யாவும் நானல்ல என்று 'நேதி' செய்தபின் தனித்து நிற்கும் அறிவே நான்.

சிவ: அந்த அறிவின் சொரூபம் என்ன ?

பக: அறிவின் சொரூபம் சத்–சித்–ஆனந்தம்.

சிவ: சொரூப தரிசனம் எப்போது கிடைக்கும் ?

பக: திருசியமாகிய (காணப்படுகிற) ஜகம் நீங்கியவிடத்துத் திருக் காகிய (காணவேண்டிய) சொரூபதரிசனம் உண்டாகும்.

சிவ: ஜகமுள்ள(தோன்றுகின்ற)போதே சொரூபதரிசனம் உண்டாகாதா ?

பக: உண்டாகாது. ஏனெனில் திருக்கும், திருசியமும், ரஜ்ஜுவும் (கயிறும்) சர்ப்பமும் (பாம்பும்) போன்றவை. கற்பித சர்பஞானம் போனாலொழிய அதிஷ்டான ரஜ்ஜுஞானம் உண்டாகாது போகும். கற்பிதமான ஜகதிருஷ்டி நீங்கினாலொழிய அதிஷ்டான சொரூப தரிசனம் உண்டாகாது.

சிவ: திருசியமாகிய ஜகம் எப்போது நீங்கும் ?

பக: சர்வ அறிவிற்கும் சர்வ தொழிற்கும் காரணமாகிய மனம் அடங்கினால் ஜகம் மறையும்.

சிவ: மனதின் சொரூபம் என்ன ?

பக: மனம் என்பது ஆத்ம சொரூபத்திலுள்ள ஓர் அதிசய சக்தி. அது சகல நினைவுகளையும் தோற்று விக்கின்றது. நினைவுகளையெல்லாம் நீக்கிப் பார்க்கின்ற போது தனியாய் மனம் என்றொரு பொருள் இல்லை. ஆகையால் நினைவே மனதின் சொரூபம். விழிப்பிலும் கனவிலுமே நினைவுகள் எழுகின்றன; உலகமும் எழுகிறது. சிலந்திப்பூச்சி எப்படித் தன்னிடமிருந்தே வெளியில் நூலை நூற்று மறுபடியும் தன்னுள் இழுத்துக்கொள்கிறதோ அப்படியே மனமும் தன்னிடமிருந்து ஜகத்தைத் தோற்றுவித்து மறுபடியும் தன்னிடமே ஒடுக்கிக் கொள்கிறது. மனம் ஆத்ம சொரூபத்தினின்று வெளிப்படும்போது ஜகம் தோன்றும். ஆகவே ஜகம் தோன்றும் போது சொரூபம் தோன்றாது. சொரூபம் தோன்றும் (பிரகாசிக்கும்) போது ஜகம் தோன்றாது. மனதின் சொரூபத்தை விசாரித்துக் கொண்டே போனால், "தானே" மனமாய் முடிவடையும். மனம் எப்போதும் ஒரு ஸ்தூலத்தை அனுசரித்தே நிற்கும்; தனியே நில்லாது. மனமே சூட்சும சரீரம் என்றும், ஜீவன் என்றும் சொல்லப்படுகிறது.

சிவ: மனம் எப்படி அடங்கும் ?

பக: நான் யார் என்னும் விசாரணையினாலேயே மனம் அடங்கும்; நான் யாரென்னும் நினைவு மற்ற நினைவுகளையெல்லாம் அழித்துப் பிணம் சுடும் தடிபோல் முடிவில் தானும் அழியும். பிறகு சொரூப தரிசனம் (ஆன்மாநுபவம்) கிட்டும்.

சிவ: 'நான் யார்' என்ற நிலையை சதாகாலமும் பிடிக்கும் உபாயம் என்ன ?

பக: பிற எண்ணங்கள் எழுந்தால் அவற்றைத் தொடர்ந்து பூர்த்தி செய்யாமல், 'அவை யாருக்கு உண்டாயின ?' என்று விசாரிக்கவேண்டும். எத்தனை எண்ணங்கள் எழுந்தால்தான் என்ன ? ஒவ்வொரு எண்ணமும் கிளம்பும் போதே கவனமாய் 'இது யாருக்கு உண்டா யிற்று ?' என்று விசாரித்தால், 'எனக்கே' என்று தோன்றும். பிறகு 'அந்த நான் யார் ?' என்று விசாரித்தால் மனம் தன் பிறப்பிடத்திற்குத் திரும்பி விடும்; எழுந்த எண்ணமும் அடங்கிவிடும். இப் படிப் பழகப்பழக, மனத்திற்குத் தன் பிறப்பிடத்தில் தங்கி நிற்கும் சக்தி அதிகரிக்கின்றது.

சூட்சுமமான மனம், மூளை இந்திரியங்கள் வாயி லாய் வெளிப்படும்போது ஸ்தூலமான நாம ரூபங்கள் தோன்றுகின்றன; மனம் இதயத்தில் தங்கும்போது. நாம ரூபங்கள் மறைகின்றன. மனத்தை வெளி விடாமல் இதயத்தில் வைத்துக்கொண்டிருப்பதற் குத்தான் அகமுகம் அல்லது அந்தர்முகம் என்று பெயர். இதயத்திலிருந்து வெளிவிடுவதற்குத்தான் பகிர்முகம் என்று பெயர். இவ்விதமாக மனம் இதயத்திலே தங்கினால், எல்லா நினைவுகளுக்கும் மூலமான நான் என்பது போய், எப்போதுமுள்ள தான் மாத்திரம் விளங்கும். எதைச் செய்தாலும் நான் என்கிற அகங்காரமற்றுச் செய்யவேண்டும். அப்படிச் செய்தால், எல்லாம் சிவ ஸ்ரூபமாய்— கடவுள் வடிவமாய்—தோன்றும்.

சிவ: மனம் அடங்குவதற்கு வேறு உபாயங்கள் இல்லையா ?

பக: மனம் அடங்குவதற்கு விசாரணையைத் தவிர வேறு உபாயங்கள் இல்லை. பிராணாயாமம், மூர்த்தி தியானம், மந்திர ஜபம், சாத்விக ஆகார நியமங்கள் முதலியன மனத்தை அடக்க வெறும் சகாயங்களே ஆகும். மூர்த்தி தியானத்தாலும் ஜபம் புரிவதாலும் மனம் ஏகாக்கிரகத்தை அடைகிறது. சதா சலித்துக்

கொண்டிருக்கும் யானையின் துதிக்கையில் ஓர் சங்கிலியைக் கொடுத்தால் அந்த யானை எப்படி வேறொன்றையும் பற்றாமல் அதையே பற்றிச் செல்லுமோ அப்படியே சதா சலித்துக் கொண்டிருக்கும் மனமும் அதனை ஏதோ ஒரு நாமம் அல்லது ரூபத்தில் பழக்கினால் அதையே பற்றிக் கொண்டிருக்கும். இவ்விதம் ஏகாக்கிரத் தன்மையடைந்து அதனால் பலம் பெற்ற மனத்திற்கு ஆத்ம விசாரம் சுலபமாய் சித்திக்கும். இவ்வாறே மிதமாய் அருந்தும் சாத்விக உணவு நியமத்தாலும் மனத்தில் சத்துவ குணம் விருத்தியாகி ஆன்ம விசாரத்திற்கு அனுகூலமாகிறது.

சிவ: விஷய வாசனை (நினைவு)கள் அளவற்றனவாய்க் கடலின் அலைபோலத் தோன்றுகின்றனவே, அவையெல்லாம் எப்போது நீங்கும்?

பக: சொரூபத்தியானம் கிளம்பக் கிளம்ப, நினைவுகளெல்லாம் அழிந்துவிடும்.

சிவ: தொன்றுதொட்டு வருகின்ற சகல விஷயவாசனைகளும் ஒடுங்கி சொரூபமாத்திரமாய் இருக்கமுடியுமா?

பக: 'முடியுமா, முடியாதா' என்கிற சந்தேக நினைவுக்கு இடம் கொடாமல், சொரூப தியானத்தை விடாப்பிடியாய்ப் பிடிக்க வேண்டும். ஒருவன் எவ்வளவு பாபியாக இருந்தாலும், 'நான் பாபியாய் இருக்கிறேனே! எப்படிக் கடைத்தேறப் போகிறேன்' என்று ஏங்கி அழுது கொண்டிராமல், தான் பாபி என்னும் எண்ணத்தையும் அறவேயொழித்து, சொரூபத் தியானத்தில் ஊக்கமுள்ளவனாக இருந்தால் அவன் நிச்சயம் உருப்படுவான். நல்ல மனம் என்றும் கெட்ட மனம் என்றும் இரண்டு மனங்கள் இல்லை. மனம் ஒன்றே. வாசனைகளே சுப மென்றும் அசுப மென்றும் இரண்டு விதம்...

சிவ: விசாரணை எதுவரையில் வேண்டும்?

பக: மனத்தின்கண் எதுவரையில் விஷய வாசனைகள் இருக்கின்றனவோ அதுவரையில் 'நான் யார்' என்னும் விசாரணையும் வேண்டும். நினைவுகள் தோன்றத் தோன்ற அப்போதைக்கப்போதே அவைகளையெல்லாம் உற்பத்தி ஸ்தானத்திலேயே விசாரணையால் நசிப்பிக்கவேண்டும். கோட்டைக்குள் எதிரிகள் உள்ள வரை அதிலிருந்து வெளியே வந்துகொண்டேயிருப்பார்கள். வெளியே வர வர அவர்களையெல்லாம் வெட்டி வீழ்த்திக் கொண்டே இருந்தால் கோட்டை கைவசப்படும். நினைவுகள் தோன்றத் தோன்ற அவற்றை மூலக்களத்திலேயே உடனுக்குடன் அழித்து விடுவதே வைராக்கியம் அல்லது பற்றின்மை ஆகும்.

சிவ: எல்லாம் ஈசன் செயல் அன்றோ?

பக: இச்சா சங்கல்ப யத்தனமின்றி எழுந்த ஆதித்தன் சன்னிதி மாத்திரத்தில் (விருப்பமோ, செயல் நோக்கமோ பிரயாசையோ ஏதுமில்லாமல் சூரியன் பிரகாசிக்கையில்) காந்தக்கல் அக்னியைக் கக்குகிறது; தாமரை மலர்கிறது; நீர் வற்றுகிறது; உலகோர் தத்தம் காரியங்களில் பிரவிருத்தித்து இயங்கி அடங்குகின்றனர், காந்தத்தின் முன் ஊசி சேஷ்டிப்பதுபோல. அதே போன்று, ஈசன் சன்னிதான விசேஷ மாத்திரத்தால் நடக்கும் முத்தொழில் அல்லது பஞ்சகிருத்யங்களுக்கு உட்பட்ட ஜீவர்கள், தத்தம் கர்மானுசாரங்களை சேஷ்டித்து அடங்குகின்றனர், ஈசன் சங்கற்ப சகிதர் அல்லர் (ஆண்டவன் ஆட்டி வைப்பதால் இவை நடைபெறவில்லை). ஒரு கர்மமும் அவரை ஒட்டாது.

'கற்பிதமான ஜகதிருஷ்டி நீங்கினாலொழிய அதிஷ்டான சொரூப தரிசனம் உண்டாகாது' என்று ஸ்ரீ பகவான் கூறியதை, இயற்பியலான உலகை அறவே மறந்து விட வேண்டும் என்று கூறியதாக அர்த்தம் கொள்ளலாகாது. பின்னது நிர்விகல்ப சமாதி

(சூழலுணர்வு முற்றும் ஒய்ந்த பரவச நிலை) ஆகும். அவரது கூற்றின் பொருள் வேறானது: காணப்பெறும் பௌதிக உலகம் மெய் எனும் எண்ணம் அகன்று காண்பவை அனைத்தையும் ஆன்ம சொரூபமாக அறிந்து கொள்வதையே அவர் குறிப்பிடுகிறார். இவ் விரண்டிற்கும் உள்ள வித்தியாசத்தை கயிற்றையும் பாம் பையும் வைத்து விளக்கலாம். பழுதை–பாம்பு உபமானம் தொன்றுதொட்டு வருவது. ஆதி சங்கரரும் இதனைப் பயன்படுத்தியுள்ளார். தெருவிலே ஒரு பழுதை (வைக் கோற் பிரிகயிறு) கிடக்கிறது. அந்திவேளை. அரை இருட்டு. எவனோ அந்தப் பக்கம் வந்தவன் அதை மிதித்து விட்டு 'ஐயோ, பாம்பு' என்று பயந்து அலறு கிறான். வெளிச்சத்தில் பார்த்த பிறகுதான் அது வெறும் கயிறு, பாம்பு இல்லை என்று தெரிந்துவிடுகிறது. பயப் பிராந்தி தெளிகிறான். நிரந்தர சத்தியம் பழுதை. அத னைப் பாம்பாகப் பார்த்து வெலவெலத்தது மாயை. பழுதையைப் பழுதை என்று தெரிந்துகொண்டவுடன் பயம் பறந்துவிடுவதுபோல, உலகமும் பிரும்மத்தைச் சார்ந்த ஒரு தோற்றமே, அதற்கு ஆதாரமான பிரும்மம் ஒன்றே நிரந்தர உண்மை என்று அறிகிறபோது மாயை விலகுகிறது.

"நினைவுகளை மூலக் களத்திலேயே உடனுக்குடன் அழித்து விடுவதே வைராக்கியம்" என்ற வாசகமும் விளக்கத்திற்குரியது. "வைராக்கியம்" என்பதன் பொருள், உறுதிப்பாடு, பற்றின்மை, பிரிநிலை அல்லது உள்ளச் சமநிலை எனலாம். "கடல் அலைபோல் மேன்மேலும் தோன்றும் விஷய வாசனைகள் (நினைவுகள்) எப்போது நீங்கும் ?" என்று சிவப்பிரகாசம் பிள்ளை கேட்ட கேள்வியில், அவர் வேண்டுவது மன உறுதியே, வைராக்கியமே என்றாகிறது. ஆகையால்தான் ஸ்ரீபகவான் 'நான் யார்' எனும் விசார மார்க்கமே வைராக்கியம் பெறுவதற்கான சுருக்கு வழி என்ற விதத்தில் பதிலிறுத்தினார். பந்த

பாசங்கள் மனத்தளவிலேதான் நிகழ்கின்றன. ஆகவே, மனம் அடங்கும்போது அவையும் அடங்குகின்றன; அதுவே வைராக்கியம்.

இந்த விடைகளை பின்னர் விரிவாக்கித் தொகுத்து, "நான் யார்?" என்ற சிறு நூல் வடிவாக வெளியிட்டனர். இந்நூலே பலரும் அறிந்து போற்றிய உரைநடை போதனையாக விளங்குகிறது.

1910–ஆம் ஆண்டு வாக்கில் சிவப்பிரகாசம் பிள்ளைக்கு அரசாங்க உத்தியோகத்தில் சலிப்புத் தட்டிவிட்டது. ஆன்மிகத் தேட்டம் அல்லது சாதனைக்கு வேலை ஓர் தடங்கல் என்று எண்ணலானார். போதிய வசதிபடைத்த அவருக்கு வேலைசெய்து சம்பாதித்துக் குடும்பம் நடத்த வேண்டிய அவசியமும் இல்லை. ஆகவே வேலையை ராஜீனாமா செய்துவிட்டார். இதன்பின் மூன்றாண்டுகள் சென்றபிறகு ஓர் முக்கிய முடிவு எடுக்கவேண்டி வந்தது. உத்தியோகத்தை விட்டது உலக வாழ்க்கையினின்றும் தனிப்பதற்காகவா, அல்லது வேலையில் வெறுப்புற்று விலகி; மனதிற்கு உகந்த வாழ்க்கைச் சுகங்களையும் துறக்கவா என்பதே அவரது சஞ்சலம். ஏனெனில் இதற்கிடையில் அவரது மனைவியும் இறந்து போய்விட்டாள். மறுமணம் செய்து கொள்வதா அல்லது துறவி போன்ற வாழ்வை மேற்கொள்வதா என்று முடிவெடுக்கும் நிர்ப்பந்தம் எழுந்தது. அதே சமயம், நடுவயதைத் தாண்டாத அவருக்கு ஓர் மங்கைமீது அடங்காப் பிரியம் ஏற்பட்டது. ஆயினும் அவளை மணந்து புதுக் குடித்தனம் தொடங்கத் தீர்மானித்தால் அதற்கு வேண்டிய அதிக வருவாய்ப் பிரச்சினையும் உண்டு.

இதுபோன்ற சொந்த விஷயங்களை ஸ்ரீபகவானிடம் பிரஸ்தாபிக்க முதலில் துணிவு எழாமல் தயங்கினார். ஒருக்கால் பதில் எப்படியிருக்குமோ என உள்ளூர

அச்சமும் இருந்திருக்கலாம். ஆகவே, பிரச்சினைக்கு முடிவுகாண வேறு வழி மேற்கொண்டார். ஒரு காகிதத்தில் இவ்வாறு நான்கு கேள்விகள் எழுதினார்:

1. உலக சுகதுக்கங்களினின்றும் விடுபெற நான் செய்ய வேண்டியது என்ன ?
2. நான் எண்ணியிருக்கும் பெண்ணை மணம் செய்து கொள்ளவா ?
3. கூடாது என்றால் ஏன் கூடாது ?
4. மணம் புரிந்துகொண்டால் பணம் புரட்டுவது எப்படி ?

காகிதத்தை எடுத்துக்கொண்டு ஓர் விநாயகர் ஆலயத்திற்குச் சென்றார். பிள்ளைப் பருவம் முதற்கொண்டு விநாயகக் கடவுளே அவரது இஷ்டதெய்வம். காகிதத்தை விக்கிரகத்திற்குமுன் வைத்தார். இரவு பூராவும் அங்கேயே விழிப்புடன் தங்கி, காகிதத்தில் எழுத்து மூலம் விடையோ அல்லது வேறு சூசகங்களோ, தோற்றங்களோ உதிக்குமாறு பிரார்த்தித்த வண்ணமிருந்தார்.

ஒன்றும் நிகழவில்லை. இனி சுவாமியிடமே போய்க் கேட்பதைத் தவிர வேறு வழியில்லை என உணர்ந்தார். நேரே விருபாட்ச குகைக்குச் சென்றவர், கேள்விகள் கேட்கத் தயங்கிப் பின்வாங்கினார். அடுத்தடுத்த நாட்களிலும், கேள்வி கேட்கும் எண்ணத்தை ஒத்திப் போட்ட வண்ணமிருந்தார். ஸ்ரீபகவான் யாரையும் குடும்ப வாழ்க்கையைத் துறந்துவிடுமாறு ஒருபோதும் தூண்டியதில்லை என்றாலும், விதிவசமாய் அதனின்றும் விடுபட்ட ஒரு சாதகனை திரும்பவும் இல்லற வாழ்வில் ஈடுபட ஊக்குவிப்பார் என்பதற்கில்லை அல்லவா ? சுவாமியின் சாந்தமான, மாசுமறுவற்ற வாழ்வையும், பெண், பொன் ஆசைகள் அற்ற தூய்மையையும் கண்டுவந்த சிவப்பிரகாசம் பிள்ளையின் மனதில் கேள்விகளுக்கான பதில் மெள்ள மெள்ளத் தானே தோன்றவாரம்பித்தது. ஊரை

விட்டுக் கிராமத்திற்குச் செல்ல நிச்சயித்திருந்த தேதியும் வந்தது. ஆனால் நினைத்திருந்த கேள்விகளைக் கேட்ட பாடில்லையே ? அன்றைய தினம் சுவாமியைச் சுற்றிப் பல பக்தர்கள் இருந்துவந்தமையால் கேள்வி கேட்க தக்க தருணம் கிடைக்கவில்லை. அனைவரும் அறியக் கேட்டாக வேண்டுமே என்ற சங்கடநிலை வேறு. வேறு வழியின்றி சிவப்பிரகாசம் பிள்ளை உட்கார்ந்தவண் ணம் சுவாமியையே கண் வாங்காமல் பார்த்துக் கொண் டிருந்தார். திடீரென்று சுவாமியின் உருவைச் சுற்றிக் கண்கூசும் ஒளி நிறைவதைக் கண்டார். சுவாமியின் சிரசிலிருந்து ஓர் பொன்னிறக் குழந்தை உதயமாகி, திரும்பவும் சிரசினுள் அடங்கி மறைவதாகக் கண்டார். வம்ச வாரிசு என்பது சதைப் பிண்டமான சந்தானச் செல்வம்தான் என்பதில்லை, உடல் சார்பற்ற சைதன்ய சாந்நித்தியமே (தெய்வதமே) மெய்யான சந்ததிச் செல்வம் என்பதனை சுவாமி கண்கூடாக நிகழ்த்திக்காட்டி, தக்க விடையாகத் தனக்கு அளித்தாரோ என மின்னலடித்த எண்ணத்தில் பரவசித்து மட்டற்ற மகிழ்ச்சியில் மூழ்கி னார் சிவப்பிரகாசம். நெடுநாட்களாக அவரை வாட்டி வந்த கிலேசமும் தத்தளிப்பும் நொடிப் பொழுதில் தீர்ந்தன. மனப்பளு சட்டென அகன்ற தெளிவில் தேம்பி யழுதார்.

தமக்குக் கிட்டிய அதிசய தரிசனக்காட்சியை சிவப் பிரகாசம் பிள்ளை மற்ற பக்தர்களிடம் தெரிவித்த போது, சிலர் எள்ளி நகையாடினர், பலர் நம்ப மறுத் தனர், ஏதோ போதை அருந்திப் பிதற்றுகிறார் என்றனர் பலர். இத்தகைய அபிப்பிராயங்கள் ஸ்ரீபகவானின் சகஜ நிலைக்குச் சான்றாகும். இம்மாதிரியான அமானுஷ்யத் தோற்றங்கள், அசாதாரண நிகழ்வுகள் பற்றிய கூற்றுகள் பலவன உண்டு எனினும், ஸ்ரீபகவான் நம்மிடையே பிரசன்னமாயிருந்த ஐம்பது ஆண்டுகளுக்கு மேலான காலப்போக்கில் அவை இங்கொன்றும் அங்கொன்று

மாக பேசப்பட்டனவே தவிர பரவலாக அறியப்பட வில்லை.

மகிழ்ச்சி மேலிட்ட சிவப்பிரகாசம் பிள்ளை, அன் றைய தினம் ஊரைவிட்டுக் கிராமத்திற்குத் திரும்பும் எண்ணத்தைக் கைவிட்டார். மறுநாள் மாலை ஸ்ரீபக வானின் முன்னிலையில் உட்கார்ந்திருக்கையில் திரும்ப வும் தெய்விகக் காட்சியுரு தோன்றியது. இத்தடவை ஸ்ரீ பகவானின் தேகம் காலைக்கதிரவன் போலப் பிரகா சித்தது. அவரைச் சுற்றிப் பூரண சந்திரன்கள் பல சூழ்ந்துசுழன்று பிரபை வியாபித்தது. அடுத்து, சுவாமி யின் உடல் பூராவும் விபூதி பூசினாற் போலவும், கண்கள் கருணையுடன் ஜ்வலிப்பது போன்றும் கண்டார். மேலும் இரண்டு நாட்களுக்குப்பின், ஸ்ரீபகவானின் உடல் முழு வதும் ஸ்படிகக் கல்லால் அமைந்ததுபோன்று தோற்றம் கண்டாராம். சிவப்பிரகாசம் பிள்ளை உடல் சிலிர்த் தார். அவ்விடத்தை விட்டு அகன்றால் இதயத்தை நிறைத் துப் பீறிடும் ஆனந்தம் அடங்கி விடுமோ என அச்சப் பட்டார். பலநாட்களுக்குப் பிறகே தன் கிராமம் போய்ச் சேர்ந்தார். கேட்காத கேள்விகளுக்கெல்லாம் விடை கிடைத்துவிட்டதே? மீதி வாழ்நாள் பூராவும் பிரும்ம சரியத்தைக் கடைபிடித்து, எளிமையாய் துறவி போலக் காலம் கடத்தினார். தமக்கு நேர்ந்த அனுபவங்களை ஒரு தமிழ்ப் பாடலில் விவரித்துள்ளார். ஸ்ரீ பகவானைப் போற்றி வேறுசில பாடல்களும் இயற்றி யுள்ளார். அவற்றில் சில இன்றும் பக்தர்களால் பாடப்பட்டு வருகின்றன.

## நடேச முதலியார்

ஸ்ரீபகவானின் மௌன உபதேசம், வந்தவர் அனை வருக்கும் புரிந்தது என்பதில்லை. நடேச முதலியார் என்ற வழிபாட்டாளர் அதன் மகிமையை முடிவில் பூரணமாய் உணர்ந்தார் எனினும், அதற்கான பக்குவம்

பெற வெகுகாலம் பிடித்தது. ஆரம்பப்பள்ளி ஆசிரிய ரான அவர், சுவாமி விவேகானந்தரின் சரிதையைப் படித்த பிறகு, தானும் குடும்பத்தைத் துறந்து ஒரு குருவை நாடவேண்டும் எனப் பேராவல் கொண்டார். அருணாசலக் குன்றின் மேல் இருக்கை கொண்ட சுவா மியைப் பற்றி நண்பர்கள் சொல்லக் கேட்டார். ஆனால் சுவாமியிடமிருந்து உபதேசம் பெறுவது இயலாத காரி யம் என்றும் கூறினர். இருந்தும், முயன்று பார்க்க முனைந்தார் முதலியார். இது நிகழ்ந்தது 1918–ஆம் ஆண்டில். அவ்வமயம் ஸ்ரீபகவான் ஏற்கனவே ஸ்கந்தா சிரமத்தில் இருந்து வந்தார். அங்கு விரைந்த நடேச முதலியார் அவர்முன் அமர்ந்தார். ஸ்ரீபகவானோ மௌ னமே உருவாய் சமைந்திருந்தார். தான் முதலில் பேச நா எழாத முதலியார் ஏமாற்றத்துடன் திரும்பினார்.

இந்த முயற்சியில் தோல்வியுற்ற அவர், பல இடங் களுக்குப் பயணித்து, பல்வேறு சுவாமிகளையும் யோகி களையும் கண்டுவந்தார். ஆயினும் அவர்கள் எவரது முன்னிலையிலும் தெய்வ இருப்பு ஏதும் உணர மாட் டாமற் போகவே, வேறு யாரிடமும் சரண்புக மனம் விழையவில்லை. இவ்வாறு இரண்டாண்டுகாலம் அங்கு மிங்கும் தேடியலைந்தபிறகு 1920–இல் அண்ணாமலை அண்ணலுக்கு ஓர் நீண்ட கடிதம் எழுதித் தபாலில் சேர்த்தார். அதனில், 'ஆத்மனை நாடும் ஆன்மாக்களின் விதி குறித்துத் தாங்கள் பாராமுகமாய் இருத்தல் தகுமோ' என்ற நடையில் மன்றாடி, 'முதல்முறை வந்தது வியர்த்த மாயிற்று, இப்போது இன்னொரு முறை காண அனுமதி கோருகிறேன்' என எழுதியிருந்தார். ஒரு மாதம் ஆகி யும் பதிலொன்றும் கிடைக்கவில்லை. பிறகு பதிவுத் தபாலில் (பெறுநர் அஞ்சல் அட்டை இணைத்து) இன் னொரு கடிதம் அனுப்பிவைத்தார். அதனில், 'நான் எத்தனை ஜன்மங்கள் எடுக்க நேர்ந்தாலும் தங்களிட மிருந்து மட்டுமே உபதேசம் பெறுவது என்று சங்கல்

பித்து விட்டேன். எனது இந்த வாழ்நாளில் தங்களது உபதேசம் பெறும் பாக்கியம் அல்லது அருகதை எனக்கில்லை என்று தாங்கள் எண்ணினால் அடுத்த ஜன்மத்திலாவது உபதேசம் வழங்கப்பெற, தாங்களும் ஜன்மம் எடுக்க வேண்டி வரலாம். இது சத்தியம்' என்றெல்லாம் எழுதித் தள்ளியிருந்தார்.

நாட்கள் சில சென்றபின், அவரது கனவில் ஸ்ரீ பகவான் தோன்றி, 'என்னைப்பற்றியே சதா எண்ணியிருக்க வேண்டாம். முதலில் ரிஷப வாகனனான பரமேச்வரனின் அருளை வேண்டிப் பெறுவாயாக. அதன் பின் எனது உதவி தானாக உன்னைத் தேடி வரும்' என்றாராம். முதலியாரின் வீட்டில் சிவபெருமானின் ரிஷபவாகனப் படம் இருந்தது. அதை வைத்துத் தியானம் செய்யலானார். சில நாட்களுக்குப் பிறகு அவருடைய கடிதத்திற்கு பதில் கிடைத்தது: "கடிதங்களுக்கு மகரிஷி பதில் எழுதுவதில்லை. நீங்கள் வேண்டுமானால் அவரை நேரில் வந்து காணலாம்" என்பதே அதன் வாசகம்.

கிடைத்த பதில் மகரிஷியின் ஆணைப்படி எழுதப் பட்டதுதானா எனக் கடிதம் மூலம் கேட்டறிந்தபின், நடேச முதலியார் திருவண்ணாமலை சென்றார். கனவில் கண்ட அறிகுறியை அனுசரித்து அவர் முதலில் அவ்வூரின் பேராலயத்திற்குச் சென்று ஸ்ரீஅருணாசலேஸ்வரரை தரிசித்து, அன்றிரவு அங்கேயே தங்கினார். ஆலயத்தில் அவர் சந்தித்த ஓர் அந்தணர் அவரது நோக்கை அறிந்ததும் முதலியாரின் மனதை மாற்ற முயன்றார். "இதோ பாருங்கள் முதலியார்வாள்! நான் சென்ற 16 வருஷங்களாக ரமண மகரிஷியின் அருகிலேயே இருந்துகொண்டு அவருடைய அனுக்கிரகத்தைப் பெற ஆன மட்டும் முயன்றேன். பலிக்கவில்லை. அவர் எதையும் யாரையும் மதிப்பது கிடையாது. நீர் உமது

மண்டையை உடைத்துக்கொண்டால்கூட, ஏன் இப்படி என்று கேட்க விரும்ப மாட்டார். அவரது கடாக்ஷம் கிடைப்பது நடவாத காரியம். அவரைப் போய்ப் பார்ப்பது வியர்த்தமே" என்று தடுத்துரைத்தார். நடேச முதலியாரோ அதற்கெல்லாம் அசைந்து கொடுப்பவராக இல்லை. 'போய்ப் பார்த்தே தீருவேன்' என்று தீவிரமாய்க் கூறவே, அந்தணர் கடைசியாகச் சொன்னார்: "எது எப்படியோ போங்கள். ஆனாலும், மகரிஷியின் அருள் கிடைக்கும் அதிர்ஷ்டம் இருக்கிறதா என்று பார்க்க ஒரு வழி உள்ளது. குன்றின் மேல் சேஷாத்ரி சுவாமி என்று ஒருவர் இருக்கிறார். யாருடனும் பழக மாட்டார். கிட்டபோனால் விரட்டியடிப்பார். ஒருவேளை அவருடைய தயவு கிடைத்தால் அது உமது வெற்றிக்கு அறிகுறியாகும்."

மறுநாள் காலை, ஜே.வி. சுப்பிரமணிய அய்யர் என்ற ஆசிரிய நண்பரையும் அழைத்துக்கொண்டு, நடேச முதலியார் எளிதில் அகப்படாத சேஷாத்ரி சுவாமியைத் தேடிப்போனார். வெகுநேரம் தேடி அலைந்தபின் அவர்கள் அவரைக் கண்டுபிடித்தனர். அவரே இவர்களை நோக்கி வருவதைக் கண்ட முதலியார் ஆச்சரியமும் ஆசுவாசமும் ஒருங்கே பெற்றார். வந்த விஷயத்தைப் பிரஸ்தாபிக்கும் முன்னரே முதலியாரை நோக்கி சேஷாத்ரி சுவாமி இவ்வாறு உரைத்தார்: "ஐயையோ குழந்தாய் ஏன் மனதைப் புண்படுத்திக் கவலைப்படவேண்டும்? ஞானம் ஞானம் என்றால் என்ன? எது எது அநித்தியமோ அதையெல்லாம் புத்தியால் நீக்கி, எது நீக்க முடியாமல் மிஞ்சுகிறதோ அதுதான் ஞானம். அதுதான் தெய்வம்; எல்லாம் அதுதான். மலையிலே போனால்தான் ஞானம் வரும், குகையில் போனால்தான் ஞானம் வரும் என்று அங்குமிங்கும் அலைவது பைத்தியம்தான், பயப்படாதே, போ." இவ்வாறாக, சேஷாத்ரி சுவாமியே ஸ்ரீபகவானின் உபதேசத்தையே ஏறத்தாழ அதே மொழிப்

பிரயோகத்தில் முதலியாருக்குப் பேச்சுவாக்கில் புகட்டினார்.

இந்த சுப சகுனத்தால் உற்சாகமுற்ற அவ்விரு நண்பர்களும் மலைச் சாரலில் ஏறிச் சென்று ஸ்கந்தாசிரமத்தை அடைந்தனர். அங்கு போய்ச் சேர்ந்தபோது கிட்டத்தட்ட நடுப்பகல் ஆகிவிட்டிருந்தது. அங்கு, தொடர்ந்து ஐந்து அல்லது ஆறு மணி நேரம் ஸ்ரீபகவான் முன்னிலையில் முதலியார் அமர்ந்திருந்தார். இருவரும் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. ஆசிரமத்தில் மாலை உணவு தயாரானதும் ஸ்ரீபகவான் வெளியே செல்ல எழுந்தார். அச்சமயம்தான் ஜே.வி. சுப்பிரமணிய அய்யர் தயக்கத்துடன், "இவர்தாம் கடிதங்கள் எழுதினவர்" என்றுரைத்தார். முதலியாரை ஸ்ரீபகவான் கூர்ந்து நோக்கிய பின் வாய்திறவாது திரும்பி வெளியேறினார்.

அடுத்தடுத்த மாதங்களில் முதலியார் அடிக்கடி அங்கு வந்து மகரிஷிமுன் அமர்ந்து மனதாரப் பிரார்த்தித்துச் சென்றார். ஆனால் ஸ்ரீபகவானோ அவரோடு ஒருபோதும் ஓர் வார்த்தையேனும் பேசினாரில்லை. முதலில் பேச்செடுக்க முதலியாரும் முன்வரவில்லை. இவ்வாறு ஒரு வருடம் ஓடிவிட்டது. அதற்குமேல் முதலியாரால் பொறுக்கமுடியவில்லை. கடைசியில் தாழ்மையுடன் வினவினார்: "தங்களது அருட்பாலிப்பு அனுபவத்தை ஜனங்கள் பலவிதமாக வர்ணிக்கிறார்கள். அடியேனும் தங்கள் அருள்வீச்சுக்குப் பாத்திரமாகி அதனைத் துய்த்துணர ஏங்குகிறேன்."

ஸ்ரீபகவான் பதிலுரைத்தார்: "நான் எப்போதுமே அருள் வழங்கிய வண்ணமிருக்கிறேன். அதைப் பெற்றுக் கொள்ள இயலவில்லை என்றால் அதற்கு நான் என்ன செய்ய?"

இதற்குப்பிறகும்கூட மௌன உபதேசத்தின் மகிமை முதலியாருக்கு விளங்கவில்லை. உள்ளம் தெளிய எந்த வழியைப் பின்பற்றுவது என்றும் புரியவில்லை. சில

நாட்கள் சென்றபின் முதலியாரின் கனவில் ஸ்ரீபகவான் தோன்றி இவ்வாறு பகன்றார்: "இரு கண்களின் பார்வையையும் ஏகப்படுத்தி, புறத்திலும் லக்ஷியம் வைக்காமல் திருஷ்டியை சமப்படுத்திக்கொண்டு அப்பியசி." பௌதிகமான புறக்கண் பார்வையைப்பற்றி இவ்வாறு கூறுவதாக எண்ணிய முதலியார், "இது உகந்த வழியாகத் தெரியவில்லையே. தங்களைப் போன்ற உத்தம புருஷர் இவ்வாறு ஆலோசனை கூறினால் வேறு யார்தாம் எனக்கு உண்மையை உபதேசிக்கக்கூடும்?" என்று கேட்க, ஸ்ரீ பகவான், "அதுவே சிறந்த உபாயம்" என்று கூறி மறைந்தாராம்.

அடுத்த நிகழ்வுகளை முதலியாரே இவ்வாறு விவரிக்கிறார்: "அந்தக் கனவு–உபதேசத்தை சிறிது காலம் தொடர்ந்து அப்பியசித்துவந்தேன். பின்னர் இன்னொரு கனாக் கண்டேன். இக்கனவில் என் தந்தை என்னருகில் நின்று கொண்டிருக்கையில் ஸ்ரீபகவான் தோன்றினார். தகப்பானாரைச் சுட்டிக் காட்டி, 'யார் இவர்?' என வினவினார். தத்துவ ரீதியாக எனது விடை சரிதானா என்ற தயக்கத்துடன், "எனது தகப்பனார்" என்றேன். மகரிஷியோ அர்த்தம் நிறைந்த பார்வையுடன் மந்தகாசம் புரிந்தார். நான் தொடர்ந்து, 'எனது விடை பொதுவான சொல்வழக்குப்படியே அமைந்தது; தத்துவ நோக்கில் அல்ல' என்று நீட்டினேன். ஏனெனில் 'நான்' என்பது உடல் அன்று என்பது நினைவில் நிழலாடியது. மகரிஷி என்னை உடனே தமதருகில் இழுத்து, அவரது உள்ளங்கையை முதலில் என் தலைமீது வைத்து, அதன் பின் என் வலதுமார்பில் பொருத்தி, மார்புக் காம்பை அழுத்தினார். எனக்கு சற்று வலித்தது என்றாலும் அது மகரிஷியின் அருட்கனிவு என்பதால் அமைதியுடன் பொறுமையாக இருந்தேன். ஏன் அவர் என் இடது மார்பைத் தவிர்த்து வலது மார்பை அழுத்தினார் என்று எனக்கு அப்போது விளங்கவில்லை." [1]

1. இதற்கான காரணம் 14–ஆம் அத்தியாயத்தில் காணப்பெறும்.

இவ்வாறு, நேர்முகமாய் உபதேசம் பெற முதலியார் முதலில் தவறினாலும், கனவு வாயிலாய்த் தொட்டு தீட்சை வழங்கப் பெற்றார்.

ஆன்மீக சாதனை மேற்கொள்ள அடங்கா ஆவல் கொண்டு அதன் பொருட்டு குடும்ப வாழ்க்கையை உதறித் தள்ளித் துறவியாய்த் திரிய முற்பட்ட சாதகர்களுள் நடேச முதலியாரும் ஒருவர். ஏனைய நேர்வுகளில் போலவே இவர் விஷயத்திலும் ஸ்ரீபகவான் அதனை ஆமோதிக்கவில்லை. "இங்கு இருக்கும்போது குடும்பக் கவலைகளைத் தவிர்த்துள்ளது போல், வீட்டிற்குச் சென்ற பிறகும் எதைப் பற்றியும் கவலைப்படாமல், எவ்வித பாதிப்புமின்றி விஸ்ராந்தியாக இருந்து வரலாமே" என்றார். குரு வாக்குக்கு மறு வாக்கு இல்லை என்பதான பரம பக்தனின் நிலையை முதலியார் அப்போது எட்டவில்லை போலும்! ஸ்ரீபகவானின் உத்திரவு கிடைக்காவிடினும், காஷாயம் தரித்து சந்நியாசம் மேற்கொண்டார். ஆனால் ஸ்ரீபகவான் முன்கூட்டியே எச்சரித்தது போலவே, முதலியாரின் ஆன்மீகப் பாதையில் இடையூறுகள் அதிகமாயினவே தவிர குறையவில்லை. சில ஆண்டுகளுக்குப் பிறகு அவர் திரும்பிவந்து தமது குடும்பத்தோடு இருந்து வரலானார். அதன் பிறகு அவரது ஆன்மீக ஈடுபாடு ஆழம் கண்டது. ஸ்ரீ பகவானைத் துதித்து பற்பல பாடல்கள் புனைந்தார்.[1] ஆண்டாண்டு காலமாய் அவர் எதிர்நோக்கியிருந்த ஸ்ரீரமண வாய்மொழி போதனா விடைகளை மற்றவர்களைக் காட்டிலும் பெருமளவில் கேட்டுப் பெறும் பாக்கியம் கிட்டினார். அவ்வசனங்களின் தொகுப்பே "உபதேச மஞ்சரி" என்கிற நூல்.

1. நடனானந்தர் என்று பின்னர் அறியப்பட்ட நடேச முதலியார், தாம் பெற்ற அருட் செல்வத்தை அவர் இயற்றிய ரமண தோத்திர மஞ்சரி, ரமண தோத்திர சோடகம், ரமண நான்மணி மாலை, ரமண அந்தாதி, ரமண சதகம் முதலிய பாடல் தொகுப்புகளில் ஆங்காங்கே கோடி காட்டியுள்ளார்.

இதனில் குரு ரமணரின் அருளுரைகள் மிக அழகாய்க் கோத்துத் தரப்பட்டுள்ளன.

## கணபதி சாஸ்திரி

இளந்துறவியை நாடி வந்த அறிஞர்களுள் தலை சிறந்தவர் கணபதி சாஸ்திரி என்பவர். கணபதி முனிவர் என்று பிரபலமாக அறியப்பட்ட இவர் வடமொழியில் அனாயாசமாகக் கவிதைகள் உடனடியாய் இயற்றும் மேதமை படைத்தவர் என்ற காரணத்தால் 'காவ்ய கண்டர்' என்ற கௌரவப் பட்டப் பெயரும் பெற்றவர். நிகரற்ற திறமைவாய்ந்த இம் மாமேதை, தாம் விரும்பி யிருந்தால் நவீன முன்னணி எழுத்தாளர் மற்றும் அறி வாளர்களுள் மிகச் சிறந்தவராக தலையெடுத்திருக்கக் கூடும். அல்லது உலகாயத விருப்பு வெறுப்பு அறவே அற்றவராக இருந்திருந்தால் மேன்மை மிக்க ஆன்மிக ஆசானாக ஆகியிருப்பார். ஆனால் அவரோ இவ்விரண் டிற்கும் இடைப்பட்டவர். இறைவன் பால் தீவிர நாட் டத்துடன் சாதனை மேற்கொண்டு வெற்றியும் புகழும் காண விழைந்தார். அதே சமயம், 'கர்மம் புரிபவன் நான்' எனும் உலக மாயையினின்றும் ஜன சமூகத்தை விடுவித்து உயர்த்தவும் பேராவல் பூண்டார்.

1878ஆம் ஆண்டு அவர் பிறந்த சமயம் (ஸ்ரீ பகவானை விட ஒரு வயது மூத்தவர்), அவரது தகப்பனார் காசியில் ஓர் கணபதி பிரதிமைக்கு முன் தியானத்தில் அமர்ந் திருந்தார். அப்போது கணேசர் விக்கிரகத்தினின்றும் ஓர் குழந்தை தோன்றித் தம்மை நோக்கித் தவழ்ந்து வருவதாகத் தோற்றம் கண்டார். ஆகவே, பிறந்த குழந் தைக்கு கணபதி என்று பெயர் சூட்டினார். ஐந்து வயதாகியும் குழந்தை கணபதி பேச்செழாது ஊமை யாகவும், வலிப்பு நோயால் பாதிக்கப்பட்டும் எதிர்கால மற்று வளர்ந்து வந்தது. அவ்வயதில் பழுக்கக் காய்ச்சிய இரும்புக் கரண்டியால் பாலகனுக்கு சூடு இழுத்த பிறகே

உடல் குணமாயிற்று. உடனேயே அவனது அற்புதத் திறமையும் வெளிப்படத் தொடங்கி விட்டது. பத்தாவது வயதிலேயே சமஸ்கிருதத்தில் செய்யுள் புனைந்தான். பஞ்சாங்கம் கணித்தான். சமஸ்கிருத காவியங்களும் இலக்கண விதிகளும் கற்றுத் தேர்ந்தான். பதினாலு வயதில் பஞ்ச காவியங்களையும் வடமொழியில் யாப்பிலக்கணம் மற்றும் சொல்லணிக் கலை பற்றிய முக்கிய நூல்களைப் படித்துத் தேர்ச்சி பெற்று விட்டான். ராமாயணம், மகாபாரதம் மற்றும் பல புராண நூல்களை ஆழ்ந்து படித்தறிந்தான். அவ்வயதிலேயே வடமொழியில் மடைதிறந்தாற் போல் பேசும் நாவன்மை பெற்றான். ஸ்ரீபகவானைப் போலவே சிறு வயதிலேயே வியக்கத்தக்க ஞாபக சக்தி வாய்ந்தவன். கேட்டவை, படித்தவை எதுவும் தெளிவாய் ஞாபகத்தில் பதியும். மேலும், ஸ்ரீ பகவானைப் போன்று இவரும் அஷ்டாவதானி, அதாவது ஒரே சமயத்தில் வெவ்வேறு காரியங்களில் கவனம் செலுத்தக் கூடிய அபாரத் திறமை வாய்ந்தவராக விளங்கினார்.

பண்டைய ரிஷிகளின் வரலாறுகளைப் படித்தறிந்த பதினெட்டு வயது கணபதியின் வாலிப உள்ளத்தே, தானும் அவர்களைப் போலவே சிறந்து ஓங்க வேண்டும் என்ற ஆர்வத் தீ மூண்டது. திருமணம் முடித்த சிறிதே காலத்திற்குள் இந்தியா முழுவதும் பயணித்துவரப் புறப்பட்டு விட்டார். பல்வேறு புண்ணியத் தலங்களுக்கு யாத்திரை போனார். மந்திரங்கள் ஜபித்தார். தவங்கள் மேற்கொண்டார். 1900–ஆம் ஆண்டு வங்க மாகாணத்து நாதியா நகரில் நடைபெற்ற வடமொழிப் பண்டிதர்கள் சபையில் கலந்து கொண்டார். நினைத்த மாத்திரத்தில் கவிதை இயற்றும் புலமையையும் வேதாந்த சர்ச்சைகளில் தம் மேதாவிலாசத்தையும் அச்சபையின் முன் வெளிப்படுத்தினார். அதன் காரணமாகவே முன்சொன்ன 'காவ்ய கண்டர்' என்ற சிறப்புப் பட்டம் வழங்கப்

பெற்றார். 1903–ஆம் ஆண்டு திருவண்ணாமலை க்ஷேத்திரத்திற்கு வந்துசேர்ந்தார். குன்றின்மீது இருந்துவந்த பிராமண சுவாமியை அவ்வாண்டில் இருமுறை சென்று பார்த்தார். வேலூரில் ஓர் பள்ளி ஆசிரியராகச் சேர்ந்து குறுகிய காலம் பணியாற்றினார். அங்கிருந்து திருவண்ணாமலைக்கு ரயில் பிரயாணம் ஒரு சில மணி நேரம் தான். வேலூரில் கணபதி சாஸ்திரியைச் சுற்றி பல சீடர்கள் குழுமினர். தமது குழுவினரின் மந்திர உச்சாடனம் மற்றும் வேள்விகள் மூலம் அமானுஷ்ய சக்திகளை வளர்த்து பாரத தேசத்தைப் புனர்நிர்மாணிப்பதே அவரது முனைப்பாக அமைந்தது.

ஆசிரியர் வேலையில் அவர் மனம் செல்லவில்லை. 1907–ஆம் ஆண்டில் அவர் திரும்பவும் திருவண்ணாமலை வந்தடைந்து, மந்திர ஜபங்களில் முழுதாய் ஈடுபடலானார். அவ்வமயம்தான் அவரை அவநம்பிக்கை மெல்லப் பிடித்தது. ஆண்டாண்டுகளாய் மந்திரம் ஜபித்துத் தவங்கள் புரிந்துவந்தும்கூட தெய்வீக காரியங்களிலோ உலக வாழ்விலோ ஏதும் சாதிக்கவில்லையே என்ற மனக் கிலேசம் அவரை வாட்டியது. திக்குத் தெரியாத காட்டில் சிக்குண்டவர் போல் உணர்ந்தார். கார்த்திகை உற்சவத்தின் ஒன்பதாம் நாளன்று மலை மேலுள்ள சுவாமியின் நினைவு சட்டென்று தோன்றியது. 'ஆம். அவரிடமே விடை நிச்சயம்' என்ற உத்வேகம் எழவே அதனை உடனடியாய் செயல்படுத்தச் சித்தமானார். பிற்பகல் வெப்பத்தையும் பொருட்படுத்தாது குன்றின் மீது ஏறிச் சென்று, விருபாட்ச குகையை அடைந்தார். குகையின் வெளித் தாழ்வாரத்தில் சுவாமி தன்னந் தனியே அமர்ந்திருந்தார். அவரது காலடியில் சாஸ்திரி நெடுஞ்சாண்கிடையாக விழுந்து நமஸ்கரித்து, சுவாமியின் பாதங்களைக் கெட்டியாய்ப் பற்றினார். உணர்ச்சி வேகத்தில் குரல் தழுதழுக்க விளம்பினார்: ''படித்தறிய வேண்டியவை அனைத்தும் படித்து விட்டேன். வேதாந்த

சாஸ்திரங்கள் முழுதும் கற்றுணர்ந்துள்ளேன். மனம் கொண்ட அளவு ஜபதபங்கள் செய்திருக்கிறேன். இருந்தும், இந்தச் க்ஷணம் வரை தபஸ் என்பதன் தாத்பரியம் என்னவென்று தெரியவில்லை. ஆகவே தங்கள் திருவடி களில் சரணடைகிறேன். தபஸ் என்பதன் உண்மை இயல்பை அடியேனுக்கு தயைகூர்ந்து அருளுமாறு பிரார்த் திக்கிறேன் ஸ்வாமி.''

சுவாமி மௌனப் பார்வையை சாஸ்திரி மீது பதி னைந்து நிமிடநேரம் பதித்தார். பின்னர் நிறுத்தி நிதா னித்து உரைத்தார்:

''நான் நான் என்பது எங்கிருந்து புறப்படுகிறதோ அதை கவனித்தால் மனம் அங்கே லீனமாகும் (அடங்கும்). அதுவே தபஸ். ஒரு மந்திரத்தை ஜபம் பண்ணினால் அந்த மந்திரத்வனி எங்கேயிருந்து புறப்படுகிறது என்று கவனித்தால் மனம் அங்கே லீனமாகிறது. அதுவே தபஸ்.''

சுவாமி மொழிந்த வார்த்தைகளைக் காட்டிலும் சுவாமியிடமிருந்து பரவிய அருள் வீச்சே சாஸ்திரி யாரை ஆனந்தத்தில் ஆழ்த்தியது. பொங்கிப் பெருகும் உள்ளுயிர்த் துடிப்புடன் எதிலும் செயல்படும் அவர், சுவாமியின் புகழ்பாடி ஐந்து சமஸ்கிருத சுலோகங்கள் உடனடியாய் இயற்றித் துதித்தார். தாம் பெற்ற உபதே சத்தைத் தமது நண்பர்களுக்கு மறுநாளே எழுதியனுப் பினார். சுவாமியின் நாமம் வெங்கடராமன் என்று பணிமகன் பழநிஸ்வாமியிடம் கேட்டறிந்து, இனி பிரா மண சுவாமி, பகவான் ஸ்ரீ ரமணர் என்ற பெயரில் 'மகரிஷி' என்றே குறிப்பிடத்தக்க உத்தம ஞானாசிரியன் எனப் பிரகடனம் செய்தார். அவ்வாறே ரமணன் என்ற பெயர் அன்று முதல் வழக்கில் வந்தது. அத்துடன், மகரிஷி (மஹா – ரிஷி) என்ற பட்டப் பெயரும் இணைந்து, ரமணமகரிஷி என்ற பெயர் நிலைத்தது. ஆயினும்

நாளடைவில் மகரிஷியின் பக்தர்கள் அவரது பெயரைச் சொல்லாமல் பொதுப்படையாக தெய்வம் அல்லது தெய்வதம் என்ற அர்த்தத்தில் 'பகவான்' என்றே அழைக்கலாயினர். அவரும் வழக்கமாக, 'நான்' என்று தம்மைக் குறிப்பிடுவதைத் தவிர்த்து, பொதுச்சுட்டான பிரயோகத்தையே பேசும்போது கையாண்டார். உதாரணமாக, "சூரியன் எப்போது உதித்தது, எப்போது அஸ்தமித்தது என்று எனக்குத் தெரியாது" என்று கூறுவதற்குப் பதிலாக, "சூரியன் எப்போது உதித்தது, எப்போது அஸ்தமித்தது என்று யாருக்குத் தெரியும்?" என்பார். சில சமயங்களில் தமது தேகத்தை 'இது' என்று குறிப்பிடுவார். தெய்வம் என்ற சொல் பொருத்தமாக அமையும் பேச்சில் மட்டும் 'பகவான்' என்ற பதத்தைப் பிரயோகிப்பார். எடுத்துக்காட்டாக, என் மகள் கிட்டியை நான் ஸ்கூலுக்கு அனுப்பி வைக்கையில், 'அவள் ஆசிரமத்தில் இல்லாத போதும் அவளை ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள்' என்று அவரிடம் கேட்டுக்கொண்டபோது, அதற்கு அவர் இவ்வாறு பதிலளித்தார்: "கிட்டி பகவானை நினைவிற் கொண்டால் பகவானும் கிட்டியை ஞாபகத்தில் வைப்பான்."

ஸ்ரீ பகவானை சுப்பிரமணியக் கடவுளின் அவதாரமாகவே கணபதி சாஸ்திரி கருதுவதுண்டு. ஆனால் பக்தர்கள் இவ்விஷயத்தில் சாஸ்திரியைப் பின்பற்ற மறுத்தது நியாயமே. ஸ்ரீ பகவானை ஏதாவது ஒரு குறிப்பிட்ட தெய்வாம்சமாகப் போற்றுவது, வரையறையற்ற ஞானச் சிரேஷ்டரை வரையறுத்துக் குறுக்குவதாக ஆகிவிடும் என்பதே பக்தர்களின் நோக்கு. அவ்வாறு பிறர் தம்மை தெய்வப் பிறவியாக அடையாளம் காட்டுவதில் ஸ்ரீ பகவானுக்கும் உடன்பாடு கிடையாது. ஒரு சமயம், வருகை தந்த ஒருவர் அவரிடம், "தாங்கள் சுப்பிரமணியக் கடவுளின் அவதாரம் என்று சிலர் கூறுவது உண்மையென்றால் பிறர் சொல்லி நாங்கள் அனுமா

னிப்பதற்கு பதிலாகத் தாங்களே அதை வெளிப்படை யாகக் கூறலாமே?" என்று கேட்டார்.

அதற்கு ஸ்ரீ பகவான் அளித்த பதில்: "அவதாரம் என்றால் என்ன? கடவுளின் அம்சத்தின் ஒரு வெளிப் பாடுதானே அவதாரம் என்பது? ஆனால் நிறைஞானி என்பவனோ முழுமுதற் கடவுள் ஆகிறானே?"

ஸ்ரீபகவானை சந்தித்து நிறைவுபெற்ற ஓராண்டுக் குப் பின்னர், அவரது அருள் வெள்ளத்தை அனுப விக்கும் அறிய நிகழ்ச்சிக்குக் கணபதி சாஸ்திரி ஆளானார். திருவொற்றியூரில் (சென்னையருகில் உள்ளது) ஒரு பிள்ளை யார் கோயிலில் சாஸ்திரியார் தியானித்து அமர்ந்திருக் கையில் மனம் நிலைகொள்ளாது கவனம் மாறுவதை உணர்ந்து வருந்தினார். ஸ்ரீ பகவான் நேரடியாய் வந்து மன அமைதிக்கு வழி காட்டமாட்டாரா என மிக மிக ஏங்கினார். அதே தருணம் ஸ்ரீ பகவான் கோயிலுக்குள் நுழைவதைக் கண்டார். கணபதி சாஸ்திரி உடனே எழுந்து அவர் முன் விழுந்து நமஸ்கரித்து எழுந்திருக் கையில், ஸ்ரீ பகவானின் கை தமது தலையைத் தொடு வதை உணர்ந்தார். அந்த ஸ்பரிசத்தினால் சாஸ்திரியாரின் உடல் பூராவும் மின்சாரம் பாய்வது போன்ற வேகம் வியாபித்தது. ஞானகுரு தன்னைக் கையால் தொட்டு தீட்சை (ஹஸ்ததீக்ஷை) வழங்கிவிட்டாரே என்று சாஸ்தி ரியார் மகிழ்ந்துபோனார்.

பல ஆண்டுகளுக்குப் பிறகு அந்த நிகழ்ச்சியை நினைவுகூர்ந்து ஸ்ரீ பகவான் பின் வருமாறு பகன்றார்: "பல வருஷங்களுக்கு முன்னால் ஒரு நாள் வெறுமனே கண்விழித்துப் படுத்திருந்தேன். திடீரென்று என் உடல் உயர எழும்பி மேலேமேலே மிதந்து போவதாக உணர்ந் தேன். கீழே தரையில் கிடந்த சாமான்கள் சின்னஞ் சிறிதாய்த் தெரிந்து, கடைசியில் மறைந்தே போயின. என்னைச் சூழ்ந்து கண்கூசும் ஒளிவெள்ளம் நிரம்பிய

எல்லையற்ற வெட்டவெளி வியாபித்திருக்கக் கண்டேன். சிறிது நேரம் சென்றபின் என் உடல் மெல்ல மெல்லக் கீழே இறங்குவதை உணர்ந்தேன். கீழே உள்ள காட்சிகள் கண்ணுக்குப் புலப்படத் தொடங்கின. நிகழ்வன யாவற்றையும் நான் பூரணமாய் உணர்ந்து கொண்டேதான் இருந்தேன். 'ஓஹோ! சித்த புருஷர்களும் இதே போலத்தான் குறுகிய நேரத்தில் தொலைதூரம் பயணிப்பார்களோ, மர்மமாக மறைந்து, பிறகு தோன்றுவார்களோ' என்று எண்ணிக் கொண்டேன். உடல் தரையில் இறங்கியதும், அந்த இடம் திருவொற்றியூராகத் தான் இருக்கும் என்று மனதில் பட்டது. விசேஷம் என்னவென்றால் நான் அந்த இடத்தை முன்பின் பார்த்ததே இல்லை![1] ஒரு நெடுஞ்சாலையில் நின்று கொண்டிருப்பதை உணர்ந்தேன். சாலையில் நடந்து சென்றேன். சற்று தூரம் சென்றபின், சாலையோரத்தில் ஓர் பிள்ளையார் கோயிலைக் கண்டேன். அதனுள் நுழைந்தேன். உள்ளே சென்ற நான் ஏதோ பேசினேன். என்ன பேசினேன், என்ன செய்தேன் என்பதெல்லாம் ஞாபகத்தில் இல்லை."

மேற்சொன்ன நிகழ்ச்சி, ஸ்ரீ பகவானின் தனிச் சிறப்புக்கு ஓர் எடுத்துக்காட்டு. அவரது அன்பர்களில் ஒருவர் சங்கடத்தில் சிக்கினால், அல்லது மனதார வேண்டினால், அற்புதம் நிகழ்வதுபோல் குறுக்கீடுகள் தாமாக விலகும், உதவி உடன் வந்து சேரும். ஆனால், ஸ்ரீ பகவானின் காலடியில் அமானுஷ்ய ஆற்றல்கள் கொட்டிக் கிடந்தாலும் அவர் என்றும் அந்த சூட்சும சக்திகளை நேரடியாய்ப் பிரயோகித்தாரில்லை. உலகாயதமான இயற்கைக்கு இணைந்த வழிமுறைகளையே அனுசரித்தார். பக்தர்களின் பிரார்த்தனையின் பயனாக இதுபோன்று ஏற்பட்ட அதிசய நிகழ்வுகளைப் பற்றி

1. 1896, செப்டம்பர் முதல் தேதி திருவண்ணாமலை வந்தடைந்ததிலிருந்து மகரிஷி ரமணர் அவ்விடத்தை விட்டு வாழ்நாள் முழுதும் வேறெங்குமே சென்றதில்லை.

அவரிடம் பரபரப்புடன் பிரஸ்தாபித்தால், அதற்கு அவர், "அப்படியா சமாச்சாரம்!" என்று குழந்தை மாதிரி வெகுளியாய் விளம்புவார்!

இத்தகைய பட்டும்படாத நிலையைத்தான் கணபதி சாஸ்திரி பற்றத் தவறினார். ஓர் முறை வினவினார் அவர்: "எனது அனைத்து இலட்சியங்களையும் அடைவதற்கு 'நான்' என்ற எண்ணத்தின் தோற்றுவாயை நாடி சாதனை மேற்கொண்டால் மட்டும் போதுமா, அல்லது மந்திரத் தியானமும் அவசியமா?" – அவருக்கு சதா அதே தியானம் தான்: தனது குறிக்கோள்கள்; தனது அபிலாஷைகள்; தேச புனர்நிர்மாணம்; சமயப் புத்தெழுச்சி!

"முன்னதே போதுமே!" என்று சுருக்கமாய் நறுக்கென்று பதிலளித்தார் ஸ்ரீ பகவான். சாஸ்திரியோ தமது இலக்குகளையும் இலட்சியத்தைப் பற்றியும் தொடர்ந்து விடாப்பிடியாய்ப் பேசிக் கொண்டே போனபோது ஸ்ரீ பகவான் குறுக்கிட்டுக் கூறினார்: "உமது பாரங்கள் அனைத்தையும் ஆண்டவன்பேரில் போட்டுவிடுவதே நன்று. அவன் உமது சுமைகளைத் தாங்கிக் கொள்வான். நீர் அவற்றிலிருந்து விடுபட்டு சுதந்திர புருஷனாக இருந்துவரலாம். எல்லாம் அவன் செயல் அன்றோ!"

1917–ஆம் ஆண்டு கணபதி சாஸ்திரியும் மற்ற வழிபாட்டாளர் பலரும் ஸ்ரீ பகவானிடத்து அனேக கேள்விகள் வினவினர். அவ்வினாக்களும் அவற்றிற்குக் கிடைக்கப்பெற்ற விடைகளும் "ஸ்ரீ ரமண கீதை" என்ற நூலில் இடம்பெற்றுள்ளன. ஏனைய ரமண நூல்களைக் காட்டிலும் அதுவே ஆழ்ந்த புலமையும் கோட்பாடுகளும் அடங்கிய நூலாக அமைந்துள்ளது. கணபதி சாஸ்திரி தம் சுபாவத்திற்கொப்ப வினவிய ஒரு கேள்வி குறிப்பிடத்தக்கது. "சில அபூர்வ சக்திகளை நாடி சாதனை மேற்கொள்ளும்போது ஞானமும் உதிக்கப்பெற்ற ஒரு

சாதகருக்கு, அவர் ஆரம்பத்தில் நாடிய சக்தி அபிலாஷைகளும் நிறைவேறுமா?" என்பதே அக்கேள்வி. அதற்கு ஸ்ரீ பகவான் அளித்த விடை, அவரது நுணுக்க நகைச்சுவைக்கு ஓர் சிறந்த எடுத்துக்காட்டாக அமைந்துள்ளது. விடை இதுவே: "தனது அபிலாஷைகள் நிறைவேறுவதன் பொருட்டு யோக முறையை மேற்கொண்ட தவயோகி, அத்தவச் சாதனைக்கிடையே பேரறிவு (ஞானம்) பெற்றுவிட்டால், அவரது ஆரம்ப அபிலாஷைகளும் நிறைவேறும்போது அதற்காக அளவு கடந்து ஆனந்திக்க மாட்டார்."

1934–ஆம் ஆண்டுவாக்கில் கணபதி சாஸ்திரி தமது சிஷ்யர்கள் புடைசூழ, கரக்பூருக்கு அருகேயுள்ள நிம்புரா என்ற கிராமத்திற்குச் சென்று அங்கேயே தங்கி விட்டார். அன்றிலிருந்து, சுமார் இரண்டு ஆண்டுகளுக்குப் பின் அவர் மரணமடையும்வரை, கடுந்தவங்கள் புரிவதிலேயே வாழ்நாட்களை அர்ப்பணித்தார். சாஸ்திரியாரின் மறைவுக்குப்பிறகு ஸ்ரீ பகவானிடம் யாரோ கேட்டார், "சாஸ்தியாரின் வாழ்நாளில் அவருக்கு மெய்ஞானம் சித்தித்திருக்குமா?" என்று. "எப்படி சித்திக்கும்? அவரது சங்கற்பங்கள் (மனத்தீர்மானங்கள்) அவரை கெட்டியாய்ப் பிடித்து வைத்திருந்தனவே?" என்றார் ஸ்ரீ பகவான்.

## எஃப். ஹெச். ஹம்ப்ரீஸ்

மகரிஷியை நாடி வந்த மேலைநாட்டவர் வரிசையில் முதலாமவர் எஃப்.ஹெச். ஹம்ப்ரீஸ் (F.H. Humphreys) என்பவர். அவர் 1911ஆம் ஆண்டு இந்தியாவுக்கு வருவதற்கு முன்பாகவே மாந்திரீகம் போன்ற அமானுஷ்ய சக்திகளில் பரிச்சயப்பட்டவர். இருபத்தோறு வயதே நிரம்பிய அவர் வேலூரில் போலீஸ் அதிகாரியாக வேலை நியமனம் பெற்று வந்து சேர்ந்தார். வந்ததும், தெலுங்கு மொழி கற்பதற்காக நரசிம்மய்யா என்ற தனி ஆசிரியரை அமர்த்திக் கொண்டார். பாடம் தொடங்கு

வதற்கு முன்னரே அவர் ஆசானிடம் கேட்டது, 'இந்து ஜோதிடக்கலை பற்றி ஆங்கிலத்தில் ஏதாவது புத்தகம் கிடைக்குமா ?' என்பதே. வெள்ளைக்கார துரை இப்படிக் கேட்பது நரசிம்மய்யாவுக்கு விசித்திரமாகப் பட்டாலும். சரி எனச் சொல்லி நூலகத்திலிருந்து ஒரு புத்தகம் எடுத்துவந்து கொடுத்தார். மறுநாள் ஹம்ப்ரீஸ் இன்னொரு மலைப்பூட்டும் கேள்வி கேட்டார்: "இங்கே மகாத்மா யாராவது இருக்கிறாரா ?"

"தெரியாதே" என்று ஒரே வார்த்தையில் பதில் சொன்ன பிறகும் தப்பமுடியவில்லை. அடுத்த நாளே ஹம்ப்ரீஸ் ஒரு புதிர் போட்டார்: "மகாத்மா யாரையும் தெரியாது என்று நேற்று சொன்னீரல்லவா ? ஆனால், நான் இன்று காலையில் தூக்கம் விழிப்பதற்கு சற்றுமுன் உமது குருவைப் பார்த்தேன். என்னருகில் அமர்ந்து ஏதேதோ சொன்னார். அவர் பேசியதுதான் எனக்குப் புரியவில்லை!"

நரசிம்மய்யா நம்பமாட்டாமல் தர்மசங்கடப்பட்டார். ஹம்ப்ரீஸ் மேலும் தொடர்ந்து, "பம்பாயில் வந்து இறங்கியதும் முதன் முதலில் நான் கண்ட நபர் யார் தெரியுமா ? நீரே தான்" என்றார். தான் பம்பாய்ப் பக்கமே போனதில்லை என்று நரசிம்மய்யா மறுக்கத் தொடங்கியதும் ஹம்ப்ரீஸ் விளக்கிக் கூறினார்: பம்பாய் வந்ததும் வராததுமாய் கடும் ஜுரம் கண்டதால் நேரே ஆஸ்பத்திரிக்குப் போய்ச் சேர நேர்ந்ததாம். உடம்பு வலியிலிருந்து விடுபடுவதற்காக மன ஓட்டத்தைத் தான் போக வேண்டிய இடமாகிய வேலூர்மீது திருப்பி னாராம். ஆவி உருவில் அவ்வாறு வேலூர் சென்ற போதுதான் நரசிம்மய்யாவை அங்கு பார்த்தாராம்!

ஆவியுரு என்பதைப் பற்றியெல்லாம் தனக்கு ஒன்றும் தெரியாது, தெரிந்தது எல்லா நிஜ மனிதர்கள் மட்டுமே என்றார் நரசிம்மய்யா. இருந்த போதிலும், தனது

குருவைக் கனவில் கண்டேன் என்று கதை அளக்கிறாரா இல்லை ஒருக்கால் உண்மையோ என்று தெரிந்து கொள்ள விழைந்தார். மறுநாள் ஹம்ப்ரீஸ் மேஜை மீது ஒரு கட்டு போட்டோப் படங்களை மறந்தாற்போல் வைத்துவிட்டு, வேறொரு போலீஸ் அதிகாரிக்கு பாடம் சொல்லித்தரச் சென்று விட்டார். போட்டோக்களைப் பிரித்துப் பார்த்த ஹம்ப்ரீஸ், அவற்றிலிருந்து கணபதி சாஸ்திரியின் படத்தைத் தனியாக எடுத்துவைத்து கொண்டார். ஆசிரியர் திரும்பி வந்தவுடன் அதைக் காட்டி, 'இதோ, இவர்தாமே உமது குரு?' என்று கூவினார்.

நரசிம்மய்யா உண்மையை ஒப்புக் கொண்டார். அதன் பிறகு ஹம்ப்ரீஸ் திரும்பவும் நோய்வாய்ப்பட்டார். உடல் தேற உதகமண்டலம் சென்று விட்டார். வேலூருக்குத் திரும்பிவர பல மாதங்களாகிவிட்டன. வந்ததும் நரசிம்மய்யாவுக்கு இன்னொரு ஆச்சரியம் காத்திருந்தது. சமீபத்தில் கனவில் தோன்றிய காட்சியை தான் அப்படியே வரைந்து எடுத்து வந்திருப்பதாகக் கூறிய துரை, ஓர் வரைச்சித்திரத்தைக் காட்டினார். ஓர் மலை. அதனில் ஓர் குகை. குகைக்கு முன்புறம் நீரோடை. குகை வாயிலில் ஒரு முனிவர் நின்றுகொண்டிருக்கிறார். "நீங்கள் வரைந்திருப்பது விருபாட்ச குகை போலவே இருக்கிறதே" என்று வியந்து கூறிய நரசிம்மய்யா, ஸ்ரீ பகவானைப் பற்றிய விவரங்களை போலீஸ் துரைக்கு எடுத்துரைத்தார். பிறகு ஹம்ப்ரீஸை உள்ளூரிலிருந்த கணபதி சாஸ்திரியிடம் அழைத்துச் சென்று அறிமுகப் படுத்தினார். சாஸ்திரியிடம் துரை மிகுந்த மரியாதை காட்டினார். அந்த மாதமே (1911, நவம்பர்) மூவரும் திருவண்ணாமலைக்குப் புறப்பட்டனர்.

முதன்முதலாக பகவானைக் கண்டதும் அவரது மௌன உருவம் தம்முள் எழுப்பிய அனுபவத்தைப் பற்றி ஹம்ப்ரீஸ் எழுதிய கடித வாசகப் பகுதியை

முன்னொரு அத்தியாயத்தில் (அத்தியாயம் 6) கொடுத்துள்ளோம். லண்டன் பத்திரிகையொன்றில் வெளியான அதே கடிதத்தில் ஹம்ப்ரீஸ் மேலும் பின்வருமாறு எழுதியுள்ளார்: "நெஞ்சை நெகிழச் செய்த காட்சி என்னவென்றால், சின்னஞ்சிறுவர் சிறுமியர், ஏழுவயதுக்கு மேற்படாதவர்கள், துணையின்றி தாமாக மலைமீது ஏறி வந்து மகரிஷியின் அருகில் உட்காருகிறார்கள். அவரோ ஒரு வார்த்தைகூடப் பேசமாட்டார்; நாட்கணக்காக அவர்களைப் பார்க்கக்கூட மாட்டார். இருந்தும், வரும் சிறார்கள் அவர் முன்னிலையில் ஏதும் விளையாடாமல் மௌனமாக, அமைதியாக, பூரண மனநிறைவுடன் உட்கார்ந்திருந்து செல்கிறார்கள்..."

கணபதி சாஸ்திரியைப் போலவே ஹம்ப்ரீஸும் உலகைக் கடைத்தேற்றுவதில் அதிக அக்கறை காட்டினார் என்பது பின்வரும் கேள்விகளில் தெரியவரும்:

ஹம்ப்ரீஸ்: ஞான ஆசானே! உலகுக்கு உதவுவது எப்படி ?

பகவான்: உனக்கு நீயே உதவிக்கொள். அதுவே நீ உலகுக்கு உதவும் வழி.

ஹம்: உலகுக்கு ஏதாகிலும் உதவ வேண்டும் என எண்ணுகிறேன். அவ்வாறு சேவை செய்வது கூடாதா என்ன ?

பக: செய். முதலில் உனக்கு நீ உதவிக் கொள்ளும் போதே உலகத்துக்கும் உதவுபவனாக ஆகிறாய்.

ஹம்: (சற்று நிதானித்து) குருவே! ஸ்ரீ கிருஷ்ண பகவான் போலவும் ஏசுகிறிஸ்துவைப் போலவும் நான் அற்புதங்கள் நிகழ்த்தக் கூடுமா ?

பக: அவர்கள் அவ்வாறு நிகழ்த்தியபோது, தாமேதான் அவ்வாறு நிகழ்த்தியதாக அவ்விருவருள் எவரேனும் எண்ணியிருக்கிறாரா ?

ஹம்: இல்லையே குருவே!

இதற்குப்பின் கூடிய விரைவில் ஹம்ப்ரீஸ் திரும்பவும் திருவண்ணாமலை சென்றார்.

"நான் மோட்டார்—சைக்கிளில் திருவண்ணாமலை சென்று, மலைமீது ஏறி குகையை அடைந்தேன். என்னைக் கண்ணுற்றதும் முனிவர் புன்னகைத்தார்; வியப்புறவில்லை. நாங்கள் அவர் எதிரே உட்காரும் முன்னராகவே என்னை ஒரு கேள்வி கேட்டார். என்னைப் பார்த்த மாத்திரத்திலேயே அவருக்குத் தெரிந்துவிட்டது போலும்! ஆம். ஒரு கண் வீச்சே போதுமானது, வருவோர் அனைவரது மனநிலையைத் திறந்த புத்தகம் போல் படித்தறிந்து விடுகிறார்.

"நீ ஒன்றும் சாப்பிடவில்லை; பசிக்கிறது இல்லையா?" என்பதே கேள்வி.

"ஆமாம் என்று நான் உண்மையை ஒப்புக் கொண்டவுடன், எனக்கு உணவு கொண்டு வருமாறு ஒரு சீடனைப் பணித்தார் – அரிசிச் சாதம், நெய், பழம் முதலியன. இந்தியர்களைப் போலவே நான் விரல்களால் எடுத்துச் சாப்பிட்டேன். அவ்வாறு உட்கொள்ள சற்று பழகிவிட்டேன் என்றாலும் லாவகமாகச் சாப்பிட முடியவில்லை. அதைக் கண்ணுற்ற அவர், தேங்காய் ஓட்டினால் செய்யப்பட்ட ஸ்பூன் ஒன்று என்னிடம் கொடுத்தார். நடு நடுவே பேசினார். முறுவலித்தார். அவருடைய புன்னகையின் வசீகரத்திற்கு ஈடு இணை கிடையாது. அருந்துவதற்குத் தேங்காய்ப் பால் கொண்டு வந்தனர். வெண்மையாய் பசும்பால் நிறத்தில் இருக்கும் அது; கலக்கி அளித்தார்.

"சாப்பிட்டு முடித்தேன். ஆனால் பசி அடங்கவில்லை. அது அவருக்குத் தெரிந்து விட்டது. இன்னமும் உணவு கொண்டு வருமாறு பணித்தார். எல்லாம் அறிந்தவர் அவர். மற்றவர்கள் என்னை பழங்கள் சாப்பிடும்படி வற்புறுத்தியபோது எனக்கு

ஏற்கனவே வயிறு நிரம்பிவிட்டது. அவர் உடனே அவர்களைத் தடுத்து நிறுத்தினார்.

''நான் தண்ணீர் அருந்தும் விதத்திற்காக சமாதானம் கூறினேன். அதற்கு அவரோ, 'அதனாலென்ன? பரவாயில்லை' என்றார். இந்துக்கள் இந்த விஷயத்தில் கவனமாக இருக்கிறார்கள். அருந்தும் போது வாயில் வைத்து உறிஞ்சக்கூடாது. பான பாத்திரம் உதட்டில் படக்கூடாது. திரவ பதார்த்தம் எதையும் அருந்தும்போது நேராக வாயில் ஊற்றிக்கொள்ள வேண்டும். இதனால் பல பேர்கள் அதே கோப்பையில் அருந்தலாம். எச்சில் படாததால் தொற்றுநோய் பயமில்லை.

''நான் உணவருந்திக் கொண்டிருக்கையில் மற்றவர்களுக்கு என்னைப் பற்றிய வரலாற்றை ஒன்று விடாமல் சொன்னார். முன்பு ஒரே ஒரு முறை மட்டுமே என்னைப் பார்த்திருக்கிறார். அதன்பின் ஏதோ கலைக் களஞ்சியத்தைப் புரட்டிப் பார்த்துச் சொல்வது போல, அவர் என் பின்னணியை திவ்ய திருஷ்டியால் கண்டுரைத்தாரோ? அவரது போதனைகளை செவிமடுத்தவாறு நான் மூன்று மணி நேரம் அங்கே உட்கார்ந்திருந்தேன்.

"பிறகு எனக்குத் திரும்பவும் தாகம் எடுத்தது. வெயிலில் வெகுதூரம் வந்தேனல்லவா? இருந்தும் தாகமாக இருப்பதை அச்சமயம் வெளியே காட்டிக் கொள்ள விரும்பவில்லை. ஆனால் அவருக்கா தெரியாமற் போகும்? எலுமிச்சைப் பானம் கொண்டு வந்து எனக்குத் தரும்படி பணியாளிடம் கூறினார்.

"கடைசியில் நான் விடைபெறும் நேரம் நெருங்கியது. நமது பாணியில் தலை வணங்கியபின் குகைக்கு வெளியே சென்று பூட்ஸ் அணிந்து கொண்டேன். அவரும் வெளியே வந்தார். திரும்பவும் எப்போதாவது வருமாறு அன்புடன் கூறினார்.

"அம்மகரிஷியின் மகாசன்னிதானத்தில் இருந்து விட்டுத் திரும்புவது என்னுள் எத்துணை மாற்றம் அளிக்கிறது என்று வியக்கிறேன்."

ஸ்ரீ பகவானின் முன்னிலையில் அமர்ந்திருக்கும் எவரது உள்ளமும் அவருக்குத் திறந்த புத்தகம் போன்றது தான் என்றபோதிலும் ஹம்ப்ரீஸ் அதனை திவ்ய திருஷ்டி (Clairvoyance) என்று வர்ணித்தது அவ்வளவு சரியல்ல. மக்களின் மனதைப் புரிந்துகொண்டு அவர்களுக்கு வழி காட்ட உதவினாலும், இயல்புகடந்த நுண்ணோக்காற்றலை மானிட தளத்தில் பயன்படுத்தவில்லை. ஒரு தரம் படித்ததை அப்படியே ஞாபகத்தில் வைத்துக்கொள்ளும் அபார ஆற்றலைப்போலவே, பார்த்தவர் முகங்களையும் நினைவிற் கொள்வார். வந்துபோகும் ஆயிரக்கணக்கான பக்தர்களுள், ஒரே ஒருமுறை வந்தவர்களைக்கூட அவர் மறப்பதில்லை. அவர்களைப் பற்றிக் கேட்டறிந்த விஷயங்களையும் மறக்கமாட்டார். ஹம்ப்ரீஸைப் பற்றி நரசிம்மய்யா ஏற்கனவே ஸ்ரீ பகவானிடம் தெரிவித்திருக்க வேண்டும் என்றே கொள்ளலாம். உசிதமற்ற எந்த விஷயத்தையும் வெளிப்படுத்தமாட்டார். பேசக் கூடாதவற்றை நாசூக்காகத் தவிர்ப்பார். ஆனாலும், பொதுவில் குழந்தையுள்ளம் படைத்தவர். குழந்தைத்தனமாக ஏதாவது கூறுவார். அத்தகைய வெகுளிப் பேச்சிலும்கூட எவரையும் சங்கடப்படுத்த மாட்டார். உணவு, பான விஷயங்களில் அவர் எவரையும் பரிவுடன் விசாரிப்பது மட்டுமின்றி, நம்பமுடியாத அளவுக்குக் கூர்ந்து கண்காணிப்பார். வந்த அதிதி திருப்தியுற்றாரா என்று கவனிப்பார்.

ஹம்ப்ரீஸுக்கு மாயமந்திர வித்தைகள் சில கை வந்தன. ஆனால் அவ்வாறான மாய மயக்கங்களில் மனம் செலுத்த வேண்டாம் என்று ஸ்ரீ பகவான் அவரை எச்சரித்தார். ஹம்ப்ரீஸும் அத்தகைய ஆசைகளை

அடக்கும் திடம் பெற்றவரானார். ஸ்ரீ பகவானின் நற்பாதிப்பின் விளைவாக, இயற்கை மீறிய சக்திகளில் இருந்த நாட்டத்தை அவர் நாளடைவில் அடியோடு கைவிட்டார்.

வெளி நடவடிக்கைகள் மூலமாகவே மானிட வர்க்கத்திற்கு உதவ முடியும் என்ற தவறான கருத்து மேலை நாடெங்கும் நிலவி வருகிறது. கிழக்கத்திய நாடுகளிலும் கூட இக்காலத்தில் அதே கருத்து பெருகி வருகின்றது. அத்தகைய கருத்தினின்றும் ஹம்ப்ரீஸ் விடுபட்டார். ஒருவர் தமக்குத்தாமே உதவுவதன் மூலம் உலகத்திற்கும் உதவி புரிபவர் ஆகிறார் என்ற ஸ்ரீ பகவானின் போதனை அவர் மனதில் பதிந்தது. தலையிடாக் கொள்கை (laissez – faire) பலனளிக்கக் கூடியது என்பது பொருளாதார தளத்தில் சரியான கருத்தல்ல என்று வாதிக்கக்கூடும். ஆனால், ஆன்மீக தளத்தில் அக்கொள்கை முழு உண்மையே. ஏனெனில், தனிநபர் திரட்டிச் சேர்க்கும் ஆன்மீகச் செல்வம், மற்றவர்களின் ஆன்மீகச் செல்வங்களைக் குறைக்காது, பறிக்கவும் செய்யாது. மாறாக ஆன்மீகப் பொதுச் சொத்து மேன்மேலும் வளரும். முதன்முறையாக ஸ்ரீ பகவானை ஹம்ப்ரீஸ் கண்டபோது, "உயிரற்ற உடலிலிருந்து கடவுள் ஒளிக்கதிர் வீசுவதாக" உணர்ந்தாரல்லவா ? அதேபோன்று, ஒவ்வொரு நபரும், அவரவர் சக்திக்கு ஏற்றவாறு, கண்ணுக்குப் புலப்படாத செயல் விளைவுகளை நுண்ணலைகளாகப் பரப்பிவரும் தனித்தனி வானொலி நிலையங்களாம். அகந்தையினின்று விடுபட்டு ஆன்ம மெய்மையோடு இணைந்து இருந்துவரும் எவரும் எவ்விதப் பிரயாசையுமின்றி சுயமாக அதே நல்லிணக்கத்தை சூழ்நிலையில் பரவவிடுகிறார். அதன்பொருட்டு அவர் ஏதும் வெளிநடவடிக்கையில் ஈடுபட வேண்டும் என்கிற அவசியம் கிடையாது. மாறாக, அகந்தைச் செருக்கில் இறுமாந்து கொந்தளிக்கும் சுபாவம் கொண்ட ஒருவர், வெளிப்படையாக சமூக சேவை புரிபவராக இருந்தாலும்கூட, பிணக்குகளையே பரப்புவார்.

ஹம்ப்ரீஸ் ஒருபோதும் ஸ்ரீ பகவானுடன் தங்க வில்லை, ஒருசில தடவைகளே வந்துபோய் வண்ண மிருந்தார் என்றாலும், அருணை அண்ணலின் போதனைகளை (மொழிபெயர்பாளர் துணைகொண்டு) உள் ளீர்த்தார். அவரது கருணாவிலாசத்திற்குப் பாத்திரமானார். தாம் பெற்ற போதனைகளின் ஆங்கிலப் பொழிப்புரையை நண்பர் ஒருவருக்கு அனுப்பி வைத்தார். இண்டர் நேஷனல் சைகிக் கெஜட் என்ற லண்டன் பத்திரிகையில் பிரசுரமான அதன் வாசகம் (தமிழாக்கம் பின் வருபவன) ஸ்ரீ பகவானின் போதனையை சிறந்த முறையில் அறிமுகப்படுத்துவதாக அமைந்துள்ளது:

"ஞான ஆசான் எவன்? – கடவுளை ஒரு மனதாய் தியானித்திருந்து வருபவன்; கடவுளாகிய ஆழங் காணாக் கடலில் குதித்து முழுமையாக மூழ்கிக் கடவுளின் கருவியாக எழும்பும் வரை தன்னை இழந்து முங்கிக் கிடப்பவன். அவ்வாறான ஆசான் பிரயாசையற்று, யோசனை செய்யாமல் கூறும் வாக்குகள் எல்லாம் கடவுளின் திருவாய்மொழியே ஆகும். அத்தகையோன் தமது கையை உயர்த்துகையில் கடவுளருள் அதன் வழியே ஊற்றெடுத்துப் பாய்ந்து அற்புதம் நிகழ்த்தும்.

"நீடித்து அப்பியசித்து மந்திரதியானம் ஜபித்து அமானுஷ்ய சித்துவேலைகள் செய்விக்கக் கூடியவரே ஆன்மீக ஆசான் என்பது மிகத் தவறான கணிப்பு. ஞானியர் எவரும் சித்துகளை நாடியதில்லை. அவற்றைத் துச்சமாக மதித்தனர். ஏனெனில், அன்றாட வாழ்வில் அவற்றால் பயன் ஏதுமில்லை.

"நாம் காணும் (மாய மந்திர) நிகழ்ச்சிகள் விநோதமாய், வியப்பூட்டுவதாய் இருக்கலாம். ஆனால், அவற்றிற்கெல்லாம் உயர்வான அற்புதங்களை நாம் உணர்வதில்லை. அவ்வற்புதங்கள் யாவன எனில்,

(1) நம் கண்முன் நிகழ்வன யாவும்;

(2) நாம் அவற்றை காண்பதாக அறிவது.

"மாறுபடும் வாழ்க்கைக் கோலங்கள், பிறப்பு–இறப்பு, அதிசய நிகழ்ச்சிகள் ஆகியவற்றின்மீது கவனம் செலுத்தவேண்டியதில்லை. அவற்றை நீ காண்பதையும், வெவ்வேறாக உணர்வதையும் கூட எண்ணாதே. அவை யாவற்றையும் நீ காண்பதாக அறியும் அந்த துல்லிய அறிவை மட்டும் நினைவில் நிறுத்தி வைத்துக்கொள். எடுத்த எடுப்பில் இது இயலாத காரியம் போலத்தோன்றும். ஆனால், மெள்ள மெள்ள அத்தகைய நோக்கு தெளிவடைந்து வரும். அதன்பொருட்டு தினந்தோறும் ஊன்றி, உறுதியாய் வருடக்கணக்கிலும் கூட சாதனை மேற்கொள்ள நேரலாம். அவ்வாறே ஞானி உருவாகிறார். ஆன்ம சாதனைக்கு நாள்தோறும் கால் மணி அவகாசமேனும் ஒதுக்கி வை. எது அனைத்தையும் காண்கிறதோ அந்தப் பேரறிவின் மீது மனதை நிலை நிறுத்து. அவ்வறிவு உன்னுள் உள்ளது. ஏதோ ஒன்றின் மீது எண்ணத்தை நிலைநிறுத்தி வேறு ஏதோ ஒன்றைக் காணப்போகிறோம் என்பது போன்ற எதிர்பார்ப்புகள் கூடாது. ஏனெனில், எதிர்நோக்கிப் பெறுவது ஏதும் அங்கெங்குமில்லை. உள்ளது உள்ளபடி காண்பதற்குப் பல ஆண்டுகள் பிடிக்கலாம். என்றாலும்கூட, நான்கு அல்லது ஐந்து மாத காலத்திற்குள் அத்தகைய ஒருமுக முனைப்பின் விளைவுகள் தெரியவரும் – நம்மை யறியாமலேயே சித்திகள் சேரும்; மனச் சாந்தி பிறக்கும்; துன்பங்களை எதிர்கொள்ளும் ஆற்றல் உண்டாகும்; உன்னையறியாமல் சக்திச் சூழல் எழும்.[1]

1. இவை தோன்றுவதும் தோன்றாமலிருப்பதும் சாதகனின் "பிராரப்தத்தைச்" சார்ந்தது. இவை தோன்றுதல் முன்னேற்றத்திற்கான அறிகுறி எனக்கொள்ளலாகாது. தோன்றாமலிருப்பதால் முன்னேற்றம் அடையவில்லை என்றும் நினைத்தல் கூடாது என்றும் ஸ்ரீ ரமண மகரிஷி பின்னர் விளக்கியுள்ளார்.

"எமது அத்தியந்த சீடர்களுக்கு அளிக்கும் போதனைச் சாரத்தையே இங்கு உனக்கு வழங்கியுள்ளோம். இப்போதிலிருந்து, உன் எண்ணம் பூராவும் தியானத்தில் இழையட்டும். தியானிக்க வேண்டியது 'எப்படிக் காண்கிறோம்' என்பதைப் பற்றி அல்ல; காணப் பெறுவதைப் பற்றியும் அல்ல. எது எதனைக் காண்பதாக அறிகிறதோ அதன் மீது நிலைத்து அகமுகமாய் தியானம் செய்.

"இச்சாதனை மூலம் பிரதிபலன் ஏதும் கிடைக்க மாட்டாது. சாதனையில் வெற்றிபெற்ற எவரும் பலன் ஏதும் விரும்பமாட்டார். 'பலனைப் பாராமல் வினையாற்றுதலே உனது கடமை' என்று (கீதையில்) கிருஷ்ணன் கூறுகிறாரல்லவா? முழு முக்தி நிலையும் பக்தி நிலையும் ஒன்றேதான்.

"அமைதியாய் அமர்ந்து இவ்வாறு தியானித்து வருகையில் நீ உள்ளூர உணரத்தொடங்குவாய் – ஆதி அந்தமற்ற ஆன்ம வாழ்வின் இருப்பினால்தான் நீ நினைக்க முடிகிறது என்று; ஆகவே ஆன்மாவே முழுமுதற்பொருளாம் கடவுளின் ஒரு பாகம் என்று. இவ்வாறு உணரத்தொடங்கிவிட்டால் அப்புறம் 'மனம்' என்றே தனியாக ஏதும் இல்லை என்று மனத்தோடு வாதாடி அதனை சாய்த்து மாய்த்து விட முடியும். அதன் விளைவாக மனமும் அதைச் சார்ந்த பிரக்ஞையாகிய உடலும் மறைந்துவிடும் (பௌதிக நோக்கிலும் கூட இவை மறைவதாகக் கொள்ளலாம்). இவை மறைந்த பிறகு மிச்சமிருப்பது 'உள்ளது உள்ளபடியான' உணர்வு மட்டுமே. அவ்வாறு மிஞ்சுவது இருக்கவும் செய்கிறது, இல்லாமலும் இருக்கிறது. அதனை வெறும் வார்த்தைகளால் விளக்க மாட்டாது. எண்ணத்தாலும் விளக்கிக் கொள்ள இயலாது.

"ஞானி என்பவர் இந்த சுயம் பிரகாச நிலையில் நிரந்தரமாய் விளங்கிவருவதைத் தவிர்க்கமாட்டார்.

ஆனாலும் ஒரு வித்தியாசம் உண்டு. நம்மால் புரிந்து கொள்ள முடியாத ஏதோ ஒரு வழியில் பூரண ஞானி இவ்வுயர் நிலையில் திளைந்து கொண்டே, 'தான்' எனும் தனித்துவ மயக்கத்திற்கும் ஆளாக்கிக் கொள்ளாமல் தமது மனம், உடல் சிந்தனைகளை யும் உபயோகிக்கவல்லவர்.

"ஆன்ம சாதனை சாத்தியமா என்று வெறுமனே சிந்தித்திருப்பதில் ஒரு பயனும் இல்லை. முதலில் மனம் அல்லது அறிவுபூர்வமான சிந்தனைமூலம் இதன் பொருளை ஒருவாறு உணர்ந்து. அதன் அடிப்படையில் காரியத்தில் இறங்க வேண்டும். அதுவே சமய சிந்தனை. சமூக சுமுக வாழ்வுக்கும் சிறார்களுக்கும்கூட ஓர் நடைமுறை வழி. அதிர்ச்சி களைத் தவிர்ப்பதற்கு உதவும் வழிகாட்டி. நம் அகத்தே எழும்பும் ஆன்மீகத் தீ, நம்மிடமுள்ள அஞ்ஞானத்தைப் பொசுக்கி, விரைவில் பொது அறிவைப் புகட்டும் வேள்வியாக அமையும் – இங்கு பொது அறிவு என்பது, 'நான்' என்கிற அகந்தையாகிய அஞ்ஞான மாயையைப் பிரித்து ணர்ந்து, அதனைக் களைந்தெறிந்து பிரபஞ்சப் பொது அறிவில் துய்தலே ஆகும்.

"கிறித்துவ சமயம், பௌத்தம், இந்துமதம், பிரும்ம ஞானம் போன்ற சமயங்கள் அல்லது அறமுறைகள் அனைத்துமே தத்துவரீதியில் கடைசிக் கட்டத்தில் ஒன்று கூடுகின்றன. அவை யாவும் அந்தக் கடைசிக் கட்டம் அல்லது விளிம்பு வரை மட்டுமே இட்டுச் செல்வன. அதற்கப்பால் வழிகாட்டமாட்டாதவை. அந்த விளிம்பே ஞானோதயம். அது ஏதோ பர லோக மறைபொருளைக் குறித்த மானசீக உணர்வு என்ற அர்த்தத்தில் நான் கூறவில்லை. இகவாழ் வுக்கு உரித்தான, அன்றாட நடைமுறைக்கு மிகமிக இசைவான மனப்பாங்கே ஞான–உதயம் என்று கொள்ளலாம். அதாவது, கடவுள் எங்கும் நிறைந்

தவர். காண்பதெல்லாம் அவர் சொரூபமே என்ற நிதர்சன உண்மை அறிதல் ஆகும்.

“இந்த மனஞ்ஞான விளிம்பிற்கு அப்பாலும் இட்டுச் செல்வதே ஆத்ம சிந்தனைப் பயிற்சி. கடவுள் எங்குமாய், அனைத்துமாய் உள்ளதை புத்தி பூர்வ மாக மட்டுமே நினைப்பதோடு நின்றுவிடாமல், இந்த உண்மையை இடைவிடாப் பயிற்சி மூலம் அப்பியசித்து, பழகிப்போன எண்ணங்களிலிருந்து விடுதலை பெறவேண்டும். காண்பது எதனையும் காணப்படும் பொருளாகக் கொள்ளாமல், அவற் றில் ஆத்மனைக் காணவேண்டும். காண்பவை, இருந்து வருபவை எல்லாம் அதேபோன்று இருப் பவை, இருந்துவருபவை என்ற அஞ்ஞானத்தை விலக்க வேண்டும். புலன்களால் உணரத்தக்க இருப் புக்கள் யாவுமே மனத்தால் தோற்றுவிக்கப் பட்ட வையே என்பது மட்டுமில்லாமல், அவ்வாறு இருப் பவைகளிலும் 'இல்லாமல் இருப்பவை' என்பதும் தொக்கி நிற்கின்றது என்கிற அறிவு, தூய உணர்வை எட்ட வழிகோலும்.

“ஒரு பொருளை அறிகிறோம் என்றால் ஒரு புலன் மூலமாகவே அந்த அறிவு நம்மை எட்டுகிறது. செவிடனுக்கு ஒலி ஏதும் கேட்காது. குருடன் எதையும் காணமுடியாது. மனம் என்பதோ ஐம் புலன்கள் மூலம் அறிகின்ற ஓர் உறுப்பு. எங்கும் நிறைந்த கடவுளின் சில சாயல்களின் உணர்வு, புலன்கள் வாயிலாய் மனதில் தைத்து, ஏதோ ஒரு பொருளாய், காட்சியாய் உன்னுள் அறிவுறுத்தப் படுகிறது என்றாகிறது. தவிர, முன்னால் பார்த் தவை கேட்டவை உணர்ந்தவைகளின் அடிப்படையில் சிந்திக்கவும் வல்லது மனம்.

“கடவுள் தொடக்கமோ முடிவோ அற்றவர். இருப் பவை, இல்லாமலிருப்பவை எல்லாமே அவரது மறுபடிவங்களே. இப்படிச் சொல்வதால் கடவுள்

பல்வேறு படிவங்களாலான முழுப்பொருள் என்று நான் கூறுவதாகக் கொள்ளலாகாது. கடவுளை எவ்விதத்திலும் விளக்க முடியாது. கடவுளைப் பற்றிய உண்மையான அறிவு நம் உள்ளேயிருந்து எழ வேண்டும். வெளியார் யாரும் புகட்ட முடியாது. உண்மையான 'அறிவு' என்பது எதையும் மனதால் "தெரிந்து கொள்வது" அன்று; நிதர்சனமாகக் 'காண்பது' என்பதாகும்.

"பரஞானம் என்பது கடவுளைப் பிரத்தியட்சமாகக் காண்பதே ஆகும். நமது மாபெரும் தவறு என்ன வென்றால், கடவுளை ஏதோ பிரதிமையாகவோ, தொடர் உருவமாகவோ, தேஜோமயமாகவோ எண் ணியிருப்பதுதான். நிஜ சொரூபத்தை 'உள்ளது உள்ளபடி' உணரத் தவறிவிடுகிறோம்.

"ஓர் கண்ணாடி வில்லையை எடுத்துக் கொள். அதன்மீது வண்ண வடிவங்கள் பல நிறப் பூச்சுக் களில் வரை. அதை ஒரு படவிளக்குக் கருவியில் பொருத்தி விளக்கைப் போடு. எதிர்த்திரையில் அதே வண்ணவடிவங்கள் விழுகின்றன. கருவியி னுள் விளக்கைப் போடாவிட்டால் வண்ண பிம்பங் கள் திரையில் தெரியாது.

"நிறங்கள் எவ்வாறு உண்டாகின்றன ? வெண்கதி ரொளி முப்பட்டைக் கண்ணாடி வழியே ஊடு ருவும்போது பல நிறக்கதிர்களாக எண்ணிக்கை கூடுகிறது!. மனித சுபாவமும் அப்படித்தான். ஒளிப் பேருயிராம் கடவுள், மனிதனின் ஊடே பிரவேசிக் கும்போது சுபாவங்கள் வெளிப்படுகின்றன. அதாவது, மனிதனின் வெவ்வேறு செயல்ரூபங்கள் எழுகின் றன. மனிதன் தூங்கும் போதோ இறந்த பிறகோ அவனது சுபாவத்தை நீ அறிவதில்லை. ஆன்மப் பேரொளியான வெண்கதிர் மனிதனின் சுபாவத் தைச் சலனப்படுத்திய பின்னரே உலகின் பல்வேறு நிகழ்ச்சிகளுக்குத் தக்கவாறு அவன் ஆயிரமாயிரம்

விதங்களில் செயல்படுகிறான். செயல்வடிவுகளா லேயே அவனது இயல்பைத் தெரிந்து கொள்ள முடிகிறது. படவிளக்குக் கருவியில் வண்ணப்படக் கண்ணாடி வில்லையை செருகாமலிருந்தால், கருவி யின் விளக்குக்கு எதிரே அக்கண்ணாடி வில்லை தெரியாமலே போயிருக்கும். ஒளியும் நேரடியாகத் திரையில் வெள்ளை வெளிச்சமாகவே பரவியிருக் கும் அல்லவா? ஒரு விதத்தில் அந்த வெள்ளை ஒளி சிதைபட்டு கண்ணாடி வில்லையில் பூசிய வர்ணங்களால் தெளிவிழந்து மங்கி பலவண்ண பிம்பமாகத் திரையில் விழுகிறது.

"இதே போலத்தான் மனிதனின் நிலையும். அவன் மனம் சினிமாத் திரை போன்றது. மனத்திரையில் ஆன்ம ஒளி விழுகிறது. ஆயினும் அந்த ஒளி மங்கி, உருத்திரிந்து வெவ்வேறு பிம்பங்களாகத் தோன் றுகிறது. ஏனெனில், பலபட்டைகள் கொண்ட கண் ணாடிக் கல் போன்று பலவிதமாய் பரந்து கிடக்கும் உலகம், பேரொளி (கடவுள்) பாயும் வழியில் குறுக்கிடுகிறது. அந்தக் குறுக்கீட்டினால் தூய வெண் கதிர் திரிந்து பல பிம்பங்களாய்ப் பிரிகின்றது. ஆகவே, மனிதன் தன் மனத்திரையில் பேரொ ளியின் (கடவுளின்) சாயலைக் காண மாட்டாமல் அதனால் சலனப் படுத்தப்பட்ட விளைவுகளையே காண்கிறான். முப்பட்டைக் கண்ணாடியை எடுத்து விட்டால் வண்ணங்கள் யாவும் மறைந்து அவற்றின் மூலமான வெண் ஒளியில் ஒன்றிவிடும். கண்ணாடி வில்லையில் தீட்டிய வண்ணங்களை அழித்து விட் டால் வெண் ஒளி நேராகப் பாய்ந்து திரையில் விழும். நமது பார்வையிலிருந்து நாம் காணும் செயல்வடிவமான பௌதிக உலகை விலக்கிவிட் டால் பேரொளி (கடவுள்) காண்போம்.

"தியானத்திலிருக்கும் ஓர் ஞானி, தான் அறியும் பேரறிவின்பால் மிக உறுதியாய்த் தமது சிந்த

னையை நிலைநிறுத்துவதால், கண்ணும் காதும் அடைபடாவிடினும், எதையும் காண்பதில்லை; கேட்ப தில்லை. பௌதிக உணர்வுகள் ஏதும் அற்ற நிலை அது. மன எழுச்சியும் இல்லை. மிஞ்சுவது ஆன்ம சுயம் பிரகாசம் மட்டுமே. சஞ்சலங்கள் எழுப்புகின்ற, மனதை எழுப்புகின்ற உலகத்தை எண்ணத்திலிருந்து நீக்கிவிட்டால் ஒளி வெள்ளமாம் கடவுள் தெள்ளத்தெளிய ஊடுருவிப் பிரகாசிப்பார். ஆனாலும், உலகத்தை எண்ணத்திலிருந்து அகற் றுவது எங்ஙனம்? உதாரணமாக, ஓர் நபரைக் காண்கையில், வெறும் மனிதனாக மட்டுமே அவரை மதிப்பிடாமல், உன்னுள் கூறிக்கொள்: 'ஓ! கடவுள் ஆட்டிவைக்கும் உடல்கொண்ட உருவம் அல்லவா இவர்?' சுக்கான் பிடியின் சுழற்சிக்கு உடன்பட்டு ஏறத்தாழப் பிசகாமல் எப்படிக் கப்பல் செல்கி றதோ அதே போன்று மனிதனைச் செலுத்துவது கடவுளே."

"தீவினை (பாபம்) எது? எடுத்துக்காட்டாக, ஒரு மனிதன் அளவுக்கு மீறி ஏன் மது அருந்துகிறான்? கவலைகளால் பிணைபட்டிருப்பதை அவன் வெறுப் பதாய் இருக்கலாம்; அல்லது வேண்டுமளவு குடிக்க முடியவில்லையே என்ற பிணைப்பிலிருந்தும் விடு பட எண்ணக்கூடும். அல்லது செய்த பாபம் ஒவ் வொன்றிலிருந்தும் தன்னை விடுவித்துக்கொண்டு சுதந்திரம் பெற முயற்சிக்கிறான். விடுதலை பெற வேண்டும் என்ற தன்னை மீறிய உந்துதலே மனித னின் மனதில் கடவுள் விளைவிக்கும் முதலாவது காரியம். ஏனெனில், மனிதன் எதிலும் பிணை யுண்டவன் அல்ல என்பதை கடவுள் அறிவார்... அதிகமாக மது அருந்துவதால் மனிதனுக்கு விடு தலை கிடைப்பதில்லை. அந்த மனிதனுக்குத் தான் விடுதலையை விரும்புகிறோமா என்று உண்மை

யில் தெரிவதில்லை. தெரிந்து கொண்டதும் விடுதலைக்குச் சிறந்த வழியைத் தேடிக்கொள்வான்."

"உண்மையான விடுதலை எது? தான் என்றும் பிணைபட்டிருக்கவில்லை என்ற உணர்வைப் பெற்ற பின்னரே மனிதன் விடுதலை அடைந்தவனாகிறான். கட்டுண்டு கிடப்பதாக எண்ணும் நான், நான், நான் என்கிற 'நான்கள்' உண்மையில் முடிவிலா மெய்ப்பொருள். ஐம்புலன்கள் வாயிலாய் உணரக் கூடியவற்றைத் தவிர வேறொன்றும் அறியாத 'நான்' என்பவனே பிணையுண்டு கிடக்கிறான். மாறாக, ஒவ்வொரு உடலிலும் 'நான்', 'நான்' என்று தனித்து ஸ்புரணம் எழுப்பும் ஆத்மாவே உண்மையான நான். உடலும் மனமும் முடிவற்ற நான் என்கிற ஆத்மாவின் வெறும் கருவிகளே ஆவன."

ஹம்ப்ரீஸுக்குப் போலீஸ் உத்தியோகம் ஒத்துவரவில்லை என்று சொல்லத் தேவையில்லை! ஆனால் அப்பணியில் தொடர்ந்து இருந்தவண்ணமே ஆன்ம தியானத்தில் ஈடுபட்டுவரலாம் என்று ஸ்ரீ பகவான் புத்தி புகட்டினார். பல ஆண்டுகள் அவ்வாறே தொடர்ந்து பணியாற்றிய பின்னரே வேலை ஓய்வு கேட்டுப் பெற்றார். கத்தோலிக்கரான அவர், அனைத்து சமயங்களின் அடிப்படை ஒற்றுமையை உணர்ந்து, தாம் மதம் மாறுவது அவசியமில்லை என்று கண்டார். இங்கிலாந்து திரும்பிச் சென்றவர் அங்கு ஒரு கத்தோலிகத் துறவி மடத்தில் சேர்ந்து விட்டார்.

## பிரும்மஞான சங்கத்தவர்

ஸ்ரீ பகவானின் சமரச மனப்பான்மையும் சாந்த சொரூபமும் காண்பவர் மனதில் பதிந்துவிடும். ஆன்மீக மேதாவிலாசம் படைத்த எவரும் ஏனைய மதங்களில் பொதிந்துள்ள உண்மையைக் கண்டுணர்வர். ஸ்ரீபகவானோ

அதற்கும் மேலாக, மக்களிடையே ஆன்மீகத்தைப் பரப்பும் பணியில் ஈடுபட்டுள்ள மற்ற குழுவினர் அல்லது ஆசிரம அமைப்புகளின் வழிமுறைகள் முற்றிலும் வேறு பட்டிருந்தாலும் அல்லது கடும் ஆசார அனுஷ்டானங்கள் நிறைந்தனவாயினும் அவற்றின் நற்பணியை சிலாகித்துரைப்பார்.

ராகவாச்சாரியார் என்பவர் திருவண்ணாமலையில் அரசாங்க உத்தியோகஸ்தர். பகவானை எப்போதாகிலும் வந்து தரிசித்துச் செல்வார். பிரும்மஞான சங்கத்தைப் பற்றி (Theosophical Society) ஸ்ரீபகவானின் கருத்தை அறிய விரும்பினார். ஆனால் அவர் சென்ற போதெல்லாம் பக்தர்கள் கூட்டம் இருந்ததால் மற்றவர் முன்னிலையில் அதைப் பற்றிப் பேச்செடுக்கத் தயங்கினார். ஒரு நாள் எப்படியாவது கேட்டுவிடுவது என்ற தீர்மானத்துடன் மூன்று வினாக்களை எழுதி எடுத்துச் சென்றார். அதன் பின் நடந்ததை ராகவாச்சாரியாரே சொல்லக் கேட்போம்:

மூன்று கேள்விகளாவன:

1. மற்றவர் எவரும் இல்லாத சமயம் எனக்குச் சில நிமிடங்கள் தங்களுடன் தனித்துப் பேச அவகாசம் அளிக்கக் கூடுமா?

2. நான் பிரும்மஞான சங்க அங்கத்தினன். அச்சங்கத்தைப் பற்றித் தங்கள் அபிப்பிராயம் என்னவென்று அறியலாமா?

3. தங்களது மெய்யான சொருபத்தைக் கண்ணாரக் காணும் பாக்கியம் கிடைக்குமா, நான் அதற்குத் தகுதியுள்ளவன் என்று தாங்கள் கருதினால்?"

"நான் அங்கு சென்று வீழ்ந்து வணங்கி அவர் முன்னிலையில் அமர்ந்தேன். அச்சமயம் குறைந்த பட்சம் முப்பது பேராவது குழுமியிருந்தனர். ஆனால் விரைவில் ஒருவர்பின் ஒருவராகச் சென்று விட்

டனர். நான் மகரிஷியுடன் தனித்தேன். இவ்வாறு என் முதல் கேள்வியை எழுப்பாமலேயே விடை கிடைத்து விட்டது. அதுவே ஓர் நல்ல அறிகுறி எனப்பட்டது.

" 'கையில் வைத்திருப்பது பகவத் கீதை தானே, பிரும்மஞான சங்கத்தின் மெம்பரா ?' என்று அவ ராகவே வினவியபோது நான் விடைகூற வாயெடுப் பதற்குள், 'நல்ல காரியம் தான் செய்து வருகிறது அச்சங்கம்' என்று தொடர்ந்தார். 'ஆமாம்' என்று அவர் முதலில் கேட்ட கேள்விக்கு பதிலிறுத்தினேன்.

"என் இரண்டாவது கேள்வியையும் அவரே எதிர் பார்த்து விடையும் கூறிவிட்டமையால், மூன்றாம் வினாவுக்கான விடையும் தானாய்க் கிடைக்க எதிர் நோக்கியிருந்தேன். அரைமணி நேரம் சென்ற பிறகே நான் வாய் திறந்து, ' ஸ்ரீ கிருஷ்ணனின் விஸ்வரூபத் தைக் காண அருச்சுனன் விரும்பியது போல, தங்களது நிஜரூப தரிசனம் பெறக் காத்துக் கிடக் கிறேன், அதனைக் காண நான் தகுதியுள்ளவன் எனும் பட்சத்தில்' என்று கேட்டேன்.

"மகரிஷி அச்சமயம் மேடைமீது அமர்ந்திருந்தார். அவர் அருகில் இருந்த சுவரில் தக்ஷிணாமூர்த்தியின் சித்திரம் வரையப்பட்டிருந்தது. வழக்கம் போல் மகரிஷி மோனமாய்க் கூர்ந்து நோக்கினார். நானும் அவரது கண்களை நேராய் உற்று நோக்கினேன். அதன்பின் திடீரென அவரது உருவமும் அருகி லிருந்த தக்ஷிணாமூர்த்திச் சித்திரமும் என் பார்வை யிலிருந்து மறைந்தன. கண்முன் வெறும் வெட்டவெளி மட்டுமே வியாபித்தது. சுவர் ஏதும் இல்லை. பிறகு, வெண்ணிற மேகம் போன்ற புகையில் மகரிஷியின் உருவரையும் தக்ஷிணாமூர்த்தி உருவ வெளிக் கோடும் கண்முன் உருவாயின. மெல்ல மெல்ல அந்த உருவரைகள் (வெள்ளியால் கோடிட்டு வடிவமைத்தது போன்று) தெளிவாகி வந்தன. கண்,

மூக்கு முதலிய விபரங்கள் மின்னல் போன்ற வரிக்கோடுகளால் விளக்கம் பெற்றன. இவை படிப் படியாய் விரிந்து மகரிஷி மற்றும் தக்ஷிணாமூர்த்தி யின் முழு உருவங்களும் கண்ணைப் பறிக்கும் ஒளியுடன் சுடர்விட்டுப் பிரகாசிப்பதைக் கண் டேன். கூசிய கண்களை மூடிக்கொண்டேன். சில நிமிடங்களுக்குப் பிறகே கண்ணைத் திறந்து பார்த் தேன். மகரிஷியையும் தக்ஷிணாமூர்த்திச் சித்திரத் தையும் சாதாரண நிலையில் கண்டேன். உடனே எழுந்து சாஷ்டாங்கமாய் நமஸ்காரம் செய்து திரும்பி வந்து விட்டேன். அவ்வற்புதக் காட்சியில் நெகிழ்ந்துபோன நான் பிறகு ஒரு மாத காலம் வரை அவரைத் திரும்பவும் நெருங்கத் துணிய வில்லை. ஒரு மாதத்திற்குப் பிறகு மலை ஏறிச் சென்றபோது அவர் ஸ்கந்தாசிரமத்திற்கு முன்புறம் நின்று கொண்டிருப்பதைக் கண்டேன். அவரை நெருங்கி விநயத்துடன், 'ஒரு மாதத்திற்கு முன் தங்களை ஒரு கேள்வி கேட்டேன். அதற்கு விடை யாகக் கிடைப்பதற்கரிய அனுபவம் பெற்றேன்' என்றுரைத்து மேற்சொன்ன அனுபவத்தை விவரித் தேன்: அதற்கான விளக்கம் வேண்டி நின்றேன். சிறிது நேரம் நிதானித்தபின் அவர் கூறியதாவது: 'என் வடிவத்தைக் காண விரும்பினீர். நான் மறைந்து போவதைக் கண்டீர். வடிவம் அற்றவன் 'நான்'. நீர் கண்ட அக்காட்சியே உளதான உண்மை. தொடர்ந்து கண்ட மற்ற எழுச்சிகள், பகவத் கீதை யைப் படித்ததின் பாதிப்பினால் உம்முள் எழுந்த கற்பிதங்கள் என்றே கூறுவேன். ஆனாலும், கணபதி சாஸ்திரிக்கும் இதுபோன்ற அனுபவம் முன்பு ஏற் பட்டது. மேலும் தகவல் அவரையே கேளும்.'

"நான் சாஸ்திரியாரை இதுபற்றிப் பின்னர் கேட்க வில்லை. மற்றொரு சமயம் மகரிஷி என்னிடம் கேள்விரூபமாய்ச் சொன்னார்: "நான் கண்டேன்

*என்றீரே! அந்த 'நான்' யார் என்று கண்டுபிடியும். காண்பவன்தான் நான் என்பதா அல்லது கண்டதாக அறிபவனா? அவ்வாறு அறிபவனின் இருப்பிடம் எது?"*

## அநாமதேய பக்தர்

விருபாட்ச குகை வாச காலத்தில் ஓர் அன்பர் வருகை தந்தார். அவர் ஐந்து நாட்கள் மட்டுமே தங்கிச் சென்றார். என்றாலும் ஸ்ரீ பகவானின் பூரண அருள் கிடைக்கப்பெற்றார் என்றே தோன்றுகிறது. "ஆத்ம தரிசனம்" (Self Realization) என்ற தலைப்பில் ஸ்ரீ பகவானின் வாழ்க்கை வரலாற்றை எழுதுவதன் பொருட்டு தகவல் திரட்டிக்கொண்டிருந்த நரசிம்மஸ்வாமி, அந்த அன்பரின் பெயரையும் முகவரியையும் குறித்துக் கொண்டார், (பி.வி. நரசிம்மஸ்வாமி 1936இல் வெளியிட்ட அந்த ஆங்கிலப் புத்தகத்தில் கண்டுள்ளவற்றை ஆதாரமாகக் கொண்டே இந்த நூலை நான் எழுதமுடிந்தது). வந்தவர் உற்சாகமும் அமைதியும் ஒருங்கே வாய்ந்தவர். ஸ்ரீ பகவானின் அருள் வீச்சுக்குப் பாத்திரமானார். அவர் தங்கியிருந்த ஒவ்வொரு நாளும் ஸ்ரீ பகவானைப் போற்றி ஒரு தமிழ்ப் பாடல் இயற்றிவந்தார். அவை ஒவ்வொன்றும் பரவச நிலையில் பிரயத்தினமின்றித் தோன்றியவை; களிப்பும் பக்தியும் பொங்கி வழியும் பாடல்கள். ஆகவே, மற்றவர் புனைந்த பாடல்களுள், இவையே இன்றும் விரும்பிப் பாடப்பட்டு வருகின்றன. பின்னர் நரசிம்மஸ்வாமி அந்த பக்தரைப்பற்றி மேலும் விபரம் பெறுவதற்காக அவர் சொன்ன ஊராகிய சத்தியமங்கலம் சென்றார். ஆனால் தீர விசாரித்த பிறகு, அப்படி யாரும் அவ்வூரில் இருந்ததில்லை என்று தெரிய வந்தது. சத்திய மங்கலம் என்றால் சத்தியத்தின் இருப்பிடம் என்ற பொருளில் நவயுகத்து சத்—குரு ரமணரின் புகழ்

பாடிச் செல்ல சத்திய லோகத்திலிருந்து அநாமதேயமாய் வந்துபோன தேவ தூதுவரோ என்றும் பலர் வியப் புற்றனர்.

தமது பெயர் வேங்கடரமணய்யர் என்று நரசிம்ம ஸ்வாமியிடம் சொல்லிப்போனார். அவர் புனைந்த ஒரு பாடலில் "சற்குரு ரமணரே" என்று துதிக்கும் வரி வருகிறது. பக்தர் ஒருவர் அப்பாடல் வரிகளை இசைக் கும் போதும், ஸ்ரீ பகவானும் அவரோடு சேர்ந்து பாட லானார்: பாடிக்கொண்டிருந்த பக்தர் சிரித்து, "தன்னைப் புகழ்ந்து ஒருவர் தானே பாடுவதை இப்போது தான் முதன்முறையாகக் கேட்கிறேன்" என்று வேடிக்கையாகக் கூறினார்.

அதற்கு ஸ்ரீ பகவான், "ரமணனை ஏன் எண்சாண் உடம்புக்குள் அடைக்கவேண்டும்? ரமணன் எங்கும் வியாபித்தவன்" என்றார்.

ஐந்தில் ஒரு பாடல், பொழுது புலர்வுறும் மகிழ்ச் சித் துள்ளல்களை இழையோட்டி மிகச் சிறப்பாக அமைந்துள்ளது. அதனைப் புனைந்த அநாமதேயர், தாம் தம்முள் உணர்ந்த ரமண உதயத்திற்கு இன்னிசை வடிவில் கட்டியம் கூற விழைந்தார் போலும்!:

அருண னுத்தின னருண கிரிதன்னி
லழகிய ரமணரே வாரும்;
அருணாச லேசரே வாரும்.

சாலைக் குயிலோசை காலையிற் கூவிற்று
சற்குரு ரமணரே வாரும்;
சாம்பவி பாகரே வாரும்.

சங்க மொலித்தது தாரகை மங்கின
இங்கித ரமணரே வாரும்;
ஈச சுரேசரே வாரும்.

கோழிகள் கூவின குருகுக ளியம்பின
நாழிகை யாச்சுது வாரும்;
நள்ளிரு ளகன்றது, வாரும்.

சின்னங்கள் காகளம் பேரிகை யார்த்தன
பொன்னங்க ரமணரே வாரும்;
போத சொரூபரே வாரும்.

காகங் கரைந்தது காலையு மாயிற்று
நாகா பரணரே வாரும்; [1]
நஞ்சணி கண்டரே வாரும். [1]

கற்பனை யொழிந்தது கமலங்க[2] ளலர்ந்தன
விற்பன ரமணரே வாரும்;
வேதாந்த ரூபரே வாரும்.

முக்குண ரகிதரே முத்திநா டாள்வோரே
சற்குண ரமணரே வாரும்;
சாந்த சொரூபரே வாரும்.

சத்துச்சித் தானந்த வடிவினைச் சார்ந்திடுந்
தத்துவ ராயரே வாரும்;
தாண்டவ மூர்த்தியே வாரும்.

இன்பதுன் பமில்லா வேகாந்த மேடையி
லன்புருக் கொண்டோரே வாரும்;
ஆனந்த மோனரே வாரும்.

(1) சிவபெருமானின் அடைமொழிகள் இவை.
(2) இதயகமலங்களையும் குறிப்பதாக உள்ளது.

# 11. பிராணிகள்

இந்துமதக் கொள்கைப்படி (உதாரணமாக, பகவத் கீதையின் ஆறாவது அத்தியாய 40–44 ஸ்லோகங்களுக் கான ஆதிசங்கரரின் உரைப்படி), இம்மையில் ஆன்ம உணர்வுடன் ஐக்கிய வாயிலாய் பிறவாப் பெறுநிலை பெறாத மானிடன் மாண்டபின், அவன் ஆற்றிய நல் வினை தீவினைகளாகிய கர்மவினையின் இருப்புக்குத் தக்கவாறு, சொர்க்கத்திற்கோ அல்லது நரகத்திற்கோ செலுத்தப்பட்டு அங்கே அதற்கான பலனை அனுபவிக்க நேரிடுகிறது. கர்மபலன் முற்றுப்பெற்றபின் திரும்பவும் இப்பூவலகில் ஜனனம் பெற வேண்டியுள்ளது. அவரவர் பிராரப்தம் அல்லது தலைவிதிப்படியும் ஊழ்வினைப் படியும் உயர் பிறவியோ அல்லது கீழ்ப்பிறவியோ எடுக் கிறான். புதிய பிறவியில் திரும்பவும் ஆகாமியம் அல் லது புதிய கர்மங்கள் அவனை அண்டுகின்றன. இவ் வாறு புதிய வாழ்வில் உற்பத்திசெய்யும் புதிய கர்மங் கள், சஞ்சித கர்மா என்கிற முற்பிறவியில் மீந்த கர்மக் கடன்களோடு சேர்கின்றன. சஞ்சிதம் இவ்வாறு பிறவி தோறும் பெருகிக்கொண்டே போகின்றது.

மானிட வாழ்வின்போதுதான் கர்மக் கடன்களைக் களைந்து முன்னேற்றம் காணக்கூடும் என்று பொது வாக அறியப்படுகிறது. ஆயினும், பிராணிகளும்கூட அதனதன் கர்மக் கடன்களைக் கரைக்கலாம் என்று ஸ்ரீ பகவான் சுட்டிக்காட்டியுள்ளார். இதே அத்தியாயத்தில் எடுத்துக் காட்டப்பட்டுள்ள பேச்சில் ஸ்ரீ பகவான், "எந்தப் பிராணியின் உடலில் எந்த ஆத்மா குடிகொண் டுள்ளதோ யார் அறிவர்? எந்த வினைப் பகுதியை அனுபவித்து முடிப்பதற்காக அப்பிராணிகள் நம்மை அண்டியுள்ளன என்பதும் யாருக்கும் தெரியாதே" என் கிறார். மானிடர்போல் மற்ற உயிரினங்களும் மோட்சம்

பெறலாம் என்று ஆதிசங்கரரும் வலியுறுத்தியுள்ளார். மேலும், ஜடபரதர் எனும் முனிபுங்கவர் மரிக்கும் தரு வாயில், தாம் அதுகாறும் பரிவுடன் பராமரித்துவந்த மானைப்பற்றி ஒரு கண நேரம் மேலோட்டமாய் சிந்தித் தாராம். மிஞ்சி நின்ற அக்கடைசி பந்த நினைவின் விளைவாக அம் மாமுனிவர் மான் உருவில் மறு ஜன்மம் எடுக்க நேர்ந்ததாக ஓர் புராண வரலாறும் உண்டு.

தம்மை நாடிவரும் அடியார்களிடத்தில் காட்டிய அதே பரிவுடன், தம்மிடம் அடைக்கலம் கண்ட உயிரி னங்களிடத்தும் ஸ்ரீ பகவான் கருணை காட்டினார். பக்தர்கள் அவர் மீது ஈடுபாடு கொண்டது போலவே பிராணிகளும் அவரால் கவரப்பட்டன. குருமூர்த்த மடால யத்தில் இருந்தபோதே பறவைகளும் அணில்களும் அவ ரருகில் பயமின்றி கூடுகள் கட்டும். அக்காலகட்டத்தில் இளம் சுவாமி எதிலும் பற்றற்று இயங்கியதால் உலகப் பிரக்ஞையே அற்றவராக இருந்ததாக பக்தர்களுக்குத் தோன்றினாலும், நடப்பவை யாவற்றையும் கூர்ந்து உணர்ந்தவண்ணமிருந்தார். பறவைகள் விட்டுச் சென்ற ஒரு கூட்டில் ஓர் அணில் குடும்பம் குடியேறியதைப் பல ஆண்டுகளுக்குப் பின் நினைவு கூர்ந்து வேடிக்கையாய்க் கூறியுள்ளார்.

எந்தப் பிராணியையும் 'அது', 'இது' என அஃறி ணையில் குறிப்பிடமாட்டார். 'அவன்', 'அவள்' என்றே கூறுவார். "என்ன, பசங்களுக்கு சாப்பாடு போட் டாச்சா?" என்பார் – ஆசிரமத்து நாய்களைப் பற்றிய கேள்வி இது! "சீக்கிரமா லட்சுமிக்கு சாதம் வை" என்று அவர் சொல்வது லட்சுமி என்ற பசுமாட்டைக் குறிப் பிட்டுத்தான்! உணவு வேளையில் முதலில் நாய்களுக்குத் தீனி; பிறகு வெளியே காத்திருக்கும் பிச்சைக்காரர்களுக்கு அன்னமிடுதல்; அதன் பிறகே பக்தர்களுக்கு உணவு படைக்கப்படும் – இதுவே ஆசிரமம் கடைபிடித்த

நியதி. மற்றவர்களுக்குப் பகிர்ந்தளிக்காமல் பகவான் எதையும் தாம் உண்ண விரும்புவதில்லை என்பதை நான் நன்கறிந்தவன். உணவு வேளைகளுக்கிடையில் ஒரு சமயம் அவர் ஓர் மாம்பழத்தை ருசித்துக் கொண் டிருந்ததைக் கண்டு திகைப்புற்றேன். பின்னர்தான் காரணம் புரிந்தது – மாம்பழ ஸீஸன் அப்போதுதான் ஆரம்பம். மாம்பழம் சரியாகப் பழுத்திருக்கிறதா, இல்லை புளிக் கிறதா? பரோடா மகாராணி அனுப்பி வைத்து, ஸ்ரீ பகவானின் மேற்பார்வையிலிருந்த வெண் மயிலுக்கு அக்கனி தின்னக் கொடுக்கத் தகுந்ததா என்று சுவைத் துப் பார்க்க விரும்பினார். ஆசிரம வளாகத்தில் வேறு மயில்களும் இருந்தன. மயில் அகவுவது போலவே அவர் கரகரத்துக் குரல் எழுப்பி அழைப்பார். அவையும் ஸ்ரீ பகவானருகில் பறந்து வந்து உட்கார்ந்து அவர் அளிக்கும் கடலை, அரிசி, மாங்கனி ஆகியவற்றைக் கொத்தித் தின்னும். பூதவுடலைப் பிரிவதற்கு முதல் நாள் – உடல் உபாதை பயங்கரமாக இருக்கும் என மருத்துவர்கள் கூறி வந்த சமயம் – அருகிலுள்ள மரத்தின் மீது மயிலொன்று கிரீச்சிடுவதைச் செவிமடுத்த ஸ்ரீ பகவான், "மயிலுக் கெல்லாம் ஆகாரம் கொடுக்கலையா ?" என்று ஈனமாக வினவினார்.

அணில்கள் ஜன்னல் வழியாகத் துள்ளித் தாவி அவரது மஞ்சத்தின் மீது குதிக்கும். அவற்றிற்காக எப் போதும் ஒரு தகர டப்பாவில் நிலக்கடலை தயாராக வைத்திருப்பார். சில சமயம் டப்பாவை அப்படியே அணிலுக்கு முன்னால் வைத்து, வேண்டுமளவு எடுத்துக் கொறிக்கட்டும் என விட்டு விடுவார். சில சமயம் உள்ளங்கையில் கடலைகளை வைத்து அணில் அருகில் நீட்டுவார். அணிலும் அவர் கையிலிருந்து லாவகமாய் எடுத்துக் கொறித்துத் தின்னும். தள்ளாமை மற்றும் கீல்வாதம் காரணமாய் அவர் கைத்தடியூன்றி நடக்கத் தொடங்கியபோது ஒரு நாள் ஆசிரமத்து வெளிச்சுவர்ப்

படிக்கட்டில் இறங்கி வருகையில், அணிலொன்றை நாய் துரத்த, அச்சிறு பிராணி அவரது கால்களுக்கிடையே புகுந்து மறுபுறம் ஓடியது. நாயை அதட்டிய வண்ணம் ஸ்ரீபகவான் தமது ஊன்றுகோலை அவற்றிற்கிடையே எறிந்தார். அதனால் அவர் படியில் தடுமாறி கீழே விழுந்ததில் தோள்பட்டை எலும்பு விரிசல் கண்டது. எது எப்படியோ, நாயைத் தடுத்து அணிலைக் காப்பாற்றி விட்டார்.

மிருகங்களும் அவரது அருட்கனிவை உணர்ந்தன. மனிதர்களால் பழக்கப்படுத்தப்பட்ட காட்டு விலங்கு ஏதேனும் மறுபடியும் காடு திரும்பினால் அதன் இன விலங்குகள் அதனை பகிஷ்கரித்துத் துரத்திவிடும். ஆனால் ஸ்ரீ பகவானிடம் சென்று திரும்பிய விலங்குகள் இதற்கு விதி விலக்கு மட்டுமின்றி, அவை இனத்தாரின் வரவேற்பையும் பெறும். விஷப்பிராணிகளும்கூட அவரைக் கண்டு அச்சமோ அவர்மீது சீற்றமோ அடைவதில்லை. அவர் ஒரு சமயம் மலைச் சாரலில் அமர்ந்திருக்கையில் ஓர் பாம்பு அவரது கால்மீது ஊர்ந்து சென்றது. அரவம் ஊர்ந்தபோது அவர் அசையவுமில்லை, பீதியுறவும் இல்லை. அதுகண்டு அதிசயித்த பக்தர், உங்கள் கால் மீது பாம்பு ஊறும்போது எப்படி இருந்தது என்று கேட்டதற்கு, "ஜில்லென்று மிருதுவாய் இருந்தது" என்றார் ஸ்ரீ பகவான்.

அவர் இருக்கும் இடத்தில் பாம்புகளைக் கொல்ல அனுமதிக்க மாட்டார். "அவர்கள் வசிக்குமிடத்திற்கு நாம் வந்திருக்கிறோம். அவர்களை தொந்திரவு செய்யவோ துன்புறுத்தவோ நமக்கு அதிகாரம் கிடையாது. அவர்களும் நமக்கு ஏதும் தொல்லை கொடுக்கவில்லையே ?'' என்பார். ஆம். அவை எவரையும் தீண்டியதில்லை. ஓர் சமயம் ஒரு நாகப்பாம்பு அவருடைய அன்னையருகில் நெளிந்து சென்றபோது அன்னை பயந்து அலறினார்.

ஆனால் ஸ்ரீ பகவான் அந்தப் பாம்பை நோக்கி நிதானமாக நடந்து வந்ததும் அது சட்டெனத் திரும்பிச் சென்றது. இரு பாறைகளுக்கிடையே அது புகுந்து செல்வது கண்டு, ஸ்ரீ பகவானும் அதைத் தொடர்ந்து சென்றார். இடுக்கு வழி முடிவில் வேறு பாறைச் சுவர் குறுக்கிட்டதால் அதற்குமேல் செல்ல வழியின்றி திரும்பிச் சுருண்டு நின்று தலைதூக்கிப் படமெடுத்து அசையாது அவரை அண்ணாந்து நோக்கியது. அவரும் அதையே உற்று நோக்கினார். இக்கண்ணோக்குப் படலம் பல நிமிடங்கள் நீண்டது. அதன் முடிவில் நாகப்பாம்பு தன் சுருளைப் பிரித்துக்கொண்டு பயமொழிந்து சாந்தமாய் அவரது காலடிக்கு வெகு சமீபமாக ஊர்ந்து வேறுபுறம் சென்று விட்டது.

ஓர் சமயம் ஸ்கந்தாசிரமத்தில் சில அடியார்களுடன் அவர் அமர்ந்திருக்கையில் ஒரு கீரிப்பிள்ளை சரசர வெனவந்து நேராக அவ்ரது மடியில் சிறிது நேரம் உட்கார்ந்தது. "ஏன் வந்தது என்று யாருக்குத் தெரியும்? சாதாரண கீரி இல்லையோ என்னவோ?" என்றார் ஸ்ரீ பகவான். பேராசிரியர் வெங்கடராமய்யா என்பவர் தமது டயரியில் வேறொரு அசாதாரண கீரிப்பிள்ளை சம்பவத்தை எழுதி வைத்துள்ளார். கிராண்ட் டஃப் என்பவரின் கேள்வியொன்றுக்கு ஸ்ரீ பகவான் பின்வருமாறு கூறினாராம்:

"ஆருத்ரா தரிசன திருவிழாவின்போது நிகழ்ந்தது. நான் அப்போது மலை மீது ஸ்கந்தாசிரமத்தில் இருந்து வந்தேன். பார்க்கவரும் ஜனங்கள் டவுன் பக்கத்திலிருந்து சாரிசாரியாய் மலைமீது ஏறி வந்து கொண்டிருந்தனர். ஒரு கீரிப்பிள்ளை ஜனக் கூட்டத்திற்குள் புகுந்து வேகமாக வந்தது. வித்தியாசமான ஜந்து அது. சாதாரண கீரிகளைவிட பெரிசு. கீரிகள் சாம்பல் நிறத்தவை. இதற்கோ

பொன்னிறத் தோல். வால்மீது புள்ளிகளும் இல்லை. யாரோ வளர்க்கும் கீரிபோலிருக்கிறது, கூட்டத்தில் அதன் சொந்தக்காரரும் இருப்பார் என்றே ஜனங்கள் எண்ணினர். அதுவோ நேராக பழநிஸ்வாமியிடம் ஓடிச் சென்றது. அப்போது அவன் விருபாட்ச குகையருகிலுள்ள ஊற்று நீரில் குளித்துக் கொண் டிருந்தான். கீரிப்பிள்ளையை அன்புடன் தட்டி வருடினான். அவன் பின்னாலேயே அதுவும் குகைக் குள் சென்று மூலை முடுக்குகளில் ஓடி ஆராய்ந்து பார்த்ததாம். திரும்பவும் ஜனக்கும்பலோடு சேர்ந்து கொண்டு ஸ்கந்தாசிரமம் வந்து சேர்ந்தது. கூடி யிருந்த அனைவரும் அதன் கவர்ச்சியான தோற்றத் தையும் அச்சமின்றி அங்குமிங்கும் சஞ்சரிப்பதையும் கண்டு வியந்தனர். அப்புறம் அது என்னிடம் வந்து என் மடிமீது ஏறி உட்கார்ந்துகொண்டது. சிறிது நேரம் மடியை விட்டு நகராமல் சாவகாச மாய் இருந்தபிறகு சுற்றுமுற்றும் பார்த்துக் கீழே இறங்கிற்று. அந்த இடத்தை சுற்றிலும் ஓடி ஓடிப் போய்ப் பார்த்தது. நானும் அதன் பின்னால் சென்றேன். வந்து போவோரின் அசட்டைத் தனத் தாலோ அல்லது காட்டு மயில்களாலோ அதற்கு தீங்கு ஏதும் நேரக்கூடாது என்பதே என் நோக்கம். இரண்டு மயில்கள் அதைக் கூர்ந்து நோட்டம் விட்டன. ஆனால் கீரியோ அமைதியாய் நாற்புற மும் சுற்றியலைந்தபின் ஆசிரமத்தின் தென்கிழக்குப் பக்கமாகப் பாறைகளுக்கிடையே ஓடி மறைந்தது.”

ஒரு சமயம் ஆசிரமத்து சமையலின் பொருட்டு, பொழுது விடியுமுன்னரே ஸ்ரீ பகவான் கறிகாய் நறுக்கிக் கொண்டிருந்தார். அவரோடு கூட இரண்டு பக்தர்களும் உதவி புரிந்தனர். அவ்விருவருள் லட்சுமண சர்மா என்பவர் தமது நாயையும் கூட்டிவந்திருந்தார். அழ கான நல்ல வெள்ளை நாய். அதற்காகப் போட்ட

ஆகாரத்தைச் சாப்பிடாமல் அது அங்குமிங்கும் துள்ளிக் குதித்துக் கொண்டிருந்தது. அது கண்ட ஸ்ரீ பகவான், "இவனுக்கு எத்தனை சந்தோஷம் பார்த்தீர்களா ? உயர்ந்த ஆத்மா ஒன்று இந்த நாய் உருவில் பிறவியெடுத்துள்ளதோ என்னவோ" என்றார்.

ஆசிரமத்தில் வளர்ந்து வந்த நாய்களைப் பற்றி பேராசிரியர் வெங்கடராமய்யாவின் டயரியில் பின் வரும் குறிப்பும் உண்டு:

> "அச்சமயம் (1914 – ஆம் ஆண்டில்) ஆசிரமத்தில் நான்கு நாய்கள் இருந்தன. தாமும் சேர்ந்து சாப்பிடாவிடின் அவை எந்த ஆகாரத்தையும் தொடமாட்டா, என்று ஸ்ரீ பகவான் கூறியதை பண்டிதர் ஒருவர் பரிசோதிக்க விழைந்தார். சில பதார்த்தங்களை நாய்களுக்கு எதிரில் பரப்பினார். ஆனால் எந்த நாயும் அவற்றைத் தொடக்கூட இல்லை. சிறிதுநேரம் கழிந்தபின் ஸ்ரீ பகவான் அப்பதார்த்தங்களில் ஒரு சிறு புள்ளல் எடுத்து வாயில் போட்டுக் கொண்டதுதான் தாமதம், நாய்களும் உடனே பாய்ந்து ஆகாரத்தை லபக் லபக் கென்று விழுங்கின."

ஸ்கந்தாசிரமத்திற்கு நாய்க்குட்டியாக வந்த கமலா என்ற பெண் நாய்தான் ஆசிரமத்து நாய் இன முதல்வி. முதலில் வந்தபோது பக்தர்கள் அதைத் துரத்தி விரட்டி விட முயன்றனர். வருடா வருடம் குட்டி போட்டு ஆசிரமத்தில் நாய்த் தொல்லை அதிகமாகும் என பயந்தனர். ஆனால் கமலாவோ இடத்தைவிட்டு அகல மறுத்து விட்டது. நாளடைவில் நாய்க்குடும்பமும் வளரத்தான் செய்தது. ஆயினும் அவை யாவையும் பரிவுடன் பராமரிக்கப்பட்டு வந்தன. கமலாவுக்கு முதல் பிரசவம் ஆனபோது அதைக் குளிப்பாட்டி, நெற்றியில் மஞ்சள் தீற்றிக் குங்குமம் இட்டு ஆசிரமத்தில் சுத்தமான தனித்த

இடத்தில் தங்கவைத்தனர். தனது குட்டிகளுடன் அங்கு பத்து நாள் இருந்து 'தீட்டு' கழிந்தபின் புண்ணியா வாசனமும் கொண்டாடப்பட்டது. அன்று ஆசிரமத்தில் வடை பாயாசத்துடன் அனைவருக்கும் பந்தி போஜனம் வேறு! கமலா அறிவும் பயனும் மிக்க நாய். புதிதாக ஆசிரமத்துக்கு வருபவர் யாரேனும் மலையைச் சுற்றிவர விரும்பினால், ஸ்ரீ பகவான் அந்த நாயைத்தான் அவருடன் கூடச் செல்ல அனுப்பிவைப்பார். "கமலா, இவர் கூடப்போய் எல்லா இடத்தையும் சுற்றிக் காட்டி வாம்மா" என்று அன்புடன் பணிப்பார். கமலாவும் வந்தவரை வழிநடத்திப் போய், மலையைச் சுற்றி ஆங்காங்கே அமைந்த மூர்த்தி சிலைகள், தடாகங்கள், சிற்றாலயங்கள் அனைத்திற்கும் இட்டுச் செல்லும்.

சின்னக் கருப்பன் என்ற இன்னொரு நாய் படு சுட்டி. கமலாவின் இனத்தைச் சேர்ந்த நாய் அல்ல. அந்த நாயைப் பற்றிய ஸ்ரீ பகவானின் விவரணையைப் படிப்போமே: "சின்னக் கருப்பனின் உடல் பூராவும் அட்டைக் கரி. அதனால்தான் அவனுக்கு அப்பெயர் வந்தது. ரொம்ப கட்டுப்பாடான ஜீவன். நாங்கள் விருபாட்ச குகையில் இருந்த காலத்தில், தொலைவில் இருட்டில் ஏதோ கருப்பாக ஒன்று ஓடி மறையும். சிலசமயம் புதர்களுக்கிடையே தலையை மட்டும் தூக்கிப் பார்க்கும். பகலில் பார்த்தபோதுதான் நாய் என்று தெரிந்தது. அவனுக்கு ரொம்பவும் வைராக்கியம். யாருடனும் சேர மாட்டான். வாஸ்தவத்தில், யாருடனும் பழகுவதைக் கண்டிப்பாகத் தவிர்த்து வந்தான். நாங்கள் அவனது ஏகாந்தத்திலும் வைராக்கியத்திலும் தலையிட விரும்பவில்லை. இரக்கப்பட்டு ஏதாவது உணவை தொலைவில் வைப்போம். அவனும் யாருமில்லா சமயத்தில் தின்றுவிட்டுப் போவான், அருகில் போனால் ஓடிவிடுவான். ஒரு நாள் நாங்கள் கோஷ்டியாக வந்து கொண்டிருந்த போது அந்த நாய் என்னிடம் ஓடோடி வந்து தாவித்

தாவி வாலாட்டிக் குதித்துத் தன் மகிழ்ச்சியை வெளிக் காட்டினான். தன் நட்பை வெளிப்படுத்த என்னை மட்டும் தேர்ந்தெடுத்தது வியப்பாக இருந்தது. அதன் பின் அவனும் ஆசிரமத்தில் ஒருவனானான். நிரம்ப அறிவுள்ள பிராணி. சொன்னதைச் செய்வான். துடுக்கு மிக்கவன். பழைய தனித்த சுபாவத்தை உதறிவிட்டு எல்லோரிடமும் குழைந்து சகஜமாய்ப் பழகலானான். வித்தியாசமின்றி அனைவரிடமும் மகிழ்ச்சியுடன் இழைவான். ஆசிரமத்துக்கு வருவோர், ஆசிரம வாசி கள் எவராயினும் அவர் மடிமீது ஏறி குழைந்து படுத் துக் கொள்வான். அதன் வாத்சல்ய விளையாட்டைப் பொதுவாக எவரும் ஏற்றனர். ஒரு சிலர் மட்டுமே அவனைத் தவிர்த்து விலக்க முற்படுவர். அவனோ யாரையும் இலேசில் விட்டுவிடமாட்டான். ஆனால் யாரேனும் 'சீ,. போ' என்று கடுத்துக் கட்டளையிட்டால் மடத்து ஆண்டிபோல அடங்கி ஒடுங்கிப் போய்விடுவான். ஒரு சமயம் குகைக்கருகிலுள்ள ஓர் மரத்தடியில் அந்தணர் ஒருவர் மடியாக ஜபம் செய்து கொண்டிருந்தபோது சின்னக் கருப்பன் அவரருகில் சென்றான். அந்தப் பிரா மணனுக்கு நாய் என்றால் அசுத்தம் என்று எண்ணம். நாயைக் கிட்டே நெருங்கவிடமாட்டார். ஆனால் கருப் பனுக்கோ இயற்கை நியதியான சமத்துவ நீதி மட்டுமே தெரியும். மரத்தடியில் அவர் அருகில் திரும்பத் திரும்பச் சென்றான். பிராமணரின் சங்கடத்தை உணர்ந்த ஆசிரம வாசி ஒருவர் கைத்தடியை ஓங்கி நாயை அடித்துத் துரத்தினார். மெல்லத்தான் அடித்தார் என்றாலும் கருப்பன் வீல் எனக் கத்திக் கொண்டே வெளியே எங்கோ ஓடிப்போனான். அதன்பிறகு ஆசிரமப் பக்கம் வரவே யில்லை. எங்கு தேடியும் காணவில்லை. தன்னைக் கொடுமைப்படுத்திய இடத்திற்குத் திரும்புவானா அந்த ரோஷக்காரன் ?

"அடித்து விரட்டிய ஆசாமி, அந்த நாயின் உணர்ச்சிகளைப் புரிந்து கொள்ளத் தவறிவிட்டார். கருப்பனின் தன்மானத்தைப் பிரதிபலித்த நிகழ்ச்சி அதற்கு முன்பே எச்சரிக்கைபோல் நடந்திருக்கிறது. முன்பொரு சமயம் பழநிஸ்வாமி அந்தக் கருப்பனைக் கண்டபடி திட்டி வெருட்டினான். இரவு நேரம் அது. ஒரே மழையும் குளிருமாக இருந்தது. ஆனால் திட்டு வாங்கிய சின்னக் கருப்பனோ ரோஷத்துடன் இடத்தைவிட்டு அகன்று வெளியே வெகு தூரத்தில் கிடந்த கரிமூட்டையின் மீது இரவுபூராவும் சுருண்டு படுத்துக் கிடந்தான். மறுநாள் காலையில்தான் அவனை அங்கிருந்து திரும்பக் கூட்டி வந்தோம். இதற்கும் பல வருஷங்களுக்கு முன்னால் வேறு நாயைப் பற்றிய வேறொரு சம்பவம் உண்டு. விருபாட்ச குகையில் எங்களுடன் இருந்துவந்த ஒரு சின்ன நாயைப் பற்றிய சமாச்சாரம். ஒரு நாள் பழநிஸ்வாமி அந்த நாயை அதட்டிக் கடிந்து கொள்ளவே, அவன் கீழே மலைச் சாரலில் பாய்ந்தோடி, சங்குதீர்த்த குளத்துப்பக்கம் மறைந்துவிட்டான். அதன் பிறகு அந்த நாயின் செத்த உடல் குளத்தில் மிதந்து கிடந்தது. நாய்களும், ஆசிரமத்தில் வளரும் மற்ற பிராணிகளும் அறிவுள்ள ஜீவன்கள், தமக்கென்று வழிமுறை வகுத்துக் கொண்டு அவற்றிற்குக் கட்டுப்பட்டவை, அவற்றை எக்காரணத்தைக் கொண்டும் முரட்டுத்தனமாக நடத்தலாகாது என்பதை பழநிஸ்வாமி உட்பட ஆசிரமத்திலிருந்த எல்லோருக்கும் எடுத்துச் சொன்னேன். எந்தப் பிராணியின் உடலில் எந்த ஆத்மா குடிகொண்டுள்ளதோ, யார் அறிவர்? எந்த வினைப் பயனின் பகுதியை அனுபவித்து முடிப்பதற்காக அப்பிராணிகள் நம்மை அண்டியுள்ளன என்பதும் யாருக்கும் தெரியாதே?" என்றெல்லாம் ஸ்ரீபகவான் விவரித்துரைத்துள்ளார்.

அறிவும் கட்டுப்பாடும் மிக்க வேறு சில நாய்களும் இருந்தன. ஸ்கந்தாசிரமத்தில் இருந்தவரை, ஏதாவது

ஒரு நாய் மரிக்கும் தருவாயில் அதன் அருகில் இருப்பார். சடலத்தைப் புதைத்து சமாதிமீது ஒரு கல் நாட்டு வார்கள். மலையடிவாரத்தில் ஆசிரமக் கட்டிடங்கள் எழுந்த பிந்தைய ஆண்டுகளில், ஸ்ரீ பகவானின் முன் போல் உடல் திடமின்றி நடமாட்டம் குறைவுற்ற கால கட்டத்தில், மானிடர்களே தமது இஷ்டப்படி அவரது அருகாமையை ஆக்கிரமித்தனர். ஆகவே மற்ற பிராணி 'பக்தர்கள்' அவரை நெருங்குவது அசாத்தியமாயிற்று.

கடைசி சில ஆண்டுகள் வரை குரங்குகள் ஸ்ரீ பகவானின் சார்மணைக்குப் பக்கவாட்டிலுள்ள ஜன்ன லுக்கு வெளியே உட்கார்ந்து கொண்டு ஜன்னல் கம்பி கள் வழியாக எட்டிப் பார்க்கும். மானிடத் தாய்மார்கள் செய்வதுபோல சில சமயங்களில் வயிற்றைக் கவ்விப் பிடித்த குட்டியுடன் தாய்க்குரங்கு ஜன்னலில் தொற்றித் தன் குரங்குக் குட்டியை பகவானிடம் காண்பித்துப் போக வந்தது போல உட்கார்ந்து கிடக்கும். பணி யாட்கள் அவற்றை விரட்டினாலும், ஒரு வாழைப் பழத்தை ஜன்னலுக்கு வெளியே தீனியாக வீசி எறிந்த பிறகே அவ்வாறு குரங்குகளை விரட்டிவிட அனுமதிக்கப் பட்டனர்.

உடல் மிகவும் தளர்வுற்ற காலம் வரை, ஸ்ரீ பகவான் தினந்தோறும் காலை ஏழு மணிக்குப் பின்னரும், மாலை ஐந்து மணி சுமாருக்கும் மலைமீது உலாவச் செல்வார். வழக்கமாக சற்று தூரம் மட்டுமே நடந்து திரும்பி விடுபவர், ஒரு நாள் மாலை மலைமீது ஸ்கந்தாசிரமம் வரை சென்றுவிட்டதால் தாமதமாகி விட்டது. நேரத் தில் திரும்பிவராததால் சில பக்தர்கள் அவர் சென்ற பக்கம் ஏறித் தேடப் போயினர். பலர் சிறு கும்பலாக ஆங்காங்கே கூடி நின்று, 'எங்கு போயிருப்பார்? அதற்கு அர்த்தம் என்ன? நாம் செய்யவேண்டியது என்ன?' என்றெல்லாம் விவாதித்துக் கொண்டிருந்தனர். மற்ற

வர்கள் தியானக் கூடத்தில் குழுமிக் காத்துக் கிடந்தனர். அச்சமயம் ஒரு ஜோடிக் குரங்குகள் கூடத்துக் கதவருவே வந்து நின்று, மனிதர்களைப் பற்றிய பயத்தை மறந்து சிறிதே உள்ளே நுழைந்து காலியாய் இருந்த மஞ்சத்தைக் கவலையுடன் திருதிருவென நோக்கின.

மானிடர்களும் ஸ்ரீ பகவானின் பூதவுடலைக் காண மாட்டாது அவர் தேகாந்தமானதற்கு ஒரு சில ஆண்டுகளுக்கு முன்பே, குரங்குகள் அவரைக் காணும் பாக்கியத்தை இழந்தன. கூடத்தின் வெளிப்புறம் வேய்ந்த ஓலைக் கூரையை பெரிதாக்கி நீண்டவாக்கில் அமைத்ததால், குரங்குகள் ஜன்னல் பக்கம் வருவது கடினமாயிற்று. தவிர, பெருவாரியான குரங்குகளைப் பிடித்துக் காட்டில் விட்டு விட்டனர், அல்லது பலவற்றை ஊராட்சி மன்றத்தினர் பிடித்துக் கூண்டிலடைத்து பரிசோதனைப் பயன்களுக்காக அமெரிக்காவுக்கு அனுப்பிவிட்டனர்.

1900—ஆம் ஆண்டு முதன் முதலில் மலைமீது இருக்கை கொள்ளச் சென்றதிலிருந்து, பின்னர் 1922—இல் மலையடிவார ஆசிரமத்தில் வந்து நிரந்தரமாகத் தங்கிவிட்ட இடைக்காலத்தில் ஸ்ரீ பகவான் குரங்கினங்களுடன் அன்புடனும் பச்சாத்தாபத்துடனும் பழகி, அவ்விலங்குகளை கனிவுடன் நோக்கினார் என்பது மட்டுமின்றி, எதையும் கூர்ந்துணரும் அவரது இயல்பும் அவைபால் அவரது கவனத்தை ஈர்த்தன. குரங்குகள் தமக்குள் செய்தி பரிமாற வெவ்வேறாய்க் குரலெழுப்பும் அர்த்தங்களைப் புரிந்து கொண்டார். அவற்றின் பழக்க வழக்கங்களையும், இன நிர்வாக அமைப்பையும் அறிந்தார். ஒவ்வொரு குரங்குக் கூட்டத்திற்கும் தலைமை வகிக்கும் ஒரு 'ராஜா குரங்கு' இருப்பதையும், அவற்றிற்கென வரையறுக்கப்பட்ட அதிகார எல்லைகளும் உள்ளன என்பதையும் கண்டுபிடித்தார். வேறொரு குரங்குக் கூட்டம் மாற்றான் எல்லைக்குள் அத்துமீறி நுழைந்தால் போர்

மூளும் எனக் கண்டறிந்தார். ஆனால் போர் துவக்கு வதற்கு முன்பாகவோ அல்லது சமாதான உடன்பாட் டுக்கு முன்னரோ ஒரு சாரார் தம் தூதுவரை எதிர் சாராரிடம் அனுப்பிவைக்கின்றனர். 'நான் என் இனக் குரங்குகளின் பிரதிநிதி. தகறாரைத் தீர்ந்துவைக்க எனக்கு அதிகாரம் அளித்துள்ளனர்' என்ற பாணியில் குரங்கு தூதுவர் உறுமுமாம். மேலும் ஸ்ரீ பகவானே சொல்லக் கேட்போம்:

"மனுஷாளோடு ஒரு குரங்கு பழகுகிறது என்று தெரிந்தால் குரங்குகள் அதைத் திரும்பவும் தம் இனத் தாரோடு ஒட்டவிடாது பகிஷ்கரித்துத் துரத்திவிடும். ஆனால் நான் இதற்கு விதிவிலக்கு. என்னிடம் வந்து போன குரங்குக்கு இவ்வாறு நேராது. மேலும், இரு குரங்குகளுக்கிடையே தகறாறு ஏற்பட்டு சண்டையிட் டால் அவை இரண்டும் என்னை அணுகும். நான் அவற்றை சமாதானப்படுத்தி, சண்டையிடும்போது பிரித் துத் தள்ளி சண்டையை நிறுத்துவேன். பெரிய குரங் கொன்று, ஒரு குட்டிக் குரங்கைக் காலில் கடித்துக் காயப்படுத்தி ஆசிரமத்திற்கு அருகில் கிடத்திப் போய் விட்டது. விரூபாட்ச குகைக்கு நொண்டிக்கொண்டே வந்து சேர்ந்தான் அந்தக் குட்டிப் பயல். ஆகவே அவ னுக்கு 'நொண்டி' என்ற பெயர் நிலைத்துவிட்டது. ஐந்து நாட்களுக்குப்பின் அவன் இனத்தினர் குகைப் பக்கம் வந்தபோது நான் நொண்டியைப் பராமரித்து வருவதைக் கண்டன. இருந்தும், அவனை அவை அழைத் துப் போயின. அப்போதிலிருந்து அவை அங்கு அடிக் கடி வந்து, ஆசிரமத்துக்கு வெளியே நாங்கள் அவற்றிற்காக இரைத்து வைக்கும் சிறுசிறு உணவுப் பண்டங்களை எடுத்துத்தின்று செல்லும். ஆனால் நொண்டி மட்டும் நேராக என் மடிமீது ஏறி உட்காருவான். சாப்பிடும் விஷயத்தில் அவன் படுசுத்தம். இலையில் சாதம் போட்டு அவன்முன் வைத்தால் ஒரு பருக்கைகூட வெளியில் சிந்த

மாட்டான். அப்படித்தப்பித் தவறி சாதம் சற்றே இரைந்து விட்டால், முதலில் அவற்றை ஒன்றுவிடாமல் திரட்டிச் சாப்பிட்ட பின்னரே இலைச் சாதத்தைத் திரும்பவும் சாப்பிட ஆரம்பிப்பான்.

"ஆனாலும் அவன் ரொம்ப ரோஷமுள்ளவன். ஒரு சமயம் ஏதோ காரணமாக சிறிது உணவை வீசி எறிந்தான். நான் வைதேன், 'என்னடா, உணவை இப்படி வீணடிக்கிறாய் ?' என்று. அவன் உடனே என் முகத்தில் பட்டென்று அடித்தான். அடி, கண்ணுக்கு உயரே பட்டு சற்று வலித்தது. அதற்குத் தண்டனையாக அடுத்த சில நாட்கள் அவனை என் மடிமீது ஏற அனுமதிக்கவில்லை. ஆனால் பிறகு அந்தச் சிறு பயல் மிகவும் கொஞ்சிக் குழைந்து பழைய இடத்தைப் பிடித்துவிட்டான். அது அவன் செய்த இரண்டாவது குற்றம். முதல் தடவை, அவனுக்காக வைத்திருந்த கோப்பைப் பாலை என் உதட்டருகே வைத்து ஊதி சூடாற்றியபோது, அவனது பாலை நான் குடிக்கிறேனோ என்ற எரிச்சலில் என் நெற்றியில் அடித்துவிட்டு ஓடினான். ஆனால் ஒன்றும் பெரிதாகப் படவில்லை. உடனே திரும்பவும் என்னிடம் ஓடி வந்து மடிமீது உட்கார்ந்து, 'மறந்துடுங்கோ, மன்னிச்சுடுங்கோ' என்று கெஞ்சும் பாணியில் பாவனை காட்டினான். நானும் மன்னித்து விட்டேன்." பின்னர் நொண்டி வளர்ந்து தன் குரங்குக் கூட்டத்திற்குத் தலைவனானான்.

வேறொரு வானர ராஜாவைப் பற்றியும் ஸ்ரீபகவான் கூறியிருக்கிறார். முரண்டு பிடித்த இரு ஆண் குரங்குகளை அந்த ராஜா எல்லை கடத்தித் துரத்தி விட்டதாம். அதை ஏற்காத மற்ற குரங்குகள் கொதித்தெழவே, வானர ராஜா அவர்களைப் பிரிந்து காட்டினுள் தனியாகச் சென்று இரண்டு வார காலம் காட்டிலேயே தங்கிவிட்டதாம். அதன்பின் திரும்பிவந்த ராஜா,

தன்னைக் குறை கூறியவர்களையும் கலகக்காரர்களையும் தீவிரமாய் எதிர்த்து அடக்கித் தன் கூட்டத்தினரைப் பணியவைத்ததாம். கானகத்தில் இரண்டுவாரம் கடும் தவமிருந்து திடம் பெற்றதோ என்னவோ என்று நகைச் சுவை இழைத்துக் கூறினார் ஸ்ரீபகவான்!

குரங்கொன்று ஆசிரமத்தருகில் சாகும் தருவாயில் விழுந்து கிடப்பதாக ஒரு நாள் காலையில் தகவல் எட்டியது. ஸ்ரீபகவான் சென்றுபார்த்தபோது அது முன் சொன்ன அதே ராஜா குரங்கு என அடையாளம் கண்டார். அதை ஆசிரமத்திற்கு எடுத்துச் சென்றனர். ஸ்ரீபகவான் அதைத் தாங்கலாகத் தன் கால்மீது சாற்றிக் கொண்டார். அருகிலுள்ள மரத்தில் அந்த ராஜா முன்பு எல்லை கடத்திய இரு ஆண் குரங்குகளும் குந்தியிருந்து, நடப்பதையெல்லாம் கவனித்துக்கொண்டிருந்தன. கால் பளுவை மாற்ற பகவான் அசைந்தபோது, சாகவிருந்த குரங்கு அரையுணர்வு நிலையில் வெடுக்கென்று அவரது காலில் கடித்துவிட்டது. "இது மாதிரி வானர ராஜாக் கள் என்னைக் கடித்துக் கௌரவித்த நான்கு தழும்புகள் இன்றும் இருக்கின்றன" என்று ஒரு சமயம் ஸ்ரீபகவான் தன் கால்களைச் சுட்டிக்காட்டி ஹாஸ்யமாகச் சொல்லி யிருக்கிறார். சிறிதே நேரத்தில் அந்தக் குரங்கு ராஜா கடைசி வேதனை முனகல் எழுப்பி மாண்டுபோயிற்று. மரத்தின் மேலிருந்து கவனித்திருந்த இரண்டு குரங்கு களும் துக்கம் மேலிட்டுக் கிரீச்சிட்டுக் கதறி கிளைக்குக் கிளை மேலுங்கீழும் தாவிக்குதித்தனவாம். இறந்துபோன குரங்கு ராஜாவின் சடலம் சந்நியாசிக்குரிய இறுதிச் சடங்குகளுடன் புதைக்கப்பட்டது. அதாவது, பால் ஊற் றிப் பின்னர் நீராலும் குளிப்பாட்டி, விபூதி தூவி, புதுத் துணியால் கழுத்துவரை போர்த்தி, தூபம் காட்டி ஆசிர மத்துக்கு அருகிலேயே புதைத்தனர். சமாதி எழுப்பி நினைவுக் கல்லும் நாட்டப்பட்டது.

வானரத்தின் நன்றியுணர்வைக் குறித்தும் ஓர் விசித்திரச் சம்பவம் கூறப்படுகிறது. ஒரு சமயம் ஸ்ரீபகவான் தமது பக்த கோஷ்டியுடன் மலையைப் பிரதட்சிணம் செய்யப் புறப்பட்டார். பச்சையம்மன் ஆலயத்தருகில் வந்தபோது அவர்களுக்குப் பசியும் தாகமும் மேலிட்டன. அதே கணம், குரங்குள் பல பாதையோரம் இருந்த காட்டு அத்தி மரங்கள் மீதேறிக் கிளைகளை உலுக்கவே, பாதை நெடுக கனிந்த அத்திப் பழங்கள் சரமாரியாய்ச் சிதறி விழுந்தன. வானரங்களோ அவற்றைத் தின்னாமல் ஓடிவிட்டன. அதே சமயம் கிராமப் பெண்கள் குடிநீர்க் குடங்கள் சுமந்து அவ்விடம் வந்துசேர்ந்தனர்.

மற்ற பிராணிகளைக் காட்டிலும் ஸ்ரீபகவானின் விருப்பத்திற்கு முழுதும் பாத்திரமானது லட்சுமி என்ற பசுமாடுதான். 1926–ஆம் ஆண்டு தாய்ப்பசுவுடன் இளம் கன்றாக லட்சுமி ஆசிரமத்திற்குக் கொண்டு வரப்பட்டாள். குடியாத்தம் அருகிலுள்ள குமாரமங்கலத்தைச் சேர்ந்த அருணாசலப் பிள்ளை என்பவர் பசுவையும் கன்றையும் ஸ்ரீபகவானுக்குக் காணிக்கையாக வழங்கினார். அச்சமயம் ஆசிரமத்தில் பசுக்களை வைத்துப் போஷிக்கப் போதுமான இடவசதியின்மையால், ஸ்ரீ பகவான் அந்த நன்கொடையை ஏற்கத் தயங்கினார். அருணாசலப் பிள்ளையோ அவற்றைத் திரும்பப்பெற அறவே மறுத்துவிட்டார். ராமனாத தீட்சிதர் என்ற பக்தர் அவற்றின் பராமரிப்பை ஏற்க முன் வந்ததால் அவை ஆசிரமத்தில் இடம் பெற்றன.

மூன்று மாத காலம் அவற்றின் தேவைகளை தீட்சிதர் கவனித்துவந்தபின், அவற்றை டவுனில் உள்ள வேறொருவரிடம் ஒப்படைத்து விட்டார். ஒரு வருடகாலம் பசுவையும் கன்றையும் தன் பொருப்பில் வைத்திருந்தவர், அதன்பின் ஒரு நாள் ஸ்ரீபகவானை தரிசிக்கச்

சென்றபோது, அவற்றையும் தன்னுடன் ஒட்டி வந்திருந் தார். பசுங்கன்றுக்குப் பகவானைப் பார்த்ததுமே நிரம்பப் பிடித்து விட்டது போலும்! ஏனெனில், திரும்புகையில் ஆசிரமம் செல்லும் வழியை மனதில் பதித்து, மறுநாள் தன்னந் தனியே ஆசிரமத்திற்குத் துள்ளியோடி வந்து விட்டது! அன்றைய தினத்திலிருந்து கன்றுப்பசு நாள் தோறும் காலையில் ஆசிரமம் வந்து இருந்துவிட்டு, மாலைப் பொழுதில் டவுனுக்குத் திரும்புவது வழக்க மாகிவிட்டது. பிறகு தொடர்ந்து ஆசிரமத்திலேயே இருக்க இடமளிக்கப்பட்டது. குட்டிப் பசு வேறு எவரையும் சட்டை செய்யாமல் நேராக ஸ்ரீபகவான் இருக்குமிடத் திற்குச் சென்று விடும். அவரும் லட்சுமிக்காக வாழைப் பழங்களோ வேறு தின்பண்டங்களோ தயாராக வைத் திருப்பார். வெகு காலம் வரை பசு லட்சுமி தினந் தோறும் மதிய உணவு வேளையில் தரிசனக்கூடத்திற்கு வந்து நின்று, மகரிஷியுடன் உணவுக் கூடத்திற்குச் செல்லும். தினமும் குறித்த நேரத்தில் நிமிடம் தப்பாமல் வந்துசேரும் என்பதால், தரிசன கூடத்தில் ஸ்ரீபகவான் வேறு விஷயத்தில் கவனமாகயிருந்தாலும், லட்சுமி வந்ததை அறிந்து சுவர்க் கடிகாரத்தை நோக்குவார். சாப்பாட்டுக் கூடம் செல்ல சரியான நேரம்தான் எனத் தெரிந்து கொள்வார்.

லட்சுமி பல கன்றுகள் ஈன்றாள். அவற்றில் மூன்று, வெவ்வேறு ஆண்டுகளில் பகவானின் ஜயந்தி (ஜன்ம தினம்) அன்றே பிறவி எடுத்தன. ஆசிரமத்தில் தனி கோசாலை கட்டி முடித்தவுடன் அதன் திறப்பு விழா வன்று லட்சுமியே அதனுள் முதன்முதலில் காலடி எடுத்து வைத்து உள்ளே செல்ல வேண்டும் என்று முடிவாயிற்று. ஆனால் முகூர்த்த நேரம் நெருங்கிய சமயம் லட்சுமியைக் காணவில்லை. போய்ப் பார்த்தால் ஸ்ரீபகவானின் அருகில் மண்டியிட்டுப் படுத்திருந்தாள். ஸ்ரீபகவானும் கூடவே வந்தால்தான் அவள் எழுந்து

வருவாள் என்றாயிற்று. இவ்வாறு பகவான் பசுமடத்தில் முதலில் பிரவேசிக்க, லட்சுமி அவர் பின்னால் சாந்த மாய் நுழைந்தாள். பசு லட்சுமிக்குப் பகவானிடம் அசாதாரணப் பக்திப் பிரேமையுண்டு. அதேபோன்று அப்பசுவினிடம் அவர் காட்டிய கருணையும் வாத்சல் யமும் தனிச்சிறப்பு வாய்ந்தவை. பிந்தைய ஆண்டுகளில் அனேக பசுக்களும் காளைமாடுகளும் ஆசிரம கோசா லையில் இடம் பெற்றன. ஆயினும், லட்சுமி மீது அவர் வைத்த பாசமும், காட்டிய கருணையும் வேறெதற்கும் கிட்டவில்லை. லட்சுமியின் சந்ததிப் பசுக்கள் ஆசிரமத் தில் இன்றும் உள்ளன.

1948–ஆம் ஆண்டு ஜூன் பதினேழாம் தேதி லட்சுமி நோய்வாய்ப்பட்டாள். மறுநாள் காலையில் அவளது நிலை மோசமாகி மரண வாயிலில் இருந்தாள். பத்து மணிக்கு ஸ்ரீபகவான் அப்பசுவின் சமீபம் சென்று பார்த் தார். "அம்மா, நான் உன் அருகிலேயே இருக்க விரும்பு கிறாயா?" என்றார். அவள் பக்கத்தில் அமர்ந்து அவளது தொய்ந்த தலையைத் தன் மடிமீது சாய்த்துக் கொண் டார். அவளுடைய கண்களைக் கூர்ந்து நோக்கிய வண் ணம் தீட்சையளிப்பதுபோல் தன் கையை அப்பசுவின் தலைமீது வைத்து, பின்னர் இதயத்தில் அருட்கரம் நாட்டினார். தமது கன்னத்தை பசுவின் கன்னத்துடன் இருத்தி உடலை வருடினார். அப்பிராணியின் இதய தூய்மையையும், ஜன்ம வாசனைகள் நீங்கிய நிலையை யும் உணர்ந்தவராய், அவளிடம் விடைபெற்று, உண வருந்த சாப்பாடு கூடத்திற்குச் சென்று விட்டார். முடிவு வரை லட்சுமிக்குப் பிரக்ஞை தப்பவில்லை. கண்களில் அமைதி நிலவியது. பதினொன்றரை மணிக்கு உயிர் உடலைப் பிரிந்தது. ஆசிரமத்து வளாக வெளியில் முழு அந்திமக் கிரியைகளுடன் லட்சுமியின் உடல் புதைக்கப் பட்டது. அதற்கு அருகாமையில்தான் முன்பு ஒரு மான், காகம், நாய் ஆகியவை இறந்தபின் ஸ்ரீபகவானின் விருப்பப்

படி புதையுண்டு, தனித் தனி சமாதிகளும் கட்டப் பட்டன. பசு சமாதி மீது சதுரக் கற்பீடம் அமைத்து அதன்மேல் லட்சுமியின் உருவத்தையொத்த பசுவின் பிர திமை நிறுவப்பட்டது. அப்பசுவின் மறைவைக் குறிக்க ஸ்ரீபகவான் இயற்றிய வெண்பா[1] கல்லறை வாசகமாகப் பொறிக்கப்பட்டுள்ளது. லட்சுமி முக்தி பெற்ற நாள் என்பதாக அதனில் கூறியுள்ளார். 'முக்தியடைந்ததாக நீங்கள் கூறியுள்ளது சமாதி வைக்கப்பட்டாள் என்பதை சம்பிரதாய மொழியில் அமைத்தீர்களா அல்லது உண் மையாகவே லட்சுமி முக்தி அடைந்தாளா' என்று தேவ ராஜ முதலியார் வினவியதற்கு ஸ்ரீபகவான், 'முக்தியைத் தான் நேரடியாகக் குறிப்பிட்டேன்' என்று விளம்பினார்.

---

1. *சருவதா ரிப்பேர்கொள் சம்வச் சரத்து*
*வருமானி யைந்துசனா வாரம் – மறுவுமுற்*
*பக்கத் துவாதசிவி சாகம் பசுவாமி*
*லக்குமி முக்த நாளாம்.*

# 12. ஸ்ரீ ரமணாச்ரமம்

ஸ்ரீ பகவானோடு ஸ்கந்தாசிரமத்தில் இருந்துவந்த அடியார்களும் 1922 டிசம்பர் மாதம் மலையை விட்டிறங்கி, அடிவாரத்தில் அமைந்திருந்த அன்னையின் சமாதிக்கு அருகிலேயே அவருடன் தங்கிவிட்டபோது அவ்விடத்தே எழுப்பப்பட்ட ஒரே ஒரு கூரைக் கொட்டகையே ஆசிரமம் ஆயிற்று. தொடர்ந்துவந்த ஆண்டுகளில் ஆசிரமம் பெருகி, சீரிய வளர்ச்சியுற்றது. நன்கொடைகள் வந்தவண்ணமிருந்தன. ஆசிரம வளாகத்தில் பல்வேறு கட்டடங்கள் எழுப்பப்பட்டன – ஸ்ரீ பகவான் அமருவதற்கான கூடம், ஆசிரம அலுவலகம், புத்தகப் பிரிவு, பெரிய சாப்பாட்டுக்கூடம், சமையற்கட்டு, கோசாலை, தபால்நிலையம், மருந்தகம், ஆண் விருந்தினர் ஓரிருநாள் தங்கிப் போக ஓய்வுக்கூடம், பலநாள் தங்குவோர்க்கு வசதியாக ஓரிரு சிறு இல்லங்கள் ஆகியன. அவை யாவுமே ஒற்றைமாடிக் கட்டடங்கள். இந்திய பாணியில் வெறுமனே சுண்ணாம்படித்த சுவர்க் கட்டமைப்பு.[1]

ஆசிரமத்தை ஒட்டினாற்போல் மேற்கே சதுரவடிவில் ஒரு பெரிய குளம் நாற்புறமும் படிக்கட்டுகளோடு

---

1. 1942இல் இரண்டே குடியிருப்புப் பகுதிகள் கொண்டு எழுந்த மூர்வி விருந்தினர் விடுதி வளாகத்தில் இன்று (1996–ல்) 33 விடுதிகள் உள்ளன. ஆசிரமத்தையடுத்த குரங்குத் தோட்டத்தில் ஒற்றை அறைகளையும் சேர்த்து 37 தங்குமிடங்கள்; ஆகமொத்தம் 73 விடுதிகள். ஸ்ரீ ரமண மகரிஷியின் சமாதியை மையமாக் கொண்டு கிரானைட் கல் விமானமும் அதையொட்டி மிகப் பரந்த தியானக் கூடமும் 1970–இல் கட்டிமுடிக்கப்பட்டன. ரமண நூற்றாண்டு விழாவினையொட்டி உருவாக்கப்பட்ட மகரிஷியின் ஆளுர வெண்கலச்சிலை, மணி மண்டபத்தில் 12.5.1980 அன்று அந்நாள் பாரதப் பிரதமர் இந்திரா காந்தி அவர்களால் திறந்து வைக்கப்பட்டது. ஆசிரம நூலகம், மூர்வி வளாகத்தில் உள்ள தனிக் கட்டடத்தின் இருதளங்களில் இயங்கிவருகிறது.

அமைந்துள்ளது. ஆசிரம வளாகத்திற்குத் தென்புறம் திருவண்ணாமலையிலிருந்து பங்களூர் பஸ் பாதை கிழக்கு – மேற்காகச் செல்கிறது. அப்பால் மேற்கே அந்த ரோடு இரு கிளைகளாகப் பிரிந்து, ஒரு பாதை மலையைச் சுற்றி மாலைபோல் அமைந்துள்ளது. பஸ் பாதையில் வடக்கு நோக்கி நின்றால் ஓர் மதகுப் பாலம் காணலாம். அதன்மீது எழும்பியுள்ள முகப்பு வளைவில் "ஸ்ரீரம ணாச்ரமம்" என்று பொன்னிற எழுத்துக்கள் பொரித்த பெயர்ப் பலகை உயர்ந்து நிற்கிறது. உள்ளடங்கி அமைந் திருக்கும் ஆசிரமக் கட்டடத்தை முன்வரிசைத் தென்னை மரங்கள் மறைத்து நிற்கின்றன. அவற்றிற்கப்பால் கண் கொளாப் பின்னணியாக, கம்பீரமாக எழும்பி நிற் கின்றது அருணாசலக் குன்று.

ஆசிரமக் கட்டடங்கள் மட்டுமே அப்பகுதியில் தோன் றின என்றில்லை. வெளி வீதிக்கு மறுபுறம் மூர்வி மகாராஜா மானியமாக வழங்கிய மூர்வி விருந்தினர் வளாகம் அமைந்துள்ளது. ஆசிரமத்திற்குக் கிழக்கே, குடும்பஸ்தர்களான பல பக்தர்கள் கட்டிக்கொண்ட சிறு பங்களாக்களும் குடில்களும் நிறம்பிய குடியமைப்பு தோன்றியது. மேற்கே, குளத்திற்கும் மலைக்கும் இடையே உளள பகுதியில் பல சாதுக்கள் மரத்தடிக் குடிசை களிலும், குகைகளிலும் இருக்கை கொண்டு, பலாக் கொத்து என்ற குடியிருப்பைத் தோற்றுவித்தனர். ஆசிரம வளாகத்திலும் பலர் தங்கியுள்ளனர் – ஆசிரம அலு வலகம், நந்தவனம், புத்தக விற்பனை நிலையம், சமையற் கூடம் போன்ற இலாக்காக்களில் கைங்கர்யம் புரிந்த வண்ணம், ஸ்ரீபகவானின் அருகில் இருந்துவருவதே பெரும் பாக்கியம், அவரைக் கண்ணாரக் காணலாம், எப்போ தாகிலும் தன்னைக் கண்ணுற்று ஒரிரு வார்த்தை அவர் பேசக்கூடும் என்ற ஆர்வத்தில் அங்கேயே தங்கிவிட்ட வர்கள் அவர்கள்; ஆன்ம விசாரத்தைக் காட்டிலும் ஆசிரமத்து அன்றாடப் பணிகளை ஏற்றுத் தன்னல

மற்ற சேவையில் நாட்டமுடன் தம்மை அர்ப்பணித்துக் கொண்டவர்கள்.

ஆசிரமக் கட்டடங்கள், விரிவுத் திட்டங்கள், அன்றாட நிர்வாகம், வரவு—செலவுக் கணக்குகள் யாவற்றையும் கவனித்துவர ஆசிரம நிர்வாக அமைப்பு தேவைப் பட்டது. ஸ்ரீ பகவானோ அம்மாதிரியான லௌகீக விஷயங்களில் தலையிட மாட்டார். ஆகவே, அவரு டைய இளைய சகோதரரான நிரஞ்சனாநந்தஸ்வாமி ஆசிரம சர்வாதிகாரியாகப் பணியாற்றலானார்.[1] ஆசிரம நடைமுறை விதிகளும் வரையறைகளும் விரிவாயின. அவற்றில் சிலவன பக்தர்களுக்குக் கடுப்பூட்டுவதாக அமைந்தன. ஆனால், யாரேனும் மறுப்பு எழுப்பினால் அல்லது எதிர்த்து வெகுண்டால் ஸ்ரீபகவான் அவர் களைத் தடுத்து நிறுத்துவார். சட்டதிட்டங்களுக்குக் கட்டுப்பட்டு, அதிகாரத்தை அனுசரித்துப் போகிறவர் அல்லவா அவர்? ஒரு குறிப்பிட்ட பிரச்சினையைத் தீர்ப்பது பற்றி அவர் ஒருக்கால் அவ்வாறு விட்டுக் கொடுப்பவர் என்றாகாது எனினும், பொதுவாக யாவ ரும் விதி முறைகளுக்கு உட்பட்டே இயங்க வேண்டும் என்கிற நியமத்தைக் கடைபிடித்தார்.

உலகை ஒதுக்கித் தனிமையில் பின்பற்றுவதற்கான பாதையை அவர் போதிக்கவில்லை. ஆன்மீகம் மங்கி இருண்ட கலியுகத்திற்கு உகந்த ஆன்மீக ஒளி வழியை யே அவர் வகுத்தளித்தார். இசைவற்ற சூழ்நிலையிலும் கூட ஆன்ம உணர்வை மனத்தில் இருத்துமாறு அவர் தம் வழிபாட்டாளர்களை வற்புறுத்தியது போலவே, ஆசிரம நிர்வாகம் வகுத்த விதிமுறைகளுக்குத் தாமும்

1. 1917—ஆம் ஆண்டு ஆசிரமத்திற்கு வந்து சேர்ந்த இவர் (எட்டாம் அத்தியாயத்தில் காண்க), 1930—இல் சர்வாதிகாரியாக (நிர்வாக மேலாளராக)ப் பணிமேற்கொண்டு 1953—இல் தமது அறுபத்தெட்டாவது வயதில் காலமானதுவரை தொடர்ந்து நிர் வகித்து வந்தார்.

உட்பட்டு மற்றவர்களுக்கும் ஓர் எடுத்துக்காட்டாக விளங்கினார். மேலும், ஆன்மீக நாட்டத்தோடு தம்மைத் தேடி வருபவர்கள் அதற்குப் புறம்பான நிர்வாகத் தகறாறுகளில் தலையிடுவதை அவர் ஒப்பவில்லை. ''விமோசனத்திற்கு வழி தேடி ஆசிரமத்துள் நுழையும் நபர்கள் பின்னர் ஆசிரம அரசியலில் சிக்குண்டு, வந்த காரியத்தை மறந்துவிடுவது ஏனோ?'' என்பார். அம்மாதிரியான பிரச்சினைகளில் அவர்களுடைய கவனம் செல்கிறது என்றால் அதற்குத் திருவண்ணாமலையைத் தேடி வருவானேன் என்பதே அவரது கேள்வி!

ஒரு சில தருணங்களில் அதிருப்தியும் எதிர்ப்பும் வெடித்து வெளிப்பட்டதும் உண்டு. அவை யாவுமே நியாயமற்றவை என்று ஒதுக்கிவிட முடியாது என்றாலும், அவ்வாறான கண்டனங்களுக்கு ஸ்ரீபகவான் இடம் கொடுக்கவில்லை. ஒரு சமயம் பலதுறை வல்லுநர்களும் பெரு வணிகர்களும் கொண்ட பக்தர் குழாம் ஒன்று தனி பஸ் அமர்த்திக் கொண்டு சென்னையிலிருந்து வந்துசேர்ந்தது. அன்றைய ஆசிரம நிர்வாகத்தை அடியோடு மாற்றிப் புது அமைப்பு நிருவவேண்டிய உடனடி அவசியத்தை ஸ்ரீபகவானிடம் எடுத்துரைப்பதற்காகவே அவர்கள் விழைந்து வந்தனர். கூடத்திற்குக் கூட்டாகச் சென்று ஸ்ரீபகவானின் எதிரில் உட்கார்ந்து கொண்டனர். ஸ்ரீபகவானோ கண்டிப்பும் உதாசீனமும் நிறைந்த இறுகிய முகத்துடன் மௌனமாய் வீற்றிருந்தார். எதிரில் இருந்தவர்கள் அவரது மௌன முன்னிலையில் சஞ்சலமுற்று, ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டு மனம் குழம்பினர். அவர்களில் யாருக்குமே பேச்செடுக்க நா எழவில்லை. முடிவில், கூடத்தை விட்டகன்று, வாய்பேசாது சென்னை திரும்பிச் சென்று விட்டனர். அவர்கள் சென்ற பிறகே ஸ்ரீபகவானிடம் அவர்கள் வந்த நோக்கம் தெரிவிக்கப்பட்டது. அதற்கு அவர், ''வந்த காரணம் விசித்திரமாய் இருக்கிறதே? வந்தது

அவர்களை சீர்படுத்திக் கொள்ளவா, அல்லது ஆசிர மத்தை சீர்படுத்தவா ?" என்றார்.

அதே சமயம் அவரிடம் நாம் இன்னொரு பாடமும் கற்கத் தகுந்தது. அதாவது, ஒரு விதிமுறை தொல்லை யளிப்பதாக மட்டுமின்றி அடிப்படையில் நியாயமற்ற தாகவும் இருந்தால் அதற்கு அவர் ஒருபோதும் இணங்க மாட்டார். முன்பு விருபாட்ச குகையில் அவரைக் காண வருவோரிடம் கட்டணம் வசூலித்ததை விரும்பாமல் வெளியேறினார் அல்லவா ? ஆயினும் நேரடியாக எதிர்ப்பு தெரிவிப்பது அவரது இயல்பு அன்று. தன் நடத்தை மூலமாகவே அநீதியை அடையாளம் காட்டுவார். முன் பொரு கட்டத்தில் ஆசிரமத்து சாப்பாட்டுக் கூடத்தில் சிற்றுண்டி அளிக்கப்பட்டு வந்த போது எல்லோருக் குமே காப்பிப் பானம் சரியாக வழங்க முடியாமற் போயிற்று. கூடத்துக் கோடியில் அமர்ந்து உண்ணும் முக்கியஸ்தர் அல்லாத பலருக்குக் காப்பி எட்டாமற் போய், வெறும் குடிநீர் மட்டுமே வழங்கப்பட்ட நிலை. எதையும் எப்போதும் கூர்ந்துணரும் ஸ்ரீபகவான், சில ருக்குக் காப்பி கிடைக்காமற் போவதைக் கவனித்து விட்டார். "எனக்கும் டம்ளரில் ஜலமே ஊற்றுங்கள்" என்று பணித்தார். அப்போதிலிருந்து அவர் காப்பியை மறுத்துக் குடிநீரே பருகலானார்.

வயது முதிர்ந்த பிற்காலத்தில் வாதப் பீடிப்பால் அவரது முழங்கால் மடக்கமுடியாமல் வீக்கம் கண்டி ருந்த சமயம் ஐரோப்பியர் பலர் கோஷ்டியாக வந்தி ருந்தனர். அவர்களில் ஒரு மாது, தரையில் சம்மணமிட்டு உட்காரும் பழக்கமின்மையால், சுவற்றில் சாய்ந்து காலை நீட்டிக் கொண்டார். பழக்கமற்றவர்களுக்குக் காலை மடித்து உட்காருவது எவ்வளவு சிரமம் என்பதை உண ராத ஆசிரமப் பணியாள் ஒருவன், அவ்வாறு உட்கார லாகாது என்று அந்த அம்மணியைக் கேட்டுக்

கொண்டான். பாவம் அப்பெண்மணி மனம் கலங்கி முகம் சிவந்து, கால்களை மடக்கிக் கொண்டாள். மஞ்சத்தில் சாய்ந்து படுத்திருந்த ஸ்ரீபகவான் தாமும் உடனே நிமிர்ந்தமர்ந்து காலை சம்மணமிட்டுக் கொண்டார். முழங்கால் வலியைப் பொருட்படுத்தாமல் அவர் அவ்வாறே தொடர்ந்து அமர்ந்திருப்பதைக் கண்ட பக்தர்கள், அவர் அவ்வாறு உட்கார வேண்டாம் என்று விண்ணப்பித்தனர். அதற்கு அவர், "இங்கே இவ்வாறு உட்காருவதுதான் சட்டம் என்றால் மற்ற எல்லோரையும் போல நானும் அச்சட்டத்திற்கு உட்பட வேண்டும். ஒருத்தர் கால்நீட்டி உட்காருவது அவமரியாதை என்றால் நான் மஞ்சத்தில் கால்நீட்டி சாய்ந்திருக்கையில் இந்த ஹாலில் உள்ள ஒவ்வொருவரையும் அவமானப்படுத்துவதாகும்" என்றார். ஐரோப்பிய மாதிடம் கூறிய பணியாள் அப்போது கூடத்தில் இல்லை. விஷயத்தைப் புரிந்துகொண்ட பக்தர்கள் சிலர் ஓடிப்போய் அந்தப் பணியாளை கையோடு கூட்டிவந்து, அந்தப் பெண்மணியை சௌகரியம் போல உட்காரும்படி கேட்க வைத்தனர். அதன் பிறகும் ஸ்ரீபகவானை ஓய்வாகச் சாய்ந்திருக்கச்செய்வது பெரும்பாடாகி விட்டது.

குறைகூறும் விமரிசனங்கள் ஆரம்ப ஆண்டுகளில் வரவேற்கப்பட்டன. ஆசிரமத்திற்கு வரும் மேலைநாட்டு அன்பர்கள் பலர், கிறித்தவ மதப் பிரசாரகர்களின் கண்டனத்திற்கு ஆளாயினர். பின்னவருள் ஓர் உற்சாகி நேராக தரிசன கூடத்தினுள் நுழைந்து, ஸ்ரீபகவானை நோக்கி தனது மத மேன்மையை விவரித்து வாய்ப் பந்தல் விரித்தார். ஸ்ரீபகவானோ பதிலொன்றும் கூறவில்லை. ஆனால் கூடத்தின் கோடியிலிருந்து மேஜர் சாட்விக் எழுந்துநின்று, அந்த மதபோதகர் கூறிய கிறித்துவ மதக் கோட்பாட்டு விளக்கங்கள் முற்றிலும் சரியல்ல என்று சவால் விடுத்து முழங்கினார். அதை எதிர்பாராது வெலவெலத்த மதபோதகர் வாயடைத்துப்

போனார். பிந்தைய ஆண்டுகளிலும்கூட கத்தோலிக்கப் பாதிரியார்கள் தங்கள் ஈடுபாட்டையும் மரியாதையையும் தெரிவித்துப்போக வந்துகொண்டிருந்தனர். ஆனாலும் வந்த சாக்கில் சில சந்தேகங்களையும் எழுப்பிச் செல்வர். திறந்த மனத்துடன் வந்தார்களா அல்லது மதப் பிரசாரமும், வெளியே தவறான கருத்துக்களைப் பரப்புவதுமே அவர்களது உள்நோக்கமா என்ற சந்தேகம் எழத்தான் செய்தது.

ஒரு சமயம் முஸ்லிம் ஒருவர் வாதாட வந்தார். ஆயினும், வந்தவர் நேர்மை எண்ணம் கொண்டவராக இருந்திருக்க வேண்டும். ஏனெனில், அவரது கேள்விகளுக்கு ஸ்ரீபகவான் பொறுமையுடன் விடையளித்தார்.

"ஆண்டவனுக்கு உருவம் உண்டா ?" என்று வினவினார் அந்த முஸ்லிம்.

"உருவம் உண்டு என்று சொல்வது யார் ?" என்று திருப்பினார் பகவான்.

கேட்டவர் விடவில்லை. "கடவுள் வடிவமற்றவர் என்றால் கற்சிலையில் வடித்து வழிபடுவது தவறுதானே ?" என்று தொடர்ந்தார்.

யாரும் கடவுளுக்கு வடிவம் உண்டென்று சொன்னதில்லை என்ற அர்த்தத்தில்தான் மகரிஷியின் முதல் பதில் அமைந்தது என்று முஸ்லிம் அன்பர் நினைத்துவிட்டார். ஆனால் ஸ்ரீபகவான் சொன்னது முழுதும் சரிதானே ? அதன் தாத்பரியத்தை விளக்கும் வகையில், "கடவுளை விட்டுவிடுவோம். முதலில் நீங்கள் சொல்லுங்கள், உங்களுக்கு ஒரு வடிவம் இருக்கிறதா என்று ?" எனக் கேட்டார் ஸ்ரீபகவான்.

"சந்தேகமென்ன ? எனக்கு உருவம் இருக்கிறது. நீங்கள் என் உருவத்தைப் பார்க்கிறீர்கள். ஆனால் உருவமுள்ள நான் கடவுள் இல்லையே ?"

"அப்படியென்றால், நன்றாக உடையணிந்த இந்த எலும்பும் சதையும் ரத்தபிண்டமுமான பூத உடல்தான் நீங்களா?"

"ஆமாம். அது அப்படித்தானே? இந்த உடல் வடிவத்திலேதான் நான் என் இருப்பை உணர்கிறேன்."

"ஆகவே, இந்த உடல்தான் 'நீங்கள்' என்கிறீர்கள். ஏனென்றால் உங்கள் உடலை நீங்கள் உணருகிறீர்கள். ஆனாலும், நிச்சயம் நீங்கள் இந்த உடல்தானா? ஆழ்ந்த உறக்கத்தின் போது உடல் இருப்பதை உணருவதில்லையே? அப்போது இருப்பது நீங்களாக இருக்க முடியுமா?"

"ஆமாம். நானேதான். நன்றாகத் தூங்கும்போதும் நான் இதே உடல் வடிவிலேதான் இருக்கிறேன். ஏனெனில், தூங்கப் போவதற்கு முன்பாகவும் உடல் இருப்பதை உணருகிறேன். விழித்து எழுந்ததும் தூங்குவதற்கு முன் எப்படி இருந்தேனோ அப்படியே இருக்கிறேன் என்று கண்கூடாகத் தெரிகிறது."

"அப்புறம்... சாவு நேரும்போது?"

"கேள்வி தொடங்கியவர் சட்டென பேச்சை நிறுத்தி, ஒரு நிமிடம் யோசித்துவிட்டு," அது வந்து... நான் இறந்து போய்விட்டதாக ஆகிறது. உடலைப் புதைத்து விடுவார்கள்."

"ஆனால் உடல்தான் நீங்கள் என்று சொன்னீர்களே? உடலைப் புதைப்பதற்காகத் தூக்கிச் செல்லும் போது அந்த உடல் ஏன் எதிர்த்து மறுத்து எழுந்து உட்கார்ந்து, 'இல்லை. இல்லை. என்னைக் கொண்டு போகாதீர்கள். இந்த உடல் எனது உடமை. நான் உடுத்தியுள்ள உடைகள் என்னுடையவை. என் குடும்பம், குழந்தைகள் எல்லாமே என்னுடையது. நான் யாவற்

றுடனும் இருக்கவேண்டும்' என்றெல்லாம் கூச்சலிடு வதில்லை ?"

வெறும் உடலோடு தன்னை அடையாளம் கண்டது தவறு என்பதை வந்த நபர் ஒப்புக்கொண்டார். 'இந்த உடலில் குடியிருக்கும் உயிர் நான். உடல் நானல்ல' எனக் கூறினார்.

அதன்பின்னர் ஸ்ரீபகவான் அவருக்கு விளக்கினார்: "சற்று நேரம் வரை இந்த உடல் தான் நீங்கள், உங்க ளுக்கு வடிவம் இருக்கிறது என்று தீவிரமாக நம்பி னீர்கள். அந்த அடிப்படை அஞ்ஞானமே எல்லாக் குழப்பங்களுக்கும் மூல காரணம். அந்த அறியாமையை உதறித்தள்ளும் வரை, நீங்கள் உங்களது வடிவற்ற தன்மையை அறிந்து கொள்ளும் வரை, கடவுளைப் பற்றிய எந்த சர்ச்சையும், கடவுளுக்கு வடிவம் உண்டா இல்லையா, வடிவமற்ற ஆண்டவனை விக்கிரக ரூபத் தில் ஆராதிப்பது சரியா என்பன போன்றவை வெறும் விதண்டாவாதமே. ஒருவன் வடிவமற்ற ஆன்மனைக் காணும் வரை வடிவற்ற ஆண்டவனை மெய்யாக வழிபட மாட்டாது."

சில சமயங்களில் அவர் அளிக்கும் விடைகள் ரத் தினச் சுருக்கமாய், மறைபுதிராய் இருக்கும். வேறு சமயம் விளக்கமாய், முழுமையாய் அமையும். ஆனால் எப்போ தும் கேள்வி எழுப்புவோரின் நோக்கத்திற்குத் தக்க வாறு இருக்கும். எந்த பதிலும் அற்புதமாய்ப் பொருந்தும். ஒரு நிர்வாணப் பக்கிரி, ஆசிரம வளாகத்தில் ஒரு வாரகாலம் தங்கினார். வலது கையை நிரந்தரமாய் உயரத் தூக்கியபடியே நாள் முழுதும் உட்கார்ந்து கிடந்தார். தரிசன கூடத்திற்கு வராமல் வெளியிலிருந்தபடியே ஒரு கேள்வியை மட்டும் உள்ளே அனுப்பி வைத்தார். 'என் எதிர்காலம் எப்படியிருக்கும் ?' என்பதே அக்கேள்வி.

"இப்போது எப்படி இருக்கிறதோ அப்படியேதான் இருக்கும் என்று அவரிடம் போய்ச் சொல்லுங்கள்" என்றார் ஸ்ரீபகவான். வருங்காலத்தை அறியும் ஆவலைக் கண்டனம் செய்வதாக மட்டுமே அப்பதில் அமையவில்லை. அந்தப் பக்கிரியின் இப்போதைய நாணயமான, அல்லது நாணயமற்ற, செயற்பாடுகளே, அவரது எதிர்காலத்தையும் நிர்ணயிக்கும் என்பதாகவும் அதே விடைமூலம் உணர்த்திவிட்டார்.

தமது பாண்டித்தியத்தைப் பறைசாற்றிக்கொள்ள ஒருவர் வந்து சேர்ந்தார். வெவ்வேறு ஞானாசிரியர்கள் வெவ்வேறான மார்க்கங்களை வகுத்துரைத்துள்ளதை ஆர்ப்பாட்டமாய்க் கூறி, மேலை நாட்டுத் தத்துவ அறிஞர்களின் வாசகங்களிலிருந்தும் சரமாரியாய் மேற்கோள் விடுத்தார். "ஒருவர் ஒன்று சொல்கிறார். மற்றொருவர் வேறொன்று சொல்கிறார். நீங்கள் வேறேதோ சொல்கிறீர்கள். நீங்களெல்லாம் கூறுவதில் எது சரி? நான் எவ்வழி போவது?" என முடித்தார்.

ஸ்ரீபகவான் மௌனமாக இருந்தார். வந்தவரோ திரும்பத் திரும்ப நச்சரித்தார்: "தயைபுரிந்து கூறுங்களேன், நான் எந்த வழி போவதென்று?"

தரிசன கூடத்தைவிட்டு எழுந்து அகலும் தருணம் ஸ்ரீபகவான் சுருக்கென்று சொன்னார்: "வந்த வழியே போம்!"

கிடைத்த பதிலில் பயன் ஏதுமில்லையே என்று கூடியிருந்த பக்தர்களிடம் பண்டிதர் முறையிட்டார். அந்த பதிலில் பொதிந்துள்ள ஆழ்ந்த உண்மையை சிலர் அவருக்கு விளக்கினார். 'ஒரே வழி மட்டுமே உண்டு. ஆதார மூலத்திற்கே திரும்புவதுதான் அந்த வழி. எங்கிருந்து கிளம்புகிறோமோ அங்கேயே திரும்பிப் போய் விடுவது ஒன்றே நேர்வழி' என்பதே ஸ்ரீபகவான் சொல்லிச் சென்ற வாக்கியத்தின் உட்கருத்து என்றனர். 'வந்த

வழியைப் பார்த்துக் கொண்டு போய்யா!' என்று முகத்தி லடித்தாற் போன்ற லௌகிக அர்த்தமும் கூட அந்த நபருக்குத் தக்க விடைதானே!

சுந்தரேச அய்யர் என்ற பக்தரைப்பற்றி முன்பே குறிப்பிட்டுள்ளோம். தன்னை வேறொரு ஊருக்கு வேலை மாற்றம் செய்ய உத்திரவாகப் போவதாக அறிந்த அவர் துக்கம் மேலிட ஸ்ரீபகவானிடம் முறையிட்டார்: "கடந்த நாற்பது வருஷ காலமாக பகவானருகில் இருந்து வருகி றேன். இப்போது என்னை இவ்வூரிலிருந்து மாற்றிவிடப் போகிறார்கள். பகவானை விட்டுப் பிரிந்து நான் என்ன செய்வேன் ?" என்று புலம்பினார்.

"எவ்வளவு காலம் பகவானுடன் இருந்ததாகச் சொன்னீர் ?" என வினவினார் ஸ்ரீபகவான்.

"நாற்பது வருஷம்."

பக்தர்கள் பக்கம் திரும்பிய ஸ்ரீபகவான், "இங்கே ஒருத்தர் நாற்பது வருஷங்களாக என் போதனைகளைக் கேட்டுக் கொண்டிருக்கிறார். இப்போது பகவானை விட்டு எங்கோ போவதாக விசனப்படுகிறார்" என்றார் புன்சிரிப்புடன். தாம் எங்கும் நிறைந்தவர் என்பதை அவ்வாறு உணர்த்தினார். எது எப்படியோ, சுந்தரேச அய்யரின் வேலை மாற்றம் ரத்தாகிவிட்டது.

ஆண்டாண்டுகளாக அச்சிறிய கூடம் பக்தர்களின் மையமாகவும், நேரில் வந்து தரிசிக்க இயலாத உல கெங்குமுள்ள ஆர்வலர்களின் ஒளி முகப்பாகவும் விளங்கி வந்தது. மேலோட்டமாகப் பார்ப்பவர்களுக்கு அவ்விடத்தே ஏதும் நிகழ்வதாகத் தெரியாது. ஆனால் நிகழ்ந்து வந்தவை உண்மையில் பேராற்றல் வாய்ந்தவை.

ஆண்டுகள் உருண்டோடின. ஆனால் ரமணாச் சிரமத்து அன்றாட நடைமுறைகளில் மாற்றம் அதிகம் இல்லை. ஸ்ரீபகவானின் உடல்நிலை படிப்படியாக

க்ஷீணித்து வருகையில் ஆசிரமத்துக் காரியக்கிரமங்கள் கூடிவந்தன. தடைவரம்புகள் எழுந்தன. ஆயினும், முதுமையால் உடல் நலிவுற்ற நாட்களிலும் கூட அவரை அணுகுவதற்கென தனி நேரம் ஏதும் ஒதுக்கப்படவில்லை. இரவு பகல் எந்நேரமும் யார் வேண்டுமாயினும் அவரிடம் செல்ல முடியும். நித்திரை செய்யும் போது கூட, கூடத்துக் கதவைச் சாற்றி வைப்பதை அவர் அனுமதிக்கவில்லை. அவரைக் காண வரும் எவரும் மூடிய கதவைப் பார்த்துத் திரும்பி விடக்கூடாது என்ற எண்ணம் அவருக்கு. அடிக்கடி பக்தர் குழுக்களோடு இரவு வெகுநேரம் பேசிக் கொண்டிருப்பார். பக்தர்களில் சிலர், சுந்தரேச அய்யரைப் போன்ற குடும்பிகள், மறுநாள் காலை அலுவலக வேலைக்குப் போகவேண்டியவர்கள் ஸ்ரீபகவானுடன் இரவு நீண்ட நேரம் கண் விழித்திருந்தாலும், தூக்கமின்மையால் மறுநாள் சோர்வு அடைவதில்லை என்பதை உணர்ந்தனர்.

அன்றாட ஆசிரம வாழ்வு கிரமமாக, நேரம் தவறாமல் நடைபெற்று வந்தது. அவ்வாறு குறித்த நேரத்தில் எதையும் முறைப்படி நிறைவேற்றுவதை ஸ்ரீ பகவான் தமது வாழ்வின் அம்சமாகக் கடைபிடித்து வந்தார். ஆசிரமத்தைச் சார்ந்த அனைத்துமே துப்புரவாகவும் திருத்தமாகவும் வைத்தது வைத்தபடி கன கச்சிதமாக இருக்கும்.

முன்னொரு கால கட்டத்தில் அவர் தினந்தோறும் காலை மூன்று அல்லது நான்கு மணிக்கே எழுந்து ஒரிரு மணிநேரம் கறிகாய்த் தோல் சீவி நறுக்குவதிலும், தையல் இலை தயாரிப்பதிலும் (ஆசிரமத்தில் வாழைத் தோட்டம் வைத்து வாழையிலை கிடைப்பதற்கு முன்னால்) செலவிடுவார். இவற்றிலும், மற்ற காரியங்களிலும் பல பக்தர்கள் அவரைச் சூழ்ந்து உதவி புரிவார்கள். அவரது அணுக்கமே ஆனந்தம் அன்றோ! சிலசமயம் அவரும்

சமையலில் ஒத்தாசை செய்வார். சீவிய கறிகாய்த் தோல் களைத் தூர எறிந்துவிடாமல் ஆடு மாடுகளுக்குப் போடும்படி பணிப்பார். எதையும் வீணாக்கு வதை அவர் விரும்பமாட்டார். அவரது ஆணையையும் மீறி கறிகாய்த் தோல்கள் தூர எறிந்துள்ளதை ஒருநாள் கண்ணுற்றார். அன்றைய தினத்திலிருந்து சமையற்கட்டுக் காரியங்களில் தாம் கலந்து கொள்வதை நிறுத்திக் கொண் டார்.

1926–ஆம் ஆண்டிற்கு முன்னதாகவே அவர் அவ் வப்போது கிரிப்பிரதட்சிணம் செல்வதை நிறுத்தி விட் டார். காணவரும் மக்கள்திரள் கட்டுக்கடங்காமல் அதிகரித்த வண்ணமிருந்தது. அவர் ஆசிரமத்தில் இல்லாத போது எவரும் அங்கு வரவிரும்பவில்லை. பலர் அவ ரோடு கூடவே பிரதட்சிணத்திற்குப் புறப்பட ஆயத்த மாயினர். மேலும், அவரை தரிசிக்கும் பொருட்டு வருகை புரிவோர் பலர் அவர் கிரிப்பிரதட்சிணம் சென்று விட்டார் என்று அறிந்ததும் ஏமாற்றத்துடன் திரும்பிப் போய்விடுவர். தரிசனம் அளிப்பதே தமது வாழ்க்கைக் கடன் என்றும், வருவோர் அனைவரின் பொருட்டே தாம் இருக்குமிடத்தை விட்டு அகலாமல் இருந்துவிட விரும்புவதாகவும் ஒரு சில தடவை குறிப்பாய்த் தெரி வித்துள்ளார். மலைமீதுள்ள ஸ்கந்தாசிரமத்திற்கு மக்கள் வந்து போவது சிரமம் என்பதும் தாம் மலையடியில் தங்கிவிட்டதற்கு ஓர் காரணமாயிற்று என்றும் கூறி யுள்ளார். மலைப் பிரதட்சிணத்தைக் கைவிட்டது மன்றி, பின்னர் எக்காரணத்தைக் கொண்டும் ஆசிர மத்தை விட்டு வேறெங்கும் சென்றதில்லை. காலையிலும் மாலையிலும் சிறிது தூரம் உலாவச் சென்று வருவார்; அவ்வளவே தான். அடுப்பங்கரைக் காரியங்களில் சேர்ந்து கொள்வதைத் தவிர்த்ததும் இதே காரணத்தினால் இருக் கக் கூடும். ஏனெனில், ஒரு சிலரே அவரோடு கூட சமையல் வேலையில் ஈடுபட இயலும். மற்றவர்கள்

கூடத்தில் காத்துக் கிடக்க வேண்டுமே? பாரதத்தின் புண்ணியத் தலங்களுக்கு யாத்திரை சென்று வரலாமே என்று பலர் வற்புறுத்தியபோது அவர் அறவே மறுத்து விட்டார். தேடிவரும் அன்பர்கள் தம்மை ஆசிரமத்தில் காண முடியாமற் போகுமே என்பதைத் தமது மறுத் தலுக்கு ஓர் முகாந்திரமாகக் காட்டினார். நோய்வாய்ப் பட்டுக் கிடந்த கடைசி காலத்திலும் இறுதிவரை, கூட வருவோர் அனைவரும் தடையின்றி தமது தரிசனம் பெற அனுமதிக்கப்பட வேண்டும் என்பதில் பிடிவாதமாக இருந்தார்.

அவர் வாழ்ந்திருந்த ஆண்டுகளில் பக்தர்களுக்குக் கிட்டிய அனுபவங்களைப் பற்றியும், அவர்கள் பெற்ற விடைகள் மற்றும் விளக்கங்கள் பற்றியும் பக்கம் பக்க மாக எழுதிக் கொண்டே போகலாம். ஆயினும், அத்த கைய விரிவான விவரணை தொகுத்தளிப்பது இப்புத்த கத்தின் நோக்கம் அல்ல. ஸ்ரீ பகவானின் வாழ்க்கை வரலாற்றையும் போதனையையும் பொதுவாக உள்ள டக்கிய நூலாம் இது.

# 13. ஸ்ரீபகவானின் தினசரி வாழ்வு
## – ஓர் நேர்முக வர்ணனை

அற்புதங்கள் அல்லது உருமாற்றங்கள் நிகழ்விக்கும் தெய்விக புருஷனை மனக்கண்முன் நிறுத்தி விவரிப் பதைக் காட்டிலும் அத்தகைய மகானின் அன்றாட வாழ்வின் மகத்துவத்தை எடுத்துக் கூறுவது கடினம். இருப்பினும், பகவான் ஸ்ரீ ரமண மகரிஷியின் கடைசி சில ஆண்டுகால தினசரி வாழ்க்கை முறையை ஓரளவு விளக்குதல் நன்று. இங்கு எடுத்துரைக்கப்படும் நிகழ் வுகள், முந்தைய பல்வேறு நிகழ்வுகளைவிட விசேஷ மாகக் குறிப்பிடத் தக்கவை அல்ல என்றும் கூற விரும்பு கிறேன். இந்த அத்தியாயத்தில் சில பக்தர்களின் பெய ரைக் குறிப்பிட்டுள்ளேன். ஆனால், குறிப்பிடாமற் போன அனேக ரமண பக்தர்களைவிட இவர்கள் தனிச்சிறப்பு வாய்ந்தவர்கள் எனவும் கொள்ளலாகாது.

1947ஆம் ஆண்டு பிறந்து விட்டது. திருவண்ணா மலையிலே ஐம்பது வருடங்கள் கழித்தாயிற்று. தள்ளா மையும் சுகவீனமும் ஆட்கொண்டதால், ஸ்ரீபகவானை முன்போல் எந்நேரமுமோ அல்லது தனிமையிலோ எவரும் அணுகாதவாறு தடைகள் விதிக்கப்பட்டுவிட்டன. பக லில் மஞ்சத்தில் சாய்ந்தவண்ணம் அனைவருக்கும் காட்சி அளிக்கிறார். அவரது அந்த தரிசனமே ஆசீர்வாதம். அதே மஞ்சத்தில் படுத்து நித்திரை செய்கிறார். ஆனால் இப்போது துயிலுகையில் கூடத்துக் கதவுகள் சாற்றப் படுகின்றன. காலை ஐந்து மணிக்குக் கதவுகள் திறக் கப்படுகின்றன. அதிகாலையில் காத்திருக்கும் பக்தர்கள் சந்தடியின்றி உள்ளே நுழைகின்றனர். அவர்முன் விழுந்து நமஸ்கரிக்கின்றனர். கருங்கல் தரையில் உட்காருகின் றனர். நாளாவட்டத்தில் தேய்ந்து வழவழத்துப் பள

பளக்கும் தரை அது. பலர் கையோடு எடுத்து வந்த சிறு பாய்களை விரித்து உட்காருகிறார்கள். ஸ்ரீ பகவானோ அடக்கமே அடைக்கலம் கொண்ட திருவுரு. எளியோர்க்கும் எளியவராகத் தம்மை நடத்திக்காட்டும் சம நோக்காளர். அவ்வாறிருக்கையில் தமது முன்னால் வீழ்ந்து வணங்குவதை எவ்வாறு அனுமதிக்கிறார்? தாமும் மானிடனே என்ற முறையில் தனிச் சலுகைகளை மறுத்து வந்தார். எனினும், உள்ளிருக்கும் குருவை அவரிடத்தே வெளியுரு குருவாய் காண விழையும் வழிபாட்டார்களின் ஆன்மீக வளர்ச்சிக்கு அவ்வாறான அடிதொழுதல் உதவுகிறது என்று கருதியதால் அதனை ஏற்றுக் கொண்டார். வெறுமனே அவ்வாறு பணிந்து வணங்குவதில் அர்த்தம் இல்லை என்பதையும் அறிந்தவர். ''ஜனங்கள் என்முன் தண்டனிட்டு நமஸ்காரம் செய்கிறார்கள். ஆனால் எனக்குத் தெரியும் யார் யார் இதய பூர்வமாக நமஸ்கரிக்கிறார்கள் என்று!'' என ஒரு சமயம் வெளிப்படையாகக் கூறியுள்ளார்.

ஆசிரமத்திலேயே இருந்துவரும் அந்தணர் ஒரு சிலர் மஞ்சத்தின் தலைமாட்டருகில் கூடியமர்ந்து ஸ்வரத்தோடு வேதம் ஓதுகின்றனர். உள்ளூரிலிருந்து ஒருமைல் தூரம் கால்நடையாக வந்து சேரும் ஓரிரு வைதீகர்களும் அவர்களுடன் சேர்ந்தமர்ந்து வேத பாராயணம் செய்கிறார்கள். மஞ்சத்தின் கீழே ஏற்றிவைக்கப்பட்ட ஊதுபத்திகளின் மெல்லிய நறுமணம் காற்றில் கமழ்கிறது. குளிர்காலமாக இருப்பின் மஞ்சத்தருகில் வைக்கப்படும் கரியடுப்புத் தணலின் கணகணப்பு, உடல் திடம் குன்றிப் போய்விட்ட உருக்க நிலையை நினைவுறுத்துகிறது. சிலசமயம் தமது நலிந்த கைகளையும் மெலிந்த விரல்களையும் அதனருகில் காட்டி குளிர்காய்கிறார். நலிந்து மெலிந்துவிட்ட போதிலும் எத்துணை ரம்மியமான கரங்கள் அவை! அனைவரும் மௌனமாக அமர்ந்துள்

ளனர். பெரும்பான்மையோர் இமை மூடி தியான நிலையில் சமைந்திருக்கின்றனர்.

ஆறுமணி ஆவதற்குச் சில நிமிடங்களுக்கு முன் வேதபாராயணம் முடிவுறுகிறது. ஸ்ரீபகவான் சிரமத்துடன் சார்மணையிலிருந்து எழுந்திருக்க முயலுகையில் எல்லோரும் எழுந்து நிற்கின்றனர். கைத்தடியை எட்டக் கரம் நீட்டும்போது பணியாள் அதை அவர் கையில் வைக்கிறான். எழுந்து கதவைநோக்கி மெல்லமெல்லக் காலடிவைத்து நடக்கிறார். பலவீனத்தாலோ விழுந்து விடுவோமோ என்ற அச்சத்தினாலோ அவர் தரை நோக்கிச் சற்றே சிரம் கவிழ்ந்து நடக்கவில்லை. இயல்பான அடக்கத்தின் காரணமாகவே தலைநிமிர்ந்து நடை போடுவதைத் தவிர்க்கிறார் என்பதை எவரும் உணருவர்.

குன்றை நோக்கியுள்ள வடக்குப்புறக் கதவு வழியே கூடத்தை விட்டு அகன்று, சற்றே கூனிய முதுகுடன் கோலூன்றி மெல்ல நடக்கிறார். சாப்பாட்டுக் கூடத்தின் வெள்ளை வெளிச்சுவருக்கும் (பழைய) அலுவலகக் கட்டடத்திற்கும் இடையே உள்ள பாதையில் நடந்து, ஆடவர் தங்கு விடுதி விளிம்பைச் சுற்றிச் சென்று, ஆசிரமக் கட்டடங்களின் கிழக்குக் கோடியில் அமைந்த மாட்டுத் தொழுவத்தின் பக்கம் உள்ள குளியலறைக்குச் செல்கிறார். கருப்பாய், கட்டை குட்டையாய், வெள்ளை அரைவேட்டி கட்டிய பணியாட்கள் இருவர் அவரைப் பின்தொடர்கின்றனர். அவரோ உயரமாய் ஒல்லியாய் செம்பொன் மேனியராய் இடையில் வெண்மையான கௌபீனம் மட்டுமே அணிந்த மாசிலா மாணிக்கமாய் முன்செல்கிறார். நடந்துபோகும்போது எப்போதாவது தான் தலை தூக்கிப் பார்க்கிறார், எதிர்படும் வழிபாட்டாளரை நோக்க, அல்லது வழியில் காணும் குழந்தையைப் பார்த்துப் புன்முறுவல் பூக்க.

அவரது புன்னகையை வார்த்தையால் விண்டுரைக்க வொண்ணாது. பார்வையில் உணர்ச்சியற்ற, முரண்டான வர்த்தகவித்தகராகத் தோற்றமளிக்கும் ஒருவர், திருவண்ணாமலைக்கு வந்து ஞானச்செம்மலின் புன்னகை கண்டபின், இதய இசைத் துள்ளலுடன் திரும்பிச் செல்வார். ஓர் 'எளிய பெண்மணி கூறினாள்: "எனக்கோ அவரது தத்துவம், போதனை ஒன்றும் தெரியாது. ஆனாலும் அவர் என்னை நோக்கிப் புன்னகைத்தால், தாயின் மடிச் சேய் போல நான் நிரம்ப பத்திர உணர்வு பெறுகிறேன்."

நான் ஆசிரமத்திற்கு வந்து ஸ்ரீபகவானை முதன் முறையாகப் பார்ப்பதற்கு முன்பாகவே (ஆசிரமத்தில் இருந்த) என் ஐந்து வயது மகள் கடிதம் எழுதியிருந்தாள்: "பகவானை நீங்கள் நேசிப்பீர்கள் அப்பா. அவர் புன்னகை புரியும்போது எவரும் ரொம்பவும் மகிழ்ந்து போவார்கள்."

ஏழு மணிக்குக் காலைப் பலகாரம். ஸ்ரீபகவான் உண்டி அருந்தியபின் சிறிது தூரம் உலவச் சென்றுவிட்டுக் கூடத்திற்குத் திரும்புவார். அவர் வருவதற்குள் அந்த இடம் பூராவையும் பெருக்கித் துப்புரவாக்கி, மஞ்சத்தின் மீது சுத்தமான விரிப்புக்கள் போட்டு வைத்திருக்கிறார்கள். சிலவற்றில் பூத்தையல்வேலை நிரம்பியிருக்கும். பக்தர்களின் அன்பளிப்பு அவை. எல்லாமே படுசுத்தமாய் மிக்க கவனத்துடன் மடித்து வைக்கப் பட்டவை. ஏனெனில் அவர் எதையும் எவ்வளவு கூர்ந்து கவனிப்பவர் என்றும், சொன்னாலும் சொல்லாவிடினும் எந்த சிறு கோளாறும் அவரது கண்ணை உறுத்தும் என்பதையும் பணியாட்கள் நன்கு அறிவார்கள்.

மணி எட்டு. ஸ்ரீபகவான் ஹாலுக்கு வந்துவிட்டார். பக்தர்களும் வரத் தொடங்கி விட்டனர். ஒன்பது மணிக்குள் கூடம் நிறைந்து விடுகிறது. நீங்கள் புதிதாக

வந்தவர் என்றால் அந்தக் கூடம் எவ்வளவு அன்னி யோன்னியமான இடம், ஞானாசிரியனுக்கு எவ்வளவு கிட்டத்தில் உட்காரமுடிகிறது என்பது விளங்கும். நாற் பது அடி நீளமும் பதினைந்தடி அகலமும் கொண்ட சிறு கூடம்தான் அது. கிழக்கு மேற்காக நீண்டமைந்து, நீளவாட்டில் இருபுறமும் ஒவ்வோர் வாசற்கதவு. குன்றை நோக்கியுள்ள வடபுறக்கதவைத் திறந்தால் வெளியே மரநிழலோடு கூடிய சதுர முற்றம். அதன் கிழக்குப்புறம் நீண்ட சாப்பாட்டுக்கூடம். மேற்கே நந்தவனமும் மருந் தகமும். தெற்கே கோயிலுக்குச் செல்லும் வழி. அதற்கப் பால் வீதி. அந்த வழியாகத்தான் பக்தர்கள் வருகிறார்கள். கூடத்துள் வடகிழக்கே அவர் அமரும் மஞ்சம் உள்ளது. அதனருகே சுழற்றக்கூடிய புத்தக அடுக்குப் பெட்டி. அவற்றில் அடிக்கடி தேவைப்படும் புத்தகங்கள். அதன் மீது ஓர் மேஜைக் கடிகாரம். மஞ்சத்தின் பின்புறம் சுவர்க் கடிகாரம். இரு கடிகாரங்களும் நிமிஷம் தப் பாமல் ஒரே நேரம் காட்டுகின்றன.

மேற்கோள் காட்ட ஏதேனும் புத்தகம் எடுக்க வேண்டி வந்தால் அது அடுக்கில் எந்தத் தட்டில் எவ்விடத்தே உள்ளது என்பது மட்டுமின்றி, அந்நூலின் எத்தனாவது பக்கத்தில் அந்த வாசகம் வருகிறது என் றும் சரியாய்த் தெரிந்து வைத்திருப்பார். தெற்குச் சுவற்றை யொட்டினாற்போல கண்ணாடிச் சட்டமிட்ட பெரிய புத்தக அலமாரிகள்.

வரும் பக்தர்களில் பெரும்பாலானோர் நடுக்கூடத் தில் ஸ்ரீபகவானுக்கு எதிரில், அதாவது கிழக்கு நோக்கி, உட்கார்ந்திருக்கிறார்கள். முன்வரிசைகளிலும், கூடத்து இடது பாதியிலும் பெண்கள். மறுபாதியில் அவருக்கு இடது புறமாக ஆண்கள். ஒரு சில ஆடவர்கள் மஞ்சத் திற்குப் பக்கவாட்டில் பகவானுக்கு மிக அருகில் அமர்ந் துள்ளனர். இதற்குச் சில ஆண்டுகளுக்கு முன்வரை

மஞ்சத்தையொட்டி அமரும் சலுகை மகளிர்க்கு மட்டுமே இருந்து வந்தது. பின்பு எக்காரணத்தாலோ இடமாற்றம் ஏற்பட்டு விட்டது. ஆடவரும் பெண்டினரும் பொது இடங்களில் தனித்தனியாகப் பிரிந்து உட்கார வேண்டும் என்பது இந்துக்களின் மரபு. ஆண்–பெண்களிடையே நிலவும் ஈர்ப்பு, மேன்மையான ஆன்மீக ஆகர்ஷணத்திற்கு இடையூறாக இருக்கும் என்பதால் ஸ்ரீபகவானும் அந்த மரபை அனுசரித்தார்.

நறுமண தூபங்கள் திரும்பவும் ஏற்றி வைக்கப் படுகின்றன. இப்போதும் சிலர் கண்மூடி தியானத்தில் அமர்ந்திருக்கின்றனர். ஏனையோர் தளர்ந்து உட்கார்ந்து வெறுமனே ஸ்ரீபகவானைக் கண்களால் பருகுகின்றனர். தரிசிக்க வந்தவருள் ஒருவர் ஸ்ரீபகவானைப் புகழ்ந்து தாம் இயற்றிய துதிப் பாடலைப் பாடுகிறார். நடுவில் வரும் ஒருவர் கையோடு கொண்டுவந்த பழங்களை ஸ்ரீபகவான் பாதத்தருகில் காணிக்கையாக சமர்ப்பித்து விட்டு, எதிர் வரிசையில் இடம்பிடித்து உட்காருகிறார். அவர் வைத்த பழங்களில் சிலவற்றை ஓர் பணியாள் எடுத்து வந்து பகவத் பிரசாதமாக அவரிடமே திருப்பிக் கொடுக்கிறான். வரும் சிறார்களுக்கும் இவ்வாறு பழங்கள் அளிக்கப்படுகின்றன. அதேபோன்று, மஞ்சத்தருகிலுள்ள ஜன்னலின் வெளியே அல்லது கதவுப் பக்கமாக உட்கார்ந்து உற்று நோக்கும் வானரங்கள், வெளியே சிறகடிக்கும் மயில்கள், அல்லது சிற்சில சமயம் வந்து நிற்கும் லட்சுமிப் பசு யாவற்றிற்கும் பிரசாதம் கிடைக்கும். மிச்சமிருக்கும் பழவகைகளை பிறகு பரிமாறுவதற்காக சாப்பாட்டுக் கூடத்திற்கு எடுத்துச் சென்று விடுவார்கள்.

ஸ்ரீபகவான் தமக்கென்று எதையும் ஏற்பதில்லை. அவரது கண்வீச்சில் சொல்வதற்கரிய கருணாரசம் ததும்புகிறது. பக்தப் பெருமக்களின் உடனடிக் கஷ்ட நஷ்டங்களில் அனுதாபம் காட்டும் அன்புக் கனிவு மட்டுமின்றி,

மானிட வாழ்வை அழுத்தும் பெரும் சுமையாம் சம்சார பந்தத்தைக் கண்ணுற்று உருகும் கருணா கடாட்சம் அது. ஆயினும் அவரது கருணாவிலாசத்தையும் மீறி அவர் ஐயுறவு நிலைக்கு அப்பாற்பட்ட உறுதிபெற்றவர் என்பதனை முகச் சுருக்கக் கோடுகள் எடுத்துக்காட்டு கின்றன. அவ்வாறான திடவைராக்கியத்தைப் பிரதி பலிக்கும் முக உறைவை, பஞ்சுபோன்ற வெண் முடிப் படர்வும் வெண் தாடியும் மறைத்துவிடும். ஆனால், ஒவ்வொரு பௌர்ணமியன்றும் சம்பிரதாயமாக ஸ்ரீபக வானின் சிரசையும் முகத்தையும் க்ஷவரம் செய்து விடுகி றார்கள். இந்த வழக்கம் பல பக்தர்களுக்குப் பிடித்த மில்லை. வெண்முடியும் தாடியும் அவரது கருணை நிறைந்த வதன மென்மைக்கு மேலும் களையூட்டும் என்பது பக்தர்களின் கருத்து. ஆனால் எவரும் ஸ்ரீ பகவானிடம் அதைப்பற்றிப் பேச்செடுக்கத் துணிய வில்லை.

அவரது முகம் தெள்ளிய நீர் போன்றது. நீரோட் டம் போல மாறுவது. அமைதியாய் ஓடும் நதி திடீ ரெனக் கரைபுரண்டு அலைமோதினாலும், அதன் நீரில் மாற்றம் ஏது ? கருணை ததும்பும் முகம் திடுமென ஞான வீரார்ந்து பாறையாய் இறுகுகிறது. சில சமயம் நகை முகம் மறைந்து காருண்யக் கடலாகிறது. அடுத்தடுத்த முக வேறுபாடு ஒவ்வொன்றிலும் அவர் தனித்து நிலை நிற்பதால், தனியொருவரது முகம் அல்ல அது, மனித குலம் அனைத்தின் முகமே அவரது வதனம் என்று நினைக்கத் தோன்றுகிறது. சாமுத்திரிகா லட்சணப்படி அவர் அழகர் இல்லைதான். ஏனெனில் அங்க அமைப் புகள் சீராக இல்லை. இருப்பினும் வேறெந்த சௌந்தர்ய வதனமும் அவரது முகச்சோபைக்கு ஈடு இணையாகாது. நித்திய சத்தியத்தைப் பிரதிபலிக்கும் அந்த முக வடிவு, காண்போர் எண்ணத்தில் ஆழப்பதிந்து விடும். மற்ற நினைவுகள் மங்கி மறையலாம். ஆனால் அந்த ஆசை

முகம் மறக்க முடியாதது. சிறிது நேரமே அவரைப் பார்த்திருந்தவர்களாகட்டும், அல்லது போட்டோப் படத்தில் மட்டுமே பார்த்திருந்தாலும் சரி, அவர்கள் அவரை மனக்கண்முன் உயிர்க்களையுடன் எழுப்பிக் களிப்பார்கள். ஸ்ரீபகவானை நேரில் நன்றாக அறிந்தவர்களைக் காட்டிலும், போட்டோவில் பார்த்தவர்கள் தத்ரூபமாய் வர்ணிப்பார்கள். அன்பு, கருணை, விவேகம், உள்ளாழ்ந்த ஒத்திசைவு, குழந்தை போன்று மாசற்ற புனிதம் இவை யாவும் ஒருங்கே ஒளிரிடும் அவரது படத்தை முன் வைத்துத் தியானத்தைத் தொடங்குவது, வேறு மந்திர உச்சாடனங்களைவிட மேலானது.

மஞ்சத்தைச் சுற்றி இரண்டடி தள்ளி 18 அங்குல உயர கிராதி உள்ளது. வேண்டும்போது அதை நகர்த்தலாம். இவ்வாறு தடுப்புப் போட்டபோது முதலில் சிறிது ஆட்சேபணை எழும்பியது. 'ஸ்ரீபகவான் பொதுவாகத் தம்மை யாரும் தொடுவதை விரும்புவதில்லை. தொட்டுக் கும்பிடக் கிட்டே நெருங்கினால் பின்வாங்குவார். ஆகவே குறுக்குத் தடுப்பு அவசியம்' என்பதே ஆசிரம நிர்வாகிகளின் சமாதானம். மேலும் முன்னொரு சமயம் ஒரு மூட பக்தன் அவர் காலடியில் தேங்காய் உடைத்து அதன்பின் அவருக்குப் பாலாபிஷேகமும் செய்ய முனைந்ததையும் சுட்டிக் காட்டிய நிர்வாகத்தினர், இப்போது பெயரளவுக்கு இந்தக் கிராதி வைப்பது குற்றமில்லை என்று வாதித்தனர். ஆனால் அனேக பக்தர்கள் அவ்வாறு வேலி அமைப்பது தங்களுக்கும் ஸ்ரீபகவானுக்குமிடையே தடைச் சுவர் எழுப்புவதாகும் என்று எண்ணினர். ஸ்ரீபகவான் கிராதியை அங்கீகரிக்கிறாரா இல்லையா என்ற சர்ச்சை அவர் முன்னிலையிலேயே நிகழ்ந்தது. ஆனால் இதில் அவரது தீர்மானம் என்னவென்று எவரும் கேட்கத் தயாராக இல்லை. ஸ்ரீபகவானோ அந்த விவாதத்தால் பாதிக்கப்படாதவர் போல் வாளாவிருந்தார்.

பக்தர்களில் சிலர் தம்மைப் பற்றியோ நண்பர்களைப் பற்றியோ அல்லது வராதவர்களைப் பற்றிய தகவலையோ உட்கார்ந்தவாறே தெரிவித்து, ஸ்ரீபகவானுடன் உரையாடுகின்றனர். சித்தாந்த ரீதியான வினாக்களையும் எழுப்புகின்றனர். ஏதோ அன்றாட வீட்டுச் சமாச்சாரம் மாதிரி, பெரிய குடும்பத்தில் இருப்பது போன்ற சூழ்நிலையை உணர்கிறோம். யாரேனும் ஏதேனும் சொந்த விஷயம் பேசவோ அல்லது தனித்துத் தெரிவிக்கவோ அவரது மஞ்சத்தருகில் சென்று தாழ்ந்த குரலில் பேசுவார். அல்லது காகிதத்தில் எழுதியதை அவரிடம் சேர்ப்பிப்பார். விடை எதிர்பார்த்தும் இவ்வாறு செய்வர் சிலர். அல்லது ஸ்ரீபகவானிடம் வெறுமெனே தெரிவித்து விட்டாலே போதும், எல்லாம் நல்லபடி நடக்கும் என்ற எண்ணம் கொண்டவர் பலர்.

ஒரு தாயார் தன் சின்னஞ்சிறு குழந்தையை அவரருகில் கொண்டு செல்கிறாள். குழந்தையைக் கண்ணுற்ற அவர் அதனை நோக்கித் தாயைவிட மனோகரமாக முறுவலிக்கிறார். ஓர் சிறுமி தன் விளையாட்டு பொம்மையுடன் வந்து மஞ்சத்தின் முன்னால் பொம்மையைக் கிடத்தி, அதை நமஸ்காரம் செய்வித்தபின் பகவானிடம் பொம்மையைத் தூக்கிக்காட்டுகிறாள். அவரும் அதைக் கையில் வாங்கிப் பார்க்கிறார். ஒரு குரங்குக் குட்டி கதவோரமாக மெல்லப் புகுந்து மஞ்சத்தருகில் இருக்கும் தட்டிலிருந்து ஒரு வாழைப் பழத்தைப் பிடுங்கி ஓட முயற்சிக்கிறது. பணியாள் அதை விரட்டித் துரத்துகிறான். அச்சமயம் ஒரே ஒரு பணியாள் மட்டுமே இருந்ததால் குரங்குக்குட்டி கூடத்து ஓரமாகச் சுற்றி வெளியே பாய்ந்தோடி வேறொரு கதவு வழியே உள்ளே நுழைகிறது. ஸ்ரீபகவான் அதை நோக்கி மிக அவசரமாக ரகசியக்குரலில் ''சீக்கிரம் ஓடி வா. அவன் இங்கே திரும்ப வந்து துரத்துவதற்குள் எடுத்து ஓடிவிடு,'' என்கிறார். காஷாயம் தரித்த ஓர் முரட்டு பைராகி சடை

பிடித்த ஜடா முடியும் மிரட்டு விழியுமாக இரு கை களையும் உயர்த்தி மஞ்சத்தின் எதிரில் நிற்கிறார். டீக்காய் ஐரோப்பிய உடையணிந்த பட்டணத்து செல்வந்தர் விநயமாய் முழந்தாள் படியிட்டு வணங்கி முதல் வரிசை யில் இடம் பிடிக்கிறார். அவரோடுகூட வந்தவர் தமக் குப் பக்திப்பற்று உண்டா இல்லையா என்ற சந்தேகத்தில் வணக்கம் ஏதும் தெரிவிக்காமல் உட்கார்ந்து கொள் கிறார்.

சில பண்டிதர்கள் ஓர் அணியாய் மஞ்சத்தின் அருகில் அமர்ந்து ஏதோ சமஸ்கிருத நூலை தமிழில் மொழி பெயர்த்துக் கொண்டிருக்கிறார்கள். நடுநடுவே ஸ்ரீபகவா னிடம் நூலை எடுத்துச் சென்று காட்டி சில வாசகங் களுக்கு சரியான விளக்கம் கேட்டறிகிறார்கள். அதை வேடிக்கை பார்த்திருந்த மூன்று வயது இளம் பாலகன் தன் கையில் வைத்திருந்த படக்கதைப் புத்தகத்தை எடுத்துக்கொண்டு பகவானை அணுகி பிரித்துக் காட்டு கிறான். அவர் அதையும் அன்புடன் கையில் வாங்கி அதே ஆர்வத்துடன் ஏடுகளைப் புரட்டிப் பார்க்கிறார். அச்சிறு பழைய புத்தகப் பக்கங்கள் சில அக்கக்காய் வருவதைப் பார்த்த அவர் அருகிலிருந்த பணியாளிடம் கொடுத்து, அதை அட்டைபோட்டு பைண்டு செய்து மறுநாள் திரும்பக் கொண்டு வரும்படி பணிக்கிறார்.

கூடவே நிற்கும் பணிமகன் எந்தக் காரியத்திலும் சுறுசுறுப்பாக இருக்கிறான். அப்படித்தானே இருக்க வேண்டும் அவன்? ஏனெனில் ஸ்ரீபகவான் செய்வன எதையுமே கண்ணும் கருத்துமாய் திருந்தச் செய்வார். அக்கறையின்றி யார் எதைச் செய்தாலும் ஒப்பமாட் டார். ஸ்ரீபகவானின் அணுக்கத் தொண்டரான பணி யாட்கள் தாங்கள் மற்றவர்களைக் காட்டிலும் அவரது தனிப்பட்ட அருளில் துய்வதாக எண்ணி மனம் பூரிக் கின்றனர். அடிக்கடி அணுகி சந்தேகம் கேட்கும் பண்டி

தர்களும் தம்மைப்பற்றி அவ்வாறே நினைக்கின்றனர். அந்த மூன்று வயது பாலகனும் அப்படியே எண்ணி அகமகிழ்கிறான். இவ்வாறு அனைவரையும் அன்பினால் அரவணைத்து உடனுக்குடன் மறுமொழி அளிப்பதன் மூலம் பல தரப்பட்ட எண்ணங்களும் சுபாவமும் கொண்ட பக்தர்கள் ஒவ்வொருவரும் ஞான ஆசானுடன் தமக்குள்ள அன்னியோன்னியத்தை உணருகிறார்கள்.

ஸ்ரீபகவானின் வழிகாட்டல் – அல்லது மனிதப் பிரயத்தினமாகக் கையாளும் போதனா வழி – எத்துணை சாதுரியமும் நயநுட்பமும் வாய்ந்தது என்பதனைப் படிப்படியாகக் காண முடிகிறது. ஏனெனில் அத்தகைய வழிகாட்டல் புலனுக்கெட்டாமல் மறைமுகமாக நிகழ்கிறது. அவரைப் பொருத்தமட்டில் அனைவரும் சமம். குழுமியுள்ளோர் அனைவர் மீதும் பார்வையைச் சுழற்றி, தம்மை இதய சுத்தியுடன் பின்பற்றுவோரை மாறிமாறி ஊடுருவி நோக்குவார். அவ்வாறு அவர்களுடைய தியானச் சிந்தனை முன்னேற்றத்தைக் கூர்ந்துணர்வார். எப்போதாவது அவர்களில் ஒருவர் மீது பார்வையைப் பதித்து அருள்வீச்சைச் செலுத்துவார். ஆயினும் இவை யாவும் கூடியவரை யாரும் கவனியா வண்ணம் நிகழ்த்தப்படும். பார்வை சில சமயம் நேர்முகமாக இல்லாமல் காண்போர் அறியாதபடி பக்கவாட்டில் செல்லும். சிற்சில சமயம் செய்தித்தாளைப் படித்து வருவதற்கு இடையே ஒரு நபர் மீது பார்வை நிலை பெயறாது நிற்கும். அல்லது அவ்வாறு பார்க்கப்படுபவர் கண்மூடி தியானத்தில் இருக்கையில் அந்த ஊடுருவல் நிகழும். மற்ற பக்தர்கள் பொறாமை கொள்வதைத் தவிர்ப்பதற்காகவும், அதே சமயம் கண்வீச்சுப்பெற்றவர் கர்வம் கொள்ளாமல் இருப்பதற்காகவுமே அவ்வாறு மறைமுகமாக அருட்பாலிக்கிறார் போலும்!

புதிதாக வருகை புரிவோர் பெரும்பாலும் தனிக் கவனம் பெறுகின்றனர். புதியோர் அத்தகைய சலுகை பெறுவது மற்ற பக்தர்களுக்குப் பழக்கமான விஷயமாகி விட்டது. புதிய நபர் கூடத்தினுள் நுழையும்போதே ஸ்ரீபகவானின் புன்னகை அவருக்கு முகமன் கூறும். வந்தவர் தியானம் செய்கையில் ஸ்ரீபகவானின் கவனம் அவர் மீது திரும்பும். ஓரிரு வார்த்தைகளும் கூறி அவரை ஊக்குவிப்பார். புதிதாய் வந்தடைந்தவரின் இதயத்தில் தியானம் நிறையும் வரை, அல்லது அவர் ஸ்ரீ பகவானினுடன் உள்ளன்பால் பிணையுறும் வரை, நாட்கணக்காக, வாரக்கணக்காக, ஏன், பல மாதங்கள் கூட தொடர்ந்து தனிக் கவனம் பெற்று வருவார். ஆனால், மனித இயல்பை மாற்றுவது மிகக் கடினம் அன்றோ! அவ்வாறு விசேஷ கவனம் பெறுவதால் அந்நபரின் அகந்தையும் வளர்கிறது. மற்ற சாதகர்களைக் காட்டிலும் தாம் உயர்ந்தவர் என்ற எண்ணம் தலைதூக்குகிறது. அதனை உணரும் ஸ்ரீபகவான் அக்கட்டத்தில் அந்நபரை சிறிதுகாலம் கவனியாமல் பாராமுகமாய் இருப்பார். பின்னர் அந்த புதிய சாதகர் தாமே உய்த்து உள்ளார்ந்து உணரும்போது உண்மை புலப்படுகிறது. ஆனால் துரதிருஷ்டவசமாக, எப்போதும் இவ்வாறு உள்ளார்ந்த பலன் பலருக்குக் கிட்டுவதில்லை. ஸ்ரீபகவான் தன் மீது விசேஷப் பிரீதி காட்டிவருவதாக தானே எண்ணிக் கொள்ளும் இறுமாப்பு மட்டுமே மிஞ்சுகிறது.

காலை சுமார் எட்டரை மணிக்கு அன்றைய செய்தித் தாள்கள் பகவானிடத்தே கொண்டு வரப்படுகின்றன. அவற்றில் சிலவற்றைப் பிரித்துக் கண்ணோட்டுவார். கவனத்தைத் தூண்டும் செய்தி ஏதாகிலும் கண்டால் அதைப்பற்றி சுருக்கமாய் விமரிசிப்பார். ஆனால் அத்தகைய பொது விமரிசனங்கள் அவரது கருத்தாக எடுத்துக் கொள்ளுமாறு அமையாது. சில பத்திரிகைகளை ஆசிரமத்திற்கே திருப்பி அனுப்பிவிடுவார். இவற்றைத் தவிர,

ஒரு சில பக்தர்கள் தனியாக வரவழைக்கும் சில தினசரி கள் அல்லது சஞ்சிகைகள் சில சமயம் ஸ்ரீபகவானிடம் முதலில் படிக்கக் கொடுக்கப்படும். படிக்கிறாரோ இல் லையோ அவர் கைபட்டு அதன்பின்னரே தாம் படிப் பதில் அவர்களுக்குப் பெருமகிழ்ச்சி. தனியொருவர் வர வழைத்த சஞ்சிகை என்றால் அவர் அதன் மேலுரையி னுள்ளிருந்து நாசூக்காக இழுத்தெடுத்துப் பிரித்துப் பார்த்துச் சிலவன படித்தபின் அதே உரைக்குள் கவன மாக நுழைத்து வைப்பார். தபாலில் வந்ததுபோலவே கசங்காமல் அதை அதன் சொந்தக்காரரிடம் திருப்பிக் கொடுக்கவேண்டுமென்கிற அக்கறை அவருக்கு.

பத்தடிக்க பத்து நிமிடம் முன்னால் ஸ்ரீபகவான் புறப்பட்டு குன்றின்மீது சிறிதுதூரம் நடந்துவிட்டுப் பத்து மணிக்கு மேல் திரும்புவது வழக்கம். ஆனால், கடைசி சில ஆண்டுகளில் அவரது தேகம் மிகவும் தளர்வுற்றதால் குன்றின் மீது ஏறிச் செல்வதைத் தவிர்த்து, ஆசிரம மைதானத்திலேயே சிறிது நடந்து விட்டு வருகி றார். கூடத்தை விட்டுப் புறப்படும்போது எல்லோரும் எழுந்து நிற்கின்றனர், ஆழ்ந்த தியானத்திலே லயித்திருக் கும் ஒரு சிலரைத் தவிர. இந்த இடைவேளையில் கூடத்தில் இருப்பார்கள் கலைந்து தனித்தனியே கூடிக் கூடிப்பேசிக் கொண்டிருக்கிறார்கள். இப்போது ஆடவரும் பெண்டினரும் பிரிந்து உட்காருவதில்லை. ஏனெனில் கூடத்தில் சம்பிரதாயமாக உட்காரும்போது மட்டுமே தனிப்பிரிவு கடைபிடிக்கப்படுகிறது. சிலர் செய்தித் தாள் படிக்கின்றனர். வேறுசிலர் தமக்கு வந்த கடிதங் களை ராஜா என்கிற கிளைத் தபால் நிலைய அதிகாரி யிடமிருந்து பெற்றுக் கொள்கின்றனர். பணியாற்று வதில் ராஜா ஆர்வமிக்கவர். ஆசிரமத்திலும் சுற்று வட்டா ரத்திலுமிருக்கும் எவரைப் பற்றியும் எல்லாமே தெரிந்து வைத்திருப்பவர்.

ஸ்ரீபகவான் திரும்பி வருகிறார். கூடத்தில் அமர்ந் திருப்போர் மரியாதையுடன் எழுந்து நிற்க ஆயத்த மாகின்றனர். அவர் எழவேண்டாமெனக் கையமர்த்துகிறார். "நான் ஒருவன் வரும்போதெல்லாம் நீங்களெல்லாம் எழுந்து நிற்கவேண்டும் என்றால் இங்கு நுழையும் ஒவ்வொரு நபருக்காகவும் அதே போல் எழுந்திருக்க வேண்டியதாகும்" என்கிறார். கோடை மாதங்களில் ஒரு நாள் அவரருகில் பலகணி மேடையில் ஒரு மேஜை மின்—விசிறி வைக்கப்பட்டது. அவர் அதை நிறுத்தி விடுமாறு பணியாளுக்கு உத்திரவிட்டார். ஆனால் பணி யாள் அவ்வாறு செய்ய மனமின்றி காலம் கடத்தித் தட்டிக் கழித்தபோது அவர் சாய்ந்து கைநீட்டி அதன் ஒயரைப் பிளக்குடன் பிடித்திழுத்து ஃபானை நிறுத்தி விட்டார். பக்தர்களும்தான் கோடை வெப்பத்தில் புழுங்கு கிறார்கள். அவருக்கு மட்டும் மின்—விசிறி எதற்காம்? பின்னரே கூடத்து உட்கூரை விட்டத்தில் பெரிய மின்—விசிறிகள் பொருத்தப்பட்டு எல்லோருமே பயனடைந் தனர்.

அன்றைய தபால் கட்டு ஸ்ரீபகவானிடம் சேர்ப் பிக்கப்படுகிறது. அவற்றுள், 'மகரிஷி, இந்தியா' என்ற இருவரி விலாசம் மட்டுமே உரையில் தாங்கிய வெளி நாட்டுக் கடிதமும் ஒன்று! இன்னொரு கடிதத்தில் அமெரிக் காவிலுள்ள ஒரு பக்தர் ஆசிரமத்துத் தோட்டத்தில் விதைப்பதற்காகப் பூச்செடிவிதைப் பொட்டலம் வைத்து அனுப்பியிருக்கிறார். உலகின் பல பாகங்களிலிருந்தும் கடிதங்கள். எல்லாவற்றையும் ஸ்ரீபகவான் கவனமாகப் படிக்கிறார். உரைமீதுள்ள விலாசத்தையும் தபால் முத் திரையும்கூட நுணுக்கமாகக் கவனிக்கிறார்., யாரேனும் பக்தர்களிடமிருந்து வந்த கடிதத்தில் ஆசிரமத்திலிருக் கும் நண்பர்களுக்கான செய்தி ஏதேனும் இருந்தால் அதை அவர்களிடம் தெரிவிப்பார். கடிதங்களுக்கு அவர் தாமே பதில் எழுதுவதில்லை. ஞானியின் நிலையை இது

எடுத்துக்காட்டுகிறது – உறவுமுறைகள் ஏதும் கிடையா; கையெழுத்திட பெயரும் இல்லை அல்லவா? கடிதங் களுக்கான பதில் ஆசிரமத்தில் தயாரிக்கப்பட்டு அன்று பிற்பகல் அவரிடம் சமர்ப்பிக்கப்படுகின்றன. சரியாக இருக்கிறதா என்று முழுவதும் படித்துப் பார்ப்பார். ஏதாகிலும் குறிப்பாகக் கேட்கப்பட்ட, தனிப்பட்ட விஷயம் விட்டுப் போயிருந்தால் அதைச் சுட்டிக்காட்டிக் கடிதத் தில் சேர்க்கச் சொல்வார். ஆனாலும், பொதுவாக அவரது போதனை தெள்ளத் தெளிய இருப்பதால் அதன் வாச கங்களை ஆசிரமத்திலுள்ள பக்தர்கள் சுலபமாகத் திரும்பக் கூறவோ, கடிதத்தில் மேற்கோள்காட்டவோ இயலுகிறது. ஆனால், வார்த்தைகளுக்குப் பின்னே பொதிந்துள்ள உண்மையை அவர் மட்டுமே அன்றோ அருட்பாலிக்க வல்லவர்!

பதில் கடித பரிசீலனை முடிந்தபிறகு பொதுவாக எல்லோரும் அமைதியாக அமர்ந்திருக்கின்றனர். இறுக்க மற்ற, சிலிர்ப்புமிக்க சாந்தி நிலவுகிறது. அச்சமயம் யாரேனும் ஓர் அதிதி விடைபெற்றுப்போக அணுகு கிறார். திரும்பிப்போகவேண்டுமே என்று கண் கலங்கு கிறாள் ஓர் பெண்மணி. ஸ்ரீபகவானின் ஒளிமிக்க கண் நோக்கு அவள்மீது அன்பைப் பொழிகிறது. மனதிடத் தையும் அளிக்கிறது. அவரது நயனங்களை என்ன வென்று வர்ணிப்பது? அக்கண்களில் உங்கள் பார்வையைப் பதித்தால் வையகத்துத் துன்பங்கள் துச்சமாகி விடு கின்றன. கடந்த கால வேதனைகள், மனப் பாரங்கள், பிரச்சினைகள் யாவும் கரைந்து மறைகின்றன. விஷ வாயுச் சூழலிலிருந்து அலாக்காய்த் தூக்கி எழில்மிகுந்த அமைதிப் பூங்காவில் அவிழ்த்துவிட்டதுபோன்று ஓர் விடுதலை உணர்வு பீறிடுகிறது. அந்நிலையில் வார்த் தைகளுக்கு வேலையில்லை. அவரது அருள் வீச்சு இத யத்துள் பாய்ந்து கிளறுகிறது. அக்கிளர்ச்சியில் வெளியே தோற்றமளிக்கும் குரு ரமணன், உள்ளாழ்ந்து கிடக்கும்

மெய்யுணர்வாகிய குருநாதரின் சுயதரிசனம் காணச் செய்கிறார்.

மணி பதினொன்று. ஆசிரம மணியோசை மதிய உணவு நேரத்தை அறிவிக்கிறது. ஸ்ரீபகவான் மெல்ல எழுந்து கூடத்தைவிட்டு அகலும் வரை, கூடியுள்ள அனைவரும் எழுந்து நிற்கின்றனர். சாதாரண நாளாக இருந்தால் பக்தர்கள் அவரவர் இல்லங்களுக்குச் சென்று விடுகின்றனர். ஆனால், ஏதேனும் பண்டிகை நாள் அல்லது பக்தர் யாரேனும் நன்றி நவிலும் வகையில் அன்று பிட்சை அளிக்க ஏற்றிருந்தால் அங்குள்ள அனை வரும் ஆசிரமத்தில் சாப்பிட அழைக்கப்படுகிறார்கள். அந்தப் பெரிய சாப்பாட்டுக் கூடத்தில் மேஜை நாற் காலிகள் ஒன்றுமே கிடையாது. வாழையிலையிலே தான் போஜனம். சிவப்புத் தரை தளத்தில் கூடத்து அகல வாட்டில் இரு வரிசைகளாக இலை போட்டிருக்கி றார்கள். பக்தர்கள் இலைமுன் சம்மணமிட்டு உட்காரு கின்றனர். கூடத்து ஒரு பகுதியில் அகலவாட்டின் முக்கால் பாகம் அடைத்தாற்போல் ஓர் தடுப்பு போடப்பட் டுள்ளது. தடுப்பின் ஓர் புறம் வைதிக பிராம்மணர்கள் உட்கார்ந்து போஜனம் செய்வதற்காக. மறுபுறம் பிராமணே ரல்லாத இந்துக்கள், வேறு சமயத்தினர் மற்றும் அனை வருடனும் ஒன்றாக உணவருந்த விரும்பும் பிராமணர்கள் எல்லோருக்குமான பொது பந்தி. இவ்வாறு ஆசார அனுஷ்டானங்களை கடைபிடிக்கும் வைதீகர்களுக்காகத் தனிப் பகுதி ஏற்பாடாகியுள்ளது. ஆனால் அவ்வாறு தனித்து உணவருந்தும் ஆசார விதியைத் தொடர்ந்து பின்பற்றவோ அல்லது கைவிடுமாறோ தூண்டும் வகை யில் அவர் எல்லோருக்கும் பொதுவாக ஏதும் கூறிய தில்லை. தனிப்பட்டமுறையில் யாரிடத்தும் ஒரே மாதிரியான கருத்தும் தெரிவித்ததில்லை. சாப்பாட்டுக் கூடத்தில் அவர் கிழக்குச் சுவர் ஓரமாக தடுப்பின் முகப்புக்கு எதிரில் அமர்ந்து கொள்கிறார். ஆகவே

தடுப்புக்கு இரு பகுதிகளிலும் உள்ளவர்கள் அவரைக் காணமுடிகிறது.

பரிசாரகர்களும் பிராமண ஸ்திரீகளும் அனைவருக்கும் வரிசை வரிசையாக பந்தி பரிமாறுகின்றனர் — அன்னம், கறி, கூட்டு, ஊறுகாய் ஆகியவை. ஸ்ரீபகவான் முதலில் சாப்பிடத் தொடங்குவதற்காக எல்லோரும் காத்திருக்கிறார்கள். அவரோ எல்லோர் இலையிலும் பரிமாறி முடியும் வரை காத்திருக்கிறார். இங்கு அனைவரும் சாப்பிடுவதில் முழு கவனம் செலுத்துகிறார்கள். மேலை நாடுகளில்போல ஒருவர்க்கொருவர் வளவள வென்று பேசிக் கொண்டே உணவருந்த மாட்டார்கள். இந்திய வழக்குப்படி விரல்களால் எடுத்துச் சாப்பிட சிரமப்படும் அமெரிக்க மாது, கையோடு ஒரு ஸ்பூன் கொண்டுவந்திருக்கிறாள். பரிமாறுபவர்களில் ஒருவர் அவள் இலையில் கறிகாய்க் கூட்டை கரண்டி கரண்டி யாகப் போடுகிறார். அது காரமில்லாமல் ஸ்பெஷலாகச் சமைக்கப்பட்டது. பொதுச் சமையலில் போடும் காரப் பொடிகள் அதில் இல்லை. 'ஸ்ரீபகவான் அவ்வாறு வெளி நாட்டினரான உங்களுக்காகப் பிரத்தியேகமாகத் தயாரிக் கும்படி எங்களைப் பணித்துள்ளார்' என்கிறார் பரிமாறு பவர். மற்ற அனைவரும் கையால் எடுத்துச் சாப்பிடுவதில் முனைந்திருக்கின்றனர்.

இரண்டாம் முறை அன்னம், கறி பரிமாறவும், பாயசம், பழம், மோர், குடிநீர் கொண்டு வருவதற்காக வும் பரிசாரகர்கள் மேலும் கீழும் நடந்தவண்ணமிருக் கின்றனர். பரிமாறும் ஒருவரை ஸ்ரீபகவான் கோபத்துடன் கூப்பிடுகிறார். ஆசிரம வாழ்வின் நடைமுறையில் யாரே னும் தவறு செய்தால் கோபங்கொள்வதுபோல் காட்டிக் கொள்வார். அவர் இலையில் மட்டும் அரை மாம்பழக் கதுப்பைப் போட்டுப் போனதுதான் அந்த பரிசாரகன் இழைத்த தவறு. மற்றவர்களுக்குக் கால் மாம்பழத்

துண்டுதானே பரிமாறப்படுகிறது? அவர் தமது இலையில் போட்ட அரை மாம்பழத் துண்டை தட்டில் வைத்து விட்டு அதில் இருப்பவற்றுள் மிகச் சிறிய மாம்பழத் துண்டை பொறுக்கி எடுத்துத் தமது இலையில் போட்டுக் கொள்கிறார்.

ஒவ்வொருவராகச் சாப்பிட்டு முடிக்கிறார்கள். சாப் பிட்டவர்கள் எழுந்து சென்று வெளியிலுள்ள குழாயில் கைகழுவிக் கொண்டபின் அவரவர் வீட்டுக்குச் செல்கி றார்கள்.

பிற்பகல் இரண்டு மணி வரை ஸ்ரீபகவான் தரிசன கூடத்தில் இளைப்பாறுகிறார். கூடத்துக் கதவுகள் சாற் றப்படுகின்றன. உடல் நலம் குன்றிவிட்டதால் மத்தி யான ஓய்வு அவசியம் என ஆசிரம நிர்வாகம் தீர்மா னித்தது. ஆனால் அதை எவ்வாறு அமல் படுத்துவது? அவரது அனுமதியைக் கேட்டாலோ, பக்தர்களுக்கு இடைஞ்ச லாக இருக்கக்கூடிய எந்த சீராட்டலையும் அவர் ஏற்க மாட்டார் என்பதில் சந்தேகமே இல்லை. அவரைக் கேட்டு அவர் மறுத்துவிடுவதைத் தவிர்க்க நிர்வாகிகள் சுற்றுவழியில் மாற்றத்தை ஏற்படுத்தினர். மத்தியான வேளையில் கூடத்திற்குள் செல்ல வேண்டாம் என பக்தர்களைக் கேட்டுக் கொண்டனர். சில நாட்கள் எல்லாம் அவ்வாறே சரிவர நடந்தன. பிறகு ஒரு நாள் புதிதாக வந்திருந்த ஒருவர் இந்த விதி தெரியாமல் மதிய உணவுக்குப் பின் கூடத்துள் நுழைந்தார். பணியாள் ஒருவன் அவரை வெளியே வந்து விடுமாறு சமிஞ்ஞை செய்தான். அது கண்ட ஸ்ரீபகவான் அந்தப் பணி யாளைக் கூப்பிட்டு, 'என்ன இதெல்லாம்' என வினவி னார். மறு நாள் முற்பகல் சாப்பாடானதும் ஸ்ரீபகவான் கூடத்து வெளிப் படிக்கட்டில் உட்கார்ந்து விட்டார். 'இன்னமும் வெளியே உட்கார்ந்திருக்கிறீர்களே' என்று பணியாள் விநயமாகக் கேட்டபோது, அவர் சாவதான

மாக, "அதான் இரண்டு மணிவரை யாரும் ஹாலுக்குள் போக அனுமதி கிடையாதாமே" என்றார். அப்புறம் மத்தியான வேளையில் ஓய்வெடுக்க அவரை இணங்க வைப்பது பெரும்பாடாகிவிட்டது!

பிற்பகலில் கூடத்தில் பல புது முகங்களைக் காண லாம். ஏனெனில் ஒரு சில பக்தர்கள் மட்டுமே காலை யும் மாலையும் அங்கு இருப்பார்கள். ஆசிரமத்திற்கு அருகில் வசிப்பவர்கள் கூட, வீட்டுவேலை மற்றும் வேறு ஜோலியாகப் போய் விடுவார்கள். பல பக்தர்கள் குறிப்பிட்ட நேரத்திற்கு மட்டுமே வருவார்கள்.

ஸ்ரீபகவான் ஒருபோதும் வேதாந்த விமரிசனம் ஏதும் செய்வதில்லை. கேள்விக்கான பதிலாக, அல்லது வெகு அபூர்வமாகவே தத்துவக் கோட்பாடுகள் எடுத்துரைப் பார். விடை கூறுதல் ஏதோ குரு பீடாதிபதி ஆழ்ந்த சிந்தனையுடன் தோரணைக் குரலில் உதிர்க்கும் வசனம் போல் இல்லாமல், பொருள் நயமும், ஹாஸ்ய ரசமும், சிரிப்பும் கலந்த உரையாடலாகவே நிகழும். அவர் சொல்லி விட்டார் என்பதற்காக கேள்வி கேட்டவர் அந்த பதிலை ஏற்றுத்தான் ஆகவேண்டும் என்பதில்லை. சந்தேகம் தீரும் வரை கேள்விகேட்டு விவாதிக்கும் சுதந் திரம் யாருக்கும் உண்டு. பிரும்மஞான இயக்கத்தைச் சேர்ந்த ஒருவர், "ஆவி உருவான ஆசான்களைத் தேடுவதை ஸ்ரீபகவான் அங்கீகரிக்கிறாரா?" என்று வினவிய போது அவர் உடனடியாய் சமத்காரமாக, "ஆவி ரூபமா? அப்படியென்றால் உங்கள் கண்ணுக்கு எப்படிப் புலப்படும்?" என மடக்குகிறார். "ஆழ்ந்த உணர்வி னால்" என்று பிரும்மஞான சங்கத்தவர் பதில் கூறியது தான் தாமதம், ஸ்ரீபகவானின் மெய்யான விடை வெளிப் படுகிறது: "தூய உணர்வில் துய்யும் போது வேறு யாருமே கிடையாது."

வேறொரு ஆசிரமத்திலிருந்து வந்த ஒருவர் கேட்கிறார்: "உலகம் உண்மையல்ல, அநித்தியம் என்கிறீர்கள். அது நித்தியமே என்கிறோம் நாங்கள். வித்தியாசம் இதுதானே ?"

இது பற்றிய விவாதத்தைத் தவிர்க்க ஸ்ரீபகவான் நகைச்சுவையைக் கையாளுகிறார்: "இல்லை, மாறாக, பரம்பொருள் ஒன்றே என்று நாம் கூறும்போது ஆண்டவன் படைத்த இந்த உலகமும் மெய்யானது எனக் கொள்கிறோம். அதே சமயம் ஆண்டவனும் முழுமுதல் உண்மை என்றும் கூறுகிறோம். ஆனால் நீங்களோ தனித்தனியே மூன்று உண்மைகள்[1] உள்ளன என்று வாதிக்கும்போது உண்மையைக் கூறுபோட்டு உலகத்திற்கு மூன்றில் ஒரு பங்கும், கடவுளுக்கும் அதே போல் மூன்றில் ஒரு பங்கு உண்மையை மட்டுமே அளிக்கிறீர்கள்."

எல்லோரும் 'கொல்'லென்று சிரிக்கிறார்கள். ஆயினும் அத்தோடுவிடாமல் சில பக்தர்கள் அந்த வேறு ஆசிரமத்துக்காரரோடு விவாதத்தைத் தொடர்கிறார்கள். ஸ்ரீபகவான் குறுக்கிட்டு, "அவ்வாறான வேதாந்த சர்ச்சைகளால் பெரிதாய் பயன் ஏதும் இல்லை" என்று முற்றுப்புள்ளி வைக்கிறார்.

ஆங்கிலத்தில் கேள்வி கேட்டால் ஒரு மொழிபெயர்ப்பாளர் மூலம் பதிலளிக்கிறார். சரளமாக ஆங்கிலம் பேசுவதில்லை என்றாலும் மற்றவர் பேசுவது அனைத்தையும் புரிந்து கொள்கிறார். மொழிபெயர்ப்பில் சிறிதே பிழை இருப்பினும் மொழிபெயர்ப்பவரை உடனுக்குடன் திருத்துகிறார்.

விடைகள் சித்தாந்த ரீதியாக வேறுபடாவிடினும் கேள்வி எழுப்புவோருக்கு ஏற்றவாறு மாறுபடுபவை.

1. துவைத சிந்தாந்தப்படி ஜகத், ஜீவன், பரம் ஆகிய மூன்றுமே அனாதியானவை.

அந்த விதத்தில் ஒவ்வொரு விடையும் தனித்தன்மை வாய்ந்தவை. கிறித்தவ மத போதகர் ஒருவர் கேட்டார், "கடவுள் என்று தனியாக ஒருவர் இருக்கிறாரா" என்று. அத்துவைத சித்தாந்தையும் விட்டுக் கொடுக்காமல் ஸ்ரீ பகவான் அவருக்குப் புரியும்படி பதிலை சாதுரியமாக அமைத்தார்: "ஆம். ஆண்டவன் எப்போதும் தனித்து நிற்பவன்தான். உங்கள் முன் எப்போதும் நிற்கும் 'தனி நான்' அவனே. உலகாயத விஷயங்களுக்கு நீங்கள் முக்கியத்துவம் கொடுக்கும்போது கடவுள் எங்கோ பின்னால் மறைந்து விட்டவர்போல் தோன்றுகிறார். எண்ணங்கள் யாவற்றையும் விலக்கி அவனை நாடினால் அவனே உங்களுள் 'நான்' ஆக, ஆன்மாவாகத் தனித்து நிற்பான்."

மோஸஸ் வாயிலாய் கடவுள் அறிவித்த பெயர் அதுவே என்பதனை அந்தக் கிறித்துவ சமயவாதி நினைவு கூர்ந்தாரா என்பது தெரியாது. சில சமயம் ஸ்ரீபகவான், 'ஆன்மாவே நான்' என்பதன் முதன்மை நிலையை, அதுவே ஆண்டவனின் நாமமும் ஆகும் என்றும் கூறியுள்ளார்.

புதிதாக வருபவர்கள்தாம் பொதுவாகக் கேள்விகள் கேட்டு விடைகளும் பெறுவார்கள். அணுக்க பக்தர்களுக்கோ பகவானிடத்தே கேட்பதற்கென்று கேள்விகள் ஏதும் இல்லை. சிலர் ஏதும் கேட்டதே கிடையாது. அவர் அளித்த விடைகள்—விளக்கங்கள் அவரது போதனையாகக் கருதமாட்டாது. போதனைப் பாதையைச் சுட்டிக் காட்டும் கைகாட்டிகளே அவ்விளக்கங்கள்.

மணி நாலேமுக்கால். ஸ்ரீபகவான் தமது விறைப்பான முழங்கால் முட்டியையும் கால்களையும் தேய்த்துக் கொள்கிறார். கைத்தடியை எட்டுகிறார். சார்வணையிலிருந்து எழ சில சமயம் இரண்டு மூன்றுதரம் பிரயாசைப் படவேண்டியிருக்கிறது. ஆனால் அதற்கு எவரது உதவியையும் ஏற்கமாட்டார். பின்னர் அந்த இடத்தை விட்டகன்ற இருபது நிமிஷ இடைவெளிக்குள் கூடம்

திரும்பவும் பெருக்கி சுத்தம் செய்யப்படுகிறது. மஞ்சத்து விரிப்புகள் சரி செய்யப்படுகின்றன.

அவர் திரும்பி அங்கு வந்தமர்ந்த பத்து பதினைந்து நிமிஷங்களுக்குள் வேதபாராயணம் தொடங்குகிறது. அதையடுத்து, ஸ்ரீபகவான் இயற்றிய உபதேசவுந்தியார் (30 பாக்கள் கொண்டது) இசைக்கப்படுகிறது. இங்கு வைதிக சம்பிரதாயத்தை ஸ்ரீபகவான் அனுசரிக்காதது குறிப்பிடத்தக்கது. கண்டிப்பாகச் சொல்லப்போனால் அந்தணர்கள் மட்டுமே வேத உச்சாடனத்தை செவி மடுக்கலாம் என்பது நியதி. ஆயினும், ஸ்ரீபகவான் முன் னிலையில் எவரும் வேத ஓதலைக் காதாரக் கேட்கலாம். வேத பாராயணத்தால் என்ன பிரயோசனம் என்று யாரோ வினவியதற்கு அவர், "அதன் ஒலி அதிர்வு மனத்தை நிலைநிறுத்த உதவுகிறது" என்று மட்டுமே கூறினார். ஓதும் வரிகளின் அர்த்தத்தைத் தெரிந்து கொள்வது அவசியமில்லை என்றும் வெளிப்படையாகக் கூறியுள் ளார். அவர் அறிவுறுத்திய தியான முறைக்கு இது ஓர் அனுபவரீதியான விளக்கமாக உள்ளது – தியானம் எண்ண பூர்வமானது அன்று. எண்ணங்களை எல்லாம் கடந்து மனத்தை அகமுகமாகத் திருப்பி ஆன்ம உணர் வில் ஒன்றுவதே தியானம்.

வேத பாராயணம் ஃமார் முப்பத்தைந்து நிமிடம் நீடித்தபின் முற்றுப்பெறுகிறது. பாராயணம் நடைபெறு கையில் பல சமயம் அவர் ஆடாது அசையாது அமர்ந் திருக்கிறார். சலனமற்ற முகத்தில் நித்தியத்துவம், எளிமை, கற்சிலை போன்ற கம்பீரம் அனைத்தும் ஒருங்கே பிரதி பலிக்கின்றன. பாராயணம் முடிந்தபிறகு அனைவரும் ஆறரை மணிவரை அமர்ந்திருக்கிறார்கள். அந்தி மங்கு வதற்குள் பெண்கள் ஆசிரமத்தைவிட்டுச் சென்றுவிட வேண்டும் என்று ஓர் கட்டுப்பாடு. ஆண்களில் பலர் மேலும் ஒரு மணிநேரம் அவ்விடத்தே இருக்கிறார்கள் –

சிலர் மௌனமாக, சிலர் பேசிக்கொண்டு, வேறுசிலர் தமிழில் துதிப்பாடல்கள் பாடிக்கொண்டு. பிறகு இரவுச் சாப்பாடு.

சாயங்கால தரிசன நேரம்தான் குறிப்பாக சிறப்பு வாய்ந்தது. எவ்வாறெனில், அதி காலையில் நடைபெறும் வேத உச்சாடனமும், பிந்தைய நேரங்களில் நிலவும் நட்புறவும் மாலை நேரக் கூட்டத்தில் ஒருங்கிணைந்துள்ளன. மாலையில் வெளிப்பார்வைக்கு ஏதோ சிரிப்பும் வேடிக்கைப் பேச்சுமாகக் கூடத்து சூழ்நிலை காணப்பெறினும், பயபக்தியுடன் வருவோர் அந்நேரத்திலும் பக்திப்பெருக்கையும் மனச் சாந்தியையும் உணருகின்றனர்.

ஒரு பணியாள் ஏதோ மருந்துத் தைலம் தேய்த்து அவரது கால்களைப் பிடித்துவிட விழைகிறான். ஆனால் அவர் தமது கால்களை இழுத்துக் கொண்டு தைல குப்பியை அவனிடமிருந்து பிடுங்கிக் கொள்கிறார். பணியாட்கள் பிடிவாதத்துடன் மிகவும் மன்றாடுகிறார்கள். தமது மறுப்பை கேலிப் பேச்சாகத் திருப்புகிறார்: "பார்வை மூலமாகவும் பேச்சு வழியாகவும் நீங்கள் அருள் பெற்றுக் கொண்டாகிவிட்டது. இப்போது நெருங்கித் தொட்டு வேறு ஸ்பரிச அருள் பெறப்பார்க்கிறீர்களா ? விட்டு விடுங்கள். என்னை நானே தொட்டுக் கொண்டு எனக்கும் கொஞ்சம் அருள் சம்பாதித்துக் கொள்கிறேன்!"

ஆனாலும் அவரது நகைச்சுவையை இவ்வாறு காகிதத்தில் வெறுமனே வடித்தெழும்போது நேர் அனுபவத்தின் காட்சியை ஒரு சிறிய அளவிலும்கூட படம்பிடித்துக் காட்ட இயலாமற்போகிறது. அவர் விரித்த வார்த்தை விசித்திரங்கள் விஷயமும் விகடமும் வாய்ந்தவை என்றாலும் அவற்றைக் காட்டிலும் அவர் அவற்றை எடுத்துக் கூறும் தோரணை மனோகரமானது. ஒரு கதை சொல்லும் போது அவரே முழு நடிகராகிவிடுவார். ஆங்காங்கே

கதாபாத்திரங்களைத் தாமே ஏற்று உட்கார்ந்தபடியே சிறப்பாக நடித்துக் காட்டுவார். அவர் பேசும் தமிழ் மொழி தெரியாதவர்கள்கூட அவர் பேச்சின் முகபாவங் களை வெறுமனே பார்த்திருப்பதில் மோகித்துப் போவர். அவரது நிஜ வாழ்வும்கூட அந்த வெளி நடிப்பின் ஓர் அம்சமே ஆகும். அன்றாட வாழ்க்கை மேடையின் துரித மாற்றங்களில் ஒரு சமயம் ஹாஸ்யமும் சமத் காரமுமாக இருப்பார், அடுத்த வினாடிகளில் ஆழ்ந்த அனுதாபமும் கருணையும் குடிகொண்டவராக இயங் குவார்.

சுற்றிலும் நிகழ்வன எதையும் உணராது வாய் திறவா சுவாமியாக இருந்துவந்த ஆரம்ப நாட்களிலும் கூட அவருக்கு நகைச்சுவை முனைப்பு உண்டென்று அறிகிறோம். சென்றுபோன வேடிக்கை நிகழ்ச்சிகளைப் பற்றிப் பல ஆண்டுகளுக்குப் பின் அவரே மற்றவர் களுடன் பகிர்ந்துகொண்டுள்ளார். பவழக்குன்று வாசத் தின்போது அவரது அன்னையும் மற்ற ஜனங்களும் கும்பலாக அவரைக் காண வந்த சமயம் அது. வந்த வர்கள் உணவருந்த டவுனுக்குச் செல்வதற்கு முன்னால் அவரை பவழக்குன்றின் ஆலயத்துள் ஓர் உள்ளறையில் வைத்து வெளியே தாளிட்டுப் பூட்டும் போட்டுவிட்டுப் போயினராம். தாயார் அழைக்க வந்துவிட்டதால் அவர் அவ்விடத்தை விட்டு வேறெங்கேனும் ஓடிப்போய்விடு வாரோ என்று பக்தர்களுக்குப் பயம். ஆனால் அவருக் குத் தெரியுமாம் அந்த அறைக் கதவை அதன் ஓரக் கீலோடு அலாக்காய்த்தூக்கினால் கையோடு வந்துவிடும் என்று. வெளியே போனவர்கள் திரும்பிவந்து தொந்தி ரவு கொடுப்பதைத் தவிர்ப்பதற்காக அவர் கதவைத் தாழ்பாளோடு தூக்கி நகர்த்தி வெளியே வந்து, திரும் பவும் கதவை கீலில் பொருத்திவிட்டு வெளியே நழுவி விட்டாராம். திரும்பி வந்து பார்த்தவர்கள், பூட்டும் தாழ்ப்பாளும் அப்படியே இருக்க, அறை காலியாக

இருப்பதை ஜன்னல் வழியே கண்டு திகைத்துப் போயி னராம். அப்புறம் ஒருவரும் இல்லாத சமயம் பார்த்து அவர் முன்போல் கதவைத் தூக்கி அறைக்குள் சென்று சாற்றிக் கொண்டாராம். பிறகு அவர்கள் வந்து திறந்து விட்டார்களாம். அவரது முன்னிலையிலேயே உட்கார்ந்து கொண்டு அதிசயித்துப் பேசிக்கொண்டார்களாம், ஆஹா! இந்த இளம் யோகி பூட்டின அறையிலிருந்து தம் அணிமா சித்தியால் மாயமாய் மறைந்துபோய் திரும்ப வும் அறைக்குள் வந்துசேர்ந்துவிட்டார்' என்றெல்லாம்! கேட்டுக் கொண்டிருந்த இவர், முகத்தில் எவ்வித சலனமு மின்றி மரக்கட்டைபோல உட்கார்ந்திருந்தாராம். ஆனால் பல ஆண்டுகளுக்குப்பின் அக்கதையை அவர் அங்க அசைவோடு முகம் மலரக் கூறியபோது கூடம் முழு வதும் குலுங்கிக் குலுங்கிச் சிரித்தது.

வருடாந்திரத் திருவிழா நாட்களைப் பற்றியும் இங்கு கூற வேண்டும். பெரும்பாலான பக்தர்கள் திருவண் ணாமலையிலேயே நிரந்தரமாகத் தங்கியிருக்க முடியா தவர்கள். அவ்வப்போது வந்து போவார்கள். பொது விடுமுறை நாட்களிலும், குறிப்பாகக் கார்த்திகை தீபம், தீபாவளிப் பண்டிகை, மகாபூஜை (அன்னை மறைவு நினைவு நாள்) ரமண ஜயந்தி (ஸ்ரீபகவானின் பிறந்த நாள்) ஆகிய நான்கு விசேஷ தினங்களையொட்டி மக்கள் திரள் திரளாக வருவார்கள். இவற்றுள் ஜயந்தி சுப தினத்தன்று ஆசிரமத்தில் எக்கச்சக்கக் கூட்டம். தொடக்கத்தில் ஸ்ரீபகவான் தமது ஜயந்தியை கொண் டாடுவதில் தயக்கம் காட்டினார். அதைப்பற்றி செய் யுளும் இயற்றியுள்ளார்:

**பிறந்தநா ளேதோ பெருவிழாச் செய்வீர்**
**பிறந்ததெவ ணாமென்று பேணிப்—பிறந்திறத்தல்**
**இன்றென்று மொன்றா யிலகுபொரு ளிற்பிறந்த**
**அன்றே பிறந்தநா ளாம்.**

*[பொருள்: பிறந்த நாளைப் பெரிய விழாவாய்க் கொண் டாடும் அன்பர்களே! (பிறந்த நாள் என்பது எது, கேளுங்கள்). தேகாத்ம புத்தி வடிவ அகந்தையாகிய நாம் பிறந்தது எங்கிருந்து என்று விசாரித்து (அதன் பயனாகப்) பிறப்பு-இறப்பு இல்லாமல் என்றும் ஏகமாய் விளங்கும் மெய்ப் பொருளில் நாம் ஐக்கியப்-படுகின்ற அந்த நன்னாளே (உண்மையில்) நாம் பிறந்த நாளாகும்.]*

**பிறந்தநா ளேனும் பிறப்புக் கழாது**
**பிறந்தநா ளுற்சவமே பேணல் – இறந்த**
**பிணத்திற் கலங்கரிக்கும் பெட்பென்றே தன்னை**
**உணர்ந்தொடுங்க றானே யுணர்வு.**

*[பொருள்: (அந்தோ! இவ்வுலகில் உடல் தாங்கிப் பிறந் தோமே என்று ஏனைய நாட்களில் வருந்த மறந்தாலும்) பிறந்த நாள் அன்றைக்காவது அதையெண்ணி அழ வேண்டும். (உண்மை இதுவாக) அழவேண்டிய நாளாகிய அதைப் பிறந்ததின விழா வாகக் கொண்டாடுதல், இறந்த சவத்திற்கு (மலர்களாலும் ஆடை யணிகளாலும்) அலங்காரம் செய்து மகிழும் தன்மையே (அறிவின் மையே) ஆகும் என்று கருதி, தன்னையறிந்து (ஆன்மாவில்) ஒன்றாவதுதான் அறிவுள்ள நிலை.]*

எது எப்படியோ, பக்தர்களைப் பொருத்தவரை ஸ்ரீபகவானின் ஜன்ம தினத்தைக் குதூகலமாகக் கொண் டாடக் கொள்ளை ஆர்வம். ஆனால் அந்த நாளிலோ வேறு எந்த நாளிலோ தம்மை வைத்து பூஜை செய்வதை அவர் அனுமதிக்கவில்லை. ஜயந்தியன்று ஏராளமான பக்தர்கள், அடியார்கள், அன்பர்கள் ஸ்ரீபகவானோடு சேர்ந்தமர்ந்து சாப்பிடுவார்கள். விசாலமான சாப்பாட் டுக் கூடம் இடம் கொள்ளாமல் வெளிச்சதுரத் திடலி லும் கீற்றுப் பந்தல் போட்டு அங்கும் பந்தி பந்தியாய் சாப்பாடு. ஏழை மக்களுக்கும் அன்னதானம் உண்டு. இரண்டு மூன்று நீண்ட வரிசைகளாக வந்து நிற்கும் ஏழைகளுக்கு உணவைத் தட்டுத் தட்டாக எடுத்து அன்னமிடுவார்கள். போலீஸ் சேவகர்களும் சாரணர் அணிகளும் நுழைவாயில்களில் காவல் நின்று கூட்டத் தைச் சமாளிப்பார்கள்.

அவ்வாறான பண்டிகை நாட்களில் ஸ்ரீபகவான் தனித்து விலகி, ராஜரீகமாய் அமர்ந்திருப்பினும், வரும் ஒவ்வொரு பக்தரையும் சினேக பாவத்துடன் நோக்குவார். ஒரு கார்த்திகைத் திருவிழா நாளன்று ஆசிரம வளாகத்தில் மக்கள் நிறைந்து நெருக்கியடித்து நின்றபோது ஸ்ரீபகவானைச் சுற்றி கிராதி போடப்பட்டது. சின்னஞ் சிறுவன் ஒருவன் கிராதி இடைவெளி வழியாக முண்டியடித்து நுழைந்து அவரருகில் ஓடிப்போய்த் தன் கையிலிருந்த புது விளையாட்டு பொம்மையை அவரிடம் காட்டினான். அவர் பணியாளன் பக்கம் திரும்பி, "பார்த்தாயா, உன் கிராதியால் ஒரு பிரயோஜனமும் இல்லை என்று?" என சிரித்தவாறு உரைத்தார்.

ஸ்ரீபகவான் திருவண்ணாமலை வந்தடைந்து ஐம்பது வருடங்கள் நிறைவுபெற்ற 1946–ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் பொன்விழாவாக வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. எங்கெங்கிருந்தோ வந்த பக்தர்கள் ஏராளமாகக் குழுமியிருந்தனர். அதனையொட்டி எழுதப்பட்ட கட்டுரைகள் கவிதைகள் கொண்ட பொன் விழா மலர் ஒன்றும் வெளியிடப்பட்டது.

கடைசி ஆண்டுகளில் பழைய கூடம் சாதாரண நாட்களிலும் கூட நிரம்பிவழிந்தது. இடம் போதவில்லை. வெளியில் ஓர் கீற்றுப் பந்தலின் கீழ் ஏனையோர் உட்காருவது வழக்கமாகிவிட்டது. அன்னையின் சமாதி மீது ஓர் ஆலயம் எழுப்பும் பணி 1939ஆம் ஆண்டு துவங்கப்பெற்று, 1949இல் பூர்த்தியடைந்தது. அதோடு கூட, ஸ்ரீபகவானுடன் பக்தர்கள் உட்காருவதற்காக சற்று விசாலமான புதுக்கூடமும் கட்டப்பட்டது. ஆலயமும் புதுக்கூடமும் ஒரே கட்டடத்தின் இரு பாகங்கள். ஆலயம் ஆகம விதிப்படி நிர்மாணிக்கப்பட்டது.

புதுக் கட்டடம் பழைய கூடத்திற்கும் அலுவலகத்திற்கும் தென்புறமாக நீண்டு அமைந்துள்ளது. கட்டடத்

தின் மேற்குப் பகுதியில் ஆலயம், தென் பகுதியில் விசாலமாய் காற்றோட்டத்துடன் கூடிய சதுரக் கூடம்.

ஆலய கும்பாபிஷேகமும் புதுக்கூடத் திறப்பு விழாவும் ஒன்றாக வெகு விமரிசையாக நடைபெற்றன. ஏராளமான பக்தர்கள் வந்திருந்தனர். நீண்டகாலமாய்த் திட்டமிட்டு ஆண்டாண்டுகள் உழைத்து உருவாக்கப்பட்ட கட்டடம் அது. ஆனால் பகவான் அந்தப் புதுக் கூடத்திற்குள் நுழைவதில் தயக்கம் காட்டினார். எளிமையையே விரும்பும் அவருக்குத் தன்னைச் சுற்றி அவ்வாறான ஆரவாரம், ஆடம்பரங்களில் பிடித்தமில்லை. பக்தருள் பலருங்கூட பழைய சிறு கூடத்துள் எதிரொலிக்கும் பகவத் பிரசன்னமும் உயிரோட்டமும் புதுக் கூடத்தில் காணோம், அதில் ஏதோ வெறுமையை உணர்கிறோம் என்று தயங்கினர். ஸ்ரீபகவான் அதில் காலடி எடுத்துவைத்தபோது அவரது இறுதிநோய் அவர் உடலை இறுகக் கவ்விவிட்டிருந்தது.

# 14. உபதேசம்

பகவான் ஸ்ரீரமணர் அனைவருக்கும் வாரி வழங்கிய உபதேசம் அதுகாறும் எவர்க்கும் எளிதில் கிடைப்பதற் கரிய எத்துணை மாபெரும் மறைபொருட் பொக்கிஷம் என்பது வியப்புக்குரியது. அவரை எவரும் அணுகலாம்; பொதுவாக, வினாக்களுக்கான விடைகளும் குழுமியிருப் போர் அனைவரின் முன்னிலையிலேதான் அளிக்கப் பட்டு வந்தன. அவ்வாறு இருந்தும், அவர் புகட்டிய போதனைகளும் செயல்முறைகளும் சீடர்களின் அவரவர் சுபாவத்திற்கும் படிநிலைக்கும் தக்கவாறு வெவ்வேறாக அமைந்தன. அமெரிக்காவில் ஏராளமானபேர்கள் பின்பற்றும் சுவாமி யோகாநந்தா ஒரு முறை ஸ்ரீரமணரைக் கேட்டாராம், "மக்களை உய்விக்க தங்களது ஆன்மீக அறிவுரை யாது?" என்று. அதற்கு அவர், "அது தனியொருவரின் பக்குவத்தையும் ஆன்மீக முதிர்ச்சியையும் பொருத்தது. அனைவருக்கும் ஏற்ற போதனை என்பது அசாத்தியம்" என்று பதிலுரைத்தாராம். இவ்வாறு போதனா முறை எவ்வளவு வேறுபடுகிறது என்பதை, முன்னொரு அத்தியாயத்தில் குறிப்பிடப்பட்ட ஸ்ரீரமண பக்தர்களான எச்சம்மாள், அன்னை அழகம்மாள், சிவப்பிரகாசம் பிள்ளை, நடேச முதலியார் ஆகிய நால்வரைப் பற்றிய விளக்கங்களிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

செயல் வடிவமாகவே ஸ்ரீபகவான் விளங்கினார். அவ்வாறு ஓயாது இயங்கி வருவதாக அவரே கூறியுள்ளார். அவரது அருள் வீச்சை உணர்ந்தோர்க்கு அது பற்றி சான்று ஏதும் தேவையில்லைதான். இருந்தும் செயற்பாடு வெளிமுகமாக இல்லாத காரணத்தினால், எப்போதாவது வந்து போவோரும், ஊன்றி கவனம் செலுத்தாதவர்களும் அவர் உபதேசம் என்று எதையும்

வழங்கவில்லையே, நாட்டமுடன் தேடி வருவோரிடம் பாராமுகமாய் இருக்கிறாரே என்று குறைபட்டனர். இவர்களைப் போன்ற பலர் – நடேச முதலியாரை ஸ்ரீரமணரிடம் போகவிடாமல் தடுக்க முயற்சித்த அந்தணர் ஒருவர் போன்றவர்கள் – இருக்கவே செய்தனர்.

இப்பிரச்சினைக்கு மிகமுக்கியக் காரணம் (ஸ்ரீபகவானுக்கு நிகழ்ந்தது போன்று அரிதிலும் அரிய நேர்வுகளைத் தவிர), குரு அருள் இன்றி மெய்ஞானம் கிட்ட வாய்ப்பில்லை என்பதே ஆகும். ஏனைய ஞான ஆசான்களைப் போலவே ஸ்ரீபகவானும் இதனை உறுதியாகக் கூறியுள்ளார். ஆகவே, அவரது போதனை மிகத் தூய்மை வாய்ந்தது. அவரது தரிசனமே எழுச்சியூட்டவல்லது என்று மட்டுமே அறிந்தால் போதாது. தீட்சையும் வழங்கி ஞானோபதேசம் அளிக்கும் ஞானாசிரியன் அவர் என்பதையும் அறிதல் மிக அவசியம்.

'குரு' என்ற வார்த்தைக்கு மூவகைப் பொருள் உண்டு. ஆன்மீக சாதனை ஏதும் அற்றவராயினும் தீட்சை மற்றும் உபதேசம் வழங்க அருகதையுள்ள பண்டிதரையும் குரு எனலாம். இவ்வகையினர் தலைமுறை தலைமுறையாக மதச் சடங்கு, நெறிமுறைகளை கடைபிடிப்பவர்களாகவும் இருக்கக்கூடும். இரண்டாவதாக, ஓரளவு ஆன்மீக சாதனைகளில் தேர்ந்து, தாம் கண்ட சன்மார்க்க சாதனையை சீடர்களுக்கும் உபதேசிக்கத்தக்க மகானும் குருவே. இவர்களைக் காட்டிலும் மிக உன்னதமான, உண்மையான அர்த்தத்திற்குரிய குரு என்பவர் ஆன்ம சாட்சாத்காரம் எய்து அனைத்திலும் தன்னைக் காண்பவரே ஆவார். அவரே சத்–குரு.

இக்கடைசி விளக்கத்திற்கு ஒப்பாகவே 'குரு' என்ற பதத்தை ஸ்ரீபகவான் பிரயோகிக்கிறார். "தெய்வம், குரு, ஆத்மா இவை ஒன்றே" என்றார். மேலும், "குரு" எனப்படுவோர்க்கு இவ்வாறு விளக்கம் கூறியுள்ளார்:

"குரு என்பவர் சதா காலமும் ஆன்ம உணர்வில் உள்ளாழ்ந்து கிடப்பவர். தமக்கும் பிறருக்கும் இடையே அவர் வித்தியாசம் ஏதும் காண்பவரல்ல. தாமே ஞானப்பிரகாசன் அல்லது ஆன்மீக விடுதலை பெற்றவன், தம்மைச் சூழ்ந்துள்ள மற்றவர் பந்தங்களில் பிணைந்தவர்கள் அல்லது அஞ்ஞான இருளில் உழல்பவர்கள் என்பது போன்ற தவறான மனப்பான்மையை அறவே விடுத்தவர். ஆத்ம கவனத்தில் உறுதியாய் நிலைத்துவிட்ட அவரை எந்த சூழ்நிலையிலும் அசைக்க முடியாது. ஒருபோதும் மனம் கலங்காதவர்..."

அத்தகைய குருவுக்கு அடிபணிவது ஏதோ வெளியில் சஞ்சரிக்கும் குரு ஒருவருக்கு சிரம் தாழ்த்துதல் போன்றது அல்ல. ஏனெனில் சத்குரு என்பவர் உண்மையில் சீடனின் மெய்த்தன்மையாம் ஆன்ம சொரூபம் ஆகிறார்.

"குரு உள்ளே உள்ளார். அவர் வெளியே மாத்திரம் இருப்பவர் என்ற தப்பெண்ணத்தைத் தீர்க்கும் பொருட்டே தியானம். நீ தேடும் குரு உனக்கு அயலாயிருந்தால் அவர் மறைந்து விடுவதும் நிச்சயம். அவ்வாறு தோன்றி மறையும் குருவினால் பயன் என்ன? நீ தனி என்றோ, உடம்பு என்றோ கருதுகிறவரையில் உனக்கு வெளி குருவும் தேவையே. அவர் உடம்புடன் காணப்படுவார். தன்னை உடம்பாகக் கருதும் பொய் தீர்ந்தால், குரு ஆன்மாவுக்கு அயலற்றுக் காணப்படுவார்." — மகர்ஷி வாய்மொழி 1.7

நித்திய சத்திய உணர்வில் ஊன்றி ஒன்றி குரு என்கிற உச்ச உயர்நிலை எய்துவிட்ட ஒருவர், தாமே குரு என்று கூறிக்கொள்ள மாட்டார். ஏனெனில் அவர்

நிலைத்துவிட்ட தனித்துவத்தில் அகந்தை ஏதும் மீதம் இல்லை. தமது சீடர் என்று எவரையும் கொள்ளார். வேற்றுமை நிலையைக் கடந்தவருக்கு வேறு தொடர்புகள், பந்த பேதங்கள் இருக்கமாட்டா.

பரம சத்தியத்தில் ஒன்றி இயங்குபவரே ஞானி என்றாலும்கூட, அன்றாட நடப்பில் அவரது குண விசேஷங்கள் இழையோடிய வண்ணமே இருக்கின்றன. ஆகவே, ஞானியரின் மனித இயல்புகளிலும் பெரும் வேறுபாடுகள் இருக்கத்தான் செய்கின்றன. ஸ்ரீபகவானின் தனிச்சிறப்பாக அவரது புத்திகூர்மையையும் நுண்ணறிவையும் குறிப்பிடலாம். திருவண்ணாமலை வந்தடைந்த தொடக்க ஆண்டுகளில் மௌன விரதம் பூண்டவர் என்று அனைவரும் எண்ணும்படி வாய்பேசாது மௌனியாக இருந்ததற்குக் காரணம் பிறர் தொந்திரவைத் தவிர்ப்பதன் பொருட்டுத்தான். மௌன சுவாமி என்று ஆகிவிட்டால் 'யார் இவர்?' போன்ற கேள்விகளையும் சொந்த பந்தங்களையும் தவிர்க்கலாம் அன்றோ! உபதேசம் வழங்குமாறு பிச்சுப் பிடுங்கும் போலி பக்தர்களையும் சமாளிக்கலாம் என்பதான அனுகூலமும் உண்டல்லவா? இந்தத் தற்காப்புக் கவனம் வெற்றி கண்டது. ஆயினும் நிஜ நாட்டமுடையோர் இளம் சுவாமியின் மௌனத்தினால் பின்வாங்கவில்லை என்பதும் அதுவே அவரது சங்கற்பமும் என்பதும். வியக்கத் தக்கன.

சீடர்களைப் பற்றிய ஸ்ரீபகவானின் வாசகங்கள் கூர்ந்து நோக்கத்தக்கவை. 'எமக்கு சீடர் எவரும் கிடையாது' என்று சில சமயங்களில் கூறியுள்ளார். தாம் ஒரு குருநாதர் என்று வெளிப்படையாக என்றுமே காட்டிக் கொண்டதில்லை. ஆயினும், 'குரு' என்ற பதத்தை ஞானி என்பதற்கு நிகரானதாக அறிவுறுத்தியதன் மூலம், தாமே அந்த குரு என்பதனை சந்தேகத்திற்கு இடமின்றி

தெளிவுபடுத்தியுள்ளார். "ரமண ஸத்குரு" என்ற துதிப் பாடலை கோஷ்டியாக இசைக்கும்போது தானும் அவர்களோடு சேர்ந்து பாடி இருக்கிறார்.

மேலும், பக்தர் எவரேனும் உண்மையில் மனக் கிலேசத்துடன் அவரை அணுகி தீர்வுவேண்டி நின்றால், சிற்சில சமயங்களில் ஐயந்திரிபுக்கு இடமின்றி இதனையே உறுதிப்படுத்தியுள்ளார். மேஜர் சாட்விக் எனும் ஆங்கிலேய பக்தர், 1940ஆம் ஆண்டுகாலத்தில் மகரிஷி தமக்கு வழங்கிய அறிவுரையை இவ்வாறு குறிப்பெடுத்து வைத்துள்ளார்:

*சாட்விக்:* சீடர்கள் கிடையாது என்று பகவான் தாங்கள் சொல்கிறீர்கள்.

*பகவான்:* ஆம்.

*சாட்விக்:* மோட்சம் பெற, குரு அவசியம் என்றும் கூறுகிறீர்கள்.

*பகவான்:* ஆம்.

*சாட்விக்:* அப்படியானால் நான் என்னதான் செய்ய? இத்தனை ஆண்டுகளாக நான் இங்கு (ஆசிரமத்தில்) உட்கார்ந்து வந்ததெல்லாம் வீண் காலவிரயம் என்கிறீர்களா? தாங்கள் என் குரு இல்லை என்றால் நான் தீட்சை பெற வேறு எங்காவது சென்று வேறு யாராவது ஒரு குருவை நாடவேண்டுமோ?

*பகவான்:* தொலை தூரத்திலிருந்து இங்கு உம்மை கொண்டுவந்து சேர்த்து இத்தனை காலம் இங்கே தங்கவைத்தது என்னவென்று எண்ணுகிறீர்? சந்தேகம் எதற்காக? வேறெங்காவது குருவைத் தேடிப் போகவேண்டுமென்றால் எப்போதே கிளம்பியிருக்கலாமே? குரு அல்லது ஞானி என்பவர் தம்மை மற்றவரிடமிருந்து பிறிதாகக் கருத மாட்டார். அவரைப் பொருத்தவரை அனைவரும் அவருள் அடக்கம். ஆகவே, ஞானியொருவர் 'இன்னார்

இன்னாரே எமது சிஷ்யன்' என்று தாமே கூறுவது எங்ஙனம்? ஆனால் ஆன்ம விடுதலை பெறா தவனோ அனைவரையும் பற்பலராகவே காண்கின் றான். மற்றவர் தன்னின்றும் வேறுபட்டவர்களாக எண்ணுகிறான். அத்தகையோர்க்கு குரு—சிஷ்ய உறவு உயிர்த்தோற்றமாகிறது. உண்மையை உணர்த்தி அவனை விழிப்பிக்க குரு அருள் தேவைப்படுகிறது. அப்படிப்பட்டவர் தீட்சை பெற மூன்று வழிகள் உண்டு – முறையே, குருவின் ஸ்பரிசம், கடாட்சம், மௌனம் (மௌனமே தமது தீட்சை முறை என்பதை ஸ்ரீ பகவான் எனக்கு இவ்வாறு சொல் லாமற் சொன்னார் போலும்! வேறு பலருக்கும் இதுபோன்று முன்பு பகன்றுள்ளார்).

சாட்விக்: அப்படியானால் பகவானுக்கு சீடர்கள் உண்டு என்று ஆகிறது.

பகவான்: நான் முன்பே சொன்னதுபோல, பகவானைப் பொருத்தவரை சீடர்கள் என்று யாரும் கிடையாது. ஆனால் சீடர்களின் மனக்கோணத்திற்குத் தக்கவாறு குருவின் கருணா வெள்ளம் கடல் போன்றது. ஒருவன் கையில் கோப்பை ஏந்தி வந்தால் அவன் மொண்டு செல்லக் கூடியது ஒரு கோப்பையளவு மட்டுமே. இங்கு கடலின் கஞ்சத்தனத்தை குறைகூறிப் பய னில்லை அல்லவா? எவ்வளவுக்கெவ்வளவு பெரிய பாத்திரம் கொண்டு வருகிறானோ அத்தனைக்கத் தனை மொண்டு நிறப்பிச் செல்ல முடியும். இது அபேட்சிப்பவரையே சார்ந்தது.

சாட்விக்: அவ்வாறெனில், பகவான் தாங்கள் எனது குருவா இல்லையா என்று அறிவது வெறும் நம்பிக் கையைப் பொருத்தது, வாய் மலர்ந்து 'நீ எமது சீடன்' என்று ஒப்பமாட்டார் என்றாகிறது...

பகவான்: (நிமிர்ந்து அமர்கிறார். மொழிபெயர்ப்பாளர் பக்கம் திரும்பி கம்பீரமாய் ஆணித்தரமாகப் பேசுகி

றார்): "கேள் அவரை, எழுத்து மூலம் அவருக்கு சான்றுப் பத்திரம் கொடுக்க வேண்டுமா என்று!"

இவ்வாறு மேஜர் சாட்விக்கைப்போல் பிடிவாத மாய் உரிமையுடன் வாக்குறுதி கோரியவர்கள் வேறு எவரும் இல்லை எனலாம். குரு—சிஷ்யன் என்கிற இருமை இருக்கக்கூடும் என்று ஸ்ரீபகவான் கூறியதில்லை. எனி னும், கிட்டத்தட்டத் தம்மை குரு ஸ்தானத்தில் இருத்து வதை தவிர்க்கவில்லை என்பதை விவேகமுள்ளோர் புரிந்து கொண்டனர். அவர் ஏதும் கூறாமலேயே சிலர் அந் நிலை அறிந்திருந்தனர்.

ஒரு சமயம், ஏ.போஸ் என்ற வங்கத்துத் தொழில திபர் இது பற்றிய சரியான விடையை எப்படியாவது பெறுவதற்கு முயன்றார். எஸ்.எஸ். கோஹென் அந்த உரையாடலைக் குறிப்பெடுத்து வைத்துள்ளார்: "சாதக னின் வெற்றிக்கு குரு அருள் அத்தியாவசியம் என்பது என் திட நம்பிக்கை" என்று போஸ் தீர்மானமாகத் தெரிவித்தபின், புதிர்ப் புன்னகையுடன் தொடர்ந்து, "என்னைப் போன்றவர்களுக்கு பகவான் தாங்கள் குரு அருள் பாலிக்க மனமிறங்க மாட்டீர்களா?" என்று விநயமாய் வினவினார்.

ஆனால் ஸ்ரீபகவானோ அவரை மடக்கித் திசை திருப்பிவிட்டார். "உமக்கு பயிற்சி மட்டுமே தேவை. அனுக்கிரகம் எப்போதும் உள்ளது" என்று கூறி நிறுத் திய ஸ்ரீபகவான் சற்றே மௌனித்து மொழிந்தார்: "கழுத் தளவு நீரில் அமிழ்ந்து நிற்கிறீர். இருந்தாலும் தாகம் என்று தவிக்கிறீரே?"

ஆன்மிகப் பயிற்சி என்பதும்கூட அருளை ஏற்கத் தக்க பாத்திரமாக்கிக் கொள்வதே ஆகும். ஸ்ரீபகவான் இதனையே ஒப்புமை காட்டி விளக்கியுள்ளார்: "உன் னைச் சுற்றிலும் சூரிய வெளிச்சம் இருக்கிறது. ஆனால்,

சூரியனைப் பார்க்க அதன் பக்கம் நீ திரும்பிக் காண வேண்டும். அதேபோல, அருளை உள்ளபடி நாடி அடைய வேண்டும்" (மகர்ஷி வாய்மொழி பாகம் 1. VII). மிஸஸ். பிக்காட் என்ற ஆங்கிலேய மாது வந்திருந்தபோது அவரிடம் ஸ்ரீபகவான் பின்வருமாறு பகன்றதாக பேராசிரியர் வெங்கடராமய்யர் குறிப்பெடுத்துள்ளார்: "போதனை, சொற்பொழிவு, தியானம் முதலியவற்றைவிட, குரு அருள் வாயிலாகவே ஞானம் உதிக்கக்கூடும். மற்றவை இரண்டாம் பட்சம்தான். குருவின் அனுக்கிரகமே இன்றியமையாத அடிப்படை."

அவரது போதனைகளைத் தகவலாக மட்டுமே படித்தறிந்த பலர், 'குரு அவசியமில்லை என்பதே ரமண மகரிஷியின் தீர்ப்பு' என்ற கருத்தை முன்வைக்கிறார்கள். இதற்கு விளக்கமாக, 'அவரே குரு எவரையும் நாடியதில்லை, தீட்சை பெறவில்லை என்பதுமட்டுமல்ல, தமக்கு தீட்சை வேண்டாம் என்று திடமாய் மறுதலித்துவிட்டவர், என்பதை சுட்டிக் காட்டுகின்றனர். பிரபல இசைக் கலைஞரும் ஸ்ரீஅரவிந்தரின் பக்தருமான திலீப் குமார் ராய் ரமணாச்சிரமம் வந்திருந்தபோது நிகழ்ந்த உரையாடலை குறிப்பெடுத்து எஸ்.எஸ். கோஹென் எழுதி வைத்துள்ளவை இதனைத் தெளிவுபடுத்தும்:

திலீப்: குரு தேவை இல்லை என்று மகரிஷி கூறுவதாக சிலர் அபிப்பிராயப்படுகிறார்கள். வேறு பலர் எதிர் மாறாகக் கூறுகிறார்கள். மகரிஷியின் சித்தம் யாதோ?

பகவான்: குரு அவசியமில்லை என்று ஒரு போதும் நான் சொன்னதில்லை.

திலீப்: தங்களுக்கு குரு யாரும் இருந்ததில்லை என்று ஸ்ரீஅரவிந்தர் அடிக்கடி குறிப்பிடுகிறார்.

பகவான்: குரு யார் என்பதைப் பொருத்தது அது. குரு என்றால் மனித உருவில் தான் இருக்கவேண்டும் என்பதும் இல்லை.

தத்தாத்ரேயருக்கு இருபத்து நான்கு குருமார்கள்— இயற்கைத் தத்துவங்கள் முதலியன உட்பட பல அவரது ஞானாசிரியர்களாம். அதன் உட்பொருள், உலகத்தில் காணப்பெறும் எந்த உருவப் படிவமும் அவரது குருவாக அமைந்தது என்பதே. குரு கட்டாயம் தேவை. 'மன விகாரங்களாகிய இருண்ட வனாந்திரத்திலிருந்து மனிதனை விடுவிக்க குரு ஒருவரால் மட்டுமே சாத்தியமாகும்' என்று உபநிஷத்துகள் உணர்த்துகின்றன. ஆகவே, குரு இருக்கத்தான் வேண்டும்.

திலீப்: நான் சொல்வது மனித வடிவான குருவைப் பற்றி. மகரிஷியாம் தங்களுக்கு அவ்வாறு ஒரு குரு இருந்ததில்லை.

பகவான்: ஏன் ? எப்போதாவது ஒரு சமயம் எனக்கும் குரு இருந்திருக்கலாம் அருணாசலனைத் துதித்துப் பாசுரங்கள் பாடியிருக்கிறேன். குரு என்றால் என்ன ? ஈஸ்வரன் அல்லது ஆத்மாவே குரு. மனிதன் தன் விருப்பங்கள் நிறைவேற கடவுளை வேண்டுகிறான். அப்புறம் ஓர் நிலை எழுகிறது. ஆசை நிறைவுக்கான வழிபாடு நின்றுபோய், ஆண்டவனையே தியானிக்கிறான். அப்போது கடவுள் அவன் முன் ஏதோ ஒரு உருவில் காட்சியளிக்கிறார் – மனித உருவத்திலோ அல்லது வேறு வடிவமாகவோ தோன்றி, அவன் பிரார்த்தனைக்கிணங்க தாமே குருவாய் வழிகாட்டுகிறார்.

ஸ்ரீபகவானுக்கு குரு எவரும் இருந்ததில்லை என்று வந்தவர் மறுத்துரைத்த போதுதான் குரு என்பவர் மனித வடிவில் இருக்கவேண்டிய அவசியம் இல்லை என்று அவர் விளக்கம் கூறினார். வழக்கிற்கு மாறான, அபூர்வமாகக் கூறிய விளக்கம் இது என்று அறிதல் வேண்டும்.

வி.வெங்கடராமன் என்பாருடன் உரையாடும்போது தான், தாம் ஓர் குரு என்பதை சற்று வெளிப்படையாகக் கோடி காட்டினார் எனலாம். ஒருமுறை அவரிடம் கூறியுள்ளார்: "இரண்டு காரியங்கள் செய்ய வேண்டும். உன்னை விடுத்து வெளியார் ஒருவரை குருவாக வரிக்க வேண்டும். அதன்பின் உன்னுள் ஒளிரும் குருவைத் தேட வேண்டும். முதலாவதை நீ நிறைவேற்றி விட்டாய்."

அல்லது ஒருக்கால், எனக்கே (இம் மூல நூலின் ஆசிரியர் ஆர்தர் ஆஸ்பார்னுக்கு) கிடைத்த உறுதிப்பாடு இதைக்காட்டிலும் வெளிப்படையானது என எண்ணுகிறேன். ஸ்ரீபகவான் உண்மையிலேயே தீட்சை வழங்கி உபதேசம் ஓதும் குருநாதரே என்பதை நான் ஆசிரமத்திற்கு வந்துசேர்ந்த சில வாரங்களுக்குள் கூர்ந் துணர்ந்தேன். ஐரோப்பாவில் இருந்த என் நண்பர் களுக்கு அவ்வாறே விவரித்துக் கடிதம் வரைந்தேன். கடிதத்தை தபாலில் சேர்க்குமுன், ஸ்ரீ பகவானிடம் காட்டி அதை அனுப்பலாமா என வினவினேன். படித் துப் பார்த்து விஷயத்தை அங்கீகரித்தார். திருப்பிக் கொடுத்தார். "சரி, அனுப்பு" என்றார்.

குரு ஸ்தானத்தை வகிப்பவர் தீட்சையும் உப தேசமும் வழங்கத்தக்கவர். இவ்விரண்டும் இணைபிரி யாத அம்சங்களாகும். ஆரம்ப ஏற்கையாகிய தீட்சை கொடுக்காமல் ஞானோபதேசம் கிடையாது. தீட்சை அளித்தபின் உபதேசம் ஓதாவிடின்அது வியர்த்தமே. ஆகவே, ஸ்ரீபகவான் தீட்சையோ உபதேசமோ வழங்கி னாரா என்ற கேள்வி சிற்சில சமயங்களில் எழுந்தது.

தீட்சை அளித்துவருகிறீர்களா என்ற கேள்வி எழும் போதெல்லாம் ஸ்ரீபகவான் ஒருபோதும் நேரடியாக விடை கூறினாரில்லை. "இல்லை" என்பதே விடை என்றால், கட்டாயமாக அவ்வாறே கூறியிருப்பார். ஆனால், "ஆமாம்" என்றாலோ, தீட்சை அபேட்சித்து எழும் பல தரப்பட்ட,

போதிய தகுதி பெறாத வேண்டுகோள்களை நிராகரிப் பதற்கான தற்காப்புச் சாதனம் தகர்ந்து போய்விடும். சிலரது வேண்டுதலை ஏற்று மற்றவரை நிராகரிக்க நேரும்போது ஏதோ அவர் இஷ்டத்திற்கு முடிவெடுப்ப தாகத் தோன்றக்கூடுமே தவிர, தமக்குத் தகுதியிருக் கிறதா என்று எவரும் யோசித்துப் பார்க்க மாட்டார் கள். மேஜர் சாட்விக் கேட்ட கேள்விக்குக் கிடைத்த விடையே ஸ்ரீபகவான் வழக்கமாக அளித்த விடையா யிற்று. அதாவது "தீட்சை வழங்குதலில் மூன்று முறைகள் உள்ளன – ஸ்பரிசம் (தொடுகை), பார்வை மற்றும் மௌனம்;" என்பதே அவ்விடை. இவ்வாறு ஒரு சாத்திரக் கோட்பாட்டை பொதுப்படையாக கூறிவிடுவது ஸ்ரீபகவான் வழக்கமாய் மேற்கொள்ளும் ஓர் உத்தி. வினாவுக்கான விடை அதனில் பொதிந்திருக்கும். இம் மூவகை தீட்சையை இந்து சித்தாந்தம் ஓர் உபமானத் துடன் விளக்குகிறது. குஞ்சு பொரிக்க தாய்ப்பறவை முட்டையை அடைகாக்க வேண்டியிருக்கிறது. மீன் அவ்வாறு அடைகாப்பதில்லை; கண்ணால் பார்த்தே முட்டை வெடித்துக் குஞ்சு நீஞ்சுகிறது. ஆமையோ நினைத்தாலே போதுமாம், இட்ட முட்டை பொரிந்து விடுமாம்.

நயன தீட்சையும் மௌன தீட்சையும் இக்காலத்தில் மிக அரிது. அருணாசலத்தின் அல்லது தட்சிணாமூர்த் தியின் மௌன தீட்சை முறையே ஸ்ரீபகவான் அருளிய நேர் வழியாகிய 'நானார்?' விசார வாயிலாக மோன தீட்சை கிடைக்கப்பெறப் பொருத்தமாய் அமைந்துள் ளது. இவ்வாறு இயல்பாய் அமைந்துவிட்ட இசைவு ஒருபுறம், மறைமுகமாய் மறுதலிக்கும் வசதி மறுபுறம் ஆகிய இரண்டுமே அவரது மறைமுகமான விடைக்கான காரணங்கள் போலும்!

நயன தீட்சை நிதர்சனமாய் அவ்வப்போது நிகழ்ந்து வந்தது. பக்தன் பக்கம் ஸ்ரீபகவான் திரும்பி, தீட்சண்ய மாகக் கண்நோக்குவார். விழிஒளிச் சுடரும் அதன் ஆற்றலும் பார்வை பட்டோருள் ஊடுருவிப் பாய்ந்து மன ஓட்டத்தை நிறுத்திவிடும். சில சமயம் பக்தனின் உடலில் ஏதோ மின்சார சக்தி பாய்வதுபோல உணர்வு தோன்றும். வேறு சமயங்களில் அப்பார்வையால் மன தில் பேரமைதி நிலவும்; உள்ளத்தே ஒளிவெள்ளம் நிரம்பும். பக்தர் ஒருவர் தன் அனுபவத்தை விவரித் துள்ளதைக் கேட்போம்: "திடீரென்று பகவான் தம் ஊடுருவும் ஒளிமிக்கக் கண்களை என் மீது வீசினார். அதற்கு முன்பெல்லாம் நான் அவரது கண் நோக்கை நேரிட்டுக் காணக் கூசுவேன். ஆனால் இப்போதோ அந்த திகிலூட்டும் அற்புதக் கண் வீச்சை நேரிடையாய் உற்று நோக்குகிறேன். எவ்வளவு நேரம் சென்றதோ, அறியேன். அவரது கதிர்வீசும் கண் நோக்கு என்னை இனம்புரியா அலை அதிர்வில் ஆழ்த்தியது; அவ்வதிர் வின் ஒலியைக் கூட என்னால் துல்லியமாய் உணர முடிந்தது." இவ்வித அனுபவத்தைத் தொடர்ந்து, ஐயமற ஓர் உறுதி உள்ளத்தே படர்கிறது – ஸ்ரீபகவான் நம்மை ஆட்கொண்டுவிட்டார். இனி அவரே இட்டுச் செல்வார் என்கிற தீர்மானம் பிறக்கிறது. இம்மாதிரியான நயன தீட்சை நிகழ்வதை வேறு யாரும் அறியார். கூடியிருப் போரின் கவனம் வேதபாரயணத்தில் நிலைத்திருக்கை யில் யாரோ ஒருவருக்கு அந்த அனுபவம் நேரலாம். பொழுது விடிவதற்குமுன் அல்லது மகரிஷி தனித் திருக்கும் நேரத்தில் உடனே போய் தரிசிக்கவேண்டும் என்று ஓடோடி அணுகும் பக்தர் ஒருவருக்கு அவ் வனுபவம் கிட்டலாம். எங்கே, என்று, எப்போது, யாருக்கு என்றெல்லாம் சொல்வதற்கில்லை. மோன தீட்சையும் இதுபோன்று உண்மையில் நிகழத்தான் செய்தது. திருவண்ணாமலைக்கு நேரில் போய்ப் பார்க்க

முடியாமல், ஸ்ரீ பகவானின் நினைவில் இதயபூர்வமாய் ஆழ்ந்தோர் பலரும் அருட்பாலிப்பின் மூலம் தீட்சை பெற்றுவிட்டாதாக உணர்ந்தனர். நடேச முதலியாருக்கு நேர்ந்ததுபோன்று சிற்சிலருக்குக் கனவில் தோன்றி தீட்சை வழங்கியுள்ளார்.

ஸ்ரீபகவானிடம் ஓர் விசேஷம். ஒரு பக்தனை ஏற்று மோன தீட்சையும் அளித்து விட்டாரானால் ஒளிவு மறைவின்றி அன்னாருக்கு வழிகாட்டுவதிலும், தடுத்தாட்கொள்வதிலும் அவருக்கு நிகர் அவரே. "புலி வாயில் அகப்பட்டது எவ்வாறு திரும்பாதோ அவ்வாறே குருவின் அருட் பார்வையில் பட்டவர்கள் அவரால் ரட்சிக்கப்படுபவரேயன்றி ஒருக்காலும் கைவிடப்பட மாட்டார்" என்று ஆதியில் சிவப்பிரகாசம் பிள்ளைக்கு வெளிப்படையாய் உறுதியளித்ததை, பின்னர் தொகுத்து வெளியிடப்பட்ட "நான் யார் ?" எனும் சிறு நூலில் காணலாம்.

எல். ஹார்ட்ஸ் என்ற டச்சுக்காரர், குறுகிய காலமே ஆசிரமத்திற்கருகில் தங்கி மகரிஷியை தரிசித்து வந்தார். தம் நாட்டிற்குத் திரும்பிச் செல்ல ஆயத்தமானபோது ஸ்ரீபகவானை விட்டு அகல மனமின்றி, "ஐயனே, இங்கு நான் பெற்ற வைராக்கியம் இங்கிருந்து சென்றதும் தளர்ந்துவிடுமோ என்ற பயம் என்னை வாட்டுகிறது. அவ்வாறின்றி, தங்கள் கருணை என் நெஞ்சில் நிலைத்து நிற்க வாக்களியுங்கள்" என இறைஞ்சினார். அதற்கு அவர், " நீர் பகவானை நழுவவிட்டாலும் கூட, பகவான் உம்மை விட்டுவிடப்போவதில்லை" என்றார்.

அச்சமயம் உடன் இருந்த வேறு இரு பக்தர்கள் – ஒருவர் செக்கோஸ்லாவேகியா தூதரகத்தைச் சேர்ந்தவர், மற்றொருவர் முஸ்லிம் பேராசிரியர் – அந்த ஆணித்தரமான உறுதிமொழியைக் கேட்டுத் திகைத்தனர். 'மிஸ்டர் ஹார்ட்ஸ்க்கு மட்டும்தானா இந்த வாக்குறுதி, அல்லது

எல்லா பக்தர்களுக்கும் இது பொருந்துமா?' என்று அவ்விருவரும் வினவ, ஸ்ரீபகவான் முறுவலித்து, 'எல்லோருக்கும் தான்' என்றார்.

மற்றொரு சமயம், தன்னுள் ஆன்மிக முன்னேற்றம் ஏதும் காணாது மனம் சோர்ந்த பக்தர் ஒருவர், 'நான் இப்படியே இருந்தால் நரகத்திற்குத்தான் போய்ச் சேருவேன்' எனப் புலம்பினார். அதற்கு ஸ்ரீபகவானோ, "நீர் அப்படிப் போனால் நாம் உம் பின்னோடு சென்று உம்மை நரகத்திலிருந்து மீட்டு வருவேன்" என்று ஆறுதலளித்தார்.

பக்தனின் வாழ்க்கை சூழல்களும் கூட குருவினால் உருவாக்கப்பட்டு அவனது சாதனைக்கு, ஆன்மிக வளர்ச்சிக்கு, வழிகோலுகிறது. ஒரு பக்தனின் கேள்விக்கு அவர் இவ்வாறு விடையளித்துள்ளார்: "குரு வெளியும் உள்ளார்; உள்ளும் உள்ளார். வெளியிலிருந்து மனம் உள்முகமாகும்படி தள்ளுகிறார். உள்ளிருக்கும் குரு, மனத்தைத் தன் வசம் இழுத்து அதனை அமைதியாக வைத்துக்கொள்ள உதவுகிறார். இதுவே குரு கிருபை."

ஸ்ரீபகவானை இதயபூர்வமாக அணுகாத எவரேனும் தாங்கள் 'உபதேசம் வழங்குவதுண்டா' என்று வினா எழுப்பினால், ஏதாகிலும் புரியாத புதிராக விடை அளிப்பார், அல்லது ஒன்றும் பேசாமல் இருந்து விடுவார். இதன் விளைவாக, 'உபதேசம் வழங்குவதில்லை' என்பதே அவரது பதில் என்று வந்தவர் ஊகித்துச் செல்வார். ஆனால் உண்மையில், தீட்சை போலவே அவரது உபதேசமும் மௌன மொழிவழியேதான் அமைந்தது. இவ்வாறு உபதேசம் பெற்றவரின் மனம் எங்கு அடைக்கலம் புகுந்து அடங்கிவிடவேண்டுமோ அத்திசையில் அமைதியாகத் திரும்பும். இதனை உளமாறப் புரிந்துகொண்டு எதிர்பார்ப்பவரே உண்மையான பக்தன். அத்தகையோர்க்கு வாக்குறுதி ஏதும் தேவைப்படாது.

வி.வெங்கடராமனைப் பற்றி மேலே குறிப்பிட்டோம். அவரது வரலாறு இதற்கு ஓர் எடுத்துக்காட்டு: வாலிபப் பருவத்தில் அவர் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸரிடம் மிகுந்த ஈடுபாடு கொண்ட சிறந்த பக்தர். ஆனால் நிகழ்காலத்தில் ஊனுடலுடன் நடமாடும் குரு ஒருவரைத் தேட வெங்கடராமன் விழைந்தார். ஆகவே அவர், 'ஆசானே, தங்களுக்கு இணையான பரிபூரண ஞானாசிரியரும், இன்று வாழ்ந்து வருபவருமான ஓர் குருவை எனக்குக் காட்டியருளுக!' என ஸ்ரீராமகிருஷ்ணரை மனத்துள் வேண்டினார். அதன்பின் வெகுவிரைவில் ஸ்ரீ ரமணரைப்பற்றிக் கேள்விப்பட்டார். மகரிஷிரமணர் மலைச் சாரலைவிட்டு, அடிவாரத்தில் அமைந்த ஆசிரமத்தில் தங்கிவிட வந்து சேர்ந்து ஒரு சில ஆண்டுகளே ஆகியிருந்தன. அக்காலகட்டத்தில் வெங்கடராமன் பெரிய மாலையும் கையுமாக அவரை முதன்முறையாக அணுகினார். அவர் சென்ற சமயம் தியான கூடத்தில் தற்செயலாய் வேறு யாருமில்லை, (ஏற்புடைய தருணங்களில் இம்மாதிரியான 'தற்செயல்' அமைவது சகஜம்). மஞ்சத்தில் சாய்ந்தமர்ந்திருந்தார் ஸ்ரீபகவான். பின் சுவரில் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸரின் திருவுருவப் படம்; வெங்கடராமனின் மானசீக ஆசான்! மாலையைப் பெற்றுக் கொண்ட ஸ்ரீபகவான் அதை இரண்டாகப் பிரித்தார். ஒரு பாதியை பரமஹம்ஸரின் படத்திற்கு அணிவிக்கும்படி கூறி பணியாளிடம் கொடுத்தார். மறு பாதியை கோவில் லிங்கத்திற்குச் சாற்றிவிடுமாறு பணித்தார். வெங்கடராமனின் உள்ளம் குளிர்ந்தது; மனம் நிறைந்து நெகிழ்ந்தது. அபிலாஷை நிறைவேறிவிட்டது. வந்த விஷயத்தை ஸ்ரீபகவானிடம் கூறினார், "தட்சிணாமூர்த்தியைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறாயா ?" என வினவினார் ஸ்ரீபகவான்.

"மௌன உபதேசம் வழங்கினார் என்பது தெரியும்" என பதிலுரைத்தார் வெங்கடராமன்.

இங்கே அப்படிப்பட்ட உபதேசம் தான் கிடைக்கும்" என்றார் ஸ்ரீபகவான்..

மௌன உபதேசம் பல்வேறு வகைப்பட்டது. ஆன்ம விசாரத்தைப் பற்றியே ஸ்ரீபகவான் பெரும்பாலும் பேசியும் எழுதியும் வந்தார் என்பதால் அவர் மெய்யறிவுப் பாதை யாம் ஞானமார்க்கத்தை மட்டுமே அறிவுறுத்தினார் என்ற அபிப்பிராயம் நிலவுகிறது. ஞானமார்க்கமோ கடைபிடிக்கக் கடினமான, கரடுமுரடான செங்குத்துப் பாதை என்பதே இக்காலத்து மக்களின் பொதுவான கருத்து. ஆனாலும் ஸ்ரீபகவானோ எக்காலத்திற்கும் உரியவர். மெய்யறிவு மார்க்கம் மட்டுமின்றி பக்தி மார்க்கத்தை யும் அவரவர் மனபேதங்களுக்கு இசைவாகப் புகட்டி வழிகாட்டியுள்ளார். அன்பும் ஆராதனையும் பேரின்ப வீடுபேறு எய்துவதற்குப் பாலமாக அமைகின்றன என் பதே அவர் அறிவுரை. அனேக பக்தர்களுக்கு அன்பு மற்றும் பக்தி நெறியை மட்டுமே புகட்டி வந்தார்.

மேற்கூறிய வெங்கடராமன் சிலகாலம் சென்றபின் ஏக்கம் மேலிட்டார். சாதனாமுறை ஏதும் தமக்கு அளிக் கப்படவில்லையே, ஆன்மிகப் பயிற்சி விதிக்கப்படவில் லையே என்பதே அவரது ஏக்கத்திற்குக் காரணம். ஸ்ரீபகவானிடம் முறையிட்டார்.

"உன்னை இங்கு இட்டு வந்தது எது?" என வினவினார் ஸ்ரீபகவான்.

"தங்களது நினைவு மட்டுமே சுவாமி "

"அப்படியானால் அதுவும் கூட உனது சாதனையே அன்றி வேறல்ல. அது போதுமே."

உண்மையில் வெங்கடராமன் எங்கு சென்றாலும் பகவானைப் பற்றிய எண்ணமே தழைத்தது. ரமண ஸ்மரணையே சதா உள்ளத்தே இழையோடியது.

பக்திமார்க்கம் என்பது வாஸ்தவத்தில் சரணடைதலே ஆகும். பாரம் முழுதும் குருவின் மீது சுமத்தப்படுகிறது. இதனையும் ஸ்ரீபகவான் வற்புறுத்தியுள்ளார். ஒரு பக்தனிடம் இவ்வாறு கூறினார்: என்னைச் சரணடைந்துவிடு; மனநாசம் செய்விக்கிறேன்." இன்னொருவரிடம் சொன்னார்: "நீ சும்மா இரு. மற்றதை பகவான் பார்த்துக் கொள்வார்." தேவராஜ முதலியாரிடம் கூறினார்: "சரணடைவது மட்டுமே உமது வேலை. மற்றது அனைத்தையும் என்னிடமே விட்டுவிடு." மேலும் அவர் அடிக்கடி சொல்வது வழக்கம்: "வழிகள் இரண்டு உண்டு – 'நான் யார்?' என்று தன்னைத்தானே விசாரித்துக் கொள். அல்லது குருவிடம் சரண் அடைந்துவிடு."

ஆயினும், சரணடைவதும், மனதை அமைதியில் இருத்தி குருவின் அருளுக்குப் பாத்திரமாவதும் சுலபமல்ல. அதற்குத் தொடர்ச்சியான முயற்சி அவசியம். குருவின் கிருபையே இதனை சாத்தியமாக்கக்கூடும். இம்முயற்சி கைகூடும்பொருட்டு பலர் பக்தி வழிபாட்டையும், வேறு சாதனா முறைகளையும் கடைபிடித்துள்ளனர். ஸ்ரீபகவான் அம்முறைகளையும் ஏற்று சம்மதம் தெரிவித்துள்ளார். ஆயினும் அவற்றை மேற்கொள்ளுமாறு அவர் வகுத்துரைக்கவில்லை.

உயிரை உய்விக்க சத்சங்கம் மிகத் தீவிரமானதொரு சாதனம். அதன் ஆற்றலைக் கண்களால் காண இயலாது. நல்லோர்களுடன் ஒன்றுகூடுவது என்பதே சத்சங்கத்தின் வெளிப்படையான அர்த்தம். ஆயினும், ஆன்மிக சாதனை முறை என்ற வகையில் அதன் உட்பொருள் "ஸத்" துடன் (ஆன்மாவுடன்) சங்கமிப்பதே ஆகும் என்றும், "ஸத்" என்றால் 'சத்' பொருளை சாட்சாத்கரித்த பெரியோர்களையே குறிக்கும் என்றும் ஸ்ரீபகவான் குறிப்பிட்டுள்ளார். சத்சங்கத்தின் சகாயத்தைப் பற்றி மிக உயர்வாய் சிலாகித்துள்ளார். நாற்பது உபதேசப் பாடல்கள்

கொண்ட "உள்ளது நாற்பது அனுபந்தம்" என்ற தொகுப்பின் முதல் ஐந்து வெண்பாக்கள் சத்சங்கத்தின் மேன்மையை வலியுறுத்துகின்றன. அவை அத்தொகுப்பில் இடம் பெற்ற கதை குறிப்பிடத்தக்கது. எச்சம்மாளின் வளர்ப்பு மகள், மிட்டாய்ப் பொட்டலக் காகிதத்தில் எழுதப்பட்டிருந்த ஏதோ சமஸ்கிருதப் பாடல் வரிகளைக் கண்டாள். அவை அச்சிறுமிக்கு ரொம்பப் பிடித்தது. அவ்வரிகளை அப்படியே மனப்பாடம் செய்து ஸ்ரீ பகவான் முன்னிலையில் ஒப்பித்தாள். அதன் முக்கியத்துவத்தைக் கண்ட அவர் அப்பாடலை தமிழில் மொழி பெயர்த்தார். "உள்ளது நாற்பது அனுபந்த"த்தைத் தொகுத்து வந்த சமயம் அது. அவற்றில் பல வெண்பாக்கள் அவரே இயற்றியவை. மற்றவை புராதன வடமொழி நூல்களில் கண்டுள்ள சுலோகங்களின் மொழியாக்கம் தான். சிறுமி ஒப்பித்த சுலோகமும், அக்கருத்தைச் சார்ந்த வேறு நான்கு பாடல்களும் அத்தொகுப்பில் முதலிடம் பெற்றுள்ளன. மூன்றாவது பாடல், 'உண்மையுணர்ந்த சாதுக்களின் முன்னிலையில் மெய்யுணர்வு மிக எளிதில் கை கூடும்' என்று வலுயுறுத்துகிறது:

**சாதுக்க ளாவார் சகவாச(ம்) நண்ணினா(ல்)**
**ஏதுக்கா(ம்) இந்(த) நியம(ம்) எல்லாமு(ம்) – மேதக்க**
**தண் என்றன் மாருத(ம்) தான் வீசவே விசிறி**
**கொண்டென்ன காரிய(ம்) நீ கூறு.**

[ஞானியரோடு ஒன்றுகூடுதல் கிடைக்கப்பெற்றபின், வேறு நியமங்கள் எதற்காக? குளிர்ந்த தென்றல் வீசும்போது விசிறிக்கு அங்கென்ன வேலையாம், நீயே சொல் ]

ஸ்ரீபகவானோடு கூட இருந்துவருகையில், நுண்ணிய ரசவாதம் நிகழும். அதன் விளைவுகளோ பல ஆண்டுகளுக்குப் பின்னரே தெரிய வரும். அதன் உள்ளார்ந்த நலனைப் பற்றி பக்தர்களிடம் அவர் சில

சமயங்களில் வெளிப்படையாகவே சொல்லியிருக்கிறார். "ஞானியோடு தங்கியிருப்போர்க்கு அவர் 'நெய்த துணியையே வழங்கிவிடுவார்' என்று ஒரு சமயம் ரங்க அய்யரிடம் கூறியிருக்கிறார் (பள்ளித் தோழனான அவரைப் பற்றி மூன்றாவது அத்தியாயத்தில் காண்க). 'மற்ற நிகழ் முறைகள் வாயிலாய் சாதகனுக்கு நூல் மட்டுமே கிடைக்கும், அதை அவனே நெய்து துணி யாக்க வேண்டும்' என்பதே அக்கூற்றின் உட்பொருள்.

சுந்தரேச அய்யர் என்பவர் தன் பன்னிரெண்டாவது வயதில் ரமண பக்தனானார். பத்தொன்பது வயதை எட்டிய பிறகும் தனக்கு ஆழ்ந்த, நெஞ்சறிந்த ஆன்மிக எழுச்சி கைகூடவில்லையே என்று தன்மீதே அதிருப்தி அடைந்தார். குடும்பஸ்தனாகிவிட்ட அவர் திருவண்ணா மலை ஊர்ப்புறம் வசித்துவந்தார். கூடியவரை தினந் தோறும் ஸ்கந்தாசிரமம் சென்று ஸ்ரீபகவானை தரிசித்து வருவார். ஆனால் 'இனி ஒதுங்கிநின்று, முழுமுயற்சி செய்து லட்சியத்தை எட்டியபிறகே மகரிஷி ரமணரை அணுக அருகதைபெற்றவனாவேன்' என தீர்மானித்து, அவரைப் போய்ப் பார்த்துவருவதை நிறுத்தி விட்டார். இவ்வாறு போகாமலே நூறு நாட்கள் கழிந்தன. அதன் பிறகு, 'பகவானைப் பார்க்காமலிருப்பதால் நான் சாதிப்பது என்ன ?' என்ற எண்ணம் எழுந்தது. திரும்பவும் போனார். ஸ்கந்தாசிரம வாயிலில் நின்றுகொண்டிருந்த ஸ்ரீ பகவான். சுந்தரேச அய்யரைக் கண்ணுற்றதும், 'என்னைப் பார்க் காததால் நீ கண்ட லாபம் என்னவாம் ?' என்று முகமன் கூறியவாறு அவரை வரவேற்றார். பிறகு, சத்சங்கத் தத்துவச் சிறப்பையும், வீரியத்தையும் ஸ்ரீபகவான் எடுத் துரைத்தார். அதன் விளைவுகள் சீடனுக்கு உடனுக்கு டன் தெரியாது. முன்னேற்றமோ மாறுதலோ உணர மாட்டான். எவ்வாறெனில், "இரவில் தூங்கிக் கொண் டிருக்கும் குழந்தைக்குத் தாயார் பாலூட்டுகிறாள். மறு நாள் காலை விழித்தெழும் குழந்தைக்குப் பால் குடித்த

நினைவே இருக்காது. பால் புகட்டியதை அம்மா நன்கு அறிவாள். குழந்தைக்குத் தெரியாமலேயே அந்த ஆகாரம் அதனை போஷிக்கிறது'' என்று ஒப்பீடும் காட்டினார்.

ஒரு முனிவரின் இருக்கையருகில் வாழ்ந்து வருவோர்க்குத் தானாக ஏற்படக்கூடிய நன்மையை மட்டுமே இம்மேற்கோள் சுட்டிக்காட்டுவதோடு நின்றுவிடவில்லை. அதற்கும் மேலாக, முனிவரின் ஆக்க பூர்வமான தாக்கத்தினால் வளர்ச்சிபெறும் பக்தனின் நிலையும் இந்த உதாரணத்தில் தொக்கிநிற்கிறது. ஒரு சந்தர்ப்பத்தில் இதை அவர் நேரடியாய் நிரூபித்துள்ளார். ஆயினும் மகரிஷியின் அணுக்க மகிமையை அறிந்தோர்க்கு நிரூபணம் ஏதும் அவசியமில்லைதான். அவரது பெருமையைப் போற்றி சுந்தரேச அய்யர் தமிழ்ப் பாடலொன்று புனைந்து படித்துக்காட்டினார். "குருவின் கண்களினின்றும் 'பெருகும்' அருட்கனிவைப் பெறும் சீடன்'' என்ற சொற்றொடர் வந்தபோது ஸ்ரீபகவான் குறுக்கிட்டு, "இல்லை. அருட்"பெருக்கு'' என்று சொல்வது பொருத்தமில்லை. 'உந்துதல்' என்பதே சரி. ஏனெனில், தக்கவர் எனத் தேர்ந்தெடுக்கப்பட்ட சீடனைத் தூண்டிவிடும் முனைப்பு வாய்ந்ததே அவ்வருள் வீச்சு'' என்று திருத்தமாய் மொழிந்தார்.

அதே சமயம், ஆசானின் அருட்பாலிப்புக்கு முழுதும் பாத்திரமாக சீடனும் விழைதல் வேண்டும். ஸ்ரீபகவான் இதன் பொருட்டு ஓயாது முன்வைத்த வழிமுறை "நான் யார்?'' எனும் ஆன்ம விசாரமே, வினவுதலே, ஆகும். இக்காலத்துத் தேவைகளை எதிர்கொள்ள அவர் வகுத்துரைத்த ஆன்மிக சாதனை இது. இம்முறையில் ரகசிய ஓதுதலோ, வேறு ஒளிமறைவோ கிடையாது.

அதன் இணையற்ற மேன்மையை ஆணித்தரமாக எடுத்துரைத்துள்ளார்:

"நானார் விசாரமே உண்மை உருவாகிய எல்லை யற்ற சுத்த சத்தியத்தை உணர்வதற்குத் தவறா உபாயம். அது ஒன்றே நேரான வழி... ஆத்ம விசாரமொழிந்த மற்ற சாதனங்கள் அகநிலையை அழிக்க முயல்வது, திருடனே திருடனாகிய தன் னைப் பிடிக்க போலீஸ்காரனாவது போல்தான். அகந்தையோ மனமோ உண்மையில் இல்லவே இல்லை என்றும் சத்தியத்தை வெளிப்படுத்திக் கைவல்யமான ஆத்மாவின் சுத்த நிர்விசேஷ ஸ்தி தியை உணரச்செய்ய முடியும். ஆத்மாவைத் தெளி வாக உணர்ந்தபின் உணர்வதற்கு வேறொன்று மில்லை. ஏனெனில் அதுவே முற்றின்பம். எல்லாம் அதுவே."

"முழு மனத்தையும் அதன் மூலத்தில் ஏகாக்கிரம் செய்வதே ஆத்ம விசாரத்தின் நோக்கம். ஆகை யால், ஒரு நான் மற்றொரு நானைத் தேடுவது அல்ல இது."

(மஹர்ஷி வாய்மொழி, பாகம் 2, I)

முழு மனதையும் அதன் மையஸ்தானத்தில் குவித்து ஒடுக்குவது, மனதை உள்முகமாய்த் திருப்பி அதனுள் ஆழ்ந்துவிடுவது – இதுவே ஆன்ம விசாரம். நிட்டை நிலையில் அமர்ந்து 'நான் யார்', என மனதுள் ஸ்மரித்து தியானம் செய்தல்; அதே சமயம் கருத்தை இதயத்திலே பதித்தல் – இதுவே விசார நியமம். இங்கே 'இதயம்' என்பது மார்பின் இடதுபுறம் உள்ள பௌதிக உறுப் பான நெஞ்சுப்பை அல்ல. மார்பின் வலப்புறம் அமைந் துள்ள ஆன்மிக இருப்பின் மூலமாகிய இதயகமலம். கேள்வி எழுப்புவோரின் மனப்பக்குவத்திற்குத் தக்க வாறு ஸ்ரீ பகவான் இவ்வாறு உடல்சார்ந்த அல்லது மனம் சார்ந்த தியான நிலையை, நான் யார் எனும் ஸ்மரணையை, இதயத்தில் இறுத்துவதை வலியுறுத் துவார்.

மார்பின் வலப்புறம் உள்ளதான இந்த ஆன்மிக அனுபவ இதயம் யோக சக்கரங்களில் (மத்தியங்களில்) ஒன்றல்ல. இந்த இதயம், நான் எனும் அகந்தை உணர் வின் மையம் மற்றும் தோற்றுவாய். அதுவே ஆன்மா வின் இருப்பிடம்; ஆகவே ஆன்ம சிந்தனையை ஒரு மிக்கும் ஸ்தானம். இவ்வாறான இதய கமலம் அங்கு அடக்கம் என்பதற்கு சாத்திர ரீதியான சான்றுகளோ அல்லது வேறு பிரமாணங்களோ உள்ளனவா என்று கேட்டபோது, ஸ்ரீ பகவான் அது அவ்வாறே என்று தாம் உணர்ந்ததாகவும், அதற்கான ஆதாரத்தை பிற்பாடு மலை யாள மொழியில் உள்ள ஆயுர்வேத நூல் ஒன்றில் கண்டதாகவும் விடையளித்துள்ளார்.* அவர் வகுத் தளித்த நியமங்களைக் கடைபிடிப்பவர்களும் அவ் வாறே உணர்ந்துள்ளனர். ஆன்ம விசார அனுசரிப்புக்கு இது மிக அடிப்படையானது என்பதால் ஸ்ரீபகவான் இது குறித்து நிகழ்த்திய விரிவான உரையாடல் "மஹர்ஷி வாய்மொழி" நூலில் கண்டுள்ளவாறு கீழே கொடுக்கப் பட்டுள்ளது:

பக்தன்: ஆனால் பகவான் இந்த ஜட உடலுக்குள் இதயத்துக்கென மார்பக மையத்தின் இருவிரல் வலத்தே ஓர் ஸ்தானத்தைக் குறித்திருப்பது ஏன்?

பகவான்: ஆம். மகான்களின் அனுபவப்படி அதுவே அத்யாத்மானுபவத்தின் மத்திய ஸ்தானம். இந்த இதய மத்தியம், இருதயப் பெயருள்ள மாமிசப் பிண்டமாகிய ரத்தாசயம் அல்ல. இந்த அத்யாத்ம இதயமத்தியம் உடலின் ஓர் அங்கம் அல்ல. இதயம் என்பது உன் இருப்பின் மூலம். அவ்வளவு தான் சொல்லலாம். உன் நனவு கனவு துயில்களிலும்,

* மெய்யறிவுடையோர் இதயம் அவரது வலக் கரத்தில், அறிவிலியின் இதயம் இடதுபுறம்" என்ற கூற்று பண்டைய இஸ்ரேல் நாட்டு அரசரும் பேரறிஞருமான சாலமன் தொகுத்த தாகக் கூறப்படும் எக்ளஸியாஸ்டஸ் (X.2) என்ற மெய்ஞ்ஞான விளக்கத் தொகுப்பில் காணப்படுகிறது.

வியவகாரத்திலும், ஆழ்ந்த நிஷ்டையிலும் நீ உண்மையில் ஒன்றியுள்ளது அதிலேயே.

பக்தன்: அப்படியானால் அதை எப்படி தேகத்தில் இடம்பெற வைப்பது? அப்படி அதற்கு ஒரு ஸ்தானத்தைக் குறிப்பது தேசகாலத்திற்கு அப்பால் உள்ளதை ஒரு பௌதிக எல்லைக்கு உட்படுத்துவதாக ஆகும் அல்லவா?

மகரிஷி: அதுதான் உண்மை. ஆனால் இதயத்தின் நிலையை உணர விரும்புகிறவன் தன்னை உடலுக்குள் இருப்பவனாகக் கருதுகிறானல்லவா?... திரிகரணாதீத சுத்த அறிவு, ஞானியின் அனுபவம். ஆனால், இந்த அநுபூதி ஸோபாதிகமாகவோ (உடலுடனோ), நிருபாதிகமாகவோ (உடலற்றோ) இருக்கலாம். கேவல அநுபூதியில் ஞானி தேசகாலாதீதனே. தேகத்தில் இருதயத்தின் நிலையைப் பற்றி அந்த ஸ்திதியில் கேள்வியே எழாது.

பக்தன்: இதயத்தின் பிரத்தியக்ஷ அநுபூதியோ, அதன் ஸ்மிருதியோ இல்லாத என் போன்றவர்களுக்கு இவ்விஷயம் புரிந்துகொள்வது கஷ்டமாகத் தோன்றுகிறது. இதய ஸ்தானத்தை நிரூபிப்பதற்கு வெறும் ஊகமே ஆதாரமல்லவா?

பகவான்: அப்படியானால் இதைப்பற்றிச் சிந்திப்பது வியர்த்தமே. நீ உண்மையில் ஊகத்தையே ஆதாரமாகக் கொள்வதில்லை. ஸித்தமாயிருக்கும் உள்ளுணர்வையே ஆதாரமாகக் கொள்கிறாய்.

பக்தன்: இவ்வுள்ளுணர்வு யாருக்கு?

பகவான்: அனைவருக்குமே.

பக்தன்: இதயத்தைப் பற்றி எனக்கும் உள்ளுணர்வு உண்டு என்று பகவான் மதிக்கிறாரா என்ன?

பகவான்: இல்லை. இதயத்தின் உள்ளுணர்வைப் பற்றியல்ல; தேகத்தில் உன் இதய ஸ்தானத்தைப் பற்றியே.

பக்தன்: எனக்கு இதய ஸ்தானத்தைப்பற்றிய உணர்வு உண்டென்று பகவான் சொல்கிறாரா?

பகவான்: ஏன் சொல்லக்கூடாது?

பக்தன்: (தன்னைக் காட்டி) என்னை நேராகக் குறித்தா பகவான் சொல்கிறார்?

பகவான்: ஆம், அதுதான் உள்ளுணர்வு. நீ உன்னைச் செய்கையால் எப்படி உணர்த்தினாய்? மார்பின் வலப்புறத்தில் உன் கையை வைத்துக் காட்டினாய் அல்லவா? அதுதான் இதயத்தின் ஸ்தானம்.

பக்தன்: அப்படியானால் இதய மத்தியத்தைப் பற்றிய பிரத்யட்ச அனுபவம் ஏற்படாதிருக்கும் வரையில் நான் இந்த உள்ளுணர்வையே நம்பியிருக்க வேண்டுமா?

மகரிஷி: அவ்வுணர்வினால் என்ன பிழை? ஒரு மாணவன், 'நான் இக்கணக்கை சரியாகச் செய்தேன்' என்கிறான். அல்லது, 'நான் ஓட்டமாய் ஓடி உங்கள் புத்தகத்தைக் கொண்டுவரட்டுமா' என்று கேட்கிறான். அப்போது, கணக்கைச் சரியாகச் செய்ததாகத் தலையைக் குறிப்பிடுவானா? அல்லது புத்தகத்தைக் கொண்டுவர, தன்னை வேகமாய்க் கொண்டு போகும் கால்களைக் குறிப்பிடுவானா? இவ்விரு விஷயத்திலும் அவனது விரல் மார்பின் வலப்புறத்தையே சகஜமாகக் குறிக்கும். இச்செய்கையால், நான் என்பதன் ஸ்தானம் தன்னில் அவ்விடத்தில் உள்ளது என்னும் கம்பீர தத்துவத்தை தன்னையறியாமலே வெளிப்படுத்துகிறான். இவ்விதம் இதயமாகிய ஆன்மாவைத் தானாகவே குறிப்பிடச் செய்வது பிழையற்ற உணர்வாகும். இந்தச் செய்கை சகஜமானது. எல்லா மக்களுக்கும் இயற்கையானது. இதற்கு விலக்கில்லை. இதய மத்தியம் உடலின் இடம் பெற்று இருப்பதற்கு இதைவிட வேறென்ன பிரமாணம் வேண்டும்?''

ஆன்ம விசாரணைக்கான செயல்முறை போதனை இதுதான்: வலதுபுறம் அமைந்த இதய ஸ்தானத்தில் தியான லட்சியம் வைத்து, 'நான் யார்' என்ற வினாவை எழுப்ப வேண்டும். பிற எண்ணங்கள் எழுந்தால் அவற்றைத் தொடர்ந்து பூர்த்திசெய்ய எத்தனிக்காமல் அவற்றைக் கூர்ந்து கவனித்து, 'இது என்ன எண்ணம்? எங்கிருந்து, யாருக்கு எழுகிறது இது?' என்று விசாரித்தால் மன ஓட்டம் தன் பிறப்பிடத்திற்கே திரும்பிவிடும். இவ்வாறு ஒவ்வொரு எண்ணமும் எழும்போதெல்லாம் அதை விசாரித்தவண்ணம் இருந்தால் எழுந்த எண்ணங்கள் மடங்கிவிடும். இப்படிப் பழகப் பழக, மனத்திற்குத் தன் பிறப்பிடத்திலேயே தங்கி நிற்கும் சக்தி அதிகரிக்கின்றது. தூய்மையற்ற நினைவுகள் கிளம்பினாலும் அவற்றையும் இதே மாதிரியே கேட்டு மடக்க வேண்டும். ஒருவிதத்தில், சாதனை என்பது உளநிலையைப் பகுத்தாய்ந்து உறைந்துபோன எண்ண விளைவுகளை வெளிக்கொணர்ந்து மனநோய் தீர்க்கும் முறையை ஒத்தது எனலாம். அடிமனத்து மாசுகளைக் களைந்து வெளியேற்றி நாசம் செய்கிறது. "தியான சமயத்தில் நாநாவித எண்ணங்கள் கிளம்புகின்றன. அது நல்லதே; ஏன்? உள்ளே மறைந்து கிடப்பது வெளியாகிறது. வெளியானாலொழிய அதை அழிப்பது எப்படி?" (மஹர்ஷி வாய்மொழி, பாகம் 1, III).

இம்முறையிலான தியான ஆழ்வில் மற்ற சிந்தனை வடிவங்கள் அன்னியமானவை. சில சமயம் ஸ்ரீபகவானை பக்தர் கேட்பார், 'ஸோஹம்' (அவனே நான்) போன்ற பாவனைகளை தியானத்தில் மேற்கொள்ளலாமா, என்று. ஆனால் அவர் அவ்வித பாவனைகள் ஆன்ம விசாரத்திற்கு உகந்தவை அல்ல என்று ஒதுக்கியுள்ளார். இன்னொரு சமயம் ஒரு பக்தர் விடாப்பிடியாக 'அஹம் பிரும்மாஸ்மி', 'தத்வமஸி' போன்ற மகாவாக்கியங்களை தியான பாவனைகளாக முன்வைத்து வினவியபோது அவர் இவ்

வாறு விளக்கம் கூறியுள்ளார்: "அவ்வித எண்ணப் படர்க்கைகள் ஆத்ம அனுபவத்திற்கு முரணானவை. தன்னைப் பற்றிய எண்ணத்தையும், வேறு அனைத்து எண்ணங்களையும் அறவே அகற்றிவிடவேண்டும். எண்ணம் சார்ந்த பாவனைகள் வேறு, பூரண ஆத்ம ஞானம் வேறு."*

'நான் யார்?' எனும் வினாவுக்கு விடை ஏதும் இல்லை. இருக்கவும் மாட்டாது. ஏனெனில் அது அனைத்து எண்ணங்களுக்கும் மூலாதாரமான 'நான்' எனும் எண்ணத்தையே கரைத்து ஊடுருவிப் பாய்ந்து சலனங்களற்ற பேரமைதியை எட்டவைக்கிறது. ஆன்ம விசாரத்தின் போது 'சிவோஹம்' போன்று தூண்டிவிடும் விடைகளை மனத்தால் கற்பிதம் செய்தல் கூடாது. உண்மையான விடை தானாகக் கிடைக்கும். அகந்தை அளிக்கும் எந்த விடையும் சரியாக இருக்க முடியாது. முதல் அத்தியாய முடிவில் குறிப்பிடப்பட்ட தூய உணர்வாகிய பரமானந்தப் பிரக்ஞையே ஒரே விடையாக அமையும். தன்னிலை கடந்த சுத்த சைதன்ய சுயம் பிரகாசமே அவ்விடை.

ஆன்ம விசாரத்தை உறுதியுடன் அப்பியசித்து வந்தால் இந்த சுய இருப்பு சுக நிலை அடிக்கடி கிட்டப் பெற்று, முடிவில் அந்த இருப்பே தொடர்ந்திருந்துவரும். தியான நேரங்களில் மட்டுமின்றி அன்றாட பேச்சு நடவடிக்கைகளின் அடிப்படையிலும் இடையறாது தொடரும். அந்நிலையை எட்டியபிறகும் கூட ஆன்ம விசாரணையை தொடர்ந்து மேற்கொள்ளவேண்டும்.

---

* முன்னிலை படர்க்கை பற்றி முன்னுதல் மூடமாகும்;
முன்னிலை படர்க்கை நாடின் மூண்டெழும் மனோ விருத்தி;
தன்மையை நாடும் செய்கை தற்கொலைக்கு சமானமாகும்;
தன்மையாய் வொன்றி னாற்றான் சாய்திடு மகந்தை தானே.
ஆன்ம விசாரப் பதிகம்—7

ஏனெனில், புதிய நடப்பு உணர்வுகளுடன் அகந்தையும் உடன்பட்டாற்போல் அடங்கி இழைந்துகொண்டு, பின்னர் மெள்ள மெள்ள தலைதூக்கி, தன் ஆதிக்கத்தை நிலைநாட்ட சண்டையிடும் – புராதன யூதர்கள், கடவுளால் தங்களுக்கு அளிக்கப்பட்ட நாட்டில் புற இனத்தினர் ஒண்ட இடம் கொடுத்து, பின்னர் ஒண்ட வந்தவர்களால் விரட்டியடிக்கப்பட்ட பழங்கதை போன்று! ஆன்ம விசாரத்தை கடைசிவரை மேற்கொள்ள வேண்டிய அவசியத்தை ஸ்ரீ பகவான் வலியுறுத்தியுள்ளார் (உதாரணம்: சிவப்பிரகாசம் பிள்ளைக்கு அளித்த விடைகளில்). உபாசகர்களின் மனநிலை உயரலாம்; அவர்களுக்கு அஷ்டமா சித்திகள் கிட்டலாம்; தெய்வீகக் காட்சியுருக்கள்கூட மனத்திரையில் தோன்றக்கூடும். ஆயினும், எந்நிலையிலும் என்றென்றும் அதே கேள்விக்குறி எழுகிறது: 'யாருக்காம் இவை நிகழ்கின்றன ?', என்கிற கேள்வி. ஆன்மாவே சுத்த இருப்பாகிவிடும்போதுதான் கேள்வி முற்றுப்பெறுகிறது.

பிரகாசக் காட்சிகளும், அமானுஷ்ய சித்திகளும் இவ்வுண்மையான ஆன்ம சுகத்திற்குத் தடைகளாகும். உலகாயத செல்வாக்கு அல்லது போக சுகங்கள் மனதைத் தூண்டி இழுப்பதுபோன்று இவையும் உள்ளத்தே புகுந்து திசை திருப்பிவிடக்கூடியவையே. அத்தகைய காட்சிகளும், இயற்கை கடந்த சித்திகளும் ஆன்ம எழுச்சியின் அம்சங்களே என்ற மன மயக்கத்தில் சாதகனை ஆழ்த்திவிடும். அவை கைகூடுவதைக் காட்டிலும் சித்தி கிட்டவேண்டும் என்கிற ஆசையும்கூட தீங்கிழைக்கக் கூடியது. ஒரு சமயம் ஸ்ரீபகவான் எதிரில் நரசிம்ம சுவாமி அமர்ந்து, சுவாமி விவேகானந்தரின் வாழ்க்கை வரலாற்றையும் வாக்குகளையும் தமிழில் மொழி பெயர்த்துக் கொண்டிருந்தார். விவேகானந்தரை ஸ்ரீராமகிருஷ்ணர் வெறுமனே தொட்டு ஆசிவழங்கிய கணத்தில், தாம் காண்பவை யாவும் ஒரே சத் பொருளே என்ற

மனக்காட்சி வியாபித்ததாக விவேகானந்தர் உணர்ந்த நிகழ்ச்சி பலரும் படித்தறிந்ததே. வரலாற்றில் அந் நிகழ்ச்சியை விவரிக்கும் கட்டத்தில் நரசிம்ம சுவாமிக்கு ஓர் சந்தேகம் எழுந்தது. 'அத்தகைய மனவெழுச்சி பெறு தல் விரும்பத்தக்கதா, அவ்வாறெனில் ஸ்ரீபகவானும் ஸ்பரிசத் தாலோ கண் வீச்சாலோ தமக்கும் அதே போன்று உண்மைப் பொருளை உணர்த்தக் கூடுமா?' என்ற கேள்வி தலைதூக்கியது. நினைத்த கேள்வியை அதே தருணம் வேறொருவர் எழுப்பி விடை இறைஞ்சுவது ஸ்ரீபகவானின் முன்னிலையில் அடிக்கடி நிகழ்வதுண்டு. கேட்கலாமோ கூடாதோ என்று நரசிம்மசுவாமி தயங் கிய சமயம், எதிரில் அமர்ந்திருந்தவர்களில் ஒருவரான எச்சம்மாள் எனும் பக்தை முந்திக்கொண்டு, "பக்தர்கள் அஷ்டமா சித்திகளை பெறமுடியுமா?" என வினவி னாள். அக்கால கட்டத்திலேதான் ஸ்ரீபகவான் தமது சிந்தாந்தத்தை வரையறுத்துக்கூறும் உள்ளது நாற்பது மற்றும் அதன் அனுபந்தப் பாடல்களை இயற்றி வந்தார். எச்சம்மாளின் கேள்விக்கு விடையாகப் புனைந்த ஓர் செய்யுளும் அதில் இடம் பெற்றது:

**சித்தமா யுள்பொருளைத் தேர்ந்திருத்தல் சித்திபிற**
**சித்தியெலாஞ் சொப்பனமார் சித்திகளே—நித்திரை விட்**
**டோர்ந்தா லவைமெய்யோ வுண்மைநிலை நின்று**
**பொய்ம்மை**
**தீர்ந்தார் தியங்குவரோ தேர்.**

*[உள்ளது நாற்பது, செய்யுள் எண்.35]*

*(இயல்பாயுள்ள உட்பொருளைச் சார்ந்திருத்தலே மெய்யான சித்தி; மற்ற (அமானுஷ்ய சக்திகளாகிய) சித்திகள் எல்லாமே கனவு போன்ற பிரமைகளே. நித்திரை கலைந்தவுடன் அவை உண்மை என அறியப்படுமா? உண்மை நிலையில் ஒன்றி விடுவோர் அத்தகைய மாயசக்திகளில் மயங்குவரோ?)*

மாய மந்திரங்கள் ஆன்மிகத்திற்கு இடையூறானவை. அமானுஷ்ய சக்திகளும், அதைக் காட்டிலும் அச்சக்திகள் சித்திக்கவேண்டும் என்கிற நாட்டமும், சாதகனுக்குப் பாதகமானவை. ஸ்ரீபகவான் வடமொழியிலிருந்து தமிழாக்கம் செய்த தேவிகாலோத்தரம் என்ற ஞானப் பாடல் தொகுப்பில் இரு செய்யுள்களில் இதே கருத்து வலியுறுத்தப்படுகிறது: 'பலவித சித்து வித்தைகளும், ரசவாத ரகசியங்களும் நேரடியாகக் கிடைக்கப் பெற்றாலும் சாதகன் அவற்றைப் பற்றலாகாது. தாழ்ந்த நெறிகளான அவை, ஜீவனைக் கட்டிப்போடும் கயிறுகளாகிக் கீழ் நிலைக்கு இழுத்துப்போம். எங்கும் வியாபகமாயுள்ள மெய்யுருவைப் பற்றும் சுகமாகிய பரமமுக்தி இச்சித்திகளின் மூலம் கிட்ட மாட்டாது.*

இது ஒருபுறமிருக்க, ஆன்மவிசார விவரத்தைத் தொடர்வோம். 'நான் யார்?' என்ற விசாரணையை ஸ்ரீபகவான் ஓர் தியான உத்தியாக மட்டுமே வகுத்துரைக்கவில்லை. அன்றாட வாழ்க்கை அனுஷ்டானமாகவும் பிரஸ்தாபிக்கிறார். 'தியானம் புரிவதற்கென ஒதுக்கப்பட்ட நேரங்களில் மட்டுமே ஆன்ம விசாரம் மேற்கொள்வதா, அல்லது எல்லா நேரத்திலுமா?' என்று கேட்டபோது, "எப்போதுமே" என்று பதிலுரைத்துள்ளார். உலக வாழ்க்கையைத் துறக்குமாறு ஏன் அவர் ஒருபோதும் கூறியதில்லை என்பதற்கு இதுவே விளக்கமாகவும் அமைகின்றது. ஏனெனில், ஆன்ம சாதனைக்கு

* பலவிதமாஞ் சித்திகளும் பாதாள முன்பா
யிலகுமிர சாயனமு மென்ப–வுலகிற்
பிரத்தியட்ச மாகவே பெற்றாலும் பற்ற
லொருவுகவே சாதகனுள்.

இவையாவும் பந்தகமா மிச்சீவ னுக்கே
யிவைமேலுந் தாழ்ந்தநெறி யீவ– விவைக
ளியாவையினு மப்பரம முத்திசுக மில்லை
வியாபகமாஞ் சித்துருவம் விட்டு.

– தேவிகாலோத்தர ஞானவிசாரப் படலம், செ.66,67.

இடையூறான சூழ்நிலையும் கூட சாதனைக்குத் துணைக் கலமாகத் திரிபு பெறுகிறது. முடிவாக, சாதனை என்பது அகந்தையைச் சாடுவதே அன்றி வேறல்ல. அடங்கா ஆர்வம் அல்லது விதவித வேட்கைகளிலும் இழைந்தோடும் நம்பிக்கையும் அச்சமும், அபிலாஷைகளும் மனக்கலவரங்களும் அகந்தை அகழியின் அரண்களாக அமைந்திருக்கும் வரை, பரவசப் பாங்குகளோ தியானமோ ஆன்மிக சாதனையின் வெற்றிக்கு வழிவிடாது. ஸ்ரீராமரும், மன்னர் ஜனகரும் அரண்மனை வாழ்வில் திளைத்திருந்த போதிலும் உலகப் பற்று அறவே அற்றவர்களாகத் திகழ்ந்தார்கள். ஸ்ரீபகவான் மீது பாறைக் கற்களை உருட்டிவிடத் துணிந்த சாது உலக வாழ்க்கையைத் துறந்தவர் எனினும் அவ்வுலகத்துப் பாறைகளோடு பிணைந்து வாழ்ந்தவர் அன்றோ!

அதே சமயம், சாதனையில் லயிக்கத் தன்னலமற்ற வினையாற்றல் மட்டுமே போதுமானது, வேறு திட்டமிட்ட முஸ்தீபுகள் தேவையில்லை என்று அர்த்தம் கொள்ளலாகாது. ஏனெனில், அகந்தைக் கள்வன் மகா தந்திரக்காரன்; விடாக்கண்டன். அகந்தையை அழிப்பதற்கான நடவடிக்கைகளிலும்கூட அவன் புகுந்து விளையாடுவான். பணிவில் இறுமாப்புக் கொள்ளச் செய்வான்; எளிமை வாழ்வில் இன்பம் காண்பான். ஆகவே, அங்கங்கே அகந்தையை அடையாளம் கண்டதும் மடக்கி ஒடுக்க விடாமுயற்சி அவசியமாகிறது.

ஆன்ம விசாரணை ஓர் அன்றாட அலுவல். எழுகின்ற ஒவ்வொரு எண்ணமும் அது யாருக்கு எழுகின்றது என்று தன்னைத்தானே கேட்டுக்கொள்வது ஓர் திட்டவட்டமான முனைப்பு; ஆற்றல் மிக்கதும் கூட. ஓர் புத்தகத்தை அல்லது சினிமாப் படத்தைப் பற்றி அபிப்பிராயம் சொல்வது போன்ற மனக்கிளர்ச்சியற்ற பேச்சுக்களில் ஆன்ம இழைவுக்கு இடமில்லைதான். ஆனால்,

உணர்ச்சி வசப்பட்ட எண்ண எழுச்சிகளை முறியடிக்க ஆன்ம விசாரம் அதீத ஆற்றல் வாய்ந்தது; அத்தகைய உணர்ச்சிகளை வேறோடு வெட்டிச் சாய்க்க வல்லது: ஒருவர் மனம் நொந்து சீற்றம் கொள்ளலாம். நொந்த மனம் யாருடையது ? கடுஞ்சினம் கொள்வது எவரோ ? மகிழ்வது, மனம் தளர்வது, கோபிப்பது அல்லது எக் களிப்பது யார் ? பகற்கனவு காண்பது அல்லது வர விருக்கும் வெற்றிகளில் மனம் களிப்பது போன்றவை அகந்தைக் கனலை விசிறித் தீமூட்டுபவை. தியானமோ நீர் வார்த்துத் தீயைத் தணிக்கிறது. அத்தகைய தருணங் களில் ஆன்ம விசாரம் எனும் கூர் வாளை உருவி மனச் சிக்கல்களை வெட்டி வீழ்த்துவதற்கான விழிப்பும் வல்ல மையும் வேண்டும்.

வாழ்க்கை ஓட்டத்தில் ஆன்ம விசாரத்தை அனு சரிப்பதுடன் கூடவே தெய்வ சித்தத்திற்கும் அடிபணிந்து இறைவனிடம் சம்பூர்ண சரணாகதி அடைதல் வேண் டும் என்றும் ஸ்ரீபகவான் வலியுறுத்தியுள்ளார். வாழ்க் கைச் சுமையையும் சகல பொறுப்புக்களையும் ஒருவர் தாமே தாங்குவதாக எண்ணும் மனப்பான்மையை ஓர் உதாரணத்தோடு விளக்கினார். 'ரயில் பெட்டியில் ஏறி அமர்ந்த பயணி, தம் பெட்டி படுக்கையை இறக்கி வைக்காமல் தலைமீது சுமந்து செல்வதற்கு ஒப்பானது' என்றார். எப்படியும் அவனோடு அவன் சாமான்களை யும் ரயில் இழுத்துச் சென்று, போகவேண்டிய இடத் திற்குக் கொண்டு சேர்க்கப் போகிறது என்று அறியாத அப்பாவி ஆசாமி அவன்! அறிவுள்ள பயணியோ மூட்டைமுடிச்சுகளை மேற்பலகையில் வைத்துவிட்டு விச்ராந்தியாக அமர்ந்து பயணம் செய்கிறான்' என்றார். அவர் தீட்டிய விதிமுறைகளும், காட்டிய உதாரணங் களும் ஒரே மையம் கொண்டவை: சுயநலத்தை நலியச் செய்தல், கர்த்தவ்யன் (செயல்புரிவோன்) நானே என்கிற மன மயக்கத்தை மாய்த்தல், இவையே குறிக்கோள்.

பிரபல காங்கிரஸ் தொண்டரும் செல்வந்தருமான ஜம்னாலால் பஜாஜ் ஒரு சமயம் ஆசிரமத்திற்கு வந்திருந்தபோது "சுயராஜ்யம் பெற வேண்டும் என்ற விருப்பம் சரிதானே ?" என்று கேட்டார்.

ஸ்ரீபகவான் இவ்வாறு விடை பகன்றார்: "ஆம். அந்த லட்சியத்தை அடைவதற்காக மேற்கொள்ளும் நீண்டகால சேவை மனதை விசாலப்படுத்துகிறது. அவ்வாறு சேவை புரியும் தனி நபரும் படிப்படியாய் தாய்நாட்டுடன் ஒன்றுபடுகிறார். இவ்வாறு இரண்டறக் கலப்பது விரும்பத்தக்கதே, தன்னலமற்ற அச்செயல் பாடே நிஷ்காம்ய கர்மம் ஆகும்."

தமது அரசியல் லட்சியத்திற்கு சுவாமிஜியின் அங்கீகாரத்தைப் பெற்றுவிட்டோமே என்று ஜம்னாலால் பஜாஜ் மட்டற்ற மகிழ்ச்சியடைந்தார் போலும்! மேலும் தெளிவான இசைவை நாடி, கேள்வியை நீட்டினார்: "நீண்ட காலம் போராட்டத்தில் ஈடுபட்டுப் பெரும் தியாகங்கள் பல புரிந்து சுயராஜ்யம் கிட்டினால், அந்தப் பயன்முடிவைக் குறித்துத் தியாகி மகிழ்ச்சியும் பெருமிதமும் கொள்ளலாம் இல்லையா ?" என்று கேட்டார்.

ஆனால் என்ன ஏமாற்றம் ? கிடைத்த பதில் இது தான்: "போராட்டத்தில் ஈடுபடுபவர், அனைத்தையும் ஆட்டி வைக்கும் சர்வ சக்தியிடம் சரணடைதல் வேண்டும். அம்மகா சக்தியின் வல்லமையை எண்ணத்தில் ஈர்த்துச் செயலாற்ற வேண்டும். அவ்வாறு சேவை புரிபவர் எதனில் பெருமிதம் கொள்ளக்கூடும் ? செயற் பயனை ஒருபோதும் எதிர்பார்க்கலாகாது. அவ்வாறு செயலுறுவதே நிஷ்காம்யம்."

அதாவது, ஒருவரின் செயல் விளைவு ஆண்டவனின் சித்தப்படியே அமையும். தூய்மையும் சுயநலமற்ற செயல் மட்டுமே வினை ஆற்றுபவரின் பொறுப்பு.

நேர்மையான காரியத்தை அது நேர்மை வாய்ந்தது என்பதற்காகமட்டுமே தன்னலம் கருதாது ஒருவர் மேற் கொண்டால் அதன் மூலம் மற்றவர்களுக்கு நன்மை விளைவிக்கிறார். இவ்வாறு வெளிப்படையாகத் தெரியும் நல் விளைவுகள் ஒரு புறமிருக்க, அதனிலும் மேலான, சக்தி வாய்ந்த, உள்ளார்ந்த நலன்களும் எழும். தவிர, செயல் புரிபவரும்கூட நேரடியாகச் சொந்தப் பயனும் அடைகிறார். சொல்லப்போனால், தனிநபரின் தன்னல மற்ற செயற்பாடுகளே அந்நபரின் மெய்யான வங்கிக் கணக்கு சேமிப்புகளாகிய கர்மவினைப் பயன்களாம். இத்தகைய நற் பலச்சேமிப்புகளே வட்டியும் முதலுமாய் அந்நபரின் வருங்கால கதிமோட்சத்திற்கு உதவும்.

இம்மாதிரியான சந்தர்ப்பங்களில், சில அன்பர் களின் கேள்விகளுக்கு விடையளிக்கையில், மனப்பான்மை அவ்வாறு அமைந்தால் சமூக அல்லது அரசியல் சேவை களும்கூட ஓர்வித சாதனையேஆகும், என்று ஸ்ரீபகவான் விளக்கம் கூறியுள்ளார். ஆயினும், அம்மாதிரியான நட வடிக்கைகளில் தம் பக்தர்கள் ஈடுபடுவதை அவர் ஊக்கு விக்கவில்லை. வாழ்வில் அவரவர் கடமைகளை தன்னலமற்ற தூய்மையோடு கடைபிடித்து, நேர்மை வழி நடத்தலே போதுமானது என்பார். இன்றைய உலக நடப்புகள் முரண்பாடுகள் மிக்கதாகத் தோன்றலாம். ஆயினும் அனைத்து நிலவரங்களும் தெய்விக இசைவுக்கு இணங் கியவைதாம். தன்னைத்தானே அறிதல் மூலம் ஒருவர் அந்த முரணற்ற இசைவை உணர்வதோடு நின்றுவிடா மல் வையகத்தில் சமரச ஒருங்கிணைப்பைத் தோற்று விப்பதிலும் தமது சூழ்நிலையால் உதவுகிறார். உலக நடப்புகளை ஒரேயடியாய் மாற்ற மேற்கொள்ளும் முயற் சிகளைக் காட்டிலும் மேற்சொன்ன உள்ளாற்றல் மேன்மை யானது. இதுபற்றிய ஸ்ரீபகவானின் கருத்துகள் பால் பிரண்டனுடன் நிகழ்ந்த உரையாடலில் தெரியவரும்:

பால்: நெருக்கடி நிறைந்த காலத்தில் நாம் வாழ்ந்து வருகிறோம். உலக எதிர்காலத்தைப்பற்றி பகவானின் எண்ணம் யாதோ ?

பகவான்: வருங்காலத்தைப் பற்றி கவலை ஏன் ? நிகழ் கால நிலை என்னவென்று சரிவரத் தெரிந்து கொண்டீர்களா நீங்கள் ? நிகழ்வன குறித்துக் கவனமாக இருங்கள். வருங்காலம் தன்னைத்தானே கவனித்துக் கொள்ளும்.

பால்: நட்புறவும் பரஸ்பர நல்லெண்ணமும் இவ்வுலகில் விரைவில் தழைத்து புது யுகம் காண்போமா அல்லது போர்களிலும் குழப்பத்திலும் உலகம் அமிழ்ந்துவிடுமா ?

பகவான்: உலகை ஆள்பவன் ஆண்டவன். உலகத்தைக் காப்பது அவன் பொறுப்பு. வையகத்தைப் படைத்து உயிர்ப்பித்தவனுக்கு அதை எவ்வாறு பேணுவது என்பதும் தெரியும். உலக பாரத்தைத் தாங்குபவன் அவனே. நீங்கள் அல்ல.

பால்: ஆனால், சுற்றிலும் நிகழ்வனவற்றை விருப்பு வெறுப்பின்றி நோக்கினால் அப்படியொரு தீன தயாளனின் கிருபை கிடைத்து வருவதாக நம்புவதற்கில்லையே ?

பகவான்: நீங்கள் எவ்வாறோ, அவ்வாறே வையகமும். உம்மைப் பற்றியே அறிந்து கொள்ளாமல் உலகத்தைப் பற்றி அறிய முற்படுவதால் என்ன பயன் ? பேருண்மையை நாடும் சாதகர்கள் இந்தக் கேள்வியை எழுப்புவானேன் ? இம்மாதிரியான வினாக்களில் ஜனங்கள் தங்கள் சக்தியை விரயம் செய்கின்றனர். முதலில் உமக்குப் பின்னால் மறைந்திருக்கும் உண்மையைக் கண்டுபிடியுங்கள். உலகத்தின் ஓர் அம்சமே நீங்கள். உங்களைக் கண்டுகொண்ட பிறகு உலகின்பின் மறைந்துள்ள உண்மையைப் புரிந்து கொள்ளும் நிலையை எட்டுவீர்கள்.

கடைசி வரிகளில் ஸ்ரீபகவான் "நீங்கள்" என்ற பதத்தை "அகந்தை" என்கிற அர்த்தத்தில் பிரயோகிக்கிறார் என்பது கவனிக்கத்தக்கது. மெய்யான ஆன்மா, உலகின் ஓர் அம்சம் அன்று. அவ்வான்மாவே உலகை தோற்றுவிக்கும் பரமாத்மா ஆகும்.

ஆன்ம விசாரத்தை வாழ்வின் நடவடிக்கைகளூடேயும் மேற்கொள்ளுமாறு வலியுறுத்துவது சம்பிரதாயத்தையொட்டியே இவ்வாறு விரிவுபடுத்தப் பட்டுள்ளது; தற்காலத் தேவைகளுக்கு ஏற்ப திருத்தம் பெற்றுள்ளது. நேர்முக தியானமாக மட்டுமே சாதனையை உபயோகிப்பது மிகப் புராதன, பரிசுத்த தியான சீலம். ஸ்ரீபகவானுக்கு அதை யாரும் போதிக்காமலேயே முயற்சியின்றி உடனடியாக அது விளங்கியது என்றாலும் இச்சாதனை பண்டைய ரிஷிகளின் மரபு வழிக்கு ஒத்ததுதான். " 'நான் யார் ?' எனும் விசாரம் ஆன்மாவின் வேட்பு ஆகும். மனோவியாபகமாக எழும் விஷ விருட்ச விதைகளை எரித்துப் பொசுக்கும் பெருந் தீ அது."

ஞானமார்க்கம் மிகத்தெளிவானதும், அதே சமயம் அறிவு கடந்த ஆழ்ந்த சிந்தனை நெறியும் ஆகும். முடிவான மூலதத்துவத்தை உணர்த்தும் இம்மார்க்கம், சித்த சுத்தியுடன் கிரகித்துக்கொள்ளத் தகுதி பெற்றவர்களுக்கு மட்டுமே போதிக்கப்பட்டுவந்தது. அத்தகையோர் உலக உளைச்சல்கள் அற்ற ஏகாந்தமான இடங்களில் இடைவிடாது தியானம் மேற்கொண்டனர். கர்ம மார்க்கமோவெனில் உலக வாழ்க்கையில் ஈடுபட்டுள்ளோர் அனுசரிக்க வகுக்கப்பட்டது. கர்ம மார்க்கம் யாது என்பதை பகவத் கீதை வரையறுத்துக் கூறுகிறது: 'வாழ்க்கையின் நித்திய கர்மங்களை விதிமுறைப்படி அனுஷ்டிப்பதும், பலாபலன்களை எதிர்பார்க்காமல் செயல் புரிவதுமே கர்மயோகம்.' அதாவது, அகந்தையின் சாயல்

சிறிதுமின்றி, பற்றற்றுத் தொழில் புரிந்து பெருநிலை சேர்தல்.

இந்த இரு மார்க்கங்களையும் ஒருங்கிணைத்து, தற்கால நிர்பந்தங்களுக்குத் தக்கவாறு திருத்தியமைத்த ஓர் புதிய தூய சிந்தனை நெறியே ஆன்ம விசார மார்க்கம். இதனை அலுவலகத்திலோ, தொழிற்கூடத்திலோ, வேண்டுமானால் ஆசிரமத்திலோ, மலைக்குகையிலோ, ஆசார அனுஷ்டானங்களுடனோ, வேண்டாமெனில் எவ்வித சடங்குகளும் நியமங்களும் இல்லாமலோ பின்பற்றலாம். குறிப்பிட்ட ஒருசில நேரம் தியானத்திலாழ்ந்து, பின்னர் மற்ற நேரங்களில் அதே மனோபாவத்துடன் மற்ற வேலைகளில் ஈடுபடுவதே இந்த எளிய முறை.

"இறுதியில், மறைபொருள் யாவும் தெளிவுறும்" — இது ஏசுபிரானின் போதகம். கடைமுடிவான மூல தத்துவத்தையும், அதனை உணர்வதற்கான மிக ரகசிய மார்க்கத்தை அனைவரும் அறிய வெட்ட வெளிச்சமாக்கி, இக்காலத்திற்கு ஏற்பத் திருத்தியமைத்து அருளியதே ஸ்ரீபகவானின் சாதனை. இதன்மூலம் ஏசுநாதரின் வாக்கு நிறைவேற்றப்பட்டுவிட்டது எனலாம்.

பார்க்கப்போனால், ஞான மார்க்கமும் கர்ம மார்க்கமும் மட்டுமே ஒருங்கிணைந்தது அல்ல இப்புதிய ஆன்ம விசாரம். தூய அன்பையும் இது பரிமளிக்கச் செய்கிறது. ஆன்ம நேயமும், தன்னுள் உறைந்துள்ள குருவினிடம் பணிவன்பும் பிறக்கின்றன. அக் குருவன்பே பகவானிடத்தும் இறைவனிடத்தும் செலுத்தும் பேரன்பு. "மகர்ஷி வாய்மொழி" யில் ஸ்ரீபகவான் இதனை இவ்வாறு இயம்பியுள்ளார்: "நித்தியமாய் நிரந்திரமாய் ஆத்மாவில் நிலைத்திருக்கும் சகஜ ஸ்திதியே ஞானம். ஆத்மாவில் நிற்க, ஆத்மாவை நேசிக்க வேண்டும். கடவுளே ஆத்மாவாக இருப்பதால், ஆத்மாவிற் பூணும்

அன்பே கடவுளிடம் பூணும் அன்பாகும். இதுவே பக்தி. இவ்விதம் ஞானமும் பக்தியும் ஒன்றே". – (*மகர்ஷி வாய்மொழி*, பாகம் 1, அத்.IV).

ஸ்ரீபகவான் காட்டிய ஞான நெறியும், பக்தி நெறியும் முற்றிலும் வெவ்வேறு வழிகளாகத் தோன்றக் கூடும். ஆனால் உண்மையில் அவை ஒன்றையொன்று இணை பிரியாதவை. ஒரு வழியை மேற்கொண்டால் மற்றது தேவையற்றதாகிவிடாது. மேற்கூறியபடி அவை இரண்டறக்கலந்த சன்மார்க்கமே ஆகும்.

ஒருபுறம், வெளியில் உள்ள குருவை சரணடைந்து அவரது அனுக்கிரகத்தின் வாயிலாய் ஆன்ம விசாரத்தில் ஈடுபடுபவன் அந்தரங்க குருவையும் அடையலாம். மறு புறம், 'நான் யார்?' ஆன்ம விசாரம் அமைதிக்கும் ஆன்ம சமர்ப்பணத்திற்கும் வழிகோலுகிறது. இவ்விரு வழிமுறைகளுமே நேரடியாய் மனத்தை வடித்து அகந் தையை ஒடுக்கப் போராடுகின்றன. முதல் வழிமுறையில் இப்போராட்டம் வெளி குருவின் முன்னிலையில் நிகழ் கிறது. இரண்டாவது முறையில் அதே போராட்டம் உள்ளே உறைந்திருக்கும் குருவின் முன்னால் நிகழ்கிறது. மறைமுகமான மற்ற சாதனை முறைகளும் மன உறு தியை வளர்த்து மனதை ஒரு நிலைப் படுத்துகின்றன. இவ்வாறு ஏகாக்கிரம் அடைந்த மனம், பின்னர் முடிவில் அந்தராத்மாவிடம் சரணடைவதற்கான வலி மையும் வீச்சும் பெறுகின்றது. இதையே ஸ்ரீபகவான் 'திருடன் போலீஸ்காரனாகி, திருடனாகிய தன்னையே பிடிப்பது' என்று குறிப்பிட்டுள்ளார். சரண்புகுவதற்கு முன் மனோ பலமும் மனத்தூய்மையும் பெறவேண்டும் என்பது என்னவோ நிஜம்தான். ஆயினும், ஆன்ம விசாரத்தைப் பயன்படுத்துவோர்க்கு ஸ்ரீபகவானின் கருணையால் இந்த குருதரிசனம் தானாகவே துலங்கு கிறது.

கிருஷ்ண ஜிவ்ரஜனி என்ற பக்தர் இதுகுறித்து ஒரு சமயம் கேட்டார்: "ஆன்மானுபூதிக்கான அருகதை பெறுவதற்கு சாதகன் நற்பண்புகள் அல்லது தெய்விகத் தன்மையை வளர்த்துக் கொள்ளவேண்டிய அவசியத்தை தரும சாத்திரங்கள் வலியுறுத்துகின்றனவே ?"

ஸ்ரீபகவான் விடை பகன்றார்: "மோன ஞான நிலையிலே அனைத்து நற்குணங்களும் தெய்விக இயல்புகளும் அடங்கியவை. தீங்குகள் அல்லது அசுர குணங்களோ அஞ்ஞானத்தின் உள்ளடக்கம். ஞானம் உதிக்கையில் அஞ்ஞானம் விலகுகிறது. தெய்விக குணங்கள் தாமாகவே வந்தடைகின்றன. ஞானி ஒருவரால் பொய் பேச இயலாது. தீமை ஏதும் இழைக்கமாட்டாதவர். மோட்ச நிலைக்குத் தம்மை தயார் செய்து கொள்ள வேண்டும் என்று நீதிநூல்கள் விதிப்பது வாஸ்தவம்தான். ஆயினும், ஞான விசாரமார்க்கத்தை பின்பற்றுபவர் தெய்விக குணங்களைப் பெறுவதற்கு அவரது ஆன்ம விசார சாதனை ஒன்றே போதுமானது. வேறேதும் வேண்டாம்".

'அதெல்லாம் சரி, ஆன்ம விசாரம் உண்மையில் அவ்வளவு சுலபமாகக் கிட்டக்கூடியதா ?' என்ற கேள்வி எழத்தான் செய்கிறது. ஸ்ரீபகவான் ஸ்கந்தாசிரமத்திலிருந்து மலையடிவாரத்திற்கு வந்து தங்கிய பிறகு தொகுக்கப்பட்ட "விசார சங்கிரகம்" என்ற நூலில் இதற்கான விடை காணப்படுகிறது. ஒரு பக்தர் கேட்டாராம், 'எல்லா சாதகர்களுமே, ஆன்மீக முதிர்ச்சி பெறாதவர்கள் உட்பட, இந்த விசாரமார்க்கத்தை நேரடியாய் அனுஷ்டிக்கலாமா ?" என்று. ஸ்ரீபகவான் பகன்ற விடை இதுவே: "இல்லை (ஆன்மீகப்) பக்குவர்க்கே இயலும். ஏனையோர் அவரவர் மன, தார்மிக நிலைக்குரிய சாதனங்கள் மூலம் பழகவேண்டும்.'' விருபாட்ச குகைவாச காலத்திலும் அவர் இதுபோன்று

விடை கூறியுள்ளார். துதி, ஜபம், தியானம், பிராணா யாமம், யோகம் போன்றவையே அவர் குறிப்பிட்ட இதர சாதனங்களாகும். "சித்த ஒருமைப்பாடு அடையும் பொருட்டே சர்வ சாதனங்களும் அனுஷ்டிக்கப்படு கின்றன." ஆன்ம விசாரத்துக்கு ஆயத்தமாவதற்கும், அவ்விசாரத்தோடு அவ்வப்போது இணைந்தும் இச் சாதனங்களை மேற்கொள்ளலாம். பல பக்தர்கள் அத் தகைய சாதனங்களை வேறு சில ஆசான்கள் பணித்த படி பயன்படுத்தி வருவதாகவும் அவற்றைத் தொடர்ந்து மேற்கொள்ளலாமா என அவரது ஒப்புதலையும் வேண் டியதுண்டு. அவர்கள் கூறுவதை கனிவார்ந்து செவியுற்று அங்கீகாரமும் அளித்தார். ஆயினும், சாதகர்கள் யாரே னும் அத்தகைய வேறு சாதனங்களை மெள்ளக் கை விடத் துணிந்தால், அதையும் ஆமோதித்தார். தாம் இதுகாறும் மேற்கொண்ட சாதனைகள் தமக்குத் துணைபுரியவில்லை என்றும் அவற்றை விட்டுவிட லாமா என்று ஒரு பக்தர் வினவியபோது ஸ்ரீபகவான், "ஆம். மற்ற எல்லா சாதகங்களுமே கடைசியில் ஆன்ம விசாரத்திலேயே கொண்டு சேர்க்கின்றன. மற்றவை வேண்டாமெனில் விட்டுவிடலாமே" என்றார்.

திருவண்ணாமலை அடிவாரத்து ஆசிரமம் தோன்றி வளர்ந்துவந்த பிற்காலப் பகுதியில், விசாரத்தை மேற் கொள்ள எவ்வித கட்டுப்பாடும் வரையறுக்கப்படவில்லை. இருந்தும், விசாரமுறை வேண்டி வருவோர்க்கு, இதய மத்தியில் மனத்தை லயித்து ஆன்ம விசாரம் அனு சரிப்பதை ஸ்ரீபகவான் வெளிப்படையாகவே வலியுறுத்தி வந்தார். அக்காலகட்டத்திலேதான் அவர் புதிய வடிவில் விசார மார்க்கத்தை அறிமுகப்படுத்தி, வேண்டுவோர் யாவரும் அதனை அனுசரிக்கத்தக்க அகநாட்ட சாதனை யாக அருளினார் என்று அனுமானிக்கலாம்.

இன்னொருபுறம் வேறொன்றும் கவனிக்கத் தக்கது. கிடைத்த சான்றுகளின்படி, வெகு சிலரே அப்புதிய விசார வாய்ப்பைப் பெற விழைந்தனர் எனலாம். சொல்லப் போனால், அப்போது ஆசிரமத்துக்கு வந்து போவோர் பலரும் உலக வாழ்வின் மர்மத்தை விளக்குமாறு வேண்டு வார்கள்; அல்லது மனச் சாந்தி கிட்டவோ, தம்மை பரிசுத்தனாக்கி குணநலன்கள் அருளவோ பிரார்த்திப் பார்கள். குறைகளை நிவர்த்திக்குமாறு இறைஞ்சுவர். அத்துவைத சித்தாந்தத்தைப் புரிந்து கொள்ளவோ ஆன்ம விசாரணை மேற்கொள்ளவோ சிறிதும் அருகதை யற்ற பாமரர்களே பெரும்பாலும் தரிசிக்க முன்பு வந்தனர். இதன் காரணமாகவே மேலோட்டமாகக் காண வந்தவர் கள் அவரிடமிருந்து தங்களுக்குப் போதிய ஆறுதல் கிடைக்கவில்லையே என்று கவலையும் ஏமாற்றமும் அடைந்தனர். எனினும், கூர்ந்துணரும் நோக்காளர்களோ அவர் அளிக்கும் விடை வாய்ப்பேச்சில் அல்ல, கேள்வி கேட்போரின் மனத்தில் அமைதியாய் ஊடுருவத் தொடங்கும் ஆக்க விளைவுகளே உரிய விடை என் பதை அறிவர்.

நித்திய சத்தியத்தை மட்டுமே ஞானியர் கண்டுணர் வர். ஆகவே, ஸ்ரீபகவானும் பூரண சத்தியத்தையே நிலைக் களனாகக் கொண்டு விளக்கங்கள் வழங்கி வந்தார். ‘வேற்றுமைகள் கடந்த ஞானிக்கு வேறு உறவுகள் கிடையா’ என்ற மூதுரைப்படி அவர் எவரையும் தமது சீடன் என்று குறிப்பிட்டாரில்லை. ஆயினும், அவரது அமைதி நிறைந்த கருணைக் கதிர்கள் அன்பர்களின் மனத்தை ஊடுருவி அவரவர்க்கு உகந்த சாதனை முறைகள்மூலம் ஆன்மிக முன்னேற்றம் காணச் செய்தன. குருவைச் சரணடைந்து மோனநிலையில் ஆன்மதரிசனம் பெறுவ தைப் பற்றி முன்பே குறிப்பிட்டுள்ளோம். ஆகவே, வாய் மொழியால் வலியுறுத்தல்கள் தேவையில்லாமற் போயிற்று. ஒவ்வொருவரும் அவரவர் மன இயல்புக்கு

ஒத்தவாறும், பக்குவத்திற்கும் பக்திக்கும் தக்கவாறும் அவரது அருள் வழியே விமோசனம் பெற்றனர். "குருவின் கருணா வெள்ளம் கடல் போன்றது. ஒருவன் கையில் கோப்பை ஏந்தி வந்தால் அவன் மொண்டு செல்லக் கூடியது ஒரு கோப்பையளவு மட்டுமே. இங்கு கடலின் கஞ்சத்தனத்தை குறைகூறிப் பயனில்லை அல்லவா? எவ்வளவுக்கெவ்வளவு பெரிய பாத்திரம் கொண்டு வருகிறானோ அத்தனைக்கத்தனை நிரப்பிச் செல்ல முடியும். இது அபேட்சிப்பவரையே சார்ந்தது'' என்ற ஸ்ரீ பகவானின் வாக்கும் இங்கு நினைவு கூறத்தக்கது.

பக்தர் ஒருவரின் தாயார் ஆசிரமத்திற்கு வந்திருந்தார். பிரான்ஸ் நாட்டைச் சார்ந்த மூதாட்டி அவர். தத்துவ விளக்கங்கள் அவருக்குப் புரியவும் இல்லை, அவற்றில் அக்கறையும் காட்டவில்லை. ஆனாலும், அதற்கு முன் பெயரளவில் கத்தோலிக்க கிறித்துவராக இருந்துவந்த அந்த அம்மையார், ஆசிரமத்தில் தங்கிச் சென்றபின் கத்தோலிக்க சமயத்தில் ஆழ்ந்த பற்றுள்ளவராக மாறிவிட்டார். ஸ்ரீபகவானின் அண்மையே தன் மாற்றத்திற்குக் காரணம் என்றும் உணர்ந்தார். வாய் மொழி வாயிலான வியாக்கியானங்களைக் காட்டிலும் இதுபோன்ற வெளிப்பாடுகளே பலருக்குப் படிப்பினையாக அமைந்தன.

வேறொன்றையும் இங்கு குறிப்பிடவேண்டும். காலம் செல்லச்செல்ல, ஸ்ரீ பகவானின் கருணா விலாசமும் பெருகி, பக்தர்களை மேன்மேலும் அவரோடு இறுகப் பிணைத்தது. அவ்வாறான முழு ஈர்ப்பு, அவர்களது இதயங்களை ஆன்ம விசாரத்தில் ஆழ்த்த் அடித்தளம் அமைத்தது.

பக்தர்கள் மட்டுமின்றி எப்போதாவது வருகை தருவோர் கூட கடைசி ஆண்டுகளில் அவரது கனிவார்ந்த முகம் தேஜோமயமாய் ஒளிரிட்டதைக் கண்டு சிலிர்த்தனர். பேரறிவாம் ஞானத்தின் வழியே ஆன்ம விசாரம்

பேரன்பைப் பரப்புவது போல, ஸ்ரீபகவான் அன்பு வாயிலாய் அன்பர்களை ஞான விளிம்புக்கு இட்டுச் சென்றார். அந்தராத்மாவைத் தேடும் வேட்பு எவ்வாறு அன்பு வடிவாகிய அவரிடம் சரணடைகிறதோ அதே போன்று, அவரை வழிபடுகையில் மனம் அகமுகமாகத் திரும்பி ஆத்ம சாட்சாத்காரமாய் விளங்கும் அவரிடம் ஆன்ம ஞானம் பெறுகிறது.

அவரது தரிசன மகிமையை ஒரு பக்தர் இவ்வாறு பெயர்த்துக் கூறியுள்ளார்: "அவர் வதனம் என் கண் முன் நிற்கிறது. அதில்தான் எத்துணை ஈர்ப்பு! நம்புவ தற்கரிய கருணை ததும்புகிறது, ஞான ஒளி வீசுகிறது – ஆயினும், பச்சிளம் குழந்தையினது போன்ற மாசற்ற முகம் அது – அறியவேண்டிய அனைத்தும் அறிந்த பேரறிவாளர் அவர். அவரது தரிசனம் என் இதயத்துள் ஓர் அதிர்வு அலை எழுப்புகிறது. ஹே பகவான்!– உள்ளார்ந்த என் இருப்பே உருப்பெற்று என் இதயம் வெளிமுகமாய் விரிவடைகிறது – 'யார் நீ?' என வினவுகிறது என்னை. இவ்வாறு மகரிஷியின் அன்புப் பெருக்கு என்னுள் மலர்ந்து என்னை "நான் யார்?' விசாரத்தில் சேர்ப்பிக்கிறது."

ஸ்ரீபகவான் போதித்ததுபோன்று வேறு எந்த ஞான ஆசானும் சாதனை செயல்முறை நுட்பத்தை ஒளிவு மறைவின்றி பேச்சிலும் எழுத்திலும் விவரித்ததில்லை. ஏனெனில் குரு ஒருவரால் சாதகர் முறையாக உபதேசிக் கப்பட்டால்தான் அச்செய்முறை பலன் அளிக்கவல்லது. இவ்விஷயத்தில் ஸ்ரீபகவான் புகுத்திய புதுமை ஒரு சில அடிப்படைக் கேள்விகளை எழுப்புகிறது. 'ஞான விசா ரத்தை எவர் வேண்டுமானாலும் மேற்கொள்ளலாமா? குரு விதித்து ஓதாத எந்த சாதனையும் பெறத்தக்கதா? பலனளிக்க வல்லதா?' போன்ற சந்தேகங்கள் எழத் தானே செய்யும்?

குருவால் முறைப்படி உபதேசிக்கப்பட்ட சாதனை நுட்பமே மேற்கொள்ளத்தகுதி வாய்ந்தது என்ற பரவலான மரபை ஸ்ரீபகவானும் ஆதரித்தார். 'எங்கெங்கோ பொறுக்கியெடுத்த மந்திர உச்சாடனங்களால் பலன் உண்டா' என்று ஒரு சமயம் கேட்டபோது அவர், ''இல்லை. தீட்சை பெற்றபிறகே அவற்றை உச்சரிக்க வேண்டும்'' என்றார்.

அப்படியெனில், விசார மார்க்கத்தை அவர் எவ்வாறு அனைவரும் அறிய விளக்க முற்பட்டார்? மேலும், ஆன்ம விசார விளக்கத்தைத் தம் போதனா நூல்களில் காணும்படி வெறுமனே வந்துபோவோர்க்கும் கூட சில சமயம் பணித்தது ஏன்? இதற்கு ஒரே ஒரு விளக்கம் தான் உண்டு. திருவண்ணாமலையில் அவரது இருப்பிடத்தில் அவரை நேரில் அணுகத்தக்க மிகச் சிலருக்கு மட்டுமே அவர் குருநாதர் அன்று. அவர் தாமே பிரமாண அதிகாரி; ஆகவே நியம ஆசரணம் வழங்க வல்லவர். ஆன்மீகம் மங்கிவிட்ட இன்றைய இருண்ட காலப் பிரிவில் அனேகர் ஆன்மிக விளக்கம்பெற ஆசான்களைத் தேடி அலைகின்றனர். ஆனால் உண்மைக் குருவைக் காண்பது அரிதாகிவிட்டது. இதன் காரணமாக இறைவனே அவனியில் சத்–குரு வடிவில் எழுந்தருளினார் போலும்! அவரை நாடுவோர் அனைவருக்கும் சற்குருவாய் – ஞான வழிகாட்டியாய் – அமைந்து நேர்வழிச் சாதனையை அனைவரும் அறிய பறைசாற்றினார். அவரது கிருபைக்குப் பாத்திரமானவர் அனைவருக்கும் அச்சாதனை கிட்டக் கூடியதாயிற்று.

திருவண்ணாமலைக்குச் சென்று தரிசிப்போர்க்கு மட்டுமே விசாரமார்க்கத்தின் பலன் கிடைக்கப்பெறும் என்பதில்லை. இந்துக்களுக்கு மட்டுமே அது உரியது என்பதும் இல்லை. ஸ்ரீபகவானின் போதனைகள் ஏனைய சமயங்களின் சாராம்சமே ஆகும். மற்ற சித்தாந்தங்களில்

மறைந்து கிடக்கும் உண்மைகளை பகிரங்கப்படுத்தினார். சீனத்துத் தாவ் நெறி (Taoism), மற்றும் புத்த மதம் ஆகிய இரண்டின் ஆதார மையம் அத்துவைத சித்தாந்தமே. 'உள்ளிருக்கும் குரு' என்பதோ 'உன்னுள் உறைந்துள்ள ஏசுநாதர்' என்ற கிறிஸ்துவக் கோட்பாட்டில் பொதிந்துள்ள பொருளின் முழுமை. விசார மார்க்கம் ஊடுருவித் தேடும் தூய உணர்வாகிய மெய்மையே இஸ்லாமிய சமய நெறி அல்லது ஷபத் உணர்த்தும் மெய்மைப் பெருஞ்ஜோதி; அதாவது தெய்வங்கள் கிடையா, எல்லாம் வல்ல அல்லா ஒன்றே உண்மை— 'நான்' இல்லை; ஆன்ம உணர்வு ஒன்றே மெய்.

மதபேதங்களுக்கு அப்பாற்பட்டவரே ஸ்ரீபகவான். இந்து சமய நூல்கள் அவர் கைக்கு எட்டின. ஆகவே அவற்றைப் படித்துணர்ந்து அவற்றில் காணப்பெறும் சொற்பிரயோகங்களின் பிரகாரம் புதுமார்க்கத்தை விளக்கினார். ஆயினும், தாம் உணர்ந்த உண்மைகளை மற்ற சமய சித்தாந்தங்கள் வாயிலாகவும் விரும்புவோர்க்கு எடுத்துரைத்தார். அவர் வகுத்தளித்த சாதனா முறை மதசார்பற்றது. இந்துக்கள் மட்டுமே அவரை தரிசித்துப் போக வரவில்லை. புத்த மதத்தினரும், கிறிஸ்துவர்கள், முஸ்லிம்கள், யூதர்கள் மற்றும் பார்ஸிகளும் அவரைக் காண வந்தனர். எவரும் அவரவர் மதத்தைப் பின்பற்றுவதையே அவர் விரும்பினார். குரு வழிபாடும் கருணைச் செரிவும் ஒவ்வொரு மதத்திலும் பொதிந்துள்ள உண்மை. அவற்றை உள்ளார்ந்து உணர வழி கோலினார். அனைத்து சமயங்களின் பின்னால் பிரதிபலிக்கும் பேருண்மையையே ஆன்ம விசாரம் துலங்கச் செய்கிறது.

# 15. பக்தர்கள்

மொத்தத்தில் ஸ்ரீபகவானின் பக்தர்கள் சாமானிய மக்கள். எல்லோருமே பண்டிதர்கள் அல்லது அறிஞர்கள் அல்ல. பார்க்கப்போனால், தான் படித்தறிந்த தத்துவங்களிலேயே மூழ்கியுள்ள அறிவாளி, நிதர்சன உண்மை உணரமாட்டாமல் ஒதுங்கிபோய் விடுவது அடிக்கடி நிகழாத சம்பவம் அன்று. அதே சமயம் ஒரு சாதாரண நபர் ஸ்ரீபகவானை அண்டி வழிபட்டு, தமது எளிய விசுவாசத்தினால் அவரது அருளைப் பெறுதலும் உண்டு. ஆன்ம விசாரத்தை 'ஞான மார்க்கம்' என்று கூறுவதால் அறிவாளிகள் மட்டுமே அதனைப் பின்பற்றக்கூடும் என்பது சிலரின் எண்ணம். ஆனால், ஆன்ம விசாரம் என்பது இதயபூர்வமான அகநாட்டம்; தத்துவார்த்த அறிவு அல்ல. தத்துவம் அல்லது சித்தாந்தக் கோட்பாட்டறிவு ஆன்ம விசாரத்திற்கு ஓரளவு உதவலாம். ஆனாலும் அதே அளவுக்கு இடையூறாகவும் இருக்கக்கூடும்.

ஸ்ரீபகவான் இக்கருத்தை இவ்வாறு பாடலாய் அமைத்துள்ளார்:

**எழுத்தறிந்த தாம்பிறந்த தெங்கேயென் றெண்ணி**
**யெழுத்தைத் தொலைக்க வெணாதோ—ரெழுத்தறிந்தென்**
**சத்தங்கொ ளெந்திரத்தின் சால்புற்றார் சோணகிரி**
**வித்தகனே வேறார் விளம்பு.**

**கற்று மடங்காரிற் கல்லாதா ரேயுய்ந்தார்**
**பற்று மதப்பேயின் பாலுய்ந்தார் – சுற்றுபல**
**சிந்தைவாய் நோயுய்ந்தார் சீர்தேடி யோடலுய்ந்தா**
**ருய்ந்ததொன் றன்றென் றுணர்.**

*– உள்ளது நாற்பது – அனுபந்தம், பாடல் 35, 36*

பொருள்:

[ 'நான்' எனும் நினைவு பிறப்பது எங்கே என்று கற்றறிந்தோர் சிந்தனை செய்து தமது தலையெழுத்தை அழிக்க முற்படாமல் கிராமபோன் யந்திரம்போல (தாம் கற்றதையே திரும்பத் திரும்பச் சொல்லி) ஆகின்றனரே, ஹே அருணாசலா! பலவன கற்றும் தன்னுள் அடங்காதவர்களைக் காட்டிலும் கல்வியறிவு அற்றவர்களே உய்வு பெறுகின்றனர்.]

"எழுத்தைத் தொலைக்க வெணாதோ" என்ற வார்த்தைகள் மூலம் (ஏற்கனவே ஐந்தாம் அத்தியாயத்தில் குறிப்பிட்டதுபோல்) தலை விதி எவ்வாறு இருப்பினும், சொந்த முயற்சிக்கு இடம் உண்டு, முயற்சி அவசியமும் கூட என்ற வலியுறுத்தலின் சான்றாக உள்ளன.

இதனால் படிப்பறிவை பழித்துரைத்ததாகக் கொள்ளலாகாது. அதேபோல, பொருட் செல்வமும், இயற்கை கடந்த ஆற்றல்களையும் அவர் கண்டனம் செய்யவில்லை. இம்மூன்றின் ஒவ்வொன்றிலும் ஈடுபடுவோர் அதை சாதித்தே தீரவேண்டும் என ஆர்வம் கொள்வதையும், அதனில் மட்டுமே கண்ணுங் கருத்துமாய் இருந்துவிடுவதையுமே கண்டித்தார். இவை ஒவ்வொன்றும் மனிதனைக் குருடாக்கி அவனது உண்மையான குறிக்கோளை அடையவொட்டாமல் திசை திருப்பிவிடுகிறது என்ற காரணத்தினாலேயே அவற்றைச் சாடினார். தேவைப்படுவது அத்தியந்த நேர்மை; பெரும் திறமை அல்ல. வேண்டுவது மன ஒத்திசைவு; வரட்டு வேதாந்தம் அன்று. அமைய வேண்டியது அடக்கம்; ஆணவம் அல்ல. தரிசன கூடத்தில் பாடல்கள் பாடப்படும்போது இதனைக் குறிப்பாக கவனித்துணரலாம். புகழ் பெற்ற பாடகர் அல்லது பாடகி பாடும்போது ஸ்ரீபகவான் பாட்டில் கவனமற்றவராக இருப்பார். வேறொருவர் நேர்த்தியாகப் பாடாவிடினும் பக்தி ஈடுபாடுடன் இசைக்கும்போது ஸ்ரீபகவான் முக மலர்ந்து ரசிப்பதைக் காணலாம்.

இயல்பாக, பக்தர்களில் இந்துக்களே அதிகம் என்றாலும் மற்ற சமயத்தினர் பலரும் உண்டு. பால் பிரண்

டன் ஆங்கிலத்தில் எழுதிய "ரகசிய இந்தியாவில் ஒரு தேடல்" (A Search in Secret India) புத்தகத்தின் வாயிலாக ஸ்ரீபகவானைப் பற்றி உலகெங்கும் அறிவித்த அளவுக்கு வேறு எவரும் அவரது போதனையை வெளி நாட்டினருக்கு அறிமுகப்படுத்தவில்லை.

ரமணாச்ரமத்திலோ அதன் அருகிலோ பிந்தைய ஆண்டுகளில் நிரந்தரமாகத் தங்கியவருள் ஒரு சிலரைச் சிறப்பாகக் குறிப்பிடலாம். மேஜர் சாட்விக் (Major Chadwick) என்ற ஆங்கிலேயர் (1935–இல் வந்து சேர்ந் தவர்) பருத்த உருவம் கொண்ட முன்னாள் ராணுவ அதிகாரி; பரந்த உள்ளம் படைத்தவர். இடிமுழக்கம் போல் பேசுவார். திருமதி தலியார்கான் (Mrs. Taleyar-khan) என்பவர் பார்ஸி பெண்மணி. அதிகார தோர ணையும் படாடோபமும் மிக்க சீமாட்டி. எஸ்.எஸ். கோஹன் (S.S.Cohen) என்பவர் இராக் நாட்டைச் சேர்ந்தவர். அமைவடக்கமானவர். எதிலும் தலையி டாத அமைதியாளர். அடுத்து, டாக்டர் ஹஃபீஸ் சய்யது (Dr. Hafiz Syed) ஓய்வுபெற்ற பாரசீக மொழிப் பேரா சிரியர். இவர்களைத் தவிர, அமெரிக்கா, பிரான்ஸ், ஜெர்மனி, ஹாலந்து, செக்கோஸ்லோவாகியா, போலந்து போன்ற பல நாடுகளிலிருந்து அனேகர் வந்து சிறிது காலமோ நீண்டகாலமோ தங்கிச் சென்றிருக்கின்றனர்.

ஸ்ரீபகவானின் இளைய உறவினரான விசுவநாதன் என்பவர் 1923–இல் தமது பத்தொன்பதாவது வயதில் ஆசிரமம் வந்து தங்கினார். அதற்கு முன்பும் பலமுறை வந்து போயிருக்கிறார். ஆனால் இப்போது அவர் கூடத் துள் நுழைந்தவுடனேயே ஸ்ரீபகவான் அவரை நோக்கி, "பெற்றோரின் சம்மதத்துடன் வந்திருக்கிறாயா ?" என்று கேட்டார்.

இம்முறை ஆசிரமத்திலேயே தங்கி விடுவதற்காக வந்திருக்கிறார் என்பதை உணர்ந்தாற்போல் கேள்வி

அமைந்தது. முன்பு ஸ்ரீபகவான் சிறு வயதில் செய்தது போல தானும் போகுமிடம் தெரிவிக்காமல் ஒரு சிறு குறிப்பு மட்டும் எழுதி வைத்துவிட்டுக் கிளம்பிவந்து விட்டதை விசுவநாதன் ஒப்புக்கொண்டார். உடனே ஒரு கடிதம் எழுதிப் போடும்படி ஸ்ரீபகவான் அவரைப் பணித்தார். எனினும், பையன் சென்றிருக்கும் இடத்தை ஊகித்த தகப்பனார் நேருக்குநேர் பேசுவதற்காக ஆசிரமத் திற்கே வந்துவிட்டார். மகனைக் கட்டாயப்படுத்தித் திரும்ப அழைத்துப்போகும் எண்ணம் அவருக்கில்லை. சுவாமியின் மகிமையைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்தா ரெனினும் வெங்கடராமனாக இருந்த காலத்தில் அவன் தன் உறவுக்காரப் பையன்தானே என்ற எண்ணமே மேலோங்கியிருந்ததால், அதே பையனை இப்போது ஒரு தெய்விக சுவாமியாக நினைத்துப் பார்க்க முடியவில்லை. ஆனாலும், ஆசிரமத்தை அடைந்து ஸ்ரீபகவானின் முன்னி லையில் நின்றபோது அவரது உடல் பயபக்தியால் நடுநடுங்கி தன்னையறியாமல் ஸ்ரீபகவானின் காலடியில் நெடுஞ்சாண்கிடையாக வீழ்ந்து விட்டார்.

பின்னர் சுதாரித்து, "பழைய வெங்கடராமனை இங்கே கிஞ்சித்தும் காணவில்லையே?" என்று உணர்ச்சி மேலிட வியந்துரைத்தார்.

ஸ்ரீபகவான் சிரித்துக் கொண்டே, "ஓ! அந்தப் பயலா ? அவன் எப்போதோ கண்காணாமற் போய்விட்டானே!" என்றார்.

பின்னொரு சமயம் விசுவநாதனோடு வழக்கமான நகைச்சுவையுடன் பேசியபோது ஸ்ரீபகவான் கூறினார்: "நீ வீட்டை விட்டு வெளியேறும்போது உனக்கு சமஸ் கிருதமாவது தெரியும். நான் ஓடிவந்தபோதோ எனக்கு ஒன்றுமே தெரியாது!"

சமஸ்கிருதம் கற்ற மற்ற பக்தர்களும், தர்ம சாத் திரங்களைப் படித்தறிந்த பண்டிதர்களும் இருந்தனர்.

அவர்களுள் ஒருவர் பேராசிரியர் வெங்கடராமய்யா என்பவர். ஒரு யோகியாக சில வருடங்கள் ஆசிரமத்தில் இருந்து கொண்டு ஆசிரம நாட்குறிப்புகள் எழுதிவந்தார். திருவண்ணாமலை டவுனில் ஆசிரியராகப் பணியாற்றிய சுந்தரேச அய்யரைப்பற்றி முன்பே குறிப்பிட்டுள்ளோம்.

விசுவநாதன் வந்துசேர்ந்த அதே ஆண்டு, முருகனார் (1890–1973) என்ற தமிழ்ப் புலவரும் ஸ்ரீபகவானின் மெய்யடியாரானார். அவர் சிறந்த கவிஞரும் ஆவார். ஸ்ரீபகவானின் அருள் விலாசத்தைப் புகழ்ந்தும், உபதேசங்களை விளக்கியும் பாடல்கள் புனைந்துவந்தார். ஸ்ரீ பகவான் சில சமயங்களில் முருகனாரின் செய்யுட்களிலிருந்து மேற்கோள் காட்டுவார்; அல்லது அவற்றைப் படிக்கச் சொல்வார். ஸ்ரீபகவான் அவ்வப்போது இயற்றிய தமிழ்ப்பாக்கள் சிலவற்றைத் தொகுத்து "உள்ளது நாற்பது" என்ற தலைப்பில் (1928–ஆம் ஆண்டில்) நூல் வடிவமாக்கியவரும் இவரே. அப் பாக்களுக்குத் தமிழில் சிறந்த விளக்கவுரையும் முருகனார் எழுதியுள்ளார்.

ராமசாமிப் பிள்ளை கல்லூரிப்படிப்பு முடிந்தவுடன் இளைஞராக 1911–இல் வந்து ஆசிரமத்தில் தங்கிவிட்டார். விசுவநாதனையும் முருகனாரையும் போலவே இவரும் துறவியாகவே வாழ்ந்துவந்தார். இருப்பினும்; பக்தியும் பணியுமே இவரது பாதை. 1947–ஆம் ஆண்டு ஒரு சமயம் ஸ்ரீபகவான் குன்றின்மீது உலாவச் சென்றபோது கல் தடுக்கிக் காலில் காயம் ஏற்பட்டது. மறுநாளே ராமசாமிப்பிள்ளை குன்றின் பக்கமாகப் படிகள் செதுக்கி நடைபாதை அமைப்பதில் முழுமூச்சுடன் முனைந்துவிட்டார். தலை நரைத்துவிட்டாலும் உடல் உரம் வாய்ந்தவர். நாள்தோறும் விடியற்காலையிலிருந்து அந்தி மங்கும் வரை தன்னந்தனியாகப் பாடுபட்டு, நடைபாதை இரு ஓரமும் கற்கள் ஆழப் புதைத்து, பாறைத்தளம் குறுக்கிடும் இடங்களில் படிகள்

செதுக்கி, மண் சரிவுகளை வெட்டி நிறப்பிச் செப்பனிட்டார். இவ்வாறு பாதை மிக உறுதியாய் அமைந்ததால் அடுத்தடுத்த பருவ மழையிலும் வீணாகாமல் நிலைத்திருந்தது. ஆயினும், பாதை போட்டு முடிந்தபோது ஸ்ரீபகவானின் உடல்நிலை மிகவும் குன்றிவிட்டதால் குன்றின்மீது நடந்துசெல்வதை அறவே கைவிடநேர்ந்தது. அதன்பின் பாதையும் செப்பனிடப் படவில்லை.

பள்ளித்தோழர் ரங்க அய்யரைப்பற்றி முன்பொரு அத்தியாயத்தில் கூறியுள்ளோம். அவர் திருவண்ணா மலையில் தங்கியிருக்கவில்லை என்றாலும், தமது குடும்பத் தினரோடு அடிக்கடி ஆசிரமம் வந்துபோவார். மதுரையில் ஸ்ரீபகவானுடன் ஒரே வகுப்பில் படித்தவர். பள்ளி நாட்களில் அவரோடு விளையாடியிருக்கிறார்; கட்டிப் பிடித்துக் குஸ்திசண்டை போட்டிருக்கிறார். ஸ்ரீபகவா னுடன் ஆசிரமத்தில் வேடிக்கையாய்ச் சிரித்துப்பேசும் சுதந்திரம் இவருக்கு உண்டு. தமது பழைய பள்ளி நண்பன் இப்போது சுவாமியாக எப்படி இருக்கிறானோ என்று விருபாட்ச குகைவாசத் தொடக்கத்தில் பார்க்க வந்தபோது ஏதோ அருளாளரின் திவ்ய சன்னிதியில் நிற்பதாக உணர்ந்தார். ஆனால், ரங்க அய்யரின் மூத்த சகோதரன் மணி என்பவருக்கு அப்படியொன்றும் தோன்ற வில்லை. பள்ளிக்கூடத்தில் தன்னைவிடக் கீழ் வகுப்பில் படித்துவந்த சிறு பயல் அல்லவா இந்த சுவாமி எனப் படுபவர் என்கிற ஞாபகத்தில் அவரை ஏளனமாகப் பார்த்து நின்றார். ஸ்ரீபகவான் அவர் பக்கம் முகம் திருப்பி நேருக்கு நேர் நோக்கியபோது அந்நோக்கின் தாக்கத்தைத் தாளமாட்டாமல் இறுமாப்புத் தகர்ந்து அவரது காலடியில் வீழ்ந்தார். அதன் பிறகு மணியும் பகவானின் வழிபாட்டாளர் ஆகிவிட்டார். ரங்க அய்யரின் பிள்ளைகளில் ஒருவர் தெய்வீக ஞானக் 'கன்னி'யுடன்

ஸ்ரீபகவானுக்கு நடந்தேறிய 'திருக்கல்யாண'த்தை ஒரு நீண்ட பாடலாய் இயற்றியுள்ளார்.

"மகரிஷி வாய்மொழி" என்ற சிறு தொகுப்பின் பெரும்பகுதி, போலந்து நாட்டிலிருந்து அகதியாக வந்த எம். ஃபிரிட்மன் (M. Frydman) என்பாருடன் நிகழ்ந்த சம்பாஷணைகளிலிருந்து எடுக்கப்பட்டதே ஆகும். அந் நாட்டைச் சேர்ந்த இரு மாதர்கள் ஆசிரமத்திற்குப் பரிச்சயமானவர்கள். திருமதி நோயி (Mrs. Noye) என்ற அமெரிக்க மாது தன் நாட்டிற்குத் திரும்ப வேண்டிய நாள் வந்தபோது ஆசிரமத்தை விட்டுப் போகவேண்டுமே என்று கண் கலங்கிக் கண்ணீர் வடித்தாள். அதுகண்ட ஸ்ரீபகவான், "ஏனம்மா அழுகிறாய்? நீ எங்கு போனாலும் நான் உன்னோடுதானே இருக்கிறேன்?" என்று தேற்றினார்.

பகவானின் பக்தர்கள் அனைவரின் விஷயத்திலும் இதுவே உண்மை. அவர்களோடு அவர் எப்போதும் இருந்து வருகிறார். எவரும் அவரை நினைத்தால் அவரும் அவர் களை நினைப்பார். அவர்கள் அவரை மறந்தாலும் அவர் அவர்களை விடமாட்டார். இதனைத் தம் வாய் மொழியாகவே அந்த அமெரிக்கப் பெண்மணியிடம் கூறியது ஓர் தனித்த அனுக்கிரகமே.

எனது மூன்று குழந்தைகளும் பகவானின் பக்தர் களுள் எடுப்பான சின்னஞ் சிறிசுகள். இவர்கள் மட்டுமே ஆசிரமத்தில் இருந்துவந்த ஐரோப்பியக் குழந்தைகள். 1946 டிசம்பர் மாதம் ஒரு நாள் சாயந்திரம் ஸ்ரீபகவான் அவர்களில் மூத்தவர்களான இருவருக்கும் தியானம் செய்யும் விதத்தை எளிய முறையில் புகட்டினார். தியான நிலை அனுபவத்தைப் பெரியவர்களே வார்த் தையால் விளக்க மாட்டாமல் படுதோல்வி காண்கி றார்கள். பாவம்! குழந்தைகள் எப்படி எழுதுவார்கள்? என் பத்து வயது சிறுமி கிட்டி எனக்கு எழுதினாள்:

"இன்று சாயங்காலம் நான் கூடத்தில் உட்கார்ந்திருந்த போது பகவான் என்னைப் பார்த்துப் புன்னகை செய்தார். நான் கண்ணைமூடிக் கொண்டு தியானம் செய்ய ஆரம்பித்தேன். கண்களை மூடிக்கொண்டதுமே ரொம்ப இன்பமாக இருந்தது. பகவான் ரொம்ப ரொம்பக் கிட்டத்தில் நிஜமாகவே இருக்கிற மாதிரியும், அதே சமயம் என் உள்ளேயும் இருக்கிற மாதிரியும் தோன்றினார். வேறே எந்த விஷயத்திலும் வரும் சந்தோஷமும் பரபரப்பும் போல இல்லாமல் ஏதோ என்னமோ விதமாய் ஆனந்தமாய் இருந்தது. அதை எப்படிச் சொல்வதென்றே தெரியவில்லை. வெறுமனே ரொம்ப ரொம்ப இன்பம். பகவான் எவ்வளவு மகிழச்செய்கிறார்!"

என் மகன் ஆடம், ஏழே வயதினன், எழுதினான்: "ஹாலில் உட்கார்ந்திருக்கும்போது சும்மா சந்தோஷம் இல்லாமல்தான் இருந்தேன். ஆனால் கண்ணைமூடி வேண்டிக் கொள்ள ஆரம்பித்தவுடனே ரொம்ப சந்தோஷமாய் இருந்தது. புது விளையாட்டுச் சாமான் கிடைத்தால் வருகிற சந்தோஷம்போல இல்லை அது. ஏதோ புதுவித சந்தோஷம். பகவான் மீதும் எல்லோர் மீதும் எனக்கு அன்பு வழிகிறது."

கூடத்தில் குழந்தைகள் நீண்டநேரம் உட்காரந்திருப்பார்கள் என்றில்லை. அவர்களுக்கு வேண்டும்போது உட்காருவார்கள்; இல்லாவிட்டால் எழுந்து விளையாடுவார்கள்.

என் கடைசிப் பெண் ஃபிரனியாவுக்கு ஏழுவயது நிரம்பியபோது மற்ற இருவரும் தங்கள் நண்பர்களைப் பற்றிப் பேசுவார்கள். கடைக்குட்டிக்கோ நண்பர்கள் என்று யாரும் கிடையாது. இருந்தும் விட்டுக் கொடுக்காமல், டாக்டர் சய்யது அங்கிள் தான் உலகத்தில் உள்ளவர்களிலேயே தன் சிறந்த உயிர்த் தோழன் என்று

பீற்றிக் கொண்டாள். இதை ஸ்ரீபகவானிடம் யாரோ தெரிவித்தார்கள்.

"ஆ, அப்படியா?" என்று மேலோட்டமாகக் கேட்டு வைத்தார்.

"ஃபிரனியாவின் தாயார் பெண்ணைக் கேட்டார் களாம், 'அப்படியென்றால் பகவான் உன் தோழன் இல்லையா?' என்று"

"ஓகோ!" என்று அவர் தலையைத் திருப்பி ஆர்வம் காட்டினார்.

"ஃபிரனியா சொன்னாளாம், 'பகவான் தான் இந்த உலகத்தில் இல்லையே?' என்று."

"ஓ! அப்படியா சொன்னாள்?" என்று கேட்டு ஸ்ரீபகவான் உவகையோடு நிமிர்ந்து உட்கார்ந்து மூக்கின் மீது விரலை வைத்தார் ஆச்சரியத்தின் அடையாள மாக.

பிற்பாடு டாக்டர் சய்யது, சின்னஞ்சிறுமி ஃபிரனி யாவை வினவினார், "பகவான் இந்த உலகத்தில் இல்லை என்றாயே, அப்படியென்றால் அவர் வேறு எங்கே இருப்பவராம்?" என்று. சிறுமி சட்டென பதிலளித் தாள்: "அவர் எல்லா இடத்திலேயும் இருக்கார்."

சய்யது அதோடு விட்டுவிடாமல் குரானிய தனித் தோரணையுடன் கேட்டார்: "எப்படிச் சொல்கிறாய் அவர் இந்த உலகத்து மனிதர் இல்லை என்று? நாம் எல்லோரும்தான் கண்ணால் பார்த்துக் கொண்டிருக் கிறோமே. அவர் சாய்வுக் கட்டிலில் உட்கார்ந்திருக் கிறார். சாப்பிடுகிறார். தண்ணீர் குடிக்கிறார். நடமாடு கிறார்..."

குழந்தை குறுக்கிட்டு, "வேறு எதையாவது பேசுவோமே" என்றாள்.

பக்தர்களைப் பட்டியலிட்டுப் பிரஸ்தாபிப்பது வேண்டாத பாகுபாடுகளை உண்டாக்குவதாகும். ஏனெனில், குறிப்பிடத்தக்கவர்கள் எத்தனை எத்தனையோ பேர்கள் உண்டு. எடுத்துக் காட்டாக, தேவராஜ முதலியார், டி.பி. ராமச்சந்திரய்யா போன்று ஸ்ரீபகவானுடன் சுதந்திரமாக இழைந்து உரையாடியவர்கள் வேறுயாருமே இல்லை எனலாம். ராமச்சந்திரய்யாவின் பாட்டனார் முன்பொரு சமயம் இளம் சுவாமி ரமணரை தமது வீட்டில் நடந்த சடங்குச் சாப்பாட்டிற்கு வலுக்கட்டாயமாக இட்டுச் சென்றிருக்கிறார். திருவண்ணாமலை வந்தடைந்ததிலிருந்து அந்த ஒரு வீட்டில் மட்டுமே அவ்வாறு ஒரே ஒரு தரம் உணவு அருந்தியிருக்கிறார். சென்னையிலிருந்து அவ்வப்போது வந்துபோகும் டாக்டர் டி.என். கிருஷ்ணஸ்வாமி, ஸ்ரீபகவானைப் பல அரிய கோணங்களிலும் முகபாவங்களிலும் அழகாகப் 'போட்டோ' பிடித்து அளித்திருக்கிறார். ஆசிரமத்தில் நிகழ்ந்த உயிரோட்டமும் மகிழ்ச்சியும் நிரம்பிய சம்பவங்கள் பலவன, நாகம்மாள் என்ற ரமண பக்தை சென்னையில் பாங்க் மானேஜராக இருந்த தமது சகோதரர் டி.எஸ். சாஸ்திரிக்கு எழுதிவந்த தெலுங்குக் கடிதங்களில் அடங்கியுள்ளன. அக்கடிதங்கள் ஸ்ரீபகவானின் வசிய மனோரஞ்சிதப் பிரசன்னத்தைப் படம் பிடித்தாற்போல் பாங்காய் எடுத்துரைக்கின்றன. மேலும், ஸ்ரீபகவானோடு அளவளாவ அவசியம் ஏதும் காணாத பக்தர்களும் உண்டு. வெவ்வேறு ஊர்களில் அல்லது வெளிநாடுகளில் வாழ்ந்து வந்த பல குடும்பத் தலைவர்கள் தங்களால் இயன்ற போதெல்லாம் ஆசிரமம் வந்து போயினர். மற்றும் பலர் ஒரே ஒரு தடவை வந்து தரிசித்துத் திரும்பியதும் ஞான ஆசானின் மானசீக பக்தர்களாக மாறியதும் உண்டு. சில பக்தர்கள் ஸ்ரீபகவானைப் பார்த்ததுகூட இல்லை. ஆனாலும், இருந்த இடத்தில் இருந்து கொண்டே

அவரது மௌன ஞானோபதேசம் வரப் பெற்றவரா யினர்.

விசித்திரமான நடையுடை பாவனைகளையும் பரவச ஆவேசம் கொள்வதையும் ஸ்ரீபகவான் ஒப்பவில்லை. தெய்வீகக் காட்சி என எண்ணும் உருவெளித்தோற் றங்களிலும் அமானுஷ்ய சித்திகள் பெறுவதிலுமுள்ள விருப் பத்தையும் கண்டித்தார் என்பதையும், குடும்ப வாழ்க் கையில் அவரவர் தொழிலில் இருந்துகொண்டே ஆன்மீக சாதனை முயற்சி மேற்கொள்வதை ஆதரித்தார் என்ப தையும் முன்பே எடுத்துக் காட்டியுள்ளோம். சாதனை மேற்கொள்ளும் பக்தர்களிடம் வெளிப்படையாக திடீர் மாற்றம் ஏதும் அவர் உண்டாக்கவில்லை; ஏனெனில், அத்தகைய உடனடி மாற்றம் உறுதியான அடித்தளமற்ற பகட்டான மாளிகைபோல் பின்னர் சரிந்து விழுந்து விடும் அபாயம் கொண்டது. தம்மிடம் எவ்வித ஆன்மீக முன்னேற்றமும் உணராது மனம் ஒடிந்து, சாதனை வளர்ச்சி பெறவில்லையே என்று முறையிடும் பக்தர் களும் உண்டு. அம்மாதிரியான நேரங்களில் ஸ்ரீபகவான் ஆறுதல் கூறுவார், அல்லது "வளர்ச்சி இல்லை என்று உமக்கு எப்படி அய்யா தெரியும் ?" என்றும் சுடச்சுடப் பதிலுக்குக் கேட்பார். பிறகு விளக்குவார் – 'சீடனின் ஆன்மீக முன்னேற்றத்தை குரு மட்டுமே கண்டுணர்வார். சீடன் அறியமாட்டான். விடாமுயற்சியுடன் தொடர்ந்து சாதனை வழி செல்வதே சீடனின் வேலை. அவனுள் உருவாகிவரும் ஆன்மீகக் கட்டடத்தை அவன் மனக் கண்ணால் காண முடியாமற்போகும்.'

இது ஏதோ வழிநடக்கக் கடினமான வரட்டுப் பாதையாகத் தோன்றினாலும் ஸ்ரீபகவான் மீது வழி பாட்டாளர்களுக்குள்ள அன்புப் பற்றும் அவரது இன்முக அருட்பாலிப்பும் அவ் விசார வழிக்குக் களையூட்டி மலர் தூவின.

மௌன விரதம் போன்ற மிகையான வழிமுறைகளும் ஊக்குவிக்கப்படவில்லை. ஒரு தருணத்தில் ஸ்ரீ பகவான் இதனைத் தெள்ளத் தெளிய அறிவுறுத்தியுள்ளார். மேஜர் சாட்விக் அடுத்த நாளிலிருந்து பேச்சொழிந்து முழு மௌனியாகிவிடப் போகிறார் என்று கேள்விப்பட்ட ஸ்ரீபகவான் அந்தப் பழக்கத்திற்கு எதிராக நீண்ட சொல்லாடினார். வாய்ப்பேச்சு மனத்திற்கு ஓர் வடிகால் போல. பேச்சைக் கட்டுப் படுத்தலாம், ஆனால் பேசாமலே இருந்துவிடுதல் கூடாது என்றார். 'வாய்திறந்து பேசமாட்டார்களாம், ஆனால் அதற்கு பதிலாகப் பென்ஸில் வாயிலாய்ப் பேசுவார்களாம்' என்று மௌனம் அனுஷ்டிப்போர் காகிதத்தில் எழுதிக் காட்டுவதைக் கிண்டல் செய்தார். இதயத்துள் அடங்கி மௌனிப்பதே நிஜமான மௌனம். பேசிக்கொண்டிருக்கையிலேயே உள்ளூர மௌனமாக இருத்தல் கூடும், மக்கள் மத்தியில் ஒருவன் விரும்பினால் தான் மட்டும் தனிமை உணரமுடிவதுபோல.

சில சமயங்களில் சிலர் அவரது அறிவுரைகளையும் மீறி வேறு மிகைபாடான உபாசன வழிகளில் மனம் செலுத்தியதுண்டு என்பது என்னவோ உண்மைதான். அவரது உபதேசத்தின் மறைமுகமான இயல்பைப்பற்றி முன்னொரு அத்தியாயத்தில் விளக்கியுள்ளோம். வேறு சாதனை வழிகளைப் பின்பற்றலாமா கூடாதா என்று கேள்வி எழுந்தால் ஸ்ரீபகவான் ஏதும் வெளிப்படையாகப் பதில் கூறமாட்டார். ஆயினும் சில விபரீத வழிகளில் தியானம் மேற்கொள்பவர்கள், அவற்றை ஸ்ரீபகவான் ஏற்கவில்லை என்பதை வெளியே காட்டிக் கொள்ளாவிடினும், தாமே விரைவில் உள்ளூர உணர்ந்து விடுவார்கள். அத்தகையோர் கூடத்திற்கு வருவதை மெல்ல மெல்லத் தவிர்ப்பார்கள். ஓர் குறிப்பிட்ட சம்பவம் எனக்கு நினைவிருக்கிறது. ஒரு பக்தை வேறு ஏதோ உபாசனா மார்க்கம் மேற்கொண்டு, சித்தப் பிரமை

பிடித்தாற்போல் ஆகிவிட்டாள். அதுபற்றிக் கேள்விப் பட்ட ஸ்ரீபகவான், "ஏன் ? அவள் என்னைத் திரும்பவும் அணுகலாமே ?" என்று அபூர்வமாகத் திட்டவட்ட மாய்க் கூறினார். அவர் இவ்வாறு வெளிப்படையாக அறிவுறுத்துவதைத் தவிர்ப்பார். யாரையும் வரும்படியோ போகும்படியோ கேட்க மாட்டார். அவ்வாறு துலக் கமாக அவர் கருத்தைத் தெரிந்துகொள்வதற்கான சாகச முயற்சிகளை எவ்வளவு சாமர்த்தியமாக முறியடிப்பார், அவரது நுட்பமான விருப்பங்கள் எத்துணை மதிப்பு வாய்ந்தவை என்பதெல்லாம் கூர்ந்து கவனிப்போர்க்கு மட்டுமே தெரியவரும். அவர் அந்த பக்தையைத் தவறான உபாசனை வழியினின்றும் மீட்கும்பொருட்டு, தம்மைத் திரும்பவும் அணுகுமாறு வெளிப்படையாக அறிவித் தது அறிதினும் அறிது என்று பக்தர்கள் வியந்தனர்.

அந்த பக்தையோ திரும்ப அவரை அணுகவில்லை. அதன் பிறகு சிறிது காலத்திற்குள் அவளது புத்தி பேதலித்துவிட்டது. இது தனித்த சம்பவம் அல்ல. இன்னும் சிலர் விஷயத்தில் இது வேறு விதமாகத் திரிபு பெற்றது. ஸ்ரீபகவான் பெருக்கும் அதீத ஆற்றலைத் தாள மாட்டாமல் மனம் குழம்பிப் போனவர்களும் உண்டு. அவ்வாறு மனபாதிப்பு அடைந்தவர்கள் சிறிதுகாலம் விலகி ஒதுங்காமல் திரும்பத்திரும்ப ஆசிரமம் வருவார் கள். கூடத்தில் அவ்வாறு மனம் குழம்பி அமர்ந்திருக்கும் நபரை ஸ்ரீபகவான் எளிதில் கண்டுகொள்வார். விஷமக் காரக் குழந்தையைக் கண்டிப்பதுபோல் அந்த நபரை சில சமயம் நேரடியாகக் குறைகூறுவார். "வைராக்கி யத்துடன் எதிர்த்துப் போரிடாமல் ஏன் வீணாக மூளை யைக் கலக்கிக் கொள்கிறீர்களோ ?" என்று கண்டிப்பார். ஸ்ரீபகவானின் பிரபாவத்தினால் அந்த நபரின் மன ஓட்டத்தில் ஓர் போராட்டமே உருவாகி, பாதிக்கப் பட்ட மனம் மெல்லமெல்ல இயல்பு நிலைக்குத் திரும்பும்.

பக்தர்களைப் பலவிதமாய் ஆட்கொண்ட ஸ்ரீரமண சான்னித்தியத்தை முழுமையாகச் சித்தரிக்க வேண்டும் என்பதற்காகவே மேற்சொன்ன சில அரிய நிகழ்வுகளும் இங்கே சேர்க்கப்பட்டுள்ளன. மனப் பிராந்திக்குள்ளான சில நபர்களைப் பற்றி ஒரு சில பத்திகள் இவ்வத்தி யாயத்தில் இடம் பெற்றதால் அவ்வாறான நிகழ்வுகள் அடிக்கடி நேர்ந்தன என எண்ணிவிடக்கூடாது. அவை மிகமிக அபூர்வமாகவே எதிர்பட்டன.

பக்தர்கள் விஷயத்தில் ஸ்ரீபகவான் அனுசரித்த வழி முறைகளைப் பற்றி ஏதும் வரையறுத்துக் கூறுதல் கடினம். ஏனெனில் விதிவிலக்குகள் சிலவற்றைக் கூறி விடுவார். வேறுயாருமில்லாதபோது அவரை தனிமை யில் அணுகிக் கேட்டால் அவ்வாறு நேர்விடை கிடைக் கலாம். அனந்தநாராயண ராவ் என்பவர் வேலை ஓய்வு பெற்ற கால்நடை மருத்துவர். ஆசிரமத்திற்கு அருகில் வீடு கட்டிக் குடியேறியவர். சென்னை நகரில் இருந்த அவரது மைத்துனரின் உடல் நிலை மிகவும் கவலைக் கிடமாக இருந்துவந்ததால் அடிக்கடி தகவல் கிடைத்து சென்னைக்குப் போய் வந்தவண்ணமிருந்தார். ஒரு சமயம் அதே போல் ஒரு தந்தி கிடைக்கப்பெற்றார். அன்று மாலை வெகுநேரமாகிவிட்டிருந்தபோதிலும், தந்தியை எடுத்துக்கொண்டு ஸ்ரீபகவானிடம் சென்றார். அதற்கு முன்பு அவ்வாறான செய்தியை கேட்டபோதெல்லாம் ஸ்ரீபகவான் அதிகம் கவனம் செலுத்தவில்லை. ஆனால் அன்று அவரிடம், "ஆமாம், நீர் நிச்சயம் சென்னை போக வேண்டும்" என்று கூறியவர், தொடர்ந்து அநித்ய வாழ்வில் மரணம் ஓர் சாதாரண கட்டம் என்றெல்லாம் பொதுவாக விமரிசித்தார். வீடு திரும்பிய அனந்த நாராயண ராவ் மனைவியிடம், "இந்த முறை வியாதி உயிரைப் பறித்துவிடும் போலிருக்கிறது. உடனே புறப்படு" என அவசரித்தார். தம்பதிகள் சென்னை போய்ச் சேர்ந்த இரண்டு நாட்களில் மைத்துனர் காலமானார்.

தாக்கம் மிக்க நிகழ்வுகளைப் பற்றியும் அவ்வப்போது கேள்விப்பட்டுள்ளோம். உதாரணமாக, பிரார்த்தனை புரிய எந்த நாமம் உகந்தது என்று ஒரு பக்தர் கேட்டபோது, 'ரமணா ரமணா' என்று ஜபிக்கலாமே என்றாராம். ஆனால் அவ்வாறான பிரத்தியேக போதனை பற்றி யாரும் வெளியில் வாய்திறப்பதில்லை.

வழக்கமாக, ஒரு சொந்தப் பிரச்சினையில் பக்தர் ஓர் முடிவுக்குவந்து, அதை ஸ்ரீபகவானிடம் சந்தேகத்துடன் தெரிவிப்பார். அவர் எடுத்த முடிவு அவருடைய ஆன்மிக சாதனை வளர்ச்சிக்கு ஒத்தவாறே அமையும். முடிவு சரியானது என்றால் ஸ்ரீபகவானின் வதனத்தில் இணக்கப் புன்னகை அரும்பும். அது கண்டு பக்தரின் உள்ளம் குளிரும். சிற்சில சமயங்களில் ஓரிரு வார்த்தைகளும் கூறி ஆமோதிப்பார். முடிவை ஸ்ரீபகவான் அங்கீகரிக்கவில்லை என்றால் அதையும் குறிப்பால் அறியலாம். திருவண்ணாமலையைவிட்டு வேறு ஊர் சென்று விடப் போவதாகவும், அங்கு நல்ல சம்பளத்தில் ஒரு உத்தியோகம் காத்திருப்பதாகவும் ஒரு குடும்பஸ்தர் கூடத்தில் அறிவித்தார். ஸ்ரீபகவானோ சிரித்துக்கொண்டே, "நாம் நினைப்பது ஒன்று, நடப்பது வேறு" என்றார். பக்தர் எண்ணியிருந்தது பலிக்கவில்லை.

தேசியத் தலைவருள் ஒருவர் சொற்பொழிவுகள் ஆற்ற சென்னை வந்திருந்தார். ஆசிரமப் பணியாளர்களில் ஒருவர் அந்த அரசியல் தலைவரின் அபிமானி. பேச்சுக்களைக் கேட்க சென்னை சென்றுவர அனுமதி கோரினார். அவர் கேட்டதைக் காதில் வாங்கிக் கொள்ளாதவர் போல ஸ்ரீபகவான் முகச்சலனமற்று வாளாவிருந்தார். ஆனாலும் அந்தப் பணியாளர் சென்னை பயணமானார். அங்குமிங்குமாக சொற்பொழிவு நடக்கும் இடங்களுக்கு அவர் ஓடிச் சென்றாலும் அந் நிகழ்ச்சிகளுக்குப் போய்ச் சேர மிகத் தாமதமாயிற்று. சில

இடங்களில் கூட்ட நெரிசலினால் உள்ளே செல்ல முடியவில்லை. எங்கும் தலைவரின் பேச்சைக் கேட்க முடியாமல் திரும்பிவந்ததும் ஸ்ரீபகவான், "ஆகவே, நீ அனுமதியில்லாமல் மதறாஸ் போனாய். போன காரியம் ஜயம் தானே ?" எனப் பரிகசித்தார். அகந்தை அறவே யொழிந்த ஸ்ரீ பகவான், மற்றவர்களின் நடவடிக்கை களைப் பற்றி விமரிசிப்பது போலவே தமது செய்கை களைப் பற்றியும் யாரோ வேற்றானது போல் வேடிக்கை கலந்து பேசுவார்.

ஸ்ரீபகவான் விளைவிக்கும் ஆக்கத்திரிபு இதுதான்: சூழ்நிலையால் எழும் சுக—துக்கங்கள், ஆசை—நிராசை கள், கவலை—சோதனைகள் யாவற்றிலிருந்தும் ஒருவ ரின் எண்ணத்தைத் திசைதிருப்பி அவருள் உறைந்து கிடக்கும் ஆன்ம ஆனந்தத்தில் ஆழ்த்துவதே பகவானின் ஆற்றல் கூறு. இதனை நன்குணர்ந்த பல பக்தர்கள், மனமாரப் பிரார்த்திக்கும் போதும்கூட ஒருபோதும் வேறேதும் விரும்பி வேண்டுவதில்லை. மாறாக, விருப் பங்களை உண்டாக்கும் பந்தங்களினின்றும் அறுபட வேண்டிக்கொள்வர். இம் முயற்சியில் முற்றிலும் வெற்றி காணாவிடினும், வெறும் வெளி நலன்களுக்காக ஸ்ரீ பகவானை இறைஞ்சிப் பிரார்த்திப்பது மதியீனம் என்று புரிந்து கொண்டவர்கள். அன்புப் பெருக்கும், மேன் மேலும் வைராக்கியச் சிந்தனையும், சாதனையில் அதிக ஈடுபாடும் அல்லவா அவரை வேண்டிப் பெறவேண் டியவை என்ற எண்ணம் கொண்டவர்கள். இன்னல்கள் அண்டினால் அவற்றிலிருந்து விடுபடுவது எங்ஙனம் என்று வழிதேடாமல், 'இந்த இன்னல்கள் யாருக்கு ? எனக்கா ? எனக்கென்றால் நான் யார் ?' என்று வினவு தல் நன்று. இவ்வாறான விசாரணை வாயிலாய், பிறப்பு, இறப்பு, இன்னல் ஏதுமே அற்ற அதுவாகவே இருக்கும் ஆன்ம உணர்வுமையத்தருகே எண்ணத்தை இழுத்துச் செல்ல இயலும். அத்தகைய மனோபாவத்துடன் ஸ்ரீ

பகவானை அணுகுவோர் எவருள்ளும் அமைதியும் மன உறுதியும் பாய்ந்து நிரம்பும் என்பதில் ஐயமில்லை.

ஆனாலும், மனித இயல்பு தெரிந்த விஷயம் தானே! பக்தர்கள் பலபேர் தங்கள் வாழ்க்கை நிகழ்வுகளில் ஸ்ரீ பகவானின் அனுக்கிரகத்தையும் இரட்சிப்பையும் வேண்டி நின்றனர். இவர்களது நோக்கில், ஸ்ரீபகவான் தந்தையும் தாயும் இரட்சகரும் ஆவார். கஷ்ட நஷ்டங்களோ ஆபத்தோ வரும் போதெல்லாம் தம்மைக் காத்தருளுமாறு ஸ்ரீ பகவானை வணங்குவார்கள். இடுக்கண்களைக் கடிதத்தில் வடித்து அனுப்புவார்கள், அல்லது இருக்கும் இடத்திலிருந்து அவரை மனமாரத் தியானிப்பார்கள். அவர்களுடைய பிரார்த்தனையும் வீண் போகாது. கஷ்ட நஷ்டங்கள் விலகும். அவ்வாறு விலக இயலாத விவகாரங்களில் அமைதியும், இன்னல்களை சமாளிக்கும் மன உரமும் பெறுவர். அவ்வாறான மீட்சி, புறக் காரணம் ஏதுமின்றி, ஸ்ரீபகவானின் இச்சா சக்திக் குறுக்கீடுமின்றி, தானாகவே சித்தித்தது. பக்தனின் திட நம்பிக்கை மட்டுமே மீட்சி கிட்டியதற்குக் காரணம் என்றும் கொள்ளலாகாது. பக்தனின் பிரதிபலிப்பாய் ஸ்ரீ பகவானிடமிருந்து பெருகிய அருட்பாலிப்பின் விளைவே கஷ்ட நிவாரணம்.

இவ்வாறு ஸ்ரீபகவான் சங்கற்பம் ஏதும் இல்லாமலேயே அவர் செலுத்தும் அருளாற்றலும், பக்தனின் கோரிக்கை என்னவென்று அறிந்திராத சந்தர்ப்பங்களிலும் கூட நிகழ்விக்கப்பட்ட இச்சா சக்திப் பிரயோகங்கள் பல பக்தர்களைத் திகைப்பித்தன. இதுபற்றித் தாம் வினவியதை தேவராஜ முதலியார் பின்வருமாறு பதித்துள்ளார்:

எல்லா ஞானியரையும்போல பகவானிடத்தும் மனநாசம் பூரணமாய் நிகழ்ந்தாகிவிட்டது, பேதங்கள் ஏதும் பாராட்டாதவர், ஆன்மாவில் நிலைத்து

நிற்பவர் என்றால் அவர் எங்ஙனம் ஒவ்வொரு சீடன் அல்லது பக்தனோடு தொடர்பு பூண்டு அவனுக்காக இரங்குகிறார் அல்லது நன்மை புரிகிறார்? இது பற்றி நான் விரிவாகக் கேட்டேன்: "நாங்கள் எங்களது கஷ்டங்கள் ஏதேனையும் குறித்து ஆழ்ந்த கவலையுற்று, இருந்த இடத்திலேயே பகவானிடம் மானசீகமாக முறையிட்டால் உடனடியாய் துணை வந்துசேருகிறது. நெடுநாளைய பக்தர் ஒருவர் தங்களிடம் வருகிறார். சென்ற முறை தரிசித்துப் போனபிறகு தனக்கு ஏற்பட்ட இடர்பாடுகளை சாங்கோபாங்கமாய் எடுத்துரைக்கிறார். நீங்களும் அவருடைய நீண்ட கதையை பொறுமையுடனும் அனுதாபத்துடனும் செவிமடுக்கிறீர்கள். நடுநடுவே, 'அடடா, ஓ! அப்படியா?' என்றெல்லாம் வியப்பு வார்த்தை உதிர்க்கிறீர்கள். எல்லாக் கதையும் பெரும் பாலும் இவ்வாறுதான் முற்றுப் பெறுகிறது: 'முயற்சிகள் அனைத்தும் தோல்வியுற்றபின் கடைசியாக நான் தங்களை மனமாறத் துதித்தேன், வெற்றி கண்டேன். பகவான் தாங்கள்தான் என்னைக் காப்பாற்றினீர்கள்!' என்கிறார்கள். தாங்கள் அவர் சொல்வதையெல்லாம் ஏதோ புதிய தகவல்போல் கேட்டு வருகிறீர்கள். அப்புறம் வருவோரிடத்திலும் தெரிவிக்கிறீர்கள், 'முன்பு நம்மோடு இருந்தாரே, அவருக்கு இந்த மாதிரியெல்லாம் நிகழ்ந்ததாம்' என்று! தாங்கள் ஒரு போதும் பாசாங்காகப் பேசமாட்டீர்கள் என்பதை நாங்கள் அறிவோம். ஆகவே, நடந்த சமாச்சாரங்களைப் பற்றி வந்தவர் கூறும் வரை பகவானுக்கு ஒரு மட்டத்தில் மட்டுமேனும் தெரியாமற் போயிருந்தது என்றே அனுமானிக்க வேண்டியுள்ளது. அதே சமயம், நாங்கள் கடுந் துயரத்தில் ஆழ்ந்து, பகவான் தங்களது துணை வேண்டிக் கதறியதுதான் தாமதம், தங்களுக்கு அது

எப்படியோ தட்சணமே எட்டி ஏதாவது ஒரு வகை யில் எங்களுக்கு சகாயம் வந்தடைகிறது; அல்லது ஏதாவதொரு காரணத்தால் வந்த வினை தவிர்க்க முடியாதது அல்லது மாற்றவொண்ணாதது என்கிற நிலையில் எங்களுக்கு அந்த இன்னல்களைத் தாங்கிக் கொள்வதற்கான உள வலிமை உண்டாகிறது." இவ்வாறு நான் பகவானிடம் விரிவாய் எடுத்து ரைத்து வினவிய போது அவரது ஒரு வரிப் பதில் இதுதான்: "ஆம். எல்லாம் தானாகவே நடை பெறுகிறது."

ஸ்ரீபகவான் மிக மிக அரிதாகவே தமது தெய்வீக சக்தியை இச்சா பூர்வமாகப் பிரயோகித்தார். அவ்வா றான அரிய சந்தரப்பங்களிலும் கூட, அவர் தீட்சையும் உபதேசமும் வழங்குவதைப்போலவே எவரும் அறியா வண்ணம் நிகழ்த்தினார். பிந்தைய ஆண்டுகளில், ராஜ கோபால அய்யர் என்பவர் ஸ்ரீபகவானின் பணியாளர்களில் ஒருவர். குடும்பஸ்தர். தமது குழந்தைக்கு ரமணன் என்று பெயரிட்டார். மனதிற்கினிய மூன்று வயது பாலகன் ரமணன் தினந்தோறும் ஓடி வந்து ஸ்ரீ பகவானுக்கு எதிரில் வீழ்ந்து நமஸ்காரம் செய்வான். ஒரு நாள் மாலை மங்கியபிறகு பக்தர்கள் சென்றுவிட்ட சமயத்தில் அந்தக் குழந்தையை பாம்பு கடித்துவிட்டது. ராஜகோபால அய்யர் பதைபதைத்துக் குழந்தையைத் தூக்கிக்கொண்டு நேராக தரிசன கூடத்திற்கு ஓடினார். அதற்குள் பாலக னின் உடலில் விஷம் ஏறி நீலம் பாரித்துவிட்டது. மூச்சுத் திணறியது. ஸ்ரீபகவான் துவண்டு கிடந்த குழந்தை யின் உடல்மீது கை வருடினார். "ரமணா, உனக்கு ஒன்றுமில்லையடா" என்றார். பாலகன் பிழைத்து விட் டான். இந்த அதிசயத்தை ராஜகோபால அய்யர் சில பக்தர்களுக்கு மட்டும் தெரிவித்தார். ஆனால் அதை யாரும் பரவலாக வெளியிடவில்லை.

ஸ்ரீபகவானிடத்து வரம்வேண்டி இறைஞ்சுவது ஒரு வகையான பிரார்த்தனை. தம்மைக் காத்தருளவும், நலன் நல்கவும் அவர் மீது அசையா நம்பிக்கை வைப்பது மற்றொரு வகை. இவை இரண்டும் ஒன்றுக்கொன்று இணைந்தவை எனினும் இவற்றின் வேறுபாட்டைக் கோடிடுவது அவசியம். பின்னதே ஸ்ரீபகவானுக்கு ஏற்புடையது. யாரேனும் தம்மைக் காத்தருளும் பாரத்தை அவர்மீது சுமத்தினால் அதனை அவர் ஏற்றுக் கொள்வார். அவர் இயற்றிய "அருணாசல சிவ அக்ஷரமணமாலை" யில் குரு—சிஷ்ய அணுகுமுறை ஒரு பாடலில் பொதித்துள்ளது:

**வரும்படி சொலிலை வந்தென் படியள**
**வருந்திடுன் றலைவிதி யருணாசலா. (94)**

[பொருள்: 'வா' என்றதால் வந்தேன். எனக்கு இனி படியளப்பது உமது தலைவிதி (பொறுப்பு), ஹே குரு அருணாசலா].

ஒரு பக்தரின் வேண்டுகோளுக்கிணங்க பகவத் கீதையிலிருந்து 42 சுலோகங்களைத் தேர்ந்தெடுத்துத் தன் போதனைக்கு ஒப்ப அவற்றை வேறாக வரிசைப் படுத்தித் தமிழாக்கம் செய்தார். அவற்றில் ஒன்று பக்தி யோகத்தின் மகிமைக்கும் குருபக்திக்கும் பொருத்தமாக அமைந்துள்ளது:

**என்பாலே சித்த மிருத்தியெப் போதுமுள்**
**ளன்பாலே பத்திசெயு மன்பருக் — கென்னையவர்**
**சார்வா ரெதனாலச் சற் புத்தி யோகத்த**
**யீவேனோ னென்னருளா லெண்.**

(பகவத் கீதாசாரம், பா.19)

கடுஞ் சோதனைகள் எழலாம். நம்பிக்கையை நலியுறச் செய்யும் அபாயகரமான வேளைகள் வரலாம். ஆனாலும், பகவான் ஸ்ரீரமணரை நம்பினோர் கைவிடப் படார்.

# 16. எழுதிய நூல்கள்

ஸ்ரீபகவான் தாமே எழுதியவை மிகச் சொற்பமே. கிட்டத்தட்ட அவையாவுமே அவரை நாடி வந்த சாதகர்கள் வேண்டிப் பெற்ற வாசகங்கள் கொண்டவை. ஆசிரமத்திற்கு வந்திருந்த ஒரு கவிஞனைப்பற்றி ஸ்ரீபகவான் பின்னர் பகர்ந்ததை, தேவராஜமுதலியார் தமது டயரியில் பதித்துள்ளார். அவர் முனைந்து எழுதாத காரணத்தை அதில் காணலாம்:

"இதெல்லாம் (கவிதை புனைதல் போன்றவை) மனதின் கிரியா நியோகங்களே தவிர வேறல்ல. மனதை மேன்மேலும் உளைப்பித்துக் கற்பனை விளைவித்துக் கவிதை புனையப் புனைய புலமை கூடுகிறது. இவ்வாறு தேர்ச்சி வளர வளர, மனச் சாந்தி குறைகிறது. மன அமைதி இல்லையேல் கற்பனைத் திறனால் யாது பயன்? ஆனால் இம் மாதிரியான நபர்களிடம் இப்படிச் சொன்னால் ஏற்பார்களா? அவர்களால் சும்மா இருக்க முடியாது. பாடல்கள் இயற்றிக் கொண்டே இருக்க வேண்டும் அவர்களுக்கு. புத்தகம் எழுத வேண்டும் அல்லது பாடல் புனைய வேண்டும் என்கிற ஆசை ஏனோ எனக்கு என்றுமே தோன்றியதில்லை. நான் இயற்றிய பாடல்கள் யாவும் ஏதாவது ஓர் குறிப்பிட்ட சந்தர்ப்பத்தில் எவராவது ஒருவரின் வேண்டுகோளுக்கிணங்க எழுதியவை. அனேக விரிவுரைகள், மொழிபெயர்ப்புகள் கொண்ட "உள்ளது நாற்பது" கூட ஒரு நூலாக அமையத் திட்டமிடப்படவில்லை. அவற்றில் கண்டுள்ள பாடல்கள் வெவ்வேறு கால கட்டங்களில் இயற்றப்பட்டு, பின்னர் முருகனாராலும் வேறு சிலராலும் புத்தக வடிவம் பெற்றவை. "அருணாசல பதிகம்", "அருணாசல அஷ்டகம்" ஆகிய இவ்விரண்டின் பாடல்கள் மட்டுமே பிறர் தூண்டுத

வின்றி அகத்தூண்டிதலின் விளைவாய் நானே எழுதியவை. "அருணாசல பதிக"த்தின் முதல் விருத்தத் தொடக்கச் சொற்கள் ஒரு நாள் காலை என்னையும் மீறி எழுந்தன. இந்த வார்த்தைகளால் என்ன பிரயோஜனம் என்று உதறி அடக்கப் பார்த்தேன். ஆனாலும் தொடக்க அடிகளை முடிக்கும்வரை உள்ளடக்க முடியாமற் போயிற்று. மற்ற சொற்கள் மடைதிறந்த வெள்ளம் போல் பிரயத்தனமின்றி பொங்கிவந்தன. இது போலவே மறுநாள் அடுத்த பாடல் உதித்தது. இவ்வாறு அடுத்தடுத்த நாட்களில் மற்ற பாக்கள் பூர்த்தி பெற்றன. பத்தாவது பதினோராவது பாக்களை மட்டுமே ஒரே நாளில் புனைந்தேன்."

இதே போன்று, "அருணாசல அஷ்டகம்" இயற்றிய விதத்தைத் தமக்கே உரித்தான பாணியில் விவரித்துள்ளார்:

"அடுத்த நாள் கிரிப்பிரதக்ஷிணம் கிளம்பினேன். என் பின்னால் பழநிஸ்வாமி வந்து கொண்டிருந்தான். சிறிது தூரம் சென்றபின் ஐயாசாமி அவனைத் திரும்ப குகைக்கு வந்து போகுமாறு கூப்பிட்டான். பழநிஸ்வாமியிடம் ஒரு பென்ஸிலும் பேப்பரும் கொடுத்து, 'சில நாளாக சுவாமி ஏதோ பாட்டுகள் எழுதி வருகிறார். இன்றைய தினமும் எழுதுவாரோ என்னவோ? ஆகவே இவற்றை நீ எடுத்துப் போவது நல்லது' என்று கூறி அனுப்பி வைத்ததாகத் தெரிகிறது.

"பின்னாலேயே வந்துகொண்டிருந்த பழநிஸ்வாமி கொஞ்சநேரம் காணாமற்போனானே, அப்புறம் ஓடி வந்து சேர்கிறானே என்பதை கவனித்தபோதுதான் இந்த விஷயம் தெரிய வந்தது. அன்றைய தினம் விரூபாட்சகுகைக்குத் திரும்புவதற்குள் எட்டு பாடல்களில் ஆறு எழுதி முடித்தாகி விட்டது. அன்று மாலையோ அல்லது மறுநாளோ நாராயண

ரெட்டி வந்தார். அவர் அப்போது வேலூரில் சிங்கர் கம்பெனியின் ஏஜெண்டாக இருந்துவந்தார். அடிக்கடி வந்து போவார். ஐயாசாமியும் பழநியும் அவரிடம் பாடல்களைப் பற்றிக் கூறினர். 'அவற்றை உடனே என்னிடம் கொடுங்கள். அச்சேற்றி விடுகிறேன்', என்றார் அவர். பாடல்களை எடுத்துப் போகப் பிடிவாதம் பிடித்த போதுதான் நான், முதல் பதினோறு பாடல்களை தனிப்படிவமாகவும், வேறு சந்தத்தில் அமைந்த மற்ற செய்யுட்களை வேறு படிவமாகவும் வெளியிடுமாறு கூறினேன். அஷ்டகத்தைப் பூர்த்தி செய்வற்காக, கடைசி இரண்டு செய்யுட்களை உடனடியாய் இயற்றினேன். ஆக மொத்தம் பத்தொன்பது பாக்களையும் ரெட்டி எடுத்துச் சென்றுவிட்டார்."

அனேக கவிஞர்கள் ஸ்ரீபகவான் மீது பல மொழிகளில் பாடல்கள் இயற்றியுள்ளனர். அவர்களுள் வடமொழியில் கணபதி சாஸ்திரியும், தமிழில் முருகனாரும் தலைசிறந்தவர்கள். இவ்வத்தியாய ஆரம்பத்தில் எடுத்துக்காட்டிய உரையாடலில், 'பாடல் புனைதல் சக்தி– விரயமே; அச்சக்தியை சாதனைக்குப் பயன்படுத்தலாமே' என்ற வகையில் பாட்டெழுதுவதில் விருப்பமின்மையை உணர்த்தியிருப்பினும், அவரது முன்னிலையில் பாடல்கள் பாடப்படும்போது கனிவார்ந்து உன்னிப்பாய் செவிமடுப்பார். அவரைப் பற்றி வசன நூல்களும் கட்டுரைகளும் நிறைய எழுதப்பட்டு வந்தன. அவற்றைப் படிக்கக் கேட்பார். வேறுமொழிக் கட்டுரைகளை எல்லோரும் புரிந்து கொள்வதற்காக மொழிபெயர்க்கச் செய்வார். அவரது சுயசார்பற்ற ஆர்வத்தையும் கபடமற்ற குழந்தைத் தனத்தையும் கண்டு வியக்காதோர் யாருமிலர்.

ஸ்ரீபகவான் எழுதியதாக ஒப்பக்கூடிய இரு வசன நூல்கள் உள்ளன. விருபாட்ச வாசத்தின் தொடக்க

ஆண்டுகளில் அவர் வாய்திறவாமல் இருந்துவந்தபோது கம்பீரம் சேஷய்யர் என்பவருக்காக பல்வேறு சந்தர்ப் பங்களில் (1900–1902) எழுத்துமூலம் போதனைகள் அளித்துள்ளார். சேஷய்யரின் மறைவுக்குப்பிறகு அவர் விட்டுச்சென்ற குறிப்புக்களை வரிசைப்படுத்தி, "விசார சங்கிரகம்" என்ற நூலாக வெளியிட்டனர். அதே கால கட்டத்தில் சிவப்பிரகாசம் பிள்ளைக்கு எழுதிக்காட்டிய விடைகள் "நான் யார்?" என்ற சிறு நூலாக வெளி வந்தது. ஆசிரமம் வெளியிட்ட மற்ற வசன நூல்கள் ஸ்ரீபகவான் எழுதியவை அல்ல. பக்தர்கள் எழுப்பிய கேள்விகளுக்கு அவர் அவ்வப்போது அளித்த விடை கள், விளக்கங்களின் தொகுப்புகள் என்பதால் அவை உரையாடலாக அமைந்துள்ளன.

அவரது பாடல்கள் இருவகைப்படும்–ஒன்று, பக்தி நிறைந்த துதிப்பாடல்கள், மற்றவை சிந்தாந்த சார்பு டைய உபதேசப் பாடல்கள். முதல் வகையில் ஐந்து பாக்கள் கொண்ட "அருணாசல பஞ்சரத்னம்" உள்ள டக்கம். விருபாட்ச இருக்கையின்போது இயற்றியவை. அப்பாடல்கள் பக்திரசம் தோய்ந்தவை என்றாலும் அத் துவைத நோக்கும் இல்லாமற் போகவில்லை. பக்திப் பெருக்கு, முடிவில் ஞானத்தில் சேர்ந்துவிடுகிறது. சாதகன் அல்லது பக்தனை நிலைக்களனாக வைத்து எழுதப் பட்டவை இவை. ஆனால் எழுதியவரோ பரம ஞானி. ஒருமைப் பேரானந்தத்தில் ஒன்றியவர். வேண்டி நின்ற பக்தர் அல்லவே அவர்? இதன் காரணமாகவே அப் பாக்கள் பக்தர்களைப் பரவசத்தில் ஆழ்த்துகின்றன.

"அருணாசல அஷ்டகம்" மற்றும் "பதிகம்" பற்றி முன்னமே குறிப்பிட்டுள்ளோம். பதிகத்தில் தம்மை சாதகன் நிலையில் நிறுத்தித் துதிப்பதோடு நில்லாமல் தாமே ஞானம் பெறாத ஒருவன் என்பதாக "பரமநிற் பிரிந்திவ் வுலகினைத் தலையிற் பற்றி யான் பெற்றது போதும்"

என்ற சொற்பிரயோகமும் செய்துள்ளார். பக்தர்களைக் கருத்தில்கொண்டு அவர்களுக்காக இவ்வாறு எழுதினீர்களோ என்று எ. போஸ் என்ற அன்பர் நேரிடையாக வினவியபோது, ஸ்ரீபகவான், "ஆம், அப்படித்தான்"என ஒப்புக்கொண்டார்.

"அருணாசல பஞ்சரத்னம்" பாடலை முதலில் வட மொழியில் இயற்றி, பின்னரே தமிழ் வடிவமைத்தார். "பஞ்சரத்னம்" பிறந்த கதை பிரமிக்கத்தக்கது. சமஸ் கிருதத்தில் செய்யுளொன்று இயற்றுமாறு கணபதி சாஸ் திரி அவரைக் கேட்டுக் கொண்டார் (1917–இல்). ஸ்ரீ பகவான் சிரித்தவாறு, தமக்கு சமஸ்கிருத இலக்கணமோ, சுலோக அடிப்படை அமைப்போ தெரியாத போது பாட்டு எழுதுவது எப்படி என்றார். அதுகேட்ட சாஸ்திரி, அவருக்கு ஆர்ய சந்தத்தைப்பற்றிய விளக்கம் அளித்து, அதன்படி பாடல் இயற்றுமாறு கேட்டுக் கொண்டார். அன்று மாலையே கருத்துக் கருவூலமாக அமைந்த ஐந்து திருத்தமாக சமஸ்கிருதப் பாக்களை ஸ்ரீபகவான் இயற்றி விட்டார். பின்னர் (1922–இல்) அவற்றை பின்வரும் தமிழ்வெண்பாக்களாக வழங்கினார்.

**அருள் நிறைவான அமுதக் கடலே**
**விரிகதிரால் யாவும் விழுங்கும் – அருண**
**கிரி பரமான் மாவே கிளர் உளப்பூ நன்றாய்**
**விரி பரிதியாக விளங்கு.**

**சித்திரமாம் இஃதெல்லாம் செம்மலையே நின்பாலே**
**உத்திதமாய் நின்றே ஒடுங்கிடுமாம் – நித்தியமும்**
**நானென்ற(று) இதய(ம்) நடித்திடுவையால் உன்பேர்**
**தான் இதயம் என்றிடுவர் தாம்.**

**அகமுகம் ஆர் அந்த அமலமதி தன்னால்**
**'அகம் இதுதான் எங்கெழும்' என்(று) ஆய்ந்தே—**
**அகவுருவை**
**நன்கறிந்து முந் நீர் நதி போலும் ஒயுமே**
**உன் கண் அருணாசலனே யோர்.**

**வெளி விடயம் விட்டு விளங்கும் அருணேசா**
**வளியடக்க நிற்கும் மனத்தால்— உளமதனில்**
**உன்னைத் தியானித்து யோகி யொளி காணும்**
**உன்னில் உயர் உறும் ஈ(து) உன்.**

**உன்னிடத்தில் ஒப்புவித்த உள்ளத்தால் எப்பொழுதும்**
**உன்னைக் கண்(டு) எல்லாமும் உன்னுருவாய்—**
**அன்னியமில்**
**அன்பு செயும் அன்னோன் அருணாசலா வெல்கும்**
**இன்புருவாம் உன்னில் ஆழ்ந்தே.**

*இந்த ஐந்து வெண்பாக்களும் மற்ற பாடல்களைக் காட்டிலும் சித்தாந்தக் கோட்பாட்டையொட்டி அமைந்துள்ளன. ஞானம் பெறுவதற்கான முக்கிய நெறிகளான யோகம், பக்தி, கர்மம் ஆகியவற்றின் பொழிப்பை இவற்றில் காணலாம். ஸ்ரீபகவானே விளக்கியுள்ளதுபோல, மூன்றாவது பாடல் ஸத் (சத்தியம், மெய்ப்பொருள்) சார்ந்த நிலையையும், நான்காம் பாடல் சித் (அறிவு) நிலைச் சார்பையும், ஐந்தாவது பாடல் ஆனந்த (பூரண இன்ப) நிலைச் சார்பையும் எடுத்தாள்கின்றன. நதி முடிவில் கடலில் கலந்துவிடுவது போல, ஞானியொருவன் நித்திய சத்தியத்தில் ஒன்றிவிடுகிறான். யோகியோ 'சித்' எனும் பேரறிவின் ஒளியைக் காண்கிறான். பக்தன் அல்லது கர்மயோகி 'ஆனந்த' (பூரண இன்ப) வெள்ளத்தில் மூழ்கி விடுகிறான். இம் மூன்றிலும் 'யான்' எனும் முனைப்பு கரைந்தபின், ஆன்மா அதன் உண்மையுருவான பேரின்பக் கடலில் நீந்தி விளையாடுகிறது.*

"அருணாசல சிவ" என்ற சொற்றொடரைப் பல்லவியாகக் கொண்ட "அக்ஷரமணமாலை" எனும் 108 சிறு செய்யுட்கள் அடியார்களின் மனதை உருக்கிப் பரவச மூட்டுபவை. விருபாட்ச வாசத்தின் தொடக்க ஆண்டுகளில், பழநிஸ்வாமியும் மற்ற சாதுக்களும் பக்தர்களுப் படைப்பதற்காக ஊரில் பிட்சை தேடிவர சிறு கோஷ்டியாகப் புறப்படுவார்கள். அவ்வாறு தெருத்தெருவாகச் செல்லும் போது இசைப்பதற்கு ஏற்ற பாடல் ஒன்று புனைந்து தருமாறு ஒருநாள் அவர்கள் ஸ்ரீபகவானை வேண்டினர். அதற்கு அவரோ, மகான்கள் இயற்றிய சிறந்த பக்திப் பாடல்கள் ஏற்கனவே ஏராளமாயிருக்க, புதிதாக ஒன்று எதற்கு என்று பதிலிறுத்தினார். இருந்தும் அவர்கள் விடாப்பிடியாய் வற்புறுத்தி வந்தனர். சில நாட்கள் சென்றபின் காகிதம்–பென்ஸில் சகிதமாய் அவர் கிரிப்பிரதட்சிணம் செய்யப் புறப்பட்டார். வழியில் சில மணி நேரத்திற்குள் நூற்றெட்டு செய்யுட்களை எழுதி முடித்து விட்டார். அவர் அவற்றை இசைத்து எழுதுகையில் ஆனந்த பாஷ்பம் பார்வையை மறைத்துக் கன்னத்தில் வழிந்தோடிற்று. குரல் கம்மிற்று. ஏக்கத்தின் தாபமும், கூடி அடையப்பெறும் பேரின்பமும் அப்பாக்களில் செந்தழற் குறியீடுகளாக விகசிக்கின்றன. பக்திப் பரவச உச்சம் பரம ஞானத்துடன் இழைகின்றது. ஆயினும், ஞானத்தை நாடிப் புலம்பும் பக்தனின் நிலையிலிருந்து இவை இயற்றப்பெற்றவை. ஒவ்வொரு செய்யுளின் முதல் எழுத்து அகர வரிசையில் அமைந்து, சித்திரக் கவியலங்காரத்தில் புனையப்பட்டுள்ளன. மற்ற பாடல்களைவிட இவற்றின் சுய முயற்சியற்ற எழுச்சி வியக்கத்தக்கது. இவற்றில் சில செய்யுட்களின் உட்கருத்தை விளக்குமாறு சில பக்தர்கள் வேண்டியபோது அவர், "நீங்களும் யோசியுங்கள், நானும் யோசிக்கிறேன். பாடலை இயற்றும் போது யோசித்து எழுதவில்லை. தோன்றியதை எழுதிக் கொண்டே போனேன். அவ்வளவேதான்" என்றார்.

ஓர் பண்டைய புராணக்கதை உண்டு – ரிஷிகள் பலர் தங்கள் குடும்பத்தோடு ஒரு கானகத்தில் வசித்து வந்தனர். கர்மானுஷ்டங்கள் தீவிரமாய் அனுசரித்து ஜபதபங்கள் புரிந்து அரிய சித்திகள் பெற்றனர். அதே வழியில் முக்தியும் பெற்றுவிடலாம் என இறுமாந் திருந்ததே அவர்களது பெருந்தவறு. தவறை உணரச் செய்யும் பொருட்டு, பரமசிவன் ஓர் பிக்ஷாண்டியாக வும், அவரோடு மகாவிஷ்ணு ஓர் மோகினியாகவும் கானகத்தில் தோன்றினர். மோகினியின் அழகில் மதி மயங்கிய ரிஷிகள் யாகாதிகளை மறந்து தடுமாறினர். அவர்கள் பெற்ற சித்தி சக்திகளும் மங்கின. ரிஷி பத்தினிகளோ ஆண்டி ஆணழகன் அரனைக் கண் ணுற்றுக் கருத்திழந்து கடமைகளைக் கைவிட்டனர். கோபமுற்ற ரிஷிகள் மந்திர சக்தியால் பாம்புகளையும், ஒரு யானையையும், புலியையும் தோற்றுவித்து பிக்ஷாண்டி மீது ஏவினர். ஆண்டியுருச்சிவனோ பாம்புகளை எடுத்துக் கழுத்தில் மாலையாக அணிந்தார். மாயப் புலியைக் கொன்று அதன் தோலை இடை ஆடையாகத் தரித் தார். யானையை வதைத்துத் தோலை சால்வையாகப் போர்த்திக் கொண்டார். கர்ம முனைப்பால் தாம் பெற்ற சக்தி அற்பம் என்பதையும், தம்மைக் காட்டிலும் மிக மேலான சக்தி வாய்ந்தவர் ஒருவர் இருப்பதையும் உணர்ந்த ரிஷிகள் மகேசனிடம் மன்னிப்புக் கோரி, தங்களுக்கு நல்லுபதேசம் வழங்கும்படி மன்றாடி நின்றனர். அதன்பிறகே சிவபெருமான் காட்சியளித்து அவர்களு டைய பிழையைச் சுட்டிக்காட்டி அருளுபதேசித்தார்.

கவிஞரும் மெய்யடியாருமான முருகனார், இக்கதை யைத் தமிழ்ப்பாடலாக எழுதி, 'முனிவர்களுக்கு சிவன் அருளிய ஞானோபதேசம்' என்ற உச்ச கட்டத்தில் மேலும் எழுதுவதை நிறுத்திவிட்டு ஸ்ரீபகவானை அணுகி, அரனின் அவதாரமாக விளங்கும் தாங்களே தங்கள் வாய்மொழியாக அவ்வுபதேசத்தை நல்குமாறு வேண்டி

நின்றார். இவ்வாறு எழுந்ததே முப்பது பாக்கள் கொண்ட "உபதேச உந்தியார்". இறைவனுக்கு அர்ப்பணமாய் சுயநலம் கருதாது பிறர்பொருட்டுப் புரியும் (நிஷ்காம்ய) கர்மம், கருத்தைத் திருத்தி மனத்தூய்மை உண்டாக்கி கதி வழிகாட்டும் எனத் தொடங்கும் பாக்களில், அடுத்த தாக மூர்த்தி வழிபாடு, பூஜை, ஜபம், அவற்றைக் காட்டிலும் ஆன்ம தியானம் ஆகியவை முறையே உயர்ந் தவை என்று போதிக்கப்படுகிறது. இந்த முப்பது பாக்க ளையும் ஸ்ரீபகவான் பின்னர் சமஸ்கிருதத்தில் ஆக்கினார். அதனை இக்காலத்திய உபநிடதம் என்று விமரிசகர்கள் போற்றியுள்ளனர். ஸ்ரீபகவானின் முன்னிலையில் தினமும் வேத பாராயணத்துடன் தொடர்ந்து உபதேச உந்தியார் வடமொழிப் பாக்களும் உச்சரிக்கப்பட்டு வந்தன. இன்றும் அவரது சமாதிக்கு முன்னிலையில் அவை ஓதப்படு கின்றன.

"உபதேச உந்தியாரை" அடுத்து "உள்ளது நாற்பது", மற்றும் நாற்பது பாக்கள் கொண்ட அதன் "அனு பந்தம்" ஆகியவற்றிலேயே ஸ்ரீபகவான் அருளிய கோட் பாடுகள் அடங்கியுள்ளன. "உள்ளது நாற்பது" பல மொழிபெயர்ப்புகளில் வெளிவந்துள்ளது. பலராலும் வியாக்கியானங்கள் எழுதப்பட்டுள்ளன. அகண்ட தன்மை யும் ரத்தினச் சுருக்கமான மெய்யறிவுப் புகட்டலும் ஒருங்கே கூடியவை என்பதால் விளக்கங்கள் தேவைப் படுகின்றன. முன்பு குறிப்பிட்ட உரையாடலில் ஸ்ரீ பகவான் சொன்னதுபோல, அப்பாக்கள் வெவ்வேறு காலகட்டங்களில் எழுதப்பட்டு, பின்னர் வரிசைப் படுத்தப்பட்டவை. தவிர, "உள்ளது நாற்பது அனுபந்தத்" தில் உள்ள மேலும் நாற்பது பாக்கள் எல்லாமே ஸ்ரீ பகவானால் இயற்றப்பட்டவை அல்ல. புராதன மூலங் களிலிருந்து எடுத்து மொழிபெயர்க்கப் பட்டவையே அவை. தகுதியான செய்யுள் ஏற்கனவே வேறு புராதன கிரந்தங்களில் இருக்கும் போது புதிதாய் எழுதுவதற்கு

அவசியம் ஏது என்று அவர் எண்ணினார். அனுபந்தத்தையும் சேர்த்து மொத்தம் எண்பது வெண்பாக்களும் ஸ்ரீபகவானின் ஆழம் மிக்கக் கோட்பாட்டை வள்ளிதாய், தெளிவாய் விண்டுரைக்கின்றன. மேற்சொன்ன இரு வகையான பாடல்களைத் தவிர அவர் சிறு சிறு தனிப்பாடல்களும் படைத்தார். அவை பலவற்றில் நகைச்சுவைக்குக் குறைவில்லை. அவற்றில் ஒன்று "அப்பளப் பாட்டு". அதனில், 'அப்பளம் இடுவது எப்படி ?' என்ற சமையல் குறிப்பை ஆன்மிக சாதனை முறையை உணர்த்தும் குறியீடாகவும் சமைத்து அளித்துள்ளார். ஸ்கந்தாசிரமத்தில் அன்னை அழகம்மாள் ஒரு சமயம் அப்பளம் இட்ட போது மகனையும் உதவிக்கு அழைத்தார். அவ்வமயமே ஆன்மீகக் குறியீட்டுருவான அப்பளப் பாட்டையும் இட்டார்.[1]

பசியெடுத்துப் பிராணனை வாங்கும் வயிற்றை நொந்து ஔவைப்பிராட்டி ஓர் விகடப்பாடல் எழுதி வைத்துள்ளார். அதாவது:

**ஒருநா ளுணவை ஒழியென்றால் ஒழியாய்**
**இருநாளைக் கேலென்றால் ஏலாய்—ஒருநாளும்**
**என்னோ வறியாய் இடும்பைகூர் என்வயிறே**
**உன்னோடு வாழ்தல் அரிது.**

1. "அப்பள மிட்டுப்பாரு–அதைச் சாப்பிட்டுன் ஆசை தீரு" என்ற பல்லவியுடன் தொடங்கும் அப்பாடலின் வசனச் சுருக்கம் இதுதான்: தானிய உளுந்தைப் புடைத்து, எந்தரத்தில் திரித்து, பிரண்டை ரசம், ஜீரகம், மிளகு, உப்பு, வாசனைப் பெருங்காயம் எல்லாம் சேர்த்துப் பிசைந்து உரலிலிட்டு உலக்கையால் இடித்துப் பலகை மீது குழவியால் அப்பளமிட்டுப் பொரித்துப் புசிப்பதைப் போல, சரீரமாகிய நிலத்தில் விளைந்த "தான்" எனும் அகங்காரத்தை "நான் யார்?" எனும் ஞானவிசாரத்தில் திரித்துப் பொடித்து சத்–சங்கமாகிய பிரண்டை ரசத்தோடு சேர்த்துப் பக்குவப்படுத்தி, ஞானாக்னியாய்க் காயும் நெய்யிலிட்டுப் பொரித்தெடுத்து, வாழும் தனக்கே 'நானை' அப்பளமாய் நொறுக்கித் தீனியாக்கிவிட வேண்டியதே! — லா.சு.ர.

(ஒரு நாள் சாப்பிடாமல் இரேன் என்றால் நீ மாட்டாய். இரண்டு நாட்களுக்கான சாப்பாட்டை இப்போதே சாப்பிட்டுத் தொலையேன் என்றாலும் மாட்டாய். பொல்லாத என் ஒரு சாண்வயிறே, உனக்கென்ன தெரியும் என் வயிற்றெரிச்சல். உன்னோடு வாழ்வது பெரும் ரோதனை அன்றோ!)

ஒரு நாள் ஆசிரமத்தில் பெரிய விருந்து நடந்தது. அனைவரும் வயிறுபுடைக்கச் சாப்பிட்டு, பின்னர் சங்கடப்பட்டனர். அன்பரொருவர் அச்சமயம் ஔவையாரின் பாட்டை மேற்கோள் காட்டி நகைத்தார். உடனே ஸ்ரீபகவான் அதே பாடலைத் தழுவி ஓர் நையாண்டிப் பாட்டைப் பொழிந்தார்.

**ஒருநா ழிகை வயிறெற் கோய்வீயாய் நாளும்**
**ஒருநா ழிகையுண்ப தோயாய் – ஒருநாளும்**
**என்னோ வறியா யிடும்பைக்கூ ரென்னுயிரே**
**உன்னோடு வாழ்த லரிது.**

(ஒரு நாழிகை நேரமேனும் என்னைச் சும்மா விடுவதில்லை உனது வயிறு. நாள்தோறும், ஒவ்வொரு நாழிகையும் ஓயாமல் உண்டு களிக்கிறாய். என் வேதனை உனக்கென்னத் தெரியும் ஏ. அகந்தையே! உன்னோடு வாழ்வது பெரும் ரோதனை).

ஸ்ரீபகவான் தமது கடைசிப் பாடலை 1947 ஆம் ஆண்டு எழுதினார். எவருடைய விண்ணப்பத்தின் பேரிலும் அதை எழுதவில்லை. தம்மால் தெலுங்கிலும் இயற்ற முடியுமா என்ற பரிசோதனையாகத்தான் படைத்தார். ஏனெனில் அதை முதலில் தெலுங்கில் எழுதினாலும் அதனைத் தமிழ்ச் செய்யுள் சீரடி நடையில் அமைத்தார். அதன் பின்னரே தமிழில் மொழிபெயர்த்தார். “ஏகான்ம பஞ்சகம்” என்ற தலைப்பில் ஐந்து வெண்பாக்கள் கொண்ட அப்பாடல் பின்வருமாறு:

**தன்னை மறந்து தனுவேதா னாவெண்ணி**
**யெண்ணில் பிறவி யெடுத்திறுதி – தன்னை**
**யுணர்ந்துதா னாத லுலகசஞ் சாரக்**
**கனவின் விழித்தலே காண்.**

*[பொருள்: 'நான்' எனும் தன் உண்மை உணர்வை மறந்து உடலே (தனுவே) தான் என்று எண்ணி, எண்ணிலாப் பிறவிகள் எடுத்து, இறுதியில் தன் ஆன்ம உணர்வை எட்டுதல், உலக மெங்கும் கண்டு வருவதாகக் காணும் கனவிலிருந்து விழித் தெழுவது போல.]*

**தானிருந்துந் தானாகத் தன்னைத்தா னானெவன்**
**யானிருக்குந் தான மெதுவெனக்கேட்—பானுக்கு**
**யானெவ னெவ்விடம் யானுள னென்றமது**
**பானனை யீடு பகர்.**

*[இப்பாடல் தமது ஆன்ம விசார முறையைக் கேலி செய்யும் வகையில், 'நான் யார்?' என்று கேள்விக் கேட்டுத் தெரிந்து கொள்ளத் தேவை ஏற்படும் அளவுக்கா நமது பொது மயக்கம் என்று வருந்தி வியப்பதுப்போல அமைந்துள்ளது. 'நான் எவன்?' யான் இருக்கும் இடம் எதுவோ?' என்று மதுபானம் அருந்தியவன் கேட்பதற்கு ஈடாக உள்ளதாம் அது!]* —லா.சு.ர.

**தன்னுட் டனுவிருக்கத் தானச் சடவுடலந்**
**தன்னு ளிருப்பதாத் தானுன்னு—மன்னவன்**
**சித்திரத்தி னுள்ளுளதச் சித்திரத்துக் காதார**
**வத்திர மென்றெண்ணு வான்.**

*[தனு=உடல். உன்னும்=எண்ணும். திரைப் படத்தில் தோன்றும் துணிமணிகள் வெறும் நிழற் தோற்றமே. படத்திற்கு ஆதாரமான சினிமாத் திரையே உண்மையான துணி. அறிவே மெய் ஆதாரம்; உடலோ அதனுள் தோற்றம், என்றவாறு.]*

**பொன்னுக்கு வேறாகப் பூடண முள்ளதோ**
**தன்னை விடுத்துத் தனுவேது—தன்னைத்**
**தனுவென்பா னஞ்ஞானி தானாகக் கொள்வான்**
**றனையறிந்த ஞானி தரி.**

*[பொன் ஆபரணங்கள் அவை செய்யப்பட்ட தங்கத்திலிருந்து தனிப் பட்டவை அல்ல. அதே போன்று, 'நான்' எனும் ஆன்ம உணர்வைத் தவிர்த்து உடல் தனியானது அன்று. அஞ்ஞானியே*

'தான்' என்பது தன் உடல் என்பான். தன்னையறிந்த ஞானியோ ஆன்மாவே 'நான்' என உணருகிறான்.]

**எப்போது முள்ளதவ் வேகான்ம வத்துவே**
**யப்போதவ் வத்துவை யாதிகுரு – செப்பாது**
**செப்பித் தெரியுமா செய்தன ரேலெவர்**
**செப்பித் தெரிவிப்பர் செப்பு.**

[ஆன்மா ஒன்றே எப்போதும் உள்ள மெய்ம்மை. அந்த நிரந்தர வஸ்துவை (மெய்ப் பொருளை), ஆதி குருவும் (தக்ஷிணா மூர்த்தியும்) கூட மௌனத்தின் மூலமாகவே அறிவிக்க வேண்டியிருந்தது என்றால் வேறு எவர் எவ்வாறு வாய்மொழியால் விளக்கக்கூடும்?]

ஸ்ரீபகவான் ஒரு சில மொழிபெயர்ப்புகள் அல்லது தமிழில் தழுவியெழுதிய நூல்களும் படைப்பித்துள்ளார். விருபாட்ச குகைக்கு வந்துபோன ஓர் அன்பர், ஆதிசங்கரர் வடமொழியில் எழுதிய "விவேக சிந்தாமணி" என்ற ஞான நூலை விட்டுச் சென்றார். நூலைப் புரட்டிப் பார்த்த ஸ்ரீபகவான், அதை கம்பீரம் சேஷய்யரிடம் கொடுத்துப் படிக்குமாறு பரிந்துரைத்தார். சேஷய்யருக்கோ சமஸ்கிருதம் தெரியாததால், தமிழ் மொழிபெயர்ப்பு தேடினார். பழநிஸ்வாமி எங்கிருந்தோ அந்நூலின் தமிழாக்கப் பாடல் புத்தகத்தை இரவல் வாங்கித் தந்தார். சேஷய்யர் அதன் பிரதி ஒன்று கேட்டு பதிப்பாளருக்குக் கடிதம் எழுதினார். பிரதிகள் அப்போது கைவசம் இல்லை என்று பதில் கிடைத்தது. ஆகவே அந்நூலுக்குத் தமிழ் வசன நடையில் ஓர் பொழிப்புரை எழுதித் தருமாறு ஸ்ரீபகவானை வேண்டினார். ஸ்ரீபகவான் ஓரளவு எழுதுவதற்குள் சேஷய்யர் முன்பு கேட்டிருந்த தமிழாக்கப் பிரதியை பதிப்பாளர் அனுப்பி வைத்தார். இதனால் ஸ்ரீபகவான் பொழிப்புரை எழுதுவதை பாதியில் நிறுத்தி விட்டார். ஒரு சில ஆண்டுகளுக்குப்பின் வேறொரு பக்தரின் கோரிக்கைக்கு இணங்க, அதைத் திரும்பவும் எழுதத் தொடங்கி, விரைவில்

முடித்து விட்டார். பிரசுரிப்பதன் பொருட்டே அவரை எழுதி முடிக்கத் தூண்டியதாக அந்த பக்தர் அதன் பிறகே தெரிவித்தார். அது கேட்ட ஸ்ரீபகவான் அதற்கு முன்னுரையாக சுருக்கம் ஒன்றையும் எழுதி வழங்கினார். அம் முன்னுரை, ஆதி சங்கரரின் அத்துவைத போதனை முழுவதையும் திரட்டி முறைப்படுத்தி சுருங்கச்சொல்லி விளங்க வைக்கும் சிறு நூலாக அமைந்துள்ளது.

ஆதிசங்கரரின் "ஆத்ம போதம்" என்ற சிறு நூலின் தமிழாக்கமே ஸ்ரீபகவான் இறுதியில் எழுதியது. விருபாட்ச காலத் தொடக்கத்திலிருந்தே அந்த வடமொழி நூல் அவரிடம் இருந்து வந்தது. ஆயினும் அதை மொழி பெயர்க்க அவர் ஏனோ எண்ணியதில்லை. "ஆத்ம போதத்"தின் தமிழ் மொழிபெயர்ப்பு ஒன்று 1949–ஆம் ஆண்டு ஆசிரமத்திற்கு வந்து சேர்ந்தது. அது அவ்வளவு திருப்தியாக அமையவில்லை என்று தெரியவருகிறது. அது கிடைத்த சில நாட்களுக்குள், தாமே வேறு மொழி பெயர்ப்பு எழுதவேண்டும் என்கிற உந்துதல் ஸ்ரீபகவா னிடத்து உள்ளூர எழுந்தது. சில நாள் அந்த விருப்பத் தைப் புறக்கணித்து வந்தார். ஆனால் ஒவ்வொரு சுலோ கத்திற்குமான தமிழ் வார்த்தைகள் அவரையும் மீறி அவர் மனக்கண் முன் வரிவரியாய்த் தோன்றினவாம். பென் ஸிலும் காகிதமும் கொண்டு தரச் சொன்னார். அநாயாச மாக எழுதத் தொடங்கி விட்டார். எவ்விதப் பிரயாசையு மின்றி அந்த நூலைத் தாம் எழுதி முடித்தது குறித்து அவர் சிரித்துக் கொண்டே, "என்னையறியாமல் எப்படியோ எழுதிவிட்டேன். ஒருவேளை வேறு யாரேனும் நூலா சிரியர் தாம் எழுதியதை நான் காப்பியடித்துவிட்ட தாகக்கூட சொந்தம் கொண்டாடலாம்" என்றுரைத் தார் வேடிக்கையாக.

அவர் எழுதியவற்றில் மற்றொறு நூல் "கீதாசாரம்". ஒரு பக்தரின் விண்ணப்பத்திற்கிணங்க, "பகவத் கீதை" யிலிருந்து 42 சுலோகங்களை மட்டுமே தமது கோட் பாட்டிற்கு ஏற்றவாறு பொறுக்கியெடுத்துப் புது வரிசையில் கோத்துச் சுருக்கமாய் விளக்கம் வார்த்திருக்கிறார்.

# 17. மகாசமாதி

தேகவியோகமாவதற்குச் சில ஆண்டுகளுக்கு முன்னராகவே, குறிப்பாக 1947–ஆம் ஆண்டிலிருந்தே, ஸ்ரீ பகவானின் உடல் நிலை கவலையளித்துவந்தது. வாதப் பிணி அவரது கால்களைப் பழுதாக்கியதுமின்றி முதுகையும் தோள்பட்டையையும் பீடித்தது. அது தவிர, அவர் பொருட்படுத்தாவிடினும் பொதுவில் மிகவும் பலஹீனமாகவே காணப்பட்டார். ஆசிரம உணவைக் காட்டிலும் ஊட்டமிக்க ஆகாரம் தேவை என்று தோன்றியது. ஆனால் அவரோ வழக்கத்தைமீறி வேறேதும் உட்கொள்ள மறுத்து விட்டார்.

எழுபது வயது எட்டுவதற்கு முன்பாகவே வயதுக்கு மீறிய வயோதிகராகக் காணப்பட்டார். கவலை அரித்த மூப்பு அல்ல அது. ஏனெனில், கவலைக்குறிகள் ஒன்றுமே இல்லை – அவருக்கு ஏது விசனம், விசாரமெல்லாம்? வெறுமனே வயதேறிய தொய்வும் உடல் நலியுமே மேலோங்கித் தெரிந்தன.

உள்ளுரமும் உறுதியும் பெற்றிருந்த ஒருவர், வாழ்வில் நோய்நொடி கண்டிராதவர், விசனமே அறிந்திராதவர், தமது வயதினும் முதுமையாகத் தோற்றமளித்தது ஏனோ? காரணம் ஒன்றே உண்டு. உலகத்துப் பாபங்களைத் தாம் ஏற்றுச் சுமந்தார். பக்தர்களின் கர்ம வினைகளை விலக்க வல்ல சிவபெருமான் தேவாசுரர்கள் கடலைக் கடைந்தபோது வெளிவந்த ஆலகால விஷத்தைத் தாம் விழுங்கி வையகத்தை அழிவினின்றும் காத்தருளினர் அன்றோ? "ஹே சம்போ மஹாதேவா, ஜகத் ரக்ஷகா, பக்தர்களின் இக வாழ்வுச் சுமைகளையும் தாங்கிக்கொள்ளும் ஆபத்பாந்தவா" என்று ஆதிசங்கரர் சிவனைத் துதித்து ஸ்லோகம் எழுதினாரே! வழிபாட்

டாளரின் உடல் நோவை ஸ்ரீபகவான் உடல் ரீதியாக வும் ஏற்றார் என்பதற்கான பல சூசகங்கள் நிகழ்ந் துள்ளன. ஸ்ரீபகவானின் பரம பக்தை ஜானகி மாதா வெளியிட்ட சஞ்சிகையில் கிருஷ்ணமூர்த்தி என்ற அன்பர் ஓர் நிகழ்ச்சியைக் குறிப்பிட்டு எழுதியுள்ளார். ஒரு சமயம் அவர் திருவண்ணாமலை சென்று தரிசன கூடத் தில் அமர்ந்திருந்தபோது ஆள்காட்டி விரலில் பொறுக்க முடியாத வலி எடுத்ததாம். ஆனால் யாரிடமும் வாய் திறவாமல் வலியைப் பொறுத்துக் கொண்டு அவஸ்தை யுடன் உட்கார்ந்திருக்கையில், மஞ்சத்திலிருந்த ஸ்ரீபகவான் தமது வலது ஆள்காட்டி விரலைப் பிடித்துக் கையால் தேய்த்துக்கொள்வதைக் கண்டாராம். கிருஷ்ணமூர்த்தி யின் வலி உடனடியாய் மறைந்து போய்விட்டதாம். இது போன்ற வலி நிவாரணம் பலருக்கும் கிடைத்த துண்டு

ஸ்ரீபகவானைப் பொருத்தவரை உலக வாழ்வு துச்சம்; போற்றிக் காக்கவேண்டிய பொக்கிஷம் அல்ல. தாம் ஜீவித்திருப்பதைப் பற்றி அக்கறை அற்றவர். அவரு டைய ஆயுட்காலம் எவ்வளவு என்பதைப் பற்றி தரிசன கூடத்தில் ஒருநாள் விவாதம் நடந்தது. ஜோதிடர்களின் கணிப்பைக் காட்டி, எண்பது வயது வரை வாழ்ந்து வருவார் என்றனர் சிலர். மற்றவர்கள், ஜோதிடத்தால் ஆயுள் பலத்தை அறுதியிட்டுக்கூற முடியாது என்றும், எதுவாயினும் கர்மவினை ஏதும் மிச்சமற்ற ஸ்ரீபகவா னுக்கு ஜோதிட பலன் எப்படிப் பொருந்தும் என்றெல் லாம் சர்ச்சையில் ஈடுபட்டனர். அவர்கள் விவாதத்தில் குறுக்கிடாமல் ஸ்ரீபகவான் வார்த்தையாடலைப் புன்னகை யுடன் செவிமடுத்தார். புதிதாக வந்திருந்த ஒருவருக்கு இது புதிராக இருந்தது. "இதைப்பற்றி பகவானின்' கருத்து என்னவோ ?" என்று கேட்டு வைத்தார். அப்போ தும் அவர் பதிலொன்றும் கூறவில்லை. ஆனால் அவர் சார்பில் தேவராஜ முதலியார், "ஸ்ரீபகவான் இது பற்றி

ஏதும் எண்ணுவதில்லை" என்று புதியவருக்கு பதிலளித்த போது, புன்னகையால் ஆமோதித்தார். ஆயுட்காலத்தின் கடைசி ஆண்டு (1949–50) பூராவும் அவர் நடந்து கொண்ட விதம், ஜீவித்திருப்பதில் அக்கறையின்மைக்கு ஓர் எடுத்துக்காட்டாக அமைந்துள்ளது. அவரது உடல் வேதனை குறித்து பக்தர்கள் பரிதவித்தனர். மரணம் நேரிடுமோ என திகிலுற்றனர். அவரோ அலட்சியமாக இருந்தார்.

1949–ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் அவரது இடது முழங்கை மூட்டுக்குக் கீழே ஒருசிறு கட்டி புறப்பட்டது. அது கவலைக்குரியதாகக் கருதப்படவில்லை. பிப்ரவரி மாதம் ஆசிரம மருத்துவர் அதைத் துண்டித்து அகற்றி விட்டார். ஆனால் ஒரு மாதகாலத்திற்குள் கட்டி பெரிதாய்த் திரும்பவும் கிளைத்தது. அதிகமாய் வலித்தது. இத்தட்வை அது புற்றுநோய்க் கட்டி என்று தெரிந்ததும் அனைவரும் அபாயத்தை உணர்ந்தனர். மார்ச் மாத இறுதியில் சென்னை நகரிலிருந்து மருத்துவர்கள் வந்து அறுவைச் சிகிச்சை செய்தனர். ஆனால், ரணம் சரிவர ஆறாமல் வீக்கம்கண்டு கட்டி பெரிதாய்த் தோன்றி முழங்கைக்கு மேலே பரவிற்று.

அப்போதிலிருந்தே ஆசிரம நிகழ்வுகளில் துன்பச் சாயல் படர்ந்தது. இனி புற்றுக் கட்டியை குணப்படுத்த இயலாது, அடுத்தடுத்து அறுவைச் சிகிச்சை மேற்கொண்டாலும், ரேடியம் கதிரியக்க சிகிச்சை அளித்தாலும், கட்டி திரும்பவும் தோன்றக் கூடும், அப்போது சாவுமணி அடித்தாற் போல்தான் என்று பட்டணத்து டாக்டர்கள் கைவிரித்து விட்டனர். நாட்டு வைத்தியர்களோ, எங்களால் புற்றுநோய்க் கட்டியை குணப்படுத்த முடியும். அறுவைச் சிகிச்சையில் இறங்கியதாலேயே நிலைமை மோசமாகிவிட்டது என்று வாதித்தனர். ஆனால், ஆரம்பத்தில் அவர்கள் சிகிச்சை செய்ய அனுமதிக்கப்பட

வில்லை. மார்ச் (1949) மாதத்தில் நடந்த அறுவைச் சிகிச்சைக்குப் பிறகு கட்டி திரும்பவும் வளர்ந்தபோது, டாக்டர்கள் முழங்கையோடு வெட்டி எடுத்துவிடலாம் என்று யோசனை கூறினர். ஞானியின் அங்கத்தைப் பின்ன படுத்தலாகாது என்பது மரபு. பார்க்கப் போனால், எந்த ஆயுதத்தாலும் ஊடுருவக்கூடாது. நடைபெற்ற ரணசிகிச்சைகளும்கூட இந்த ஐதிகத்திற்கு முரணான வையே. ஸ்ரீபகவான் சஸ்திர சிகிச்சைக்கு உட்பட நேர்ந் தாலும், கை முழுவதையும் துண்டித்து விடுவதை ஆட்சேபித்தார். "பயப்படுவதற்கு ஒன்றுமில்லை. தேகம் என்பதே ஒரு பிணி. அதன் முடிவை அதன் போக்கிலே விட்டுவிடலாமே? ஏன் சிதைக்க வேண்டும்?" என்றார்.

"பயப்படுவதற்கு ஒன்றுமில்லை" என்று அவரே சொன்ன சொல், அதையடுத்து அவர் கூறியவற்றையும், மருத்துவக் கருத்தையும் மீறி, 'அவர் குணமாகி விடுவார்' என்ற நம்பிக்கை எழ வழிகோலிற்று. ஆனால், அவரைப் பொருத்தவரை மரணம் பயப்படத் தக்கதல்ல அல்லவா?

தவிர, "போகப்போக எல்லாமே சரியாகிவிடும்" என்று வேறு அவர் சொல்லப்போக, நம்பிக்கை படர்ந்தது. ஆனாலும் பின்னர் நடந்தது சரிதானா என்பதை நாம் தான் எண்ணிப்பார்க்க வேண்டும். அவருக்கோ நடக்க விருப்பதைப் பற்றி எள்ளளவும் சந்தேகம் இருந்ததில்லை.

இந்த சந்தர்ப்பத்தில்தான் பாகவத புராணத்திலிருந்து ஒரு சுலோகத்தின் (ஸ்கந்தம் 11, அத். 13, சுலோகம் 36) பொருளைத் தமிழ்க் கலிவிருத்தத்தில் அமைத்தார்:

**தனுநிலை யிலதாந் தங்கினு மெழினும்**
**வினையினா லடுத்து விடுத்திடு மேனும்**
**புனைதுகி லினைக்கள் வெறிக்குரு டனைப்போல்**
**தனையுணர் சித்தன் றனுவுணர் கில்லனே.**

[பொருள்: கர்மத்தைச் சுமக்கும் உடல் அசையாவிடினும் அல்லது நடமாடினாலும் (இறந்தாலும், வாழ்ந்தாலும்), ஆன்மாவை உணர்ந்த சித்தர் தமது உடல் உணரார் – தன் ஆடை போனபோக்கை அறியாத குடி வெறியன் போல.]

ஸ்ரீபகவான் உண்மையில் துன்புற்றாரா? "இந்த தேகம்தான் பகவான் என்று எண்ணி, நான் வேதனைப் படுவதாக மாய்ந்துபோகிறார்கள், ஐயோ பாவம்!" என்றார் ஒரு பக்தரிடம். "எண்ணம் அகன்றபின் வலி எங்கிருந்து வரும்?" என்றார் ஒரு பணிமகனிடம். இருந்தபோதிலும், எல்லோரையும் போலவே அவரும் வெப்பம், குளிர் இவற்றின் பாதிப்பை உணர்ந்தாரே? அதுகுறித்து ஸ்ரீபகவான் கூறியதாக அவரது பக்தர் எஸ்.எஸ். கோஹன் குறிப்பெடுத்துள்ளார். "ஒரு ஞானியின் கையை வாளால் வெட்டினால் வலிக்கத்தான் செய்யும். ஆனாலும், அவரது சித்தம் பரமானந்தத்தில் லயித்திருப் பதால் பிறர்போல் அவ்வளவு தீவிரமாக வலி உணர மாட்டார்." ஞானி காயமடைந்தால் வலி தெரியாது என்பதல்ல; வருந்தும் உடலுடன் அவர் சொந்தம் பாராட்டுவதில்லை என்பதே சரி. ஸ்ரீபகவானுக்கு உடல் நோவு இருந்தது, போகப் போக வேதனை அதிகரித்து வந்தது என்பது மருத்துவர்களுக்கும் உடனிருந்த சில பணியாட்களுக்கும் நன்கு தெரிந்தது. (மயக்க மருந்து செலுத்தாமல் மேற்கொள்ளப்பட்ட) ஒரு அறுவைச் சிகிச்சையின் போது கூட ஸ்ரீபகவான் வலியைப் பொருட் படுத்தாமல் உடற்சிந்தனை அறவே அற்றிருந்ததைக் கண்டு டாக்டர்கள் வியந்தனர்.

நோயினால் அவர் அவதியுற்றாரா என்கிற கேள்வி, நமது கர்ம வினை போன்று இருமை நிலையிலிருந்தே எழுகின்றது. அவரது நோக்கில் – அத்துவைத சித் தாந்த கோணத்தில் – அவ்விரண்டுமே ஆதாரமற்ற வெறும் தோற்றங்களே. இந்த அர்த்தத்தில்தான் அவர், "நான் நோய்வாய்ப்பட்டுள்ளதாக நீங்கள் எண்ணினால் நான் நோயாளிதான். இல்லை, நலமாகத் தானே இருக்கிறார் என்று நீங்கள் நினைத்தால் நானும் அவ்வாறே நலமாக இருப்பவனாவேன்" என்று பல முறை பக்தர்களிடம் கூறியுள்ளார். அதாவது, பக்த

றொருவர் தனது உடலைப் போல அதன் வேதனை களும் மெய்யானவை என்று நம்பினால் அவருடைய ஆசானின் உடலும் வலியும் உண்மையாகவே தோன்றும்.

மார்ச் மாதத்தில் அறுவை சிகிச்சை முடிந்தபின் ஓரிரு வார காலம் நாட்டு மூலிகை வைத்தியர் ஒருவர் தன்வழிச் சிகிச்சை அளித்துவர அனுமதிக்கப்பட்டார். ஆனால் எவ்விதத் தேற்றமும் கிட்டவில்லை. சிகிச்சை இன்னொரு நாட்டு வைத்தியருக்குக் கைமாறியபோது ஸ்ரீபகவான் மூலிகை வைத்தியரிடம், "பச்சிலை வைத்தியம் செய்து இவ்வளவு தூரம் சிரமப்பட்டோமே என்று வருந்தாதீர்'' என்றார். தமது உடல் வருத்தம் பற்றிய கவலை இல்லை அவருக்கு. வைத்தியம் பார்க்க விரும்பி யவரின் சிரமத்தைப்பற்றித்தான் அவரது கவலை எல்லாம்! தமது உடல்மீது இவ்வளவு தூரம் கவனம் செலுத்தப் படுவதை அவர் சிற்சில சமயம் இடித்துரைத்தார். பல சமயம், சற்றே குணம் ஏற்படுவதுபோலத் தோன்றி யதும், ''போதும், இனி எந்த சிகிச்சையும் வேண்டாம்'' என்று தீர்மானமாகச் சொன்னார்.

'சர்கோமா' (கழலை) எனும் புற்றுநோய்க் கட்டி என்று நிர்ணயமான அந்த வீக்கம், கொஞ்சநஞ்சமிருந்த ஜீவசக்தியை உறிஞ்சிவந்தது. இருந்தும், உடல் பலவீனத் திலும் அவரது முக மென்மை மேலோங்கியது. கருணை கூடிற்று. முக லாவண்யம் மேலும் ஒளிர்ந்தது. வற்றிய வதன வசீகரம் சில சமயம் காண்போர் மனத்தை ஒருங்கே கிளர்ந்தும் தாளவொண்ணா வேதனையில் ஆழ்த்தியும் பிசைந்தெடுத்தது.

முழங்கை கனத்து வீங்கி, புற்றுநோய் பெரிதா யிற்று. எப்போதாவது அவர், ''ஆம், வலி இருக்கிறது'' என்று ஒப்புக் கொள்வார். ஆனால், ''எனக்கு வலிக்கிறது'' என்று ஒருபோதும் கூறினாரில்லை. ஆகஸ்ட் மாதம் மூன்றாவது அறுவை சிகிச்சை ஆசிரம மருந்தகத்தில்

நடந்தது. கட்டி திரும்பவும் கிளைப்பதைத் தடுப்பதற்காக, ரேடியம் கதிரியக்க சிகிச்சையளித்து, பாதிக்கப்பட்ட திசுக்களைத் தீய்த்தழித்தனர். ரணசிகிச்சை முடிவு பெற்ற ஒரு சில மணி நேரத்திற்குள், பிற்பகலில் ஸ்ரீ பகவான் ஆசிரம மருந்தகத்தின் வெளி வராந்தாவில் கனிவார்ந்தமர்ந்து, வரிசையாய் வந்து கொண்டிருந்த பக்தர்களுக்கு தரிசனம் அளித்தார். முற்றிலும் சோர்ந்து வற்றிப் போய்விட்டார் என்பதைக் காண முடிந்தது. ஆனாலும், வெளிறிய முகத்தில் வேதனைக் குறிகள் இல்லை. நான், அன்றைய தினம் சென்னையிலிருந்து திரும்பி வந்து சேர்ந்தவன், அவர் முன் நின்றேன். என்னைக் கண்டதும் அவர் முகத்தில் அரும்பிய புன்னகை, சோர்வை மறைத்து மலர்ந்தது. மறுநாள் நடுப்பகலில் அவர் தரிசன கூடத்திற்குத் திரும்பி வந்துவிட்டார். மருந்தகத்திற்கு வரும் மற்ற நோயாளிகளுக்கு இடையூறாகத் தாம் அங்கு இருப்பது கூடாது என்ற கரிசனம் அவருக்கு.

மருத்துவர்களால் ஆவது இனி ஏதுமில்லை என்கிற நிலைப்பாடு ஒருபுறமிருக்க, அதனையும் கடந்து, நடக்க விருப்பதை யாரால் தடுக்கமுடியும் என்கிற ஆழ்ந்த உண்மை புலப்பட்டது. உரிய நேரம் எது என்று அறிய மாட்டாதவரா ஸ்ரீபகவான்? அவரது தேகம் மடிவதைத் தாங்கிக் கொள்ளும் மனஉறுதியை எங்களுக்கு வழங்குவதில் முனைந்தார். உண்மையில், அவரது பிரிவு தாங்க வொண்ணாதது என்று கலங்கும் பலரது தவிப்பைத் தணிப்பதற்காகவே அந்த வேதனைமிக்க நோய் நீண்டு மரண நிழலாடிவந்தது போலும்! என் மகள் கிட்டி கோடைக்கானல் போர்டிங் ஸ்கூலில் படித்து வந்தாள். ஸ்ரீபகவானின் முற்றிவரும் நோயைப் பற்றிக் கடிதம் மூலம் அறிந்ததும் அவள் எனக்கு எழுதினாள்: ''இதைக் கேட்க எனக்கு ரொம்ப ரொம்ப வருத்தமாக இருக்கிறது. ஆனால், நமக்கு எது நல்லது என்று பகவானுக்குத்

தெரியுமே ?'' கடிதத்தை ஸ்ரீபகவானிடம் காட்டிய போது அவர் முகத்தில் மகிழ்ச்சி மலர்ந்தது. " 'அவருக்கு எது நல்லது' என்று எழுதாமல் நமக்கு எது நல்லது' என்றல்லவா எழுதியிருக்கிறாள் சுட்டிப் பெண் கிட்டி!'' என்று கூறி அகமகிழ்ந்தார்.

தமது உடல் உபாதையைக் கண்டு பரிதவிப்போர் மீது அவருக்கு அளவுகடந்த பரிதாபம் எழுந்தது. அவர்களது துயரைத் துடைக்கத் துணிந்தார். எப்படி ? உபாதையினின்றும் விடுபட்டு மரணத்தை மேலும் பல ஆண்டுகள் ஒத்திப்போடும் சுலபமான வழியால் அல்ல. மாறாக, இந்த தேகம் பகவான் அன்று எனும் ஆதார உண்மையை உணர்த்த முற்பட்டார். "ஐயோ பாவம்! இவர்கள் இந்த உடல்தான் பகவான் என்று எண்ணி அதற்கு வேதனை கற்பிக்கிறார்கள். பகவான் அவர்களை விட்டுப் போய்விடப் போவதாக எண்ணி விசனப்படுகிறார்கள். அவர் எங்கு போக முடியும் ? எப்படிப் போக முடியும் ?'' என்றார்.

ஆகஸ்ட் மாத அறுவைச் சிகிச்சைக்குபிறகு அடுத்த சில வாரங்களில் சற்றே குணம் ஏற்படுவதுபோல் தோன்றியது. ஆனால், நவம்பர் மாதம் புற்றுக் கட்டி திரும்பவும் தலையெடுத்தது. முழங்கைக்கு மேற்புறம் தோள் வரை விரவிவிட்டது. டிசம்பர் மாதம் நான்காம் முறையாகக் கடைசி அறுவை சிகிச்சை நடந்தது. அதனால் ஏற்பட்ட ரணம் அப்புறம் ஆறவில்லை. இனி செய்வதற்கு ஒன்றுமில்லை என்று டாக்டர்கள் கைவிரித்தனர். நிலைமை மோசமாகி விட்டது. திரும்பவும் கட்டி கிளம்பினால் வலியைக் குறைப்பதற்கான மருந்துகள் மட்டுமே செலுத்துவதைத் தவிர வேறேதும் வழியில்லை என்றனர்.

1950, ஜனவரி ஐந்தாம் தேதி ஸ்ரீபகவானின் ஜயந்தி. அவரது அந்த எழுபதாவது பிறந்தநாளையொட்டி மக்கள் திரள்திரளாகத் துயரேயுருவாய் வந்தவண்ணமிருந்தனர்.

அதுவே அவருடைய கடைசிப் பிறந்தநாள் என்பதைப் பெரும்பாலோர் உணர்ந்தனர். அன்றைய தினம் அனைவருக்கும் தரிசனம் தந்தார். அவரைத் துதித்துப் புதிதாய்ப் புனையப்பட்ட கீதங்களை செவிமடுத்தார். சிலவற்றைத் தாமே படித்துப் பார்த்தார். திருவண்ணாமலைப் பேராலயத்திலிருந்து இட்டு வந்த கோவில் யானை, ஸ்ரீபகவானின் முன்னிலையில் முன்னங்கால் மண்டியிட்டு, துதிக்கையால் அவரது பாதங்களைத் தொட்டது. வட இந்தியாவிலிருந்து வந்திருந்த ஓர் சமஸ்தான ராணி, அக்காட்சியைச் சலனப்படம் எடுக்க அனுமதிக்கப்பட்டார். அந்த ஜன்ம தினம் திருவிழாக் கோலம் பூண்டதெனினும், அதனூடே துயரார்ந்த பய உணர்வும் இழைந்தோடியது.

வாழ்நாள் இன்னும் சில தினங்கள் அல்லது வாரங்களே என்று அப்போதே பலர் நினைத்தனர். இனி நம்பிக்கைக்கு இடமில்லை என்ற நிலையில், மேலும் வேறு சிகிச்சை தொடர அவருக்கு விருப்பமான வைத்திய முறை என்ன என்று வினவினர். அதற்கு அவர், "எப்போதாவது எந்த சிகிச்சையாவது நான் விரும்பிக் கேட்டதுண்டா? அது இது என்று நீங்கள் எல்லோருமாக ஏதேதோ வைத்தியம் செய்வித்தீர்கள். என்னைக் கேட்டிருந்தால் நான் ஏற்கனவே சொன்னது போல் ஒரு சிகிச்சையும் தேவையில்லை என்றே கூறியிருப்பேன். நடப்பது அதன் வழியில் நடக்கட்டுமே?" என்றார்.

இதன்பிறகே ஹோமியோபதி முறையும் அதையடுத்து ஆயுர்வேத முறைப்படி சிகிச்சையும் கையாளப்பட்டன. ஆனால் காலம் கடந்துவிட்டதே?".

இனி உடல் தாளாது என்ற நிலை எட்டும் வரை ஸ்ரீபகவான் வழக்கம்போல் அன்றாட நடவடிக்கைகளில் ஈடுபடலானார். சூரியோதயத்திற்கு முன்பாகவே எழுந்து ஸ்நானம் செய்வார். காலையும் மாலையும் குறிப்பிட்ட

சில மணி நேரங்கள் தரிசனம் அளிக்கக் கூடத்தில் அமர்ந்திருப்பார். ஜனவரி மாதத்திற்குப் பிறகு உடல் மிகவும் பலவீனமடைந்து, கூடத்திலமர்ந்து தரிசனம் தர இயலாமற் போயிற்று. கூடத்திற்கு வெளியே கிழக்குப் புறம் சிறிய குளியலறையோடு கூடிய முகப்பு அறை ஒன்று கட்டப்பட்டது. தேக வாழ்வின் இறுதிக் காலம் வரை அவர் அங்கேயே இருந்து வந்தார். அச் சிறு அறைக்கு வெளியே ஓர் குறுகிய தாழ்வாரத்தில் அவரது மஞ்சம் வைக்கப்பட்டது. அவரது முற்றிய நோய் காரண மாய் அவரை தரிசிக்க விழைந்து திருவண்ணாமலைக் குத் தினந்தோறும் நூற்றுக் கணக்காய் வந்த வண்ணமிருந்த பக்தர்கள் அவரை அங்கே தரிசித்துப் போக முடிந்தது. பக்தர்கள் தம்மை தரிசிப்பதை யாரும் தடைசெய்யக் கூடாது என்று அவர் இறுதிவரை திட்டப்படுத்தினார். காலையிலும் மாலையிலும் பக்தர்கள் தரிசன கூடத்து வராந்தாவில் அவரை நோக்கி உட்கார்ந்திருந்தனர். பிற்பாடு, அவர் அவ்வாறு அந்த அறையின் வெளித் தாழ் வாரத்தில் உட்கார முடியாமல் மிகவும் நலிவுற்று அறையினுள் படுத்திருந்த நாட்களில், மக்கள் காலை யிலும் மாலையிலும் திறந்த அறைக் கதவிற்கருகே வரிசையாகச் சென்று தரிசனம் பெற்றனர். ஒருநாள் அவரது உடல்நிலை கவலைக்கிடமானபோது தரிசனம் நிறுத்தப்பட்டது. ஆனால் அதைக் கவனித்துணரும் நிலைக்குத் திரும்பியவுடன் அவர் அதிருப்தி தெரி வித்து, தரிசனம் திரும்பவும் தொடரப் பணித்தார்.

பக்தர் கோஷ்டியொன்று அவரது உடல்நலம் வேண்டி தினந்தோறும் பிரார்த்தனை நடத்திப் பக்திப் பாடல் களும் இசைத்துவந்தனர். அவற்றால் பயன் உண்டா என்று அவரைச் சிலர் கேட்டபோது அவர் முறுவலித்து, "நல்ல காரியங்களில் ஈடுபடுவது என்றும் நன்று. அவர்கள் தொடர்ந்து பாடி வரலாமே" என்றார்.

ஆறாத புண்ணுக்கு மேற்புறம் திரும்பவும் புற்றுக் கட்டி தோன்றி இடது தோளுக்கு அருகே பரவிற்று. உடலெங்கும் நச்சுத்தன்மை விரவி, கடும் ரத்த சோகை பீடித்தது. அந்நிலையில் வலி அதி பயங்கரம் என்று டாக்டர்கள் கூறினர். ஊட்ட உணவு ஏதும் உட்கொள்ள முடியாமற் போயிற்று. தூக்கத்தில் சிற்சில சமயம் அவரது முனகல் கேட்கும். இது தவிர உடல் வலியின் அறிகுறி வேறேதும் இருக்கவில்லை. அவ்வப்போது சென்னையிலிருந்து டாக்டர்கள் வந்து பார்த்தனர். அவர்களிடம் எப்போதும் போலவே அன்பு காட்டி உபசார வார்த்தைகள் கூறுவார். இறுதிவரை அவரது முதற் கேள்வி, 'உணவருந்தினீர்களா? ஆசிரமத்தில் அவர்கள் வசதிகள் சரிவர கவனித்துக் கொள்ளப் படுகின்றனவா' என்பதே.

கொடிய உபாதைதரும் நோயின் இடையிலும் அவரது நகைச்சுவை குறையவில்லை. புஜத்துக் கட்டிக்கும் தமக்கும் சம்பந்தம் ஏதும் இல்லாததுபோல அதைக்குறித்து கேலியாகப் பேசுவார். துயரம் தாங்க மாட்டாமல் ஒரு மாது அறைக்கருகிலிருந்த தூண்மீது மண்டையை திரும்பத்திரும்ப மோதிக் கொண்டபோது தலை நிமிர்ந்த ஸ்ரீபகவான் திடுக்கிட்டுச் சொன்னார். "அடடா! அவள் ஏதோ தேங்காய் உடைக்கிறாள் என்றல்லவா நினைத்தேன்?"

தம்மைப் பேணிவந்த தொண்டர்களிடமும், மருத்துவரும் பக்தருமான டாக்டர் டி.என். கிருஷ்ணஸ்வாமியுடனும் பேசிக்கொண்டிருக்கையில் இவ்வாறு விளக்கம் கூறினார். "உடல் வாழையிலை போன்றது. இலையில் விதவிதமாய் ருசியான உணவு பரிமாறுகிறார்கள். அவற்றை நாம் சாப்பிட்டு முடித்தபின் இலையைச் சுருட்டி பத்திரமாக வைத்துக் கொள்கிறோமா? அதன் உபயோகம்

தீர்ந்து விட்டதால் எச்சில் இலையைத் தூற எறிந்து விடுகிறோம் இல்லையா ?''

வேறொரு சமயம் தொண்டர்களிடம் சொன்னார். ''இப்போது எல்லாவற்றிற்குமே பிறர் உதவி தேவைப் படுகிற இந்த தேக பாரத்தை யார் சுமப்பார் ? நான்கு பேர் தூக்கிப் போக வேண்டிய இந்த பளுவை நான் இன்னமும் சுமந்துகொண்டே இருக்கவேண்டும் என்கி றீர்களா ?''

சில பக்தர்களிடம் இவ்வாறு உரைத்தார். ''நீங்கள் விறகுக் கிடங்கிற்குப்போய் ஒரு கட்டு விறகு வாங்கு கிறீர்கள். வீட்டிற்கு சுமந்துவர ஒரு கூலியாளை அமர்த் திக் கொள்கிறீர்கள். அவனோடு கூட நடந்து செல்லும் போது அவனோ உங்கள் வீடு எப்போது வரப்போகிறது, எப்போது தலைச்சுமையை இறக்கிப் போட்டு 'அப்பாடா' என்று திரும்பலாம் என்று ஆவலுடன் எதிர்நோக்கி யிருப்பான். அதே போலத்தான் ஞானியும் தன் பூத உடலைக்கிடத்திவிட ஆவலுள்ளவராக இருப்பார்.'' பின்னர் நிதானித்து, இந்த உவமையை திருத்திச் சொன்னார். ''இந்த விளக்கம் கூடியவரை சரிதான். ஆனாலும் ஊன்றிப் பார்த்தால் ரொம்பவும் பொருத்தமானது என்று கொள்ள முடியாது. உடலைக் கிடத்துவதற்குக்கூட ஞானி ஆவல் கொள்வதில்லை. ஞானிக்குக் கிட்டத்தட்ட உடற் பிரக்ஞையே இல்லை. உடல் வாழ்கிறதா வீழ்கிறதா என்பதைப் பற்றிக் கிஞ்சித்தும் அக்கறை அற்றவர்.''

யாரும் கேளாமலேயே ஒரு சமயம் மோட்சம் என்பதன் தாத்பரியத்தை ஒரு தொண்டரிடம் சுருங்கச் சொன் னார். ''மோட்சம் என்றால் என்ன தெரியுமோ ? உளதா இல்லாத துன்பத்தைத் தொலைத்து அனைத்தையும் கடந்து என்றும் நிலைத்து நிற்கும் மெய்யுணர்வை எட்டுதலே மோட்சம் ஆகும்.''

டாக்டர்கள் கைவிட்ட நிலையிலும், அவர் தமது மனோசக்தியால் பிணியை அகற்றிக் கொள்ளலாமே என்ற நம்பிக்கையைக் கைவிடுவது கடினம் அன்றோ? 'தங்கள் உடல் குணமாகவேண்டிய அவசியத்தைப்பற்றி தாங்களே ஒரே ஒரு க்ஷணம் எண்ணினால் அதுவே போதுமே இந்த நோய் மறைந்துவிட', என்று ஒரு பக்தர் மன்றாடினார். ஸ்ரீபகவானோ ஒரளவு இகழ்ச்சி கலந்த குரலில், "அம்மாதிரி யார் எண்ணக்கூடும்?" என்று பதிலளித்தார்.

இதே போன்று மற்றும் பலர், 'பிணி நீங்க அவரது விருப்பம் ஒன்றே போதுமே' என்ற போது, "அவ்வாறு விரும்புவதற்கு யார் இருக்கிறார்?" என்றார். விதி வழியை மாற்றுவதற்கான அந்த வேறு நபர் அவருள் ஏது? "உளதா இல்லாத துன்பத்தை" அவர்தாம் என்றோ தொலைத்துவிட்டாரே?

பக்தர்களில் சிலர் தங்கள் நலனுக்காகவேனும் அவர் வாழ்ந்து வர வேண்டும் என்று வாதித்தனர். பகவான் இல்லையேல் எங்கள் கதி என்னவாகும்? நாங்கள் எங்களைக் கவனித்துக்கொள்ளத் திராணியற்றவர்கள். எல்லாவற்றிற்கும் உங்கள் அருளையே நம்பியிருக்கிறோம்" என்றனர். அதற்கு அவர், "இந்த உடலுக்கு நீங்கள் அளவுக்கு மீறி முக்கியத்துவம் கொடுக்கிறீர்கள்" என்றார். உடல் மறைந்தாலும் அருளும் வழிகாட்டலும் தடைபடாது என்பதை இவ்வாறு சொல்லாமற் சொன்னார்.

இதே ரீதியில் அவர் பிறிதோர் சமயம் கூறினார்: "என்னைப் பிரிந்தாக வேண்டுமே என்று கலங்குகிறார்கள். நான் எங்கும் போகவில்லை. எங்கும் போக முடியாது. இங்கேதான் உளேன்."

பார்ஸி பக்தையான திருமதி தலியார்கான் அவரிடம், "இந்த நோயை எனக்குக் கொடுத்து விடுங்கள்.

நான் ஏற்றுக் கொள்கிறேன்" என இறைஞ்சினார். அதற்கு அவர் கேட்டார், "எனக்கு இதை யார் கொடுத்தது ?" என்று.

அப்படியென்றால் அவருக்கு அதை யார் கொடுத்ததோ ? நமது மொத்தத் தீவினையின் கொடுப்போ அது ?

ஸ்வீடன் நாட்டிலிருந்து வந்த ஒரு சாது ஓர் கனவு கண்டாராம். பகவானின் நோய் பீடித்த முழங்கை பிளந்து அதனுள் நரைதலைவிரிகோலமாய் ஓர் ஸ்திரீயின் சிரம் தென்பட்டதாம். தாயார் இறக்கும் தறுவாயில் ஸ்ரீபகவான் அவருக்கு மோட்சம் அளித்தபோது தாயின் கர்மாந்திரப் பலனை அவர் வாங்கிக் கொண்டதே அதன் பொருள் என்றனர் சிலர். வேறு சிலரோ அந்த நரைமாது மானிட குலம் முழுமையின், அல்லது மாயா தேவியின், சின்னமே என்றனர்.

ஏப்ரல் 13—ஆம்தேதி வியாழக்கிழமை. சுவாச கோசத்தில் ஏற்பட்ட அடைப்பை அப்போதைக்குத் தளர்த்துவதற்கான மருந்தைச் செலுத்த ஒரு டாக்டர் முன் வந்தார். ஆனால் ஸ்ரீபகவானோ தடுத்து மறுத்தார். "அது அவசியமில்லை. இரண்டு நாளில் எல்லாமே சரியாகிவிடும்" என்றார்.

அன்று இரவு தமது பணியாட்களிடம் தம்மைத் தனிமையில் விட்டுவிட்டு அவர்கள் உறங்கப் போய் விடலாம், அல்லது தியானம் செய்யலாம் என்று பணித்தார்.

மறுநாள் வெள்ளிக்கிழமை (14.4.1950). அதுவே அவரது இறுதி நாள் என்பதை டாக்டர்களும் பணியாட்களும் அறிவர். அன்று காலையில் அவர் பணியாட்களிடம் தம்மை விட்டு அகன்று தியானத்தில் ஈடுபடும்படி திரும்பவும் பணித்தார். நடுப்பகலில் நீரா

காரம் கொண்டுவரப்பட்டபோது அவர் கால அட்டவணையில் எப்போதுமுள்ள கருத்துடன், "இப்போது மணி என்ன ?" என வினவினார். பிறகு அதைத் தொடர்ந்து முணுமுணுத்தார். "ஆனால் இனிமேல் காலம் நேரம் எல்லாம் என்ன கணக்கு ?"

பணியாட்கள் கட்டிலைச் சூழ்ந்து நின்றிருந்தனர். ஆண்டாண்டுகளாக இடைவிடாது பணியாற்றிவரும் அத்தொண்டர்களின் சேவையை நளினமாய்ப் பாராட்டி மெலிதாய் மொழிந்தார்: "இங்கிலீஷ்காரர்கள் 'தாங்ஸ்' என்று சொல்லி நன்றி கூறுவார்கள். ஆனால் நாமோ 'சந்தோஷம்' என்றே சொல்வோம்."

அன்று காலையிலிருந்தே, காணவரும் ஜனத்திரள் திறந்த கதவருகில் வரிசை வரிசையாய் நிசப்தமாய் சோகத்துடன் நகர்ந்து சென்ற வண்ணம், அறையினுள் படுத்திருந்த ஸ்ரீபகவானின் இறுதி தரிசனம் கண்டு சென்றனர். திரும்பவும் பிற்பகல் நான்கு மணிமுதல் ஐந்து வரை இவ்வாறு தரிசனம் தொடர்ந்தது. அவர்கள் கண்ட பரிதாபத் தோற்றத்தை என்னவென்பது ? நோய் வதைத்துவிட்ட தேகம் சுருங்கி, விலா எலும்புகள் துருத்தி, தோல் கருகி, வேதனையின் சாயல் படர்ந்த உடலைக் கண்ணுற்று மனம் வெதும்பினர். இருந்தும், அந்தக் கடைசி நாட்களிலும் கூட சிற்சில சமயம் ஒவ்வொரு பக்தரும் பகவானின் நேர்முகமாய் ஒளிர்ந்து ஊடுருவும் பார்வையில் அடையாளம் காணப்பெற்று அந்தக் கண்வீச்சை நிரந்தர அருளொளியாய் ஏற்றுப் பிரியா விடைபெற்றனர்.

அன்று மாலை தரிசனம் முற்றுப்பெற்றபின் பக்தர்கள் தங்கள் இல்லம் திரும்பவில்லை. அச்சம் அவர்களை அங்கேயே இருத்திவிட்டது. சூரியன் மறையும் தருவாயில், ஸ்ரீபகவான் தம்மை உட்கார வைக்குமாறு பணியாட்களிடம் கூறினார். எந்த ஸ்பரிசமும்,

ஒவ்வொரு அசைவும் அவருக்கு மிக வேதனை தரும் என்பது அவர்களுக்கு முன்னமேயே தெரியும். ஆனால் அதைப் பற்றி அவர்கள் கவலைப்பட வேண்டாம் என்றார். பணியாட்களில் ஒருவர் அவரது தலையைத் தாங்கிப் பிடித்தபடி இருக்க, அவரை உட்கார வைத்தனர். ஒரு டாக்டர் பிராணவாயு செலுத்த முற்பட்டார். ஆனால் ஸ்ரீபகவானோ வலது கையசைத்து அவரை விலகச் செய்தார். அந்தச் சிறிய அறையில் டாக்டர்கள், தொண்டர்கள் உட்பட பத்து அல்லது பனிரெண்டு நபர்கள் இருந்தனர்.

இரு பணியாட்கள் அவர் இருபுறமும் நின்று விசிறிய வண்ணமிருந்தனர். வெளியே குழுமியிருந்த பக்தர்கள் செயலிழந்த நிலையில், ஜன்னல் வழியாகக் கண்கலங்கி உள்ளே உற்று நோக்கியிருந்தனர். விசிறிகளின் அசைவு, விசிற ஓர் உயிருள்ள தேகம் இன்னமும் இருக்கிறது என்பதன் அறிகுறியாக இருந்தது. சற்று வெளியே ஓர் பிரபல அமெரிக்க சஞ்சிகையின் நிருபர் நிலைகொள்ளாமல் குறுக்கும் நெடுக்குமாக அலைந்து கொண்டிருந்தார். தன்னையும் மீறி ஆழ்ந்த பாதிப்பினால் அவரால் அச்சமயம் ஏதும் செய்திக் குறிப்பு எழுத முடியவில்லை. திருவண்ணாமலையை விட்டு நகர்ந்து சாதாரண சூழ்நிலைக்குத் திரும்பினால்தான் தன்னால் எந்த நிகழ்ச்சி விவரமும் எழுத இயலும் என்று தீர்மானித்து விட்டார். அவருடன்கூட பிரான்ஸ் நாட்டிலிருந்து வந்த செய்திப் புகைப்படக்காரரும் இருந்தார்.

வெளித் தாழ்வாரத்தில் உட்கார்ந்திருந்த ஒரு பக்த கோஷ்டியினர் எதிர்பாராதவிதமாக "அருணாசல சிவ" பாடலை சேர்ந்து பாடத்தொடங்கினர். அதைச் செவிமடுத்ததும் ஸ்ரீபகவானின் இமைகள் விரிந்து கண்கள் பிரகாசமாயின. வருணிக்கவொண்ணா இன்கனிவு நிறைந்த சிறு புன்னகை உதட்டோரம் மலர்ந்தது. விழி ஓரங்

களில் ஆனந்தக் கண்ணீர்த் திவிலைகள் மல்கி உருண்டு விழுந்தன. இன்னுமொரு ஆழ்ந்த மூச்சு இழுத்தார். அதன்பின் சுவாசம் நின்றுவிட்டது. இரைப்போ, இழுப்போ, மரணத்தின் வேறு சின்னங்களோ இல்லை. அடுத்த மூச்சு எழவில்லை. அவ்வளவுதான்.

அடுத்த பல விநாடிகள் மக்கள் மனம் குழம்பி நின்றனர். "அருணாசல சிவ" கோஷ்டிப் பாடல் தொடர்ந்து ஒலித்தது. பிரஞ்சு செய்திப் புகைப்படக்காரர் என்னை அணுகி சரியாய் எந்த நிமிடம் மறைவு நிகழ்ந்தது என வினவினார். பத்திரிகையாளர்க்கே உரித்தான கல்நெஞ்சத்தைக் கண்டு வெகுண்ட நான் வேண்டா வெறுப்புடன், "எனக்கொன்றும் தெரியாது" என்று நறுக்கென பதிலளித்தேன். அடுத்த கணம், ஸ்ரீபகவான் தவறாது கடைபிடித்துவந்த பண்பு நயத்தை நினைவு கூர்ந்தேன். பிறகு சுதாரித்து, "துல்லியமாக 8.47–க்கு நிகழ்ந்தது" என்றேன். பிரஞ்சுக்காரர் பரபரத்துப்போனார். உடனே கிளர்ச்சியுடன் கூறினார். அவர் வெளிவீதியில் அண்ணாந்து குறுக்கும் நெடுக்குமாக நடந்து கொண்டிருந்தாராம். ஒரு பெரிய எரிநட்சத்திரம் தோன்றி வான வெளியின் குறுக்கே ஜோதியுடன் மெல்ல நகர்ந்து மறைந்ததாம். கைக் கடிகாரத்தைப் பார்த்தாராம். மணி 8.47.

மேலும் பலர் அதே காட்சியைக் கண்டனர். தொலைவிலுள்ள சென்னை நகரிலும் மற்ற இடங்களிலும் வானத்து எரிமீனைக் கவனித்த பலர் அது எதனை முன்னறிவிக்கிறது என்பதை அனுமானித்து விட்டனர்.

முதலில் ஏற்பட்ட உணர்வு மழுங்கிய தடுமாற்றத்தையடுத்து மனத்துயரம் பீறிட்டு எழுந்தது. சடலத்தை பத்மாசன அமர்வு பாணியில் வைத்து அறைக்கு வெளியே தூக்கி வந்து தாழ்வாரத்தில் இறுத்தினர். ஆண்களும் பெண்களும் தாழ்வாரத் தடுப்புவரை கூட்டங்

கூட்டமாய்க் காண விழைந்தனர். ஒரு மாது மூர்ச்சை யுற்றாள். மற்றவர்கள் விம்மி விம்மி அழுதனர்.

உடலுக்கு மாலை அணிவித்து, கூடத்தில் ஓர் சார் மணையில் வைத்தனர். பக்தர்கள் அங்கே கூட்டமாய் அதனைச் சூழ்ந்து நெருக்கியடித்து அமர்ந்தனர். யோக சமாதியில் நிலைத்தவர் போல முகம் கற்பாறையாக உறைந்திருக்கும் என்ற எதிர்பார்ப்புக்கு மாறாக, வேதனை தோய்ந்து வதங்கிய முகம் கண்ணுற்றோரின் நெஞ் சத்தை வாட்டியது. பின்னர் இரவு செல்லச் செல்லத் தான் மாற்றம்கண்டு முகத்தோற்றத்தில் சாந்தம் படர்ந்தது.

இரவு பூராவும் பக்தர்கள் கூடத்தில் உட்கார்ந் திருந்தனர். ஊர் ஜனங்கள் பக்திநிறைந்த நிசப்தத்துடன் தரிசித்துச் சென்றனர். மக்கள் கோஷ்டி கோஷ்டியாக "அருணாசல சிவ" பாடலை இசைத்துக்கொண்டே வந்து போயினர். கூடத்திலிருந்த சில பக்தர்கள் துதிப் பாக்களும் இரங்கற் பாடல்களையும் பாடிக் கொண் டிருந்தனர். அச்சூழ்நிலையில் துக்கத்தின் தீவிரம் மேலிட வில்லை; அதன் ஆழத்தில் இழைந்த வெறுமையையே உணர முடிந்தது. ஏனெனில் அங்கு குழுமியிருந்த ஆண் களுக்கும் பெண்களுக்கும் அவரது ஸ்தூல இருப்பும் அனுக்கிரகமுமே அன்றுவரை அவர்களுடைய வாழ்வின் அர்த்தமாக அமைந்திருந்தது. எனினும் அன்றிரவே சிறிதளவிலும், பின்னர் நாட்கள் செல்லச் செல்ல முழு அளவிலும் அவர் உதிர்த்துச் சென்ற சொற்களின் உயிர்த்தத்துவத்தை உணரலாயினர். "நான் எங்கு போக முடியும்? இங்கே தானே இருக்கிறேன்?" இதில் "இங்கே" என்ற சொல் ஓர் வரையறுத்த இடத்தை மட்டு குறிப்பிடுவதாக இல்லாமல் 'நான்' ஆகிய மெய்யுணர் வைக் குறிக்கிறது. அந்த ஆன்ம உணர்வோ, இடம் காலம் இரண்டையுமே தன்னுள் அடக்கியும் கடந்தும் நிற்பது. அதற்குப் போக்கும் வரவும் பிரிவும் ஏது? ஸ்ரீபகவானின்

இருப்பை பக்தர்கள் தம்முள் உணர்ந்த போதிலும், "இங்கேதானே இருக்கிறேன்" என்பதை அவரது அன்புக்கும் ஏகாந்தத் திற்கும் நிலைக்களனாக அமைந்த திருவண்ணாமலையே அவரது சாந்நித்திய க்ஷேத்திர மாகக் கொண்டனர்.

அன்று இரவு பூராவும் பக்தர்கள் கண்விழித்துக் குழுமியிருந்தபோது, மறுநாள் காலை எங்கு சமாதி இடுவது என்பதைப் பற்றியும் முடிவெடுக்க வேண்டி வந்தது. சடலத்தைப் புதிய கூடத்தில் சமாதி வைக் கலாம் என்று முதலில் எண்ணினர். ஆனால் பல பக்தர்கள் அதை ஆட்சேபித்தனர். அக்கூடம் ஒருவிதத்தில் அன்னை சமாதி ஆலயத்தின் இணைப்புக் கட்டடம் என்பதால், ஸ்ரீபகவானின் ஆலயம் அன்னையின் ஆலயத் திற்குக் கீழ்நிலைப்பட்டதாகத் தோன்றும் என்பதே எதிர்ப்புக்குக் காரணம். மறுநாள் அனைவரையும் கலந் தாலோசித்து முடிவு எடுக்கப்பட்டது. அதன்படி, பழைய கூடத்திற்கும் ஆலயத்திற்கும் இடையுள்ள பரப்பில் ஒரு குழி வெட்டப்பட்டு, சகல மரியாதைகளுடன் அதனுள் உடல் சமாதி வைக்கப்பட்டது. நிரம்பி வழிந்த மக்கள் திரள் துயர்தோய்ந்த நிசப்தத்துடன் நோக்கி நின்றனர்.

ஆசைமுகம் மறைந்துவிட்டது. அவரது குரல் இனி ஒலிக்காது. சமாதிமீது பிரதிஷ்டை செய்யப்பட்ட சிவ லிங்கமே இனி ஸ்ரீபகவானின் வெளிமுக உருவம். அன்பர் களின் இதயத்தில் பதிந்துவிட்ட அவரது திருவடிச் சுவடுகளே உள்–முகம்.

# 18. பிரசன்னம் தொடருகிறது

ஜனத்திரள் கலைந்தது. அவரவர் திரும்பிச் செல்லலாயினர். கணப்புச் சட்டியில் தணல் அவிந்து நீறு பூத்தாற்போல, ஸ்ரீபகவான் அற்ற ஆசிரமம் அனாதையாயிற்று. இருந்தும், ஒரு ஞானாசிரியர் மறைவையடுத்து எழும் கட்டுமீறிய துயரமோ ஏக்கமோ அங்கு இல்லை. அகண்ட கருணையுடனும் ஸ்ரீபகவான் தமது பக்தர்களை இவ்வாறு சஞ்சலமற்ற சமனநிலையில் இழைந்துவர முன்னமேயே தயார் செய்துள்ளார் என்பது தெளிவாயிற்று. ஆனாலும், இழப்பு நேர்ந்த சில நாட்களிலேயே பலர் திருவண்ணாமலையை விட்டுப் போயினர். அடுத்த சில வாரங்களுக்குள் பக்தர்கள் எவருக்கும் அவ்வூரில் தங்கியிருக்க மனமில்லை. தங்கிவிட விரும்பியவர்களும் அவ்வாறு இருந்துவர இயலாமற்போயிற்று.

சிலர் தங்கள் ஈடுபாட்டை செயல்முறையில் காட்ட விழைந்தனர். ஆசிரமத்தை இனி நிர்வகித்துவர ஒரு குழு அமைத்தனர். நிரஞ்சனாநந்தஸ்வாமி அவர்களோடு ஒத்துழைக்க முன்வந்தார். அவர் குழுவின் நிரந்தரத் தலைவராக இருந்துவர குழுவினரும் சம்மதித்தனர். மற்ற பக்தர்கள் அவரவர் வசித்து வந்த நகர்களில் சபைகள் அல்லது சத்சங்கங்கள் அமைத்துக் கொண்டு குறிப்பிட்ட நாட்களில் கூடிப்பேசிப் பிரார்த்தனை நடத்தலாயினர்.

தொல்லை கொடுக்கவும், தம்மை உயர்த்திக் கொள்ளவும் முனைந்த சிலர் இல்லாமற் போகவில்லை என்பது வருந்தத்தக்கதே. எங்குமே ஓர் ஞான ஆசான் தேகவியோகமானபின் அவரைச் சார்ந்தோர் பலர் உட்பூசலில் இறங்குவதுண்டு. ஆனால், ரமணாச்ரமத்தைப் பொருத்தவரை இவை மிகச் சிறிய அளவிலேயே தலைகாட்டின.

பெரும்பாலான பக்தர்கள் நிலைமாறாமல் நேர்மையைக் கடைபிடித்தனர்.

வருங்காலத்தில் ஸ்ரீபகவான் பூதவுடலைவிட்டுப் பிரிந்த பின் ஆசிரமத்தை எவ்வாறு நிர்வகிப்பது என்பதை வரையறுத்துப் பல ஆண்டுகளுக்கு முன்னரே (1938–இல்) ஓர் உயில் ஆவணம் தயார்செய்யப்பட்டது. அணுக்க பக்தர்கள் சிலர் அதனை ஸ்ரீபகவானிடம் எடுத்துச் சென்று படித்துக்காட்டினர். அவரும் அதை மிகக் கவனமாய்ப் படித்துப்பார்த்துத் தமது சம்மதத்தைத் தெரிவித்தார். அதன்பின் அங்கிருந்தோர் உயிலில் சாட்சிக் கையெழுத்திட்டனர். அப்பத்திரத்தின் வாசகச் சுருக்கம் இதுதான்: '(1) தமது மறைவுக்குப்பிறகு பூஜை, நிவேதனம் முதலிய வழிபாடுகள் அவரது சமாதிக்கும் அன்னையின் சமாதிக்கும் தொடர்ந்து சரிவர நடைபெற வேண்டும்; (2) மானேஜர் நிரஞ்சனாநந்த ஸ்வாமியும், அவரது மகனும் குடும்பத்தினரும் ஆசிரம வருவாயில் பராமரிக்கப்பட்டு வர வேண்டும்; (தவிர, ஆசிரம நிர்வாகத் தனியுரிமை இக்குடும்பத்தின் பாரம்பரிய உரிமையாகத் தொடரும்); (3) ஸ்ரீரமணாச்சிரமம் ஓர் ஆன்மீக மையமாக தொடர்ந்து திகழ வேண்டும்.' பின்னர் உயிலை வேறு விதமாக மாற்றியமைக்க முயற்சிகள் நடந்தன. ஆனால் ஸ்ரீ பகவான் அவற்றை ஒருபோதும் ஒப்பவில்லை.

உயிலின் மூன்றாவது ஷரத்தே அவர் நமக்கு விட்டுச் சென்ற மேன்மையான ஆன்மீகச் செல்வமும், அதற்கான நமது கடமைப் பொறுப்புகளும் ஆகும். அதன் பிரகாரம் பக்தர்கள் தங்கள் சக்திக்கும் சுபாவத்திற்கும் ஏற்றவாறு இப் பணியில் பங்கேற்று வருகிறார்கள். சிலர் ஆசிரம கூடத்தில் மௌனமாக தியானம் செய்வதைத் தவிர வேறேதும் மேற்கொள்வதில்லை. வேறு சிலர் தங்களால் இயன்ற போதெல்லாம் ஆசிரமத்திற்கு வந்து

போகிறார்கள்; பக்திப் பெருக்கையும் இதயபூர்வமான நன்றிக் கடனையும் செலுத்திச் செல்கின்றனர். "மணிக் கணக்காகச் சொற்பொழிவுகள் ஆற்றிப் பொழுதைப் போக்கி மகிழ்ச்சி கொள்ளலாமே தவிர அவை தனி நபர்களின் ஆன்மீக மேம்பாட்டிற்கு உதவாது; மாறாக, மௌனமாக இருத்தலே சாலச் சிறந்தது.; மௌனத் தியானம் சுற்றுச்சூழலை, மனித குலத்தை சீராக்கும்" என்று வலியுறுத்தும் ஸ்ரீரமண சீடர்களும் உண்டு. அத்தகையோரின் மௌன ஆன்ம ஸ்மரணை ஸ்ரீபகவா னுடைய அமைதி ஆற்றலுக்கு எவ்விதத்திலும் ஈடாகாது என்றாலும், தியானத்தின் மூலம் ஞானாசிரியரின் அருள் பிரதிபலித்துப் பலன் அளிக்கவல்லது என்பது என் னவோ உண்மைதான். பலர் ஒன்றுகூடி வழிபடுவதால் அல்லது தியானிப்பதால் அதன் பலன் பன்மடங்காகிறது.

வேறு பலர் பேச்சாலும் எழுத்தாலும் மற்றவர் களின் கவனத்தை ஸ்ரீரமண வழியில் ஈர்க்கிறார்கள். அவ்வாறான ஈர்ப்பு, நாளாவட்டத்தில் மேன்மேலும் ஆழ்ந்த ஈடுபாட்டிற்கு வழிகோலும்.

வெளிச் செயல் வடிவுகளில் நாட்டமுள்ளவர்கள் நிர்வாகப் பொறுப்பேற்றுத் திட்டங்கள் தீட்டி செயல் படுத்த முனைகின்றனர். இத்தகைய செயல்முறையும் ஸ்ரீ பகவானுக்குப் பிடித்தமான சாதனையே ஆகும். ஆலயத் திற்கும் பழைய கூடத்திற்கும் இடையே லிங்கப் பிரதிஷ்டை செய்யப்பட்ட எளிய கற் சமாதி மட்டுமே கீற்றுக் கூரையடியில் உள்ளது. மிக விசாலமான தியானக் கூடம் எழுப்பத் திட்டங்கள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.[1]

ஆசிரம வளாகமெங்கும் அவரது பிரசன்னத்தை உணரமுடிகிறது. சூழ்நிலையைச் சார்ந்து மாற்றங்களும்

1. சமாதிக்கு விமானமாக மணிமண்டபமும், பெரிய தியானக் கூடமும் கட்டப்பட்டு விட்டன – விபரம் 211-ஆம் பக்கத்துக் கீழ்க் குறிப்பில் காண்க.

தோன்றுகின்றன. அவர் ஜீவிதமாக இருந்துவந்தபோது காலையிலும் மாலையிலும் அவரது முன்னிலையில் வேத பாராயணம் நடந்ததுபோலவே இப்போதும் சமாதிக்கு அருகில் அதே நேரங்களில் வேதம் ஓதப்படுகிறது. முன்போலவே பக்தர்கள் அங்கே தியான நிலையில் அமர்ந்திருக்கின்றனர். அதே போன்ற அமைதியின் ஆற்றலையும் நுண்ணிய வழிகாட்டலையும் உள்ளூர உணருகிறார்கள். வேதபாராயணத்தின்போது சமாதிக்கு பூஜை நடைபெறுகிறது. ஸ்ரீபகவானின் 108 நாமாவளிகள் உச்சரிக்கப்படுகின்றன. ஆனாலும், அவர் ஆண்டாண்டு காலமாக அலங்கரித்த பழைய சிறுகூடத்திலேதான் சூழ்நிலை இன்றும் மிக இதமாய், ரம்மியமாய் மனத்தை நெகிழ்விக்கிறது. மகாசமாதி (14.4.1950)க்குச் சில மாதங்களுக்குப்பின் ஏற்பட்ட தீ விபத்தால் பழைய கூடத்திற்குச் சேதம் ஏற்பட்டது. நல்ல காலமாக அழிந்து போகவில்லை.

ஸ்ரீபகவான் கடைசி நாட்களில் கடைசி நிமிடம் வரை இருந்துவந்த சிறு அறையும் உள்ளது. அதனுள் மாட்டப்பட்டிருக்கும் அவரது பெரிய திருவுருவப்படம் பக்தர்களின் பிரார்த்தனைகளுக்கு ஜீவகளையுடன் செவி சாய்ப்பது போன்று தோற்றமளிக்கிறது. ஸ்ரீபகவான் உபயோகித்து வந்த பல பொருட்கள் இந்த அறையில் வைக்கப்பட்டுள்ளன – அவரது கைத்தடி, ஜலபாத்திரம், மயிலிறகு – விசிறி, சுழலும் புத்தக அடுக்குப் பெட்டி, மற்றும் சில சிறு பொருட்கள். வெறுமையாய் போய்விட்ட அவரது மஞ்சமும் அங்கேதான். அந்த அறையினுள் நோக்கும்போது நம்முள் ஏதோ சொரேலெனக் பாய்ந்து கிளறுகிறது. அதே சமயம் வார்த்தைகளால் விவரிக்கவொண்ணாத கனிவார்ந்த கருணையின் மென்மையும் இதமாய் நம்மை ஊடுருவுகிறது.

புதிய கூடத்தில் ஸ்ரீபகவானின் சிலை நிறுவப்பட்டுள்ளது. ஒரு சிலை எழுப்ப வேண்டும் என்பது உயிலின் ஓர் நிபந்தனை. ஆனால் உருவச் சிலையை உருவாக்கவல்ல சிற்பி இதுவரை கிடைக்கவில்லை.[1] ஏதோ ஒரு மனிதனின் முக லட்சணங்களை அப்படியே சிலையில் வடிப்பது இங்கு செல்லுமா ? தெய்வீகக்களை கமழும் சுந்தர புருஷனை சிலையுருவில் கண்முன் நிறுத்த, அதை வடிக்கும் சிற்பியும் ஸ்ரீபகவானின் ஆற்றலை ஏற்று அவரது புதிர்நிலை மெய்ம்மையையும் உள்ளார்ந்து உணரத்தக்கவராக இருக்க வேண்டுமே ?

ஆசிரமத்துப் பரப்பு மட்டுமே பவித்திர பூமியாயிற்று என்று கொள்ளலாகாது. அதன் சுற்று வட்டாரமும் புனிதத் தூய்மையில் துய்த்து வருகிறது. அங்கெங்கும் நிலவி வருவது செயலற்ற அமைதி அல்ல; மாறாக, சாந்தியின் சிலிர்ப்பூட்டும் பூரிப்பு. வீசும் காற்றினிலே தெய்வீகப் பிரசன்னத்தின் பரிணாமம் பரிமளிக்கிறது.

அவரது சன்னிதிச் சிறப்பு திருவண்ணாமலையோடு நின்றுவிடவில்லை என்பதும் உண்மையே. பக்தர்கள் எங்கிருப்பினும் அவரது அகண்ட கருணையும் உறுதுணையும் இதய குரு எனும் உணர்வாய் ஒளிர்வதை முன்னைக் காட்டிலும் அதிக ஆற்றல் மிக்கதாய் அறிகின்றனர். இருந்த போதிலும், திருவண்ணாமலை வந்து போவதிலுள்ள ஆறுதல் ஒவ்வொருவரின் உள்ளத்தும் உறைந்துள்ளது.

உலகில் திரும்பவும் தோன்றித் தமது அடியார்களின் வாழ்விலும் சாவிலும் வழிகாட்டி வரப் போவதாக அறிவித்து மறைந்த புனிதர் பலர் இருந்திருக்கிறார்கள். ஆனால் ஸ்ரீபகவானோ ஓர் முழுமையான ஞானச் செம்மல். மறுபிறவி எடுப்பதாகக் கோடிகாட்டுவதற்கான அகந்தையின் சாயல் அறவே அற்றவர். அதனை

1. மணிமண்டபத்தில் வெண்கலச் சிலை நிறுவப்பட்டுவிட்டது.

பக்தர்களும் நன்று அறிவர். அவர் வாக்களித்துச் சென் றது வேறானது: "நான் எங்கும் போகவில்லை. எங்கும் போகமுடியாது. இங்கேதான் உள்ளேன்." 'இங்கேதான் இருந்து வருவேன்' என்று கூறாமல் 'இங்கேதான் இருக் கிறேன்' என்றாரே! ஏனெனில், ஞானிக்கு மாற்றம் ஏதுமே கிடையாது. இடம் காலம் இல்லை. இறந்த காலமும் எதிர்காலமும் ஒன்றே. அவருக்குப் போக்கும், வரவும், புணர்வும், பிரிவும் ஏது? காலச் சக்கரத்தைக் கடந்து நின்று, ஆதிஅந்தமற்றப் பிரபஞ்சப் பேருணர் வின் நித்திய சாட்சாத்காரத்தில் நிலைத்தவர் அன்றோ அவர்? தொடர்ந்து இடையறாது பிரசன்னமாயிருந்து வருவதாகவே அவர் உறுதியளித்தார். முன்பு எப் போதோ சிவப்பிரகாசம் பிள்ளையிடம், "குருவின் அருளைப் பெற்றவர் சந்தேகமின்றி இரட்சிக்கப் படுவார். ஒரு போதும் கைவிடப்படார்" என்று கூறியுள்ளாரே? கடைசிப் பிணி காலத்தில் அவர் தங்களைவிட்டுப் போய் விடப் போவதாக பக்தர்கள் பரிதவித்துப் பலவீனத்தை ஒப்புக் கொண்டு, அவர்களுக்காகவேனும் ஸ்ரீபகவான் தொடர்ந்து இருந்துவர வேண்டும் என மன்றாடிய போது அவர், "இந்த உடலுக்கு அளவுக்கு மீறி முக்கியத்துவம் கொடுக் கிறீர்கள்" என்று சொன்னதை முன்பே குறிப்பிட்டுள்ளோம்.

இவ்வாக்கில் பொதிந்துள்ள உண்மை, பக்தர் களுக்கு அதிவிரைவில் உதித்தது. முன்னைக்காட்டிலும் இப்போது அவர் 'உள்ளிருக்கும் குரு' வாகச் சமைந்துள் ளார். அவரை நாடி நிற்போர் இப்போது அவரது வழிகாட்டலை செயல்வடிவில் மேலும் ஆற்றல் மிக்க தாக உணருகிறார்கள். பக்தர்கள் அவரை இடைவிடாது சிந்திக்கிறார்கள். உள்ளிருக்கும் குருவிடம் இட்டுச்செல் லுகிற ஆன்மவிசாரம் மேன்மேலும் சுலபமாகி, ஆன்மா னுபாவம் விரைவில் கிடைக்கத்தக்கதாகி விட்டது. செயல் விளைவுகள் தாமதமின்றி செறிவுமிக்கதாய் அமைகின்றன.

பறிகொடுத்த அதிர்ச்சியினின்றும் மீண்டபின் பக்தர்கள் பலர் திரும்பவும் திருவண்ணாமலையால் ஈர்க்கப் படலாயினர். உண்முக மனப்பான்மை கொண்டவர்கள் மட்டுமே அவ்விடத்தே ஸ்ரீபகவானின் நித்திய இருப்பை உணர்ந்தார்கள் என்றில்லை. ஸ்ரீபகவானுடன் அத்தியந்த அன்பாலும் பக்தியாலும் மட்டுமே பிணைபட்டிருந்ததாக எண்ணியிருந்த டாக்டர் டி.என். கிருஷ்ணஸ்வாமி, பகவானின் மகாசமாதிக்குப்பிறகு மனமொடிந்து, "என்னைப் போன்றவர்களுக்கு இனி எல்லாமே முடிந்துவிட்டது" என்று பிரலாபித்தார். சில மாதங்களுக்குப் பின் திருவண்ணாமலை திரும்பிவந்த அவர், "இப்போது இங்கே நிலவும் சாந்தியும் ரம்மியமும் பழைய நாட்களிலேகூட இவ்வளவு தீவிரமாக இருந்ததில்லை" என்று வியந்தார். உண்முக நோக்குடையோரே அவர் உள்ளிருந்து வழிகாட்டுவதை உணர்ந்தனர் என்றும் சொல்லலாகாது. அவரை எவர் நினைக்கினும் வழி பிறக்கும்.

ஸ்ரீரமண பக்தர்கள் ஓர் பெரிய குடும்பத்தினர்போல ஒருமித்தவர்கள். இப்போது அவர்களிடையே தோழமை தீவிரமாகப் பெருகியது. பழைய கூடத்தில் அடிக்கடி கூடி ஸ்ரீபகவானின் போதனைகளைக் குறித்து உரையாடினர். பழைய அனுபவங்களைப் பகிர்ந்து கொண்டனர். ஸ்ரீபகவான் அவ்வப்போது அவர்களுக்குக் கூறிய வாக்குகளை வெளிப்படுத்தினர். முன்பெல்லாம் அவை பற்றி யாரும் வெளிப்படையாகப் பேசுவது கிடையாது.

அருணாசலக் குன்றின் மறை மகிமை மேன்மேலும் விளங்கியது. முன்பு பலர் அதன் ஆற்றலை எவ்விதத்திலும் ஏற்கவில்லை. 'என்ன, வெறும் கற்குன்று. பாறையும் மண்ணும் புதர்களும் மண்டிய எல்லாக் குன்றுகளையும் போலவே இதுவும் ஒன்று' என்று எண்ணியிருந்தனர். சென்ற அத்தியாயங்களில் குறிப்பிட்ட பக்தை திருமதி தலியார்கான் ஒருசமயம் தனது விருந்தினர்

ஒருவருடன் குன்றின் உயர்ச்சரிவில் உட்கார்ந்து ஸ்ரீ பகவானைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தார். அப்போது திருமதி தலியார்கான், "நடமாடும் தெய்வமன்றோ ஸ்ரீ பகவான்? எங்கள் பிரார்த்தனை அனைத்தையும் நிறை வேற்றுகிறார். இதுவே என் சொந்த அனுபவம். ஆனால் இந்தக் குன்று ஆண்டவனின் திருவுருவே என்றும் பகவான் சொல்கிறார். அதுதான் எனக்குப் புரியவில்லை. ஆனாலும் அவரே அப்படிச் சொல்லும்போது நானும் நம்பத்தான் வேண்டியிருக்கிறது" என்றார். வந்திருந்த நண்பர் ஓர் முஸ்லிம். ராஜரீக பாரசீகக் கலாச்சார மரபுகள் இழையோடியவர். அவர் சொன்னார்: "பாரசீ கத்தில் ஓர் புராதன நம்பிக்கை உண்டு. அதாவது, 'ஒன்றைக் கூறியவுடன் திடீரென்று மழை பெய்தால், கூறியது சத்தியம்' என்பார்கள். இப்போது மட்டும் மழை வந்தால் இந்த மலை கடவுளின் உரு என்பதற்கான அறிகுறி என ஏற்றுக்கொள்வேன்" என்றார். சற்று விளையாட்டும் வினையுமாக சொல்லிமுடித்ததுதான் தாமதம், திடுதிப்பென வானம் கருத்து பாட்டமழை கொட்டியது. இருவரும் சொட்டச் சொட்ட நனைந்து இறங்கி வந்து நடந்த கதையைச் சொன்னார்கள்.

அருணாசலக் குன்று நினைத்ததை நிறைவேற்றும் என்ற ஐதிகம் உண்டு. காலங்காலமாக யாத்திரிகர்கள் வரம் வேண்டி அதனை வலம் வந்துள்ளனர். ஆயினும், ஆழ்ந்த மனச் சாந்தியை விரும்பி அவ்விடத்தே வரு வோர்கள் வேறெதும் வேண்டுவதில்லை. அருணாசல வழிபாடு, கருணைக் கடலாம் அருணை அண்ணல் ஸ்ரீ பகவான் ரமணரின் வழிபாடேயன்றி வேறல்ல. அங்கு வேண்டுமெனப் பிரார்த்திக்க வேறேதும் உண்டோ? வேண்டா நிலையை வேண்டி நிற்போர் அங்கே முழு நிறைவு காண்கின்றனர். இதனையே ஸ்ரீபகவான் தாம் அருளிய அருணாசல அஷ்டகம் மூன்றாவது பாடலில் விளக்குகிறார்:

**நின்னையா னுருவென வெண்ணியே நண்ண**
**நிலமிசை மலையெனு நிலையினை நீதா**
**னுன்னுரு வருவென வுன்னிடின் விண்ணோக்**
**குறவுல கலைதரு மொருவனை யொக்கு**
**முன்னுரு வுனலற வுன்னிட முந்நீ**
**ருறுசருக் கரையுரு வெனவுரு வோயு**
**மென்னையா னறிவுற வென்னுரு வேறே**
**திருந்தனை யருணவான் கிரியென விருந்தோய்.**

*[பொருள்: அருணாசலா, உன்னை நான் உருவமாக எண்ணி அணுகும்போது நீ இம் மலை வடிவமாக எனக்கு விளங்கு கின்றாய், உன்னை அருவமாகக் காண விரும்புவோர் அருவத்தி யானம் செய்ய ஆரம்பிப்பதும்கூட பயனற்ற பிரயாசையாகவே முடியும்; அவ்வாறு உனது அருவ அனுபவம் பெற வேண்டுமாயின் ஒருவன் (தனக்கோ உனக்கோ) எவ்வித நாமரூப நினைவுகளுக்கும் (நாம-ரூபங்கள் வெறும் நினைவுகளே யாவதால்) இடங் கொடாமல் தன்னை விசாரிக்கும் போது, 'நான்' என்று கிளம்பி வழிபாடு செய்ய முனையும் அகந்தை, சமுத்திரத்தில் இடப்பட்ட சர்க்கரை பொம்மையின் உருவத்தைப்போல உருவழிந்து உன்னி டம் நாமரூபமற்று ஏகமாய்க் கரைந்து ஒய்ந்துவிடும்.]*

முன்பு ஸ்ரீபகவான் உடலுருவில் ஜீவித்திருந்தபோது திருவண்ணாமலைக்குச் சென்று அந்த திவ்ய வடிவைக் காணக் கிடைக்கப் பெற்ற பாக்கியவான்கள் மட்டுமே அந்தச் க்ஷேத்திரத்தின் ஈர்ப்பை உணருகிறார்கள் என்ப தில்லை. அத்தகையோர் கிடைப்பதற்கரிய பேறுபெற்ற வர்கள்தாம். ஆனாலும், பார்த்திராத ஏனையோரும் அதேபோல அருணாசலத்தால் ஒருங்கே கவரப்படுகிறார் கள். இதற்கான இரு நிகழ்ச்சிகளை மட்டுமே இங்கு கூறினால் போதுமானது. மிஸ். ஹோவஸ் (Miss Howes) என்ற ஆங்கில மாது, பால்பிரண்டன் எழுதிய "ரகசிய இந்தியாவில் ஒரு தேடல்" (A Search in Secret India) புத்தகத்தைப் படித்தபின், எப்படியாவது இந்தியாவுக்குச் சென்று ஸ்ரீ பகவானை தரிசிக்கப் பேரவாக் கொண் டார். ஆனால் சந்தர்ப்பம் வரவில்லை. இந்தியா சென்று

வரக் கையில் பணமில்லை. பதினான்கு வருடங்கள் காத்திருக்க நேர்ந்தது. கடைசியில் தன் வேலையை ராஜீனாமா செய்துவிட்டு உடைமைகளை விற்றுப் பணம் புரட்டி இந்தியாவுக்குப் பயணமானார். அவ்வமயம் ஸ்ரீபகவான் மகாசமாதி அடைந்துவிட்டார். திருவண்ணா மலை வந்துசேர்ந்த மிஸ்.ஹோவஸ் ஆசிரமத்தில் ஒரு சில வாரம் தங்கினார். அவ்விடத்தே வடிவற்ற ஸ்ரீபகவானின் அருட்பாலிப்பை உணர்ந்து சிலிர்த்த அவர் சொன்னார்: "மகரிஷி மறைந்துவிட்டார் என்று தெரிந்ததும் நான் ஏமாற்றம் அடைவேன் என்றே எண்ணினேன். ஆனால் என் மனமோ மாறியது. திருவண்ணாமலையில் நான் தங்கியிருந்த ஒவ்வொரு கணமும் பெருமதிப்புள்ள பொக்கிஷம் என்றே கருதுகிறேன். இங்கு மறுபடியும் வரும் நாளை எதிர்நோக்குகிறேன்."

அவர் திரும்பிவருவது பகவான் கையில் அல்லவா இருக்கிறது ? முன்போலவே தமது விருப்பப்படி எவரையும் எவ்வாறேனும் திருவண்ணாமலைக்குத் தருவித்துக் கொள்ளத்தான் செய்வார். இங்கிலாந்து திரும்பிய மிஸ். ஹோவஸ் வேறு வேலை கிடைக்கும் என்று எதிர் பார்த்திருந்தார். ஆனால் கிடைக்கவில்லை. வாரங்கள் உருண்டோடின. தகுந்த வேலை ஏதும் வாய்க்கவில்லை. அப்புறம் ஒருநாள் எங்கோ நல்ல வேலை காலியாக இருப்பதாக அறிந்து விண்ணப்பித்தார். நேர்முகத் தேர்வு முடிந்தவுடனேயே அவரிடம், "உங்களைத் தேர்ந்தெடுத்து விட்டோம். உடனடியாய் சேரலாம். ஆனால் ஒரு நிபந்தனை. ஏற்கவேண்டிய பணி இந்தியாவில் உள்ளது. சம்மதமா ?" என்று கூறினர். திரும்பவும் திருவண்ணா மலை வந்து போவது எதிர்பாராதவிதமாய் எளிதாயிற்று.

டாக்டர் டி.டி. ஆசார்யா என்பவர் மத்திய இந்தியாவில் நெடுங்காலம் மருத்துவத்தொழிலில் வெற்றி

கரமாக ஈடுபட்டுவந்து பின்னர் ஓய்வு பெற்றார். எஞ்சிய காலத்தை ஆன்மீக நாட்டத்தில் அர்ப்பணிக்கத் தீர்மானித்தார். இந்தியா முழுவதும் பயணித்து, ஒன்றன்பின் ஒன்றாக வெவ்வேறு கோயில்களுக்கும் ஆசிரமங்களுக்கும் சென்றுவந்தார். எங்கு சென்றாலும் அவர் தேடிய சாந்தி கிடைக்கப்பெறவில்லை. திருவண்ணாமலைக்கு வந்தபோது தான் "ஓ, இதுவன்றோ நான் தேடியலைந்த இல்லம்!" என்று உணர்ந்தார். ரமணாச்சிரமத்து மருத்துவராகப் பணி ஏற்று அங்கேயே தங்கிவிட்டார்.

சில காலம் சென்றபின் வேறு சிலரைப் போலவே இவரும் தன்னிடம் மாற்றம் ஏதும் உணராது மனம் சோர்ந்தார். ஸ்ரீபகவானின் சமாதிக்கு முன் கண்கலங்கி நின்று, "ஹே பகவான்! என்னை எதற்காக இங்கு கொண்டுவந்து சேர்த்துள்ளீர்கள்? நான் நாடி வந்த சாந்தியை, ஆன்மீக முன்னேற்றத்தைத் தாங்கள் இன்னமும் வழங்கவில்லையே" எனக் கண்ணீர் உகுத்தார்.

அன்றிரவே ஆசார்யா ஓர் கனவு கண்டார். ஸ்ரீ பகவான் இவருடைய கட்டிலில் அமர்ந்திருக்க, இவர் பக்தி வியப்புடன் நெருங்கி அவர்முன் மண்டியிட்டுத் தலை குனிந்து வணங்கினாராம். ஸ்ரீபகவான் அவரைத் தொட்டுத் தலைநிமிர்த்தித் துயரம் எதற்கோ என வினவினாராம். ஆசார்யாவின் முறையீட்டை செவி மடுத்தபின் அவரை ஆசுவசித்தாராம்: "நீர் முன்னேறவில்லை என்பது மெய்யன்று. முன்னேற்றம் ஏற்பட்டுள்ளதா இல்லையா என்பதை நான் அறிவேன். நீவிர் அறியமாட்டீர்" என்று கனிவுடன் கூறினாராம். வாழ்நாளில் பல பக்தர்களுக்குப் பகன்ற அதே விடை அல்லவா அது?

"ஆனால் நான் இப்போதே என் வாழ்நாளிலேயே மெய்ஞானம் பெறத் துடிக்கிறேன். நான் ஏன் காத்தி

ருக்க வேண்டும்? தாமதம் ஏனோ?'' என்று ஆசார்யா புலம்பி மன்றாடினாராம்.

ஸ்ரீபகவான் சிரித்து, "அது உன் பிராரப்தம்'' என்று கூறி மறைந்தாராம்.

ஸ்ரீபகவானைப் பார்த்தே இராத ஒருவர் கண்ட இக்கனவில் பகவான் பொதுவாகக் கூறக் கூடிய விடை-யையே கனவுருவில் அளிக்கப்பெற்றார். முன்போலவே இப்போதும் அவர் மொழிந்த வார்த்தைகள் மட்டுமே நம்பிக்கை அளிக்கவல்லது என்பது ஒருபுறமிக்க, வருணனைக்கு அப்பாற்பட்ட அவரது மனோகரப் பிரசன்னமும் கடாக்ஷமுமே சாந்தியளிக்க வல்லவை.

மற்றவர்களும் வந்துகொண்டே இருப்பார்கள். ஆனந்தமயி என்கிற பிரசித்திபெற்ற வடஇந்திய யோகினி ஆசிரமத்திற்கு வருகை தந்தார். பகவான் சமாதியருகில் அவருக்காகப் போடப்பட்ட விசேஷ இருக்கையில் உட்கார மறுத்துவிட்டார். "இந்த சலுகையெல்லாம் எனக்கெதற்கு? நானோ எனது தந்தைக்கு அஞ்சலி செலுத்த வந்துள்ளேன். எல்லோருடனும் நானும் தரையில் அமர்ந்து கொள்வேன்'' என்றார். இன்னொரு சமயம், ஒரு தென்னிந்திய மாதாதேவியிடம் திருமதி தலியார்கான், தேவியாரும் அவரைப் போன்ற மகான்களும் இப்போது உடலுருவில் வளையவந்து கொண்டிருப்பதைப் பற்றிக் கேட்டபோது, தேவிமாதா, "ஸ்ரீபகவான் பகலவன். நித்தியம் பிரகாசித்துவருபவர். நாங்களோ அவரது கிரணங்கள் மட்டுமே'' என்றார்.

வரலாறு இத்துடன் முற்றுப்பெற்றதாகாது. ஏசுநாதரை சிலுவையில் அறைந்ததோடு அவர் கதை முடிவுறவில்லை அல்லவா? ஸ்ரீபகவான் உலகுக்கு வழங்கியுள்ளது ஓர் புதிய சமயம் அன்று. ஆன்மீகம் மங்கி அஞ்ஞான இருள் சூழ்ந்துவிட்ட இன்றைய காலகட்டத்தில் ஒவ்வொரு நாட்டிலும் எம்மதத்தோருள்ளும்

மனத்தெளிவுள்ள எவரும் தம்மை ஆத்மார்த்தமாக உயர்த்தி உய்வுபெற ஓர் புதிய திட நம்பிக்கையை எழுப்பி, புதிய பாதையொன்றை வகுத்தளித்துள்ளார். அவரது மறைவுக்குப் பிறகு அவர் காட்டிய வழியும் மறைந்துபோம் என ஐயுற்றோர்க்கு அவர் சுருக்கென, "இந்த உடலுக்கு அளவுக்கு மீறி முக்கியத்துவம் கொடுக்கிறீர்களே" என பதிலிறுத்தினார். அவரை மானசீகமாக அண்டுவோர் அனைவருக்கும் அவரது வழிகாட்டல் என்றென்றும் உண்டு. அவரை அடிபணிவோர்க்கு அபயம் அளித்து வருகிறார். அவரை நாடுவோர் அனைவருக்கும் அவர் இங்கே உள்ளார்.



